## மணியனின்

## உண்மை சொல்ல வேண்டும்!

ஆணும் பெண்ணும் நிகரென கொள்வதால்
அறிவி லோங்கிஇவ் வையம் தழைக்குமாம்

- பாரதியார்

பொழுது சாய்ந்ததும் இருள் மங்காத அந்தி வேளை. வானம் பிசுபிசுக்கொண்டு இருந்தது .அந்த சிறு தூறலைப் பொருட்படுத்தாது, மக்கள் நடமாடிக்கொண்டு இருந்தனர். காஸினோ தியேட்டர் வாசலில் சிறு கூட்டம். அங்கு நடந்து கொண்டிருந்த அமரகாதல் காவியமான 'ரோமியோ அன்ட் ஜூலியட் 'படத்தை பார்க்கத்தான், ரசிகர்கள் குழுமியிருந்தனர். ‘ச ர் ர்’ என்று சத்தமிட்டபடி, தரையிலிருந்த தண்ணீரைச் சிதறடித்துக்கொண்டு ஒரு டாக்ஸி வந்து தியேட்டர் வாசலில் நின்றது. அதனின்றும் ஒரு இளம் ஜோடி கீழே இறங்கியது. கதர் சட்டை அணிந்திருந்த அந்த வாலிபன், பையிலிருந்த பர்சை எடுத்தவாறு, மீட்டரை குனிந்து பார்த்தான். ஒரு ரூபாய் எழுபது காசு ஆகியிருந்தது .அதை கவனித்துவிட்டு இரண்டு ரூபாய் நோட்டை டிரைவரிடம் கொடுத்து, மீதி சில்லறை வாங்கிக்கொள்ளாமலேயே உள்ளே நுழைந்தான் .அவனையே கவனித்துக்கொண்டு இருந்த அந்த பெண், "ஜஸ்ட் எ மினிட்' மிஸ்டர் சுந்தரம் " என்றாள். '

‘'என்ன' என்பது போல் அவளைத்திரும்பிப் பார்த்தான் சுந்தரம்.

தன் கைப்பையை திறந்து, அதிலிருந்து எழுபது பைசா, சில்லறையை எடுத்து அவனிடம் நீட்டி, "இதைக்கொடுத்துவிட்டு, ஒரு ரூபாயை வாங்கிக்கொள்ளுங்கள்”" என்றாள் அவள்.

அவளையே ஒரு முறை 'குறுகுறு' வென்று பார்த்த சுந்தரம், அவள் பேச்சுக்கு மறுப்பு சொல்ல முடியாதவன் போல், அவள் சொன்னபடியே செய்தான். டிரைவர் ஏதோ முணுமுணுத்துக்கொண்டே ஒரு ரூபாய் நோட்டை திருப்பிக் கொடுத்துவிட்டு டாக்ஸியை கிளப்பினான். அவர்கள் இருவரும் தியேட்டருக்குள் நுழைந்தனர். "உரியதிற்குமேல் ஒருவனிடம் கொடுத்து அவனை பழக்கதிற்கு ஆளாக்கிவிடக்கூடாது.. அவன் மற்றவர்களிடமும் அதையே எதிர் பார்ப்பான். ........" என்று மெல்லிய குரலில் சொல்லிக்கொண்டே, அவனுடன் தியேட்டரின் படிகளில் ஏறினாள் அவள்.

மீண்டும் ஒருமுறை அவளைத் திரும்பிப் பார்த்துவிட்டு, "என்னாவோ வனஜா, உன் பக்கத்தில் உட்கார்ந்து படம் பார்க்கப்போகிறோம் என்ற பரவச உணர்ச்சியில், எதுவுமே எனக்கு ஒரு லட்சியமாகத் தெரியவில்லை . . . . " என்றான் சுந்தரம்.

பற்கள் தெரியாமல் ஒருமுறை சிரித்தாள், வனஜா. பிறகு "இதில் என்ன இருக்கிறது ,சுந்தரம்? பகல் முழுதும் அருகருகே உட்கார்ந்து வேலை பார்த்துக்கொண்டு இருக்கிறோம் நாம். அதைப்போல் இப்போது மூன்று மணி நேரம் அருகருகே உட்கார்ந்து படம் பார்க்கப் போகிறோம் .இதில் விசேஷமாக நீங்கள் பரவசப்படுவதற்கு என்ன இருக்கிறது “என்று எனக்கு விளங்கவில்லை!. . .என்றாள் சாதாரணமாக.

அவ்வளவுதானா என்பதுபோல் அவளைப் பார்த்தான் சுந்தரம்.

இன்றைக்கு மாத்திரம் ஹெட்கிளார்க் நம்மை போரடிக்காமல் விட்டிருந்தாரானால், டாக்ஸி செலவுகூடச் செய்திருக்க வேண்டாம் . . . என்றாள் வனஜா தொடர்ந்து.

"என்ன இப்படிச் சொல்கிராய், வனஜா? நாம் ஜோடியாக டாக்ஸியில் வந்தபோது என் மனதில் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு முன், இந்த டாக்ஸி செலவு அற்பமானது என்றான் சுந்தரம் உணர்ச்சி வசப்பட்டு..

அப்பப்பா. . . ! நீங்கள் சாதாரண விஷயத்தையும் ரொம்பப் பெரிதாக எடுத்துக் கொள்கிறீர்கள். 'சென்டிமென்டி'லேயே ஊறியிருக்கிறீர்கள். .எப்போதும் உணர்ச்சிச் சிறகோடு கனவு உலகிலேயே பறந்து கொண்டிருக்கிறீர்களே . . . நாம் சேர்ந்து படம் பார்க்கிறது டாக்ஸியிலே வருகிறது எல்லாம் அப்படி என்ன ரொம்பவும்

மெய்சிலிர்க்க வைக்கிற அதிசயமான காரியங்களாக எனக்குத் தோன்றவில்லை" என்று கூறிவிட்டு, "சரி,சரி, 'க்யூ' வளர்ந்துகொண்டே போகிறது, சீக்கிரம் போய் நில்லுங்கள் . . ." என்றாள்.

வால் போல் நீண்டிருந்த அந்த''க்யூ'வில் போய் நின்று கொண்டான் சுந்தரம். வனஜா தியேட்டரில்இருந்த போட்டோக்களை பார்த்துக்கொண்டு நின்றாள். ஷேக்ஸ்பியர் வர்ணித்த அந்த ஜூலியட்டின் லட்சணங்கள் அனைத்தும் பொருந்திய ஒரு பெண்ணையே கதாநாயகியாக போட்டிருந்த தயாரிப்பாளர்களின் கலை உணர்வைக் கண்டு, அவள் மகிழ்ந்தாள் .அந்தப் பெண்ணின் போட்டோவையே மிக உன்னிப்பாக கவனித்தாள். அதே நேரத்தில் தியேட்டரில் இருந்த பலரும் தன்னையே உன்னிப்பாக பார்ப்பதும் அவளுக்குப் புரிந்தது. ஆனால் யாரையும் திரும்பிப் பார்க்கவில்லை. ஆனால், பலரும் தன்னை பார்கிறார்கள் என்பதுமட்டும் அவளுக்கு புரிந்தது!

எவ்வளவு வேகமாக காலம் முன்னேறி வந்தாலும், பெண்ணை அநாகரிகமாக முறைத்துப் பார்ர்க்கும் குணம் மட்டும் போகாது போலிருக்கிறது …….. என்று எண்ணிக்கொண்ட அவள் 'க்யூ' வின் பக்கம் பார்வையை செலுத்தினாள். சுந்தரம் மிகவும் பின்னாலிருந்தது அவளுக்குப் புரிந்தது. ஒரு நிமிஷம் ஏதோ யோசித்து, ஒரு முடிவுக்கு வந்தாள். கவுன்ட்டர் அருகே சென்று, பெண்களுக்குள்ள சலுகையைப் பயன்படுத்தி, இரண்டு டிக்கட்டுகளை வாங்கிக்கொண்டு, "சுந்தரம், வாருங்கள்" என்று அவளேஅழைத்தாள்.

தானே அவளுக்காககவும் சேர்த்து டிக்கெட் வாங்கும் உரிமையை இழந்த சுந்தரம் சற்று ஏமாற்றத்திற்குள்ளானாலும், அதிலும் ஒரு முக்கியத்துவத்தைக் கற்பித்துக் கொண்டான்.

"எனக்காகச் சேர்த்து நீ டிக்கெட் வாங்கியதில் எனக்கு சந்தோஷமும் உண்டு; வருத்தமும் உண்டு . . ." என்றான் வனஜாவைப் பார்த்து. ..

இது என்னப் புதிர் . . ."? என்றாள் வனஜா.

ஒரு பெண்ணே ஆணுக்காகச் செலவழித்து டிக்கெட் வாங்குவதென்றால், அது தனிச் சிறப்பு வாய்ந்த விஷயம். அதில் பல விஷயங்கள் அடங்கி இருக்கின்றன என்று எனக்கு தோன்றுகிறது. உனக்கும் சேர்த்து நான் டிக்கெட் வாங்க முடியவில்லையே என்ற வருத்தம் இருந்த போதிலும், எனக்காக நீ டிக்கெட் வாங்கி, ஏதோ ஒரு முக்கியத்தைக் கற்பிக்கிறாயே; அதை எண்ணி நான் சந்தோஷம் அடைகிறேன் என்றான் சுந்தரம். வனஜா மீண்டும் ஒருமுறை அடக்கமாகச் சிரித்தாள். பிறகு "வாருங்கள், படம் ஆரம்பிக்க இன்னும் பதினைந்து நிமிஷம் இருக்கிறது. அதற்குள் பக்கத்து ஓட்டலில் போய் ஒரு கப் காபி சாப்பிட்டு வரலாம்" என்றாள். இருவரும் அந்த சிறு தூறலைப் பொருட்படுத்தாது வெளியே நடந்தனர்.

"மிஸ்டர் சுந்தரம், என்னடா இவள் எதற்கெடுத்தாலும் இப்படிப் பேசுகிறாளே என்று நினைக்காதீர்கள். நாம் இருவரும் நெருங்கிப் பழக ஆரம்பித்துக் கொஞ்ச காலம்தான் ஆகிறது. அதனால்தான் நாம் ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் - நீங்கள் சொல்வதற்கெல்லாம் நான் பதில் சொல்கிறேன். என் பதிலை அதிகப் பிரசங்கிதனமாக எடுத்துக்கொண்டுவிடாதிர்கள் . . ." வனஜா முடிக்கவில்லை; சுந்தரம் குறுக்கிட்டான்.

நோ ..நோ.... நீ தாராளமாகப் பேசு....சொல்லப் போனால் நீ பேசிக்கொண்டே இருக்க வேண்டும்; நான் கேட்டுக்கொண்டே இருக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை…என்றான்

"இதைப்பற்றித்தான் நான் சொல்ல வந்தேன், நான் உங்களுக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கியதில் ஏதோ முக்கியத்துவம் இருப்பதாகச் சொன்னிர்கள். .ஐ டோண்ட் அண்டர் ஸ்டாண்ட், அது எனக்கு புரியவில்லை. அந்தக் காலத்தில் பெண்கள் சம்பாதிப்பதில்லை. எதற்கும் ஆணின் கையையே எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்போது நாங்களும் சம்பாதிக்கிறோம். அவசியம் ஏற்படும்போது பிறர்கையை எதிர்ப்பார்க்காமல் எதற்கும் செலவழிக்கமுடிகிறது. அவ்வளவுதான்....என்றாள்.

"அதெப்படி? யாருக்கும்செலவழித்துவிடுவார்களா பெண்கள்" ? சற்றே பதட்டத்துடன் கேட்டான் சுந்தரம்.

"மாட்டார்கள். ஆண்கள் மட்டும் அநாவசியமாக யாருக்காகவும் செலவழித்துவிடுவார்களா என்ன? நண்பர்களுக்கும் வேண்டியவகளுக்கும்தான் செலவழிப்பார்கள். அதே மாதிரிதான் பெண்களும். அப்படித்தான் நானும் எனக்கு வேண்டியவருக்காக செலவழித்தேன்" என்று கூறி புன்முறுவலித்தாள்.

அவளுடைய அந்தப் பதில் - அதாவது அவனை 'வேண்டியவன்' என்பதை நாசுக்காகக் குறிப்பிட்டது, சுந்தரத்திற்குப் பெரும் உற்சாகத்தை தந்தது. பேசிக்கொண்டே இருவரும் ஓட்டலை அடைந்துவிட்டனர். நுழைவு வாயிலின் படியை மிதித்ததுமே, ஏதோ அரவத்தைத் தீண்டியவன்போல் திடுக்கிட்டுத் திரும்பினான் சுந்தரம். பரபரப்புடன் வனஜாவை நெருங்கி "வனஜா" இங்கே போகவேண்டாம்; வேறு ஓட்டலுக்குப் போகலாம், வா…" என்றான்.

"ஏன் ?' என்று புரியாமல் கேட்டாள் வனஜா,

"உள்ளே நம் ஆபீஸ் டெஸ்பாட்சிங் கிளார்க் சாரி இருக்கிறான். நம்மை ஜோடியாகப் பார்த்தால் எதாவது வம்பாகிவிடும். வேறு ஓட்டலுக்கு போகலாம் வா....என்றான்.

"வாட் ஈஸ் திஸ், சுந்தரம்? நீங்கள் ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள்? நாம் என்ன திருடர்களா? பகிரங்கமாக ஆபீஸ் வாசலில் நாலுபேர் பார்க்க டாக்ஸியில் ஏறி இருக்கிறோம். பகிரங்கமாகப் படம் பார்க்கப்போகிறோம்..ஓட்டலில் மட்டும் யாருக்கோ பயப்படுகிரீர்களே .....நாம் தப்புக் காரியம் ஒன்றும் செய்யவில்லை, பேசாமல் உள்ளே வாருங்கள்...."என்றுகூறி அவள் முன் சென்றாள்.

சாரி அமர்ந்திருந்த இடத்திற்கு எதிரிலேயே ஒரு மேஜை காலியாக இருந்தது. அதில் போய் அமர்ந்து கொண்டவள், " ஹலோ, மிஸ்டர் சாரி ..." என்று அவனைப்பார்த்துக் கூறினாள். சுந்தரம் சற்று தயங்கியவாறு, அவள் எதிரில் அமர்ந்தான்.இரண்டு கப் காப்பிக்கு ஆர்டர் செய்தாள் வனஜா.

காப்பி சாப்பிட்டுவிட்டுச் சுந்தரம் எழுந்தபோது,, சாரி சுந்தரத்தை நெருங்கி, கீழக்குரலில், "நம்ம ஆபீஸ் கிளியோபாட்ராவுடன் ரோமியோ அண்ட் ஜூலியட்' படம் பார்க்கப் போறியா? ஜமாய் ராஜா ...." என்று கூறிக் கண்ணைச் சிமிட்டினான். இதற்குள் வனஜா, பணம் கொடுக்கும் கவுண்டர் அருகே சென்றிருந்தாள். சுந்தரம் விழுந்தடித்துக்கொண்டு அங்கே ஓடி, பில் பணத்தைக் கொடுத்தான். "அப்பாடா.....திருப்திதானே ?" என்று அவனை கேலி செய்தவாறு, அவனைப் பின்தொடர்ந்தாள் வனஜா.

சுந்தரம் வனஜாவின் பின் அழகை ரசித்தவாறு நடந்தான். அவளது நீண்ட ஜடையும், அதில் அவள் செருகியிருந்த மல்லிகைச் சரமும் அவனை வெகுவாகக் கவர்ந்தன. கருப்பு ஜாக்கெட் போட்டிருந்தாள் வனஜா. எனவே, உள் உடையின் பட்டை, வரிக்கோடிட்டது போல் 'பளிச்' சென்று வெளியே தெரிந்தது. அந்த சந்தன நிற உடலின் இடையழகில் தன்னை மறந்து நடந்தான் சுந்தரம்.

'நானே ஓவியனாக இருந்து, இந்த வனஜாவை படமாக வரைந்தால், அந்தப் படத்தின் கீழே, 'எளிமை எழில்' என்று தலைப்புக் கொடுப்பேன். இவளிடம் எதோ ஒரு தனிக் கவர்ச்சி இருக்கிறது. அது என்ன? இவளைவிட எவ்வளவோ அழகிகளை நான் பார்த்திருக்கிறேன். அவர்களிடம் இல்லாத கவர்ச்சி இவளிடம் இருக்கிறதே, அது என்ன? எதாவது கேள்வி கேட்டால், அதற்கு கண் இமைகளை அழுந்த மூடி, தலையை மென்மையாக அசைத்து 'ஆமாம்' என்று அவள் சொல்லும் போது, அப்படியே அவளை வாரி அணைத்துக்கொள்ள வேண்டும் போல் அல்லவா துடிப்பு ஏற்படுகிறது....' இப்படி எல்லாம் எண்ணியவாறு வனஜாவைப்பின் பின் தொடர்ந்த சுந்தரம், தியேட்டரை அடைந்துவிட்டான்.

இருவரும் தங்கள் நம்பர் சீட்டைப் பார்த்து அமர்ந்து கொண்டனர். விளக்குகள் அணைந்து, படம் ஆரம்பித்து விளம்பரங்கள், செய்திப்படங்கள், வரப்போகும் படங்கள் எல்லாம் முடிந்து, ''ரோமியோ அண்ட் ஜூலியட்' ஆரம்பித்ததும் சுந்தரம் தன்னை மறந்தான். 'காதலில் இருப்பது மிகப்பெரிய பேரானந்தம் என்று அவன் எங்கோ படித்திருக்கிறான். அந்தப் பேரானந்தத்தின் பொருளைத்தான் அங்கே திரையில் பார்துக்கொண்டிருந்தான் அவன்.

பெரிய விருந்து நடந்துகொண்டு இருக்கிறது .அழகி ஜூலியட் எல்லோருடனும் சேர்ந்துகொண்டு நடனமாடுகிறாள் .பிறகு இசை நிகழ்ச்சி நடக்கிறது. அவள் கண்கள் ரோமியோவைத் தேடுகின்றன. முகமூடி அணிந்திருந்த ரோமியோ, மெல்ல மெல்ல நடந்து, ஒரு திரைக்குப் பின்னால் சென்று,' சட்'டென்று கையை நீட்டி, ஜூலியட்டின் கையைப் பிடித்துவிடுகிறான் .அப்பப்பா ! அது என்னப் பரவசம் 'ஸ்பரிச சுகம் " மகத்தானதுதானே!

படத்தில் ஆழ்ந்திருந்த வனஜா, தன்கைமீது மற்றொரு கை படுவதை உணர்ந்து, சற்றே திடுக்கிட்டுத் திரும்பினாள். கண்களில் காதல் பொங்க வனஜாவின் செழுமையான கரத்தை அழுந்தப் பிடித்தான் சுந்தரம். அந்தப்பிடியில், அதன் இறுக்கத்தில் அவன் உணர்ச்சிகள் அனைத்தும் பிரதிபலித்தன..

ஒரு கணம், ஒரே ஒரு கணம்தான் அந்தப் பிடிப்பு, அவன் உடலெங்கும் இன்பம் பிரவகித்து ஓடியது.

மறுகணம்..........

"ஸ்ஸ்..... என்ன இது அசட்டுத்தனம்........" என்று மென்குரலில், ஆனால் கோபத்துடன் கண்டித்தாள் வனஜா. அவள் குரலைக் கேட்டு வெலவெலத்துப்போன சுந்தரம், தன் கையை இழுத்துக்கொண்டு,' ஐயாம் ஸாரி, வனஜா.......... தயவுசெய்து தப்பாக நினைதுக்கொள்ளாதே . . . . .எதோ உணர்ச்சிவசப் பட்டுவிட்டேன். . . . .என்று ஈனசுரத்தில் பதைபதைப்புடன் கூறினான்.

“சரி,சரி! ரொம்பவும் அலட்டிக்கொள்ளதிர்கள். உங்களுடன் நான் இந்தப்படத்திற்கு வந்திருக்கக்கூடாது” என்றாள் வனஜா.

"வனஜா ......நீ இப்படிச்சொல்லும்போதுதான் என் மனசே உடைந்து போகிறாற்போல இருக்கிறது.. என்னைத் தாழ்வானவனாக நினைத்துவிட்டாயே. எந்தவிதமான தவறான நோக்கத்துடனும் நான் உன்னைப் படத்திற்கு கூப்பிடவில்லை .ஐ பிராமிஸ் ......" என்றான்.

"ஐய்யய்யோ ........ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? நான் அப்படிச் சொல்லவில்லை..... உங்களோடு வேறு எந்தப் படத்திற்காவது போயிருக்கலாம், இந்தப் படத்திற்கு வந்திருக்கக் கூடாது என்றேன்.........என்றாள் வனஜா.

சுந்தரம் எதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் பின்னால் இருந்து ஒரு குரல் எழுந்தது :நாங்கள் திரையில் படம்பார்க்கத்தான் டிக்கெட் வாங்கியிருக்கோம்; தியேட்டரில் இல்லை......"-

அதைக்கேட்டு," நம்மைதான் விமர்சனம் செய்கிறார்கள். பேசாமல் படம் பாருங்கள்" என்றாள் வனஜா கீழ்க்குரலில்.

நாற்காலியின் மறுகோடிக்கு நகர்ந்துகொண்ட சுந்தரம், திரையில் கவனம் செலுத்தினான்.

ரோமியோவும் ஜூலியட்டும், ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு, இந்த உலகை ‘மறந்து’ இதழோடு இதழ் பதித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் காதல் வேகம், அவர்கள் உடலில் தெரிந்தது. ஜூலியட்டின் இளமைப் பூரிப்பு பொங்கிப் பொங்கி தணிந்தது.

நாற்காலியின் மரக்கட்டையை அழுந்தப் பிடித்துக் கொண்டான் சுந்தரம்.

படம் முடிந்து வெளியே வந்தபோது மழை சற்று வலுத்திருந்தது. சிறிது நேரம் ஒதுங்கியிருந்தார்கள் அவர்கள். சாலையில் 'தடதட 'வென்ற பேரோசை எழுப்பியவண்ணம் கார்களும். பஸ்களும் ஓடிக் கொண்டிருந்தன. கைக்கடிகாரத்தைப் பார்த்த வனஜா," ஐயையோ" ஒன்பதரை ஆகிவிட்டதே,. இன்னும் கொஞ்சம் போனால் பஸ் கிடைக்காமல் போய்விடும்......வாருங்கள், சிறு தூரல்தான். வேகமாகப் போய்விடலாம் ..என்றாள் சுந்தரத்தைப் பார்த்து.

'சரி' என்பதுபோல் தலை அசைத்தான் சுந்தரம். தியேட்டருக்குள் நடந்த அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, வாய் திறந்து ஒரு வார்தைக்கூடப் பேசவில்லை அவன். வனஜாவை ஏறிட்டும் பார்க்கவில்லை.

மௌனமாக இருவரும் பிளாசா தியேட்டருக்கு முன்னால் இருந்த பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தனர்.

சுந்தரத்தின் திடீர் மாற்றத்தைக் கவனித்த வனஜா, வேண்டுமென்றே பேச்சைத் தொடங்கினாள். எதுவும் நடக்காதது போல் அவனைப் பார்த்து 'கலகல' வென்று சிரித்துக்கொண்டு பார்த்தாலும் பார்த்தேன்; உங்களை மாதிரி உணர்ச்சிவசப்படுபவரை நான் பார்த்ததே இல்லை . படத்தைப் பார்த்து உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாமல் அப்படி நடந்துகொண்டீர்கள் என்றால், சின்ன 'ஷாக் ட்ரீட்மெண்ட் ' கொடுக்கும் முன் உலகமே இடிந்து உங்கள் தலைமேல் விழுந்துவிட்டதைப்போல் நடுங்கி ஒடுங்கிப்போய்விட்டீர்களே ......இன்னும் எதாவது சொன்னால், அப்படியே மிரண்டு, என்னை நடுத் தெருவிலேயே விட்டுவிட்டு ஓடிப்போய்விடுவீர்கள் போலிருக்கிறதே.......என்றாள். இதற்கும் சுந்தரம் பதில் சொல்லவில்லை. அவனிடம் இருந்து ஒரு அசட்டுச் சிரிப்புதான் வெளிப்பட்டது.

“நாளை சந்திப்போம்" என்று கூறி, சுந்தரத்திடம் விடைபெற்றுக்கொண்டு , பதினோராம் எண் பஸ்சில் ஏறிக்கொண்டாள் வனஜா. ஜன்னல் அருகில் இருந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டு, சாலையைப் பார்த்தாள். மழை

சதசதப்பில் வண்டிகள் உருண்டு கொண்டிருந்தன. அந்த மழையிலும் 'புகாரி' ஓட்டல் அருகே நிறைய கார்கள் நின்றிருந்தன. தொலைவில் சில விளம்பரங்கள் எரிந்து எரிந்து அணைந்துகொண்டிருந்தன.

"டிக்கெட்"

கண்டக்டரின் குரல்.

"பனகல் பார்க்" என்று கூறி சரியான சில்லறையை நீட்டினாள்.

பஸ் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. அவள் சிந்தனையும் அதே வேகத்தில் ஓடியது. ஏனோ, சுந்தரத்தின் நினைவுதான் அவளுக்கு வந்தது.

"மிகவும் நல்ல மனிதர். இன்று கொஞ்சம் பதட்டப்பட்டு விட்டார்.அதற்கு ஓரளவு நானும் பொறுப்பாளிதான். என்னதான் நல்ல நண்பர்களாக பழகினாலும், சிலசமயம் இப்படியெல்லாம் நடந்துதான் விடுகிறது.......இந்தச் சுந்தரம் ஒரு காலத்தில் என்னுடன் பேசக்கூட மாட்டரே.....அவர் இப்படி நடந்து கொள்ள வேண்டுமென்றால்......

அவள் பணிபுரியும் அந்தப் பிரபல மருந்துக் கம்பெனியில், அவளிடம் கடைசியாகப் பேசிய இளைஞன் சுந்தரம்தான். சுபாவப்படி அவன் யாரிடமும் அதிகம் பழகமாட்டான். ஆண்களிடம் பேசுவதே குறைவு.

பிரபல மருந்து விற்பனையாளர்களான ''ஜெனலெக்ஸ்' 'கம்பெனியில் ஸ்டெனோவாகப் பணியாற்றுபவள் வனஜா. கடந்த ஐந்து வருஷங்களாக அந்த கம்பெனியில்தான் பணிபுரிகிறாள்.

இந்த ஆவணி வந்தால்தான் வனஜாவுக்கு இருபத்து மூன்று வயது முடியப் போகிறது. ஆனால், பார்வைக்குப் பதினெட்டு வயதுகூட மதிக்க முடியாது. அழகும், அடக்கமும் அவளிடம் குடியிருந்தன. சாதாரண வாயில் புடவைகளும், வெங்கடகிரி சேலைகளும்தான் உடுத்துவாள். ஆனால், அதை உடுத்தும் பாங்கில், அவள் எழில் அதிகரித்து காணப்படும். எழ்மையைக் கொடுத்த ஆண்டவன், கூடவே எழிலையும் கொடுத்திருந்தான். அவளை ஒரு முறைப் பார்த்தால், இரண்டாவது முறைப் பார்க்காமல் இருக்கமுடியாது..

அவள் தகப்பனார் குப்புசாமி, போர்ட் டிரஸ்'டில் பணியாற்றி, ஒய்வு பெற்றவர். ஜூனியர் குமாஸ்தாவாகச் சேர்ந்து, சீனியர் குமாஸ்தாவாக ரிடையர் ஆனவர். வனஜாவும், அவளைவிடப் பத்து வயது சிறியவனான பாலுவும்தான் அவரது இரு செல்வங்கள்.

நடுத்தரக் குடும்பதினருக்குள்ள போராட்டங்கள் அனைத்தும் அந்தக் குடும்பத்திற்கும் உண்டு. கைக்கும், வாய்க்கும் போராட்டம்தான். வனஜாவின் வருமானத்தை வைத்துக்கொண்டுதான், அந்த வீட்டின் வாழ்க்கைச் சக்கரம் ஓடுகிறது. குப்புசாமி, தனது பிராவிடண்ட்பண்ட் பணத்தின் ஒரு பகுதியை, வனஜாவின் கல்யாணதிற்கென்று பாங்கியில் போட்டு வைத்திருந்தார்.அதுவும் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து கொண்டிருந்தது. சீக்கிரம் அவளுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று எண்ணினார்.'அவள் திருமணமாகிப் போய்விட்டால், நாம் எப்படி வாழ்வது ' என்ற கவலையும் அவரைப் பீடிக்கும். இப்படி ஒருப் போராட்டத்திலேயே அவருடைய வாழ்க்கை உருண்டுகொண்டொண்டிருந்தது . அந்தப் போராட்டத்தை மீறிக்கொண்டு, வனஜாவிற்கு திருமணம் செய்விக்க வேண்டும் என்று, அதற்கான முயற்சிகளிலும் ஈடுபட்டிருந்தார் அவர். இருப்பினும், அந்த எண்ணம் நிறைவேற முடியாமல் பலவித அசௌளரியங்கள். வரதட்சணை, மாப்பிள்ளை பிடிக்காமை, மாப்பிள்ளைக்குப் பிடிக்காமை இப்படி எத்தனையோ......

வனஜாவிடம் அந்தக் கம்பெனியில் எல்லோரும் சகஜமாகப் பேசிப் பழகுவார்கள். 'கண்ணியத்துடன் பழகுவது' என்ற சொல்லுக்கு அவள் சான்றாகத் திகழ்ந்தாள். வெகு காலம்வரை சுந்தரம்தான் அவளிடம் பேசாமல் இருந்தான். இத்தனைக்கும் அவன் அவளுடைய பக்கத்து 'ஸீட்டில்' இருப்பவன்.

மற்ற குமாஸ்தாக்களுக்கும், சுந்தரத்திற்கும் பல வித்தியாசங்கள் உண்டு. டிபன் வேளையின்போது, ஆபீசே காலியாக இருக்கும்; வனஜாவும், சுந்தரமும்தான் வீட்டிலிருந்து கொண்டுவந்த டிபனைச் சாப்பிட்டுக் கொண்டு இருப்பார்கள். பேசாமல் இருந்த அவர்கள் இருவரும் பேசிக்கொள்ள ஆரம்பித்ததே ஒரு கதை.

அந்த ஆரம்பம், வளர்ந்து, அவர்களிடம் ஒருவித நட்பை உருவாக்கியது. தினம் இடைவேளையின் போது, அவர்கள் இருவரும் டிபன் பரிமாற்றம் செய்து கொள்வார்கள். அவனுடையப் பேச்சு, செயல் ஒவ்வொன்றையும், கவனித்து, அவனைப்பற்றிய எண்ணத்தைத் தன் உள்ளத்துள் உயர்த்திக் கொண்டிருந்தாள் வனஜா.

வனஜா-சுந்தரத்தின் நட்பு மூடி மறைக்கப்பட்டதல்ல. தன் தொடர்பில் எந்தவித ஒளிவு மறைவையும் அவள் வைத்துக்கொண்டதில்லை. அவர்கள் நட்பைப்பற்றி, இரண்டு மூன்று நாட்களுக்கு முன்புதான் அவளுடைய சக குமாஸ்தா சரளா, வேடிக்கையாகப் பேசினாள்:

"என்ன வனஜா, டிபன் பரிமாறிக்கிறதிலே தொடங்கின நட்பு, வாழ்க்கையை பரிமாறிக்கிறதிலே கொண்டு போய்விடும் போலிருக்கே" என்று சரளா கேட்டபோது, சற்றே துணுக்குற்று, "ஏன் அப்படிச் சொல்கிறாய், சரளா" என்றாள் வனஜா.

"உங்கள் காதலின் வளர்ச்சியைப் பார்த்துத்தான் கேட்கிறேன்....... என்றாள் சரளா.

"நன்றாக இருக்கிறது நீ பேசுவது. ஒரு ஆணும் பெண்ணும் சகஜமாகப் பழகினா,......உடனே அவர்களைக் கொண்டுபோய் 'காதல்'ங்கற மலையில் வச்சு வேடிக்கை பார்க்கிறதுதான் நமக்குப் பழக்கமாப் போச்சு. அதுக்கு இடையிலே வேறபடியே இல்லையாம்மா? காதல் என்ற வார்த்தைக்கு ரொம்ப அர்த்தமும், பொறுப்பும் உள்ளது. ஒரு பெண்ணுக்கும் ஆணுக்கும் ஏற்படற நட்பிலே, காதல் ஒரு எல்லை. அந்த எல்லைக்குப் போகாமலே இடையிலேயே நிறைவு பெறுகிற தொடர்பும் உண்டு. நாங்கள் இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்துகொண்டிருக்கிறோம். எங்களுக்குள்ளேயே நிறைய ஒற்றுமைகள் இருக்கு. அதுதான் எங்கள் நட்பு கொஞ்சம் இறுகி இருக்கு.....ஒருவர்மேல் ஒருவர் மரியாதை வச்சிருக்கோம்...." என்று வனஜா சொன்னபோது சரளா துடுக்குடன் குறுக்கிட்டு, இதுக்குப் பேர்தாண்டி காதல்......ஒருவரை ஒருவர் நல்லாப் புரிஞ்சு, மனமார நேசிக்கிறதுதான் காதல், அதை இல்லேன்னு சொல்லிக் குழப்பறியே..." என்றாள்.

"நான் குழப்பலே, நீதான் குழப்பிக்கிறே. காதலர்கள்,ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு நேசம் செலுத்த வேண்டும் என்பது உண்மை. ஆனால் அவர்களுக்கு இன்னொரு அவசியமும் உண்டு. அதாவது, நாம் இருவரும் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும்" என்ற லட்சியத்துடன் அவர்கள் பழகுவார்கள்.ஆனால் அந்த லட்சியம் இல்லாமல், 'என்றைக்குமே நல்ல நண்பர்களாக இருக்க வேண்டும்' என்ற நோக்கத்தில் பழகுகிற நட்பும் உண்டு. நானும் சுந்தரமும் அப்படிப்பட்ட நண்பர்கள். அவரைத்தான் கல்யாணம் செய்துகொள்ளவேண்டும் என்கிற பிடிவாதமான எண்ணம் எதுவும் எனக்கில்லை. அவருக்கு இப்போது திருமணம் நிச்சயமானால், அதிலே மிகவும் மகிழ்ச்சியோடு கலந்து கொள்கிற சிநேகதி நானாகத்தான் இருப்பேன்....." என்று பதிலளித்தாள். சரளா அவளை அத்துடன் விட்டு விடவில்லை.

"நீ சொல்லறதைப் பார்த்தா, ஒருவேளை அவரைக் கல்யாணம் பண்ணிக்க வேண்டிய சூழ்நிலை உனக்கு வந்தாக்கூட, வேண்டாம்னு சொல்லி மறுத்துடுவே போல இருக்கே....."என்றாள்.

"நோ, நோ. நான் சொல்வதைப் புரிந்துகொள்ளவில்லை. நீ, அவரைக் கல்யாணம் செய்துகொள்ள ஏன் மறுக்கணும்.....என்னைப் போன்ற ஒரு பெண்ணுக்கு கணவரா இருக்கக்கூடிய பண்பு, பதவிசான குணம் எல்லாத் தகுதியும் அவருக்கு இருக்கு.. அவரை எனக்கு வரனா பெரியவங்க நிச்சயம் பண்ணினா," நான் மறுக்கமாட்டேன்......."என்றாள்.

சரளா அவளையே வெறிக்கப் பார்த்தாள். விசித்திரமான உறவுதாண்டி இது...." என்று வியந்தாள்." இல்லை, ஆணும் பெண்ணும் சகஜமாகப் பழகுகற இந்தக் காலத்தில் ரொம்ப சர்வசாதாரணமாகிவிட்ட உறவுமுறைதான் இது" என்று கூறி, அவள் வாயை அடக்கினாள் வனஜா.

கண்டக்டரின் 'விசில்'சத்தம் வனஜாவைத் தன்நினைவுக்குக் கொண்டுவந்தது.'பனகல் பார்க்' ஸ்டாப்பிங் வந்து விட்டதை உணர்ந்து, அவசர அவசரமாக இறங்கினாள். பிளாட்பாரத்தில் உள்ள கடைகளையெல்லாம் தாண்டிக்கொண்டு, துரைசாமி சாலையில் நுழைந்து, தான் வசிக்கும் ராமேஸ்வரம் சாலையை அடைந்தாள்.

வீட்டுவாசலில் கவலைதோய்ந்த முகத்துடன் நின்றிருந்தாள், வனஜாவின் தாய் விசாலம்.

"என்ன வனஜா இது. ஏன் இவ்வளவு நேரம்?" என்று உண்மையான கவலையுடன் கேட்டாள் அவள்.

"சினிமாவுக்குப் போயிருந்தேம்மா ......." என்று கூறிக்கொண்டே செருப்பைக் கழற்றி, அதை கையில் எடுத்து வராந்தாவில் உள்ள ஒரு மர ஷெல்பில் வைத்துவிட்டு, உள்ளேசென்றாள் வனஜா.

"தனியாகவா?" என்று கேட்டாள் விசாலம்

"இல்லேம்மா.....என் ஆபிஸ் பிரண்ட் சுந்தரத்தோட தான் போயிருந்தேன்......" இப்படிக் கூறிவிட்டு, பின்பக்கம் சென்று, கை கால் அலம்பிக்கொண்டு வந்து "ரொம்பப் பசிக்கிறதம்மா" என்று சமையல் அறைக்குள் நுழைந்தாள்.

'நல்ல பெண் இவள்' என்ற எண்ணத்துடன் அவளுக்குத் தட்டை எடுத்துவைத்தாள் தாயார் விசாலம்.

வனஜா எப்போதுமே அப்படிதான். எதிலும் அவளுக்கு ஒளிவு மறைவு கிடையாது.. மனசாட்சிக்குப் பயந்து வாழ்ந்தால் போதும்' என்ற சித்தாந்தம் அவளுடையது. அதனால்தான் சுந்தரத்துடன் சினிமா போய் வந்ததை அவள் மறைக்கவில்லை. அவள் பேச்சில், தப்பு செய்கிறோம் என்ற பதைப்போ, தப்பை போலி வாதத்தால் மறைக்க வேண்டுமென்ற எண்ணமோ இருந்ததில்லை.

சுட்ட அப்பளத்தை வைத்து சீரக ரசத்தை ஊற்றியபடி, " இன்னிக்கு சாயங்காலம் அந்த மன்னார் குடிக்ககாரார் வந்திருந்தார்.....நீ இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்...." என்றாள் விசாலம், மகளைப் பார்த்து..

"யாரும்மா? ரிசர்வ் பாங்கிலே வேலை செய்யறாருன்னு சொன்னியே, அந்தப் பையனா? அவர்கள் உச்சாணி கொம்பிலே இருக்கா; ஐயாயிரம் ரூபாய் வரதட்சணை கேட்டான்னு சொன்னினேயே....." - சாதத்தைப் பிசைந்து கொண்டே பேசினாள் வனஜா.

அதிலே பாரு குழந்தே .....அவா இப்போ கொஞ்சம் எறங்கி வந்திருக்கா....மற்ற விஷயங்களெல்லாம் பேசி முடிச்சுட்டேன். பையனுக்கு பெண்ணைப் பிடிச்சா, எல்லாம் முடிஞ்சமாதிரிதான். என்று சொல்லிக்கொண்டே, சமையல் அறையில் நுழைந்து, துண்டைத்தட்டிப் போட்டுக்கொண்டு கீழே அமர்ந்தார், தந்தை குப்புசாமி.

"அது எப்படிப்பா எல்லாம் முடிஞ்சமாதிரி ஆயிடும்.....?என்றாள் வனஜா, தந்தையை ஏறிட்டுப்பார்த்து.

"குழந்தே......நீ என்ன சொல்றே....? உன்னைக்கேட்டுக்கொண்டு தானே நான் இந்த இடத்தையே பார்த்தேன்...... என்று சற்றே கவலை தோய்ந்த குரலில் கேட்டார் குப்புசாமி.

"அதை யாருப்பா இல்லைன்னு சொன்னா? பையனுக்குப்பெண்ணைப் பிடிச்சா முடிஞ்சுதுன்னு சொன்னீங்களே, அதைப்பற்றிதான் சொன்னேன்.அதுமட்டும் போதாது, பெண்ணுக்கும் பையனைப் பிடிக்கணும்னு சொன்னேன்........."

சாப்பிட்டு முடிந்து, தட்டை எடுத்துக்கொண்டு பின்பக்கம் சென்றாள் வனஜா, திரும்பி வந்தவள், அப்புறம் என்ன ஆச்சு?" என்று கேட்டாள்.

"நாளை சாயங்காலமே பையனோட அப்பா ஊருக்குப் போகணுமாம்......அதனால் நாளை மத்தியானம் இரண்டு மணிக்குப் பெண் பார்க்க வரலாமான்னு கேட்டா ....சரின்னு சொல்லிட்டேன். உனக்கு சௌகரியம்தானே? என்று கேட்டார் குப்புசாமி.

வனஜா ஒரு கணம் யோசித்தாள். பிறகு" நீங்கள் சரின்னு சொல்லிட்டா, நானும் சரிதான். நாளைக்கு லீவு போட்டுடறேன்....."என்று கூறி, சுருட்டி வைத்திருந்த படுக்கையை எடுத்துக்,கூடத்தில் விரித்தாள். இரண்டே அறைகள் கொண்ட அந்த வீட்டில், அந்தக் கூடம்தான் ரிசப்ஷன் ஹால். ஸ்டோர்ரூம், பெட்ரூம் எல்லாம்.

"சரிம்மா, நான் காலையிலேயே போய் அவர்கள்கிட்டே சரியாய் இரண்டு மணிக்கே வரச்சொல்றேன்" என்று கூறிவிட்டு, குப்புசாமியும் தனது படுக்கையை உதறிப் போட்டார்.

'டங் ....."

கடிகராமணி ஓசைக் கேட்டதும், தலை நிமிர்ந்து அதைப் பார்த்தான் சுந்தரம்.

மணி ஒன்றரை.

காலையிலிருந்து அவனுக்கு எதுவுமே ஓடவில்லை. வனஜா ஏன் வரவில்லை. என் மீது ஏதாவது கோபமா? உடம்பு சரியாக இல்லையா? இப்படி எல்லாம் வராமல் இருந்ததில்லையே....இப்படி எண்ணிஎண்ணிக் குழம்பினான் அவன். ஒரு மணியிலிருந்து இரண்டு மணிவரைதான் அவனுக்கு டிபன் வேளை. வனஜா இல்லாமல் டிபன் சாப்பிட அவனுக்குப் பிடிக்கவில்லை. மேஜை டிராயரிலிருந்த டிபன் பாக்ஸ்சை அவன் தொடவே இல்லை. அவன் மனம் பேதலித்தது. எதுவுமே பிடிக்கவில்லை. கடிகாரத்தயும், வாயிற்புறத்தையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருந்தான். யார் உள்ளே நுழையும் போதும், அந்த நிழலைக் கண்டதும், அது வனஜாவாக இருக்கக்கூடாதா? என்று எண்ணினான்.

மணி ஒன்று ஐம்பத்து ஐந்து. இன்னும் ஐந்து நிமிஷம் பொறுத்தால், அவன் டிபன் வேளை முடிந்து விடும். அதன்பிறகு டிபன் சாப்பிட முடியாது. அந்த ஆபிசில் அந்த விஷயத்தில் மிகவும் கண்டிப்பானவர்கள். எனவே வேண்டா வெறுப்பாக டிபன் பாக்ஸ்சை வெளியே எடுத்துத் திறந்தான்.

உள்ளே அவன் தாயார் அவனுக்குப் பிடித்தமான ரவாகேசரியையும், பஜ்ஜியையும் செய்து வைத்திருந்தாள். கேசரியை ஒரு வாய் போட்டுக்கொண்டான். அது அவனுக்கு ருசிக்கவில்லை. டிபன் பாக்ஸ்சை அப்படியே மூடினான்.

ரவா கேசரி அவனுக்குக் கசந்தது.

"பேஷ்......கேசரி ரொம்பப் பிரமாதம், அளவுக்கு அதிகம் போகாமல் நிதானமான இனிப்புடன் பிரமாதமாக இருக்கிறது."

வனஜா வீட்டுக்கூடத்தில் அவளைப் பெண் பார்க்க வந்த ஜெயராமன், தன்னையும் மீறி இப்படிச் சொன்னான்.

"எல்லாம் வனஜா செஞ்சதுதான். வீட்டு வேலையையும் செய்துகொண்டு, ஆபிசுக்கும் போய்வரா....." பெருமையுடன் மகள் புகழ் பாடினார் குப்புசாமி.

"நம்ப பெண்களுக்கு இதெல்லாம் ஒரு பெரிசா...வழி வழியா வந்த குணமாச்சே ......"என்று ஒத்துப் பாடினார் ஜெயராமனின் தந்தை.

எல்லோரும் டிபன் சாப்பிட்டு முடித்தார்கள்.

"அப்போ....." என்று இழுத்தார் குப்புசாமி.

"என்னடா......ஜெயராமா, என்னசொல்லறே?"என்று மகனைப் பார்த்தார் ஜெயராமனின் தந்தை.

"எனக்குப் பிடிச்சிருக்குப்பா........" என்று 'பளிச்'சென்று பதில் சொன்னான் ஜெயராமன்.

வனஜா எழுந்து சமையல் அறைக்குள் சென்றாள்.

குப்புசாமி அவளைப் பின்தொடர்ந்தார்.

ஐந்து நிமிஷம் கழித்து வெளியே வந்த அவர், ஜெயராமனின் தந்தையைப் பார்த்து, "அப்போ, ஒரு நல்ல நாளைப் பார்க்கலாமா?" என்று கேட்டார்.

## 2

இச்சை பிறந்ததடீ! -எதிலும்
இன்பம் விளைந்ததடீ !
அச்சம் ஒழிந்ததடீ - சகியே
அழகு வந்ததடீ !

\- பாரதியார்

**மே**ஜைமீது வைத்திருந்த தனது "வானிடி'பாக்'ஐ எடுத்து, அதிலிருந்த 'காம்பாக்"டைத் திறந்து, முகத்தை லேசாக அழகு படுத்திக்கொண்டாள் சுதா. பிறகு அதை மூடிவைத்துவிட்டு, சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தை ஏறிட்டுப் பார்த்தாள். மணி பன்னிரண்டரை.

அவள் ஆபீசுக்கு வந்து இரண்டு மணி நேரமாகிவிட்டது.சாதாரண நாளாயிருந்தால், இதற்குள் பத்து தடவையாவது ஸ்ரீதர் ரூமிற்குள் சென்று வந்து இருப்பாள். அவனாக ஐந்து தடவை அழைத்திருப்பான்.

அனால் இன்று...........?

காலையிலிருந்து அவன் தரிசனம்கூட அவளுக்குக் கிடைக்கவில்லை. அதிலும், அன்று முக்கியமாக அவனைப் பார்க்கவேண்டும் என்ற துடிப்புடன் வந்திருந்த சுதாவுக்கு, அது பெரிய ஏமாற்றமாகப் போய்விட்டது.

ஸ்ரீதர் இருந்தால்தான் அவளுக்குவேலை. அவள் அவனுடைய பி.ஏ. அதாவது 'பர்சனல் கிளார்க்', அந்த 'பர்சனல்'என்ற வார்த்தையை அவள் மிகவும் விரும்பினாள். அதனால்தான் அவளதுதோழிகள் அவளை,"நீ எங்கு ஸ்டெனோவாக இருக்கிறாய்?' என்று கேட்டால் "நான் ஸ்டெனோ இல்லை; விஜயா மெட்டல் ஏஜென்சீஸ் டைரக்டர் அண்ட் ஜெனரல் மேனேஜர் மிஸ்டர் ஸ்ரீதரின் 'பர்சனல் கிளார்க்' எண்டு பெருமைடன் அடித்துச் சொல்லுவாள்.

சென்னையிலுள்ள பெரிய நிறுவனங்களில் விஜயா மெட்டல் ஏஜென்ஸியும் ஒன்று. வெளிநாட்டு வர்த்தக ஸ்தாபனங்குளுடன் தொடர்புகொண்டுள்ள அந்தக் கம்பெனியில் டைரக்டர் அண்ட் ஜெனரல் மேனேஜர் பொறுப்பில் இருந்த இளைஞன் ஸ்ரீதர், சாதாரணமாக எந்தப் பெண்ணையும் சிறிதுநேரம் கவரக்கூடிய அழகன். அழகு என்றால் சினிமா நட்சத்திர அழகல்ல; அவனிடமிருந்த ஆண்மையின் கவர்ச்சி அவனுக்குத் தனி அழகைக் கொடுத்தது. கடந்த மூன்று வருடங்களாக அவனுடைய அந்தரங்க குமாஸ்தாவாகப் பணியாற்றிவருகிறாள் சுதா. தினமும் காலையில் காரியாலயத்திற்கு வந்ததும், தனது மேஜைமீது கைப்பையை வைத்துவிட்டு, ஜி.எம். அறைக்குள் நுழைந்து "குட்-மார்னிங் சார்" என்று இனிமையானக் குரலின் முகமன் கொடுத்துவிட்டுத்தான் மறுவேலைப் பார்ப்பாள். ஸ்ரீதரும் சிரித்துக்கொண்டே,"குட்மார்னிங் சுதா" என்பான். இந்தப் பூர்வாங்கம் இல்லாமல் சாதாரணமாக அவர்களுக்கு நாள் தொடங்காது. சிலசமயம், ஸ்ரீதர் ஏதாவது வெளியூர் போயிருக்கும் சந்தர்ப்பத்திலும், டைரக்டர்கள் மீட்டிங், அது இது என்று ஏதாவது வரும்போதும் சுதா, சுருங்கிப்போய்விடுவாள். ஸ்ரீதர் தரிசனம் கிடைக்காத நாள், அவளுக்கு நாளாகவே தோன்றாது.

அன்றும் அவளைப் பொறுத்தவரை நாள் ஆரம்பமாகவில்லை. காரணம், காலையில் அவள் வருவதற்கு முன்பே ஸ்ரீதர் வந்துவிட்டான். வந்து, கம்பெனியின் மாடியில் உள்ள பெரிய ஏர்கண்டிஷன்' 'அறைக்குள் போய்விட்டான். அங்கே எதோ டைரக்டர்கள் மீட்டிங் நடக்கிறதாம்!

'என்ன பொல்லாத மீட்டிங்....அப்படியேதான் நடக்கட்டுமே, எதோ முக்கிய வேலை இருப்பதுபோல் கீழே வந்து, என்னைப் பார்த்து 'ஹலோ' சொல்லிவிட்டுப் போகக் கூடாதா? கொஞ்சம்கூட "இது" தெரியாத மனுஷன்' என்று ஸ்ரீதரை செல்லமாக திட்டிக்கொண்டு, பொறுமையின்றித் தனது இடத்தில அமர்ந்திருந்தாள் சுதா.

மேஜைமீதிருந்த டைப்ரைட்டர் தூங்கிக்கொண்டிருந்தது. சற்றே திறந்து வைக்கப்படிருந்த டிராயரில் அந்த வாரப் பத்திரிகை ஒன்று பிரித்து வைக்கப்பட்டிருந்தது. கிளுகிளுப்புட்டும் ஒரு சிறுகதையை நான்காம் முறையாக அப்போதுதான் அவள் படித்து முடித்திருந்தாள். இடக்கைவிரல் நகங்களை சுவாரஸ்யமாகக் கடித்தபடி, பத்திரிகையை சுதா ஆழ்ந்து படிக்கும்காட்சி கண்டு ரசிக்கவேண்டிய ஒன்று.

அந்தக் காரியாலயத்தில் பலரும் அவள் கவர்ச்சியில் தங்கள் மனதைப்பறிகொடுத்திருந்த போதிலும், தங்கள் ரசனையையெல்லாம் திருட்டுத்தனமாகவே வைத்துக்கொண்டார்கள்.' எதெற்கப்பா வம்பு, அது ஜி.எம் மின் ஆள். அனாவசியமாக வேலையைப் போக்கிக் கொள்வானேன்' என்று சொல்லி அவளிடமிருந்து ஒதுங்கியே இருந்தார்கள்.

கை விரல்களை மடக்கி, லேசாகச் சோம்பல் முறித்தாள் சுதா. மணி பன்னிரண்டே முக்கால் ஆகியிருந்தது. மெல்ல இடத்ததைவிட்டு எழுந்திருந்து, படியேறி மாடியை அடைந்தாள். அங்கே அரைத் தூக்கத்திலிருந்த பியூன் கண்ணனை எழுப்பி, "என்ன கண்ணா, எப்போது முடியும் மீட்டிங்? என்று கேட்டாள்.

குரல்கேட்டு, 'ஆங் .....' என்று திடுக்கிட்டு விழித்துக்கொண்டான் கண்ணன். தூக்கதில் மட்டும் அவன் ஆலிலையில் பள்ளிகொண்ட கண்ணனின் வாரிசுதான். கண்ண பரமாத்மா ஆலிலையில் பள்ளிகொண்டார்; இவனோ அரை வட்டமாக இருந்த அந்த ஸ்டூலிலே பள்ளிகொண்டிருந்தான்.

சுதாவின் கேள்விக்கு அவன் அரைத் தூக்கத்திலேயே பதில் சொன்னான்: 'இப்போதான் முதல் ரவுண்ட் டிபன் ஆரம்பிச்சிருக்கு. முந்திரிப் பருப்பு, காப்பி போயிருக்கு. இன்னும் பாதாம் அல்வா - மிக்சர் செட், பாஸந்தி - பகோடா செட்......இருக்கே. அதெல்லாம் ஆனால்தானே டைரக்டர்கள் மீட்டிங் முடியும்....."

சலித்துக்கொண்டு கீழே வந்துவிட்டாள், சுதா.

பகல் ஒரு மணி ஆகிவிட்டதால் ஆபிஸ் காலியாக இருந்தது. ஏனோ அவளுக்கு டிபன் சாப்பிட வெளியே போகவேண்டும் என்று தோன்றவில்லை. தன் இடத்தில அமர்ந்துகொண்டு, தீவிர சிந்தனையில் ஆழ்ந்தாள்.

"என்ன சுதா, டிபன் சாப்பிடலியா?" என்று அவளை நெருங்கிக் கேட்டாள் கீதா.

"எனக்குப் பசிக்கலே" என்று பதிலளித்தால் சுதா.

"பாலும் கசந்ததடீ சகியே......படுக்கையும் நொந்ததடீ" என்று கேலியாகப் பாடிக்கொண்டே வெளியே சென்றாள் கீதா.

கீதா அந்தப் பாட்டைக் கேலியாகப் பாடினாலும், சுதாவின் நிலை அதுதான். நாலுபேரைப்போல, நாலுகாசு சம்பாதிப்பதற்குதான், இந்தக் கம்பெனிக்குள் நுழைந்தாள் அவள். ஆனால், இன்று அவள் வேலை பார்ப்பது, வெறும் நாலுகாசு தேவைக்காகமட்டும் அல்ல, அவளுடைய நாடி நரம்புகளில் சதா இன்பகீதத்தை எழுப்பிக்கொண்டிருக்கும் ஸ்ரீதரின் முக தரிசனத்திற்காகவும்தான்.

தன் மேனேஜர் ஸ்ரீதரைக் காதலிக்கிறாள் என்று ஒரே வாக்கியத்தில், சுதாவின் மனநிலையை வர்ணித்துவிட முடியாது .அவனைக் காதலிப்பதத் தவிர, இந்த உலகில் வேறு வேலை, பொழுதுபோக்கு எதுவுமில்லை என்று சொல்லுமளவுக்கு ஒருவித மயக்க வேகத்தில் அவள் இயங்கி வந்தாள். இத்தனைக்கும் அவன் அவளிடம் வாய் திறந்து வெளிப்படையாக எதுவும் சொன்னதில்லைதான். ஆனால் அவன் வாயில் இருந்து வரக்கூடிய சொல்லை விட அவன் முகபாவங்களிலிருந்து அதிகமான விஷயங்களை ஊகித்து வைத்திருந்தாள் சுதா. இருப்பினும் ஓரொரு சமயம் அவனுடைய அந்த ''அழுத்தம்'' அவளுக்குக் கோபத்தைக் கொடுக்கும்.'வாயைத் திறந்துதான் ஒரு வார்த்தை, "ஏன் சுதா இப்படி அலைமோதுகிறாய்? நீ மட்டும்தான் என்னை நினைத்து உருகுகிறாயா? நானும்தான் உன்னைநினைத்து உருகுகிறேன்" என்று சொல்லக் கூடாதா? என்று கொதிப்பாள். ஆனால், மறுகணமே, "பாவம், அவர் என்ன நம்மைமாதிரி காதல் கதைகளையும், சினிமாக்களையுமா பார்த்துக்கொண்டிருக்கிறார்? அதெல்லாம் பார்த்தால்தானே அப்படி வக்கணையாக காதல் வசனம் பேசவரும். இருபத்துநாலு மணிநேரமும் கம்பெனி, கம்பெனி என்று ஒரே சிந்தனையாக இருப்பவருக்கு காதல் வசனம் பேசி, மனதை வெளிப்படுத்த நேரம் எது?" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டு, சமாதானப்படுத்திக் கொள்வாள்.

சுதா தன் மனதைக்கொண்டே ஸ்ரீதரை அளந்து வைத்திருந்தாள் ஸ்ரீதர் அவளைக் காதலிக்கிறான் என்பதில் அவளுக்கு எந்த சந்தேகமும் இல்லை. அவள் படித்த கதைகளில் எத்தனை மானேஜர்கள் தங்கள் 'ஸ்டெனோவையே காதலித்துத் திருமணமும் செய்துகொண்டிருக்கிறார்கள்?

அந்தக் கதை மானேஜர்கள் மாதிரிதானே அவரும் என்னுடன் பழகுகிறார்?

சுதா அடிக்கடி சில சிறியநிகழ்ச்சிகளை எண்ணிப்பார்துக்கொள்வாள். ஒருமுறை டிக்டேஷன் கொடுக்கும்போது, அவளையே விழுங்கிவிடுவது போல் ஸ்ரீதர் பார்த்தான்."என்ன சார் அப்படிப் பார்கிறீர்கள்?" என்று வெட்கம் மேலிடக் கேட்டாள் சுதா. "சாரி.....சாரி......எதோ யோசனை" என்று மழுப்பினான் ஸ்ரீதர்.

இன்னொரு முறை அவளிடம் இருந்து டைப் அடித்த பேப்பரைப் பெறும்போது, அவள் மென்மையான விரல்களை வருடினான் ஸ்ரீதர்."தெரியாமல் பட்டிருந்தால் "சாரி"சொல்லியிருப்பாரே, அப்படிச் சொல்லததிலிருந்தே, அது வேண்டுமேன்றே செய்யப்பட்ட 'சமிங்ஞை' என்று தெரியவில்லையா?" இப்படித்தான் எண்ணினாள் சுதா.

இது மட்டுமா? எவ்வளவு நாள் சாயங்காலம் கொஞ்சம் லேட்டாகி விட்டால், தன் காரிலேயே அவளைக்கொண்டுபோய் வீட்டில் விட்டிருக்கிறான் ஸ்ரீதர்? ஒருநாள், "ஐஸ்கிரீம்" சாப்பிட்டுவிட்டுப் போகலாமே என்று அவன் அழைக்க, அவனுடன் போய் எதிர் எதிராக அமர்ந்து,' ஐஸ்கிரீம்' சாப்பிட்டதை அவளால் மறக்க முடியுமா?

கடிகாரம் 'டங்'கென்று ஒலித்தது.. நிமிர்ந்து பார்த்தாள். மணி ஒன்றரை. கையிலிருந்த 'சின்னஞ்சிறு பொட்டலத்தைப் பிரித்துச் சாப்பிடலாமா'என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, மாடிப் படிகளில் பலகுரல்கள் ஒரே சமயத்தில் ஒலிப்பது கேட்டது. "அப்பாடா....... மீட்டிங் முடிந்துவிட்டது" என்று சொல்லிக்கொண்டே இடத்தைவிட்டு எழுந்தாள் சுதா.

ஸ்ரீதர், மற்ற டைரக்டர்களுடன் எதோ பேசிக்கொண்டே வாசல்வரை சென்று, அவர்களை வழியனுப்பிவிட்டு வந்தான். மீண்டும் அவன் எப்போது அறைக்குள் நுழையப்போகிறான் என்றுக் காத்திருந்தவள் போல், அவன் உள்ளே நுழைந்ததும், பரக்கப்பரக்கச் சென்று," குட்மார்னிங்" என்று குழைந்தாள் சுதா.

டெலிபோன் எண்களைச் சுழற்றிக்கொண்டிருந்த ஸ்ரீதர், தலைநிமிர்ந்து, "ஓ," குட்மார்னிங்" என்றான். அவன் குரலில் எந்தவித குழைவும் இல்லை.

"ஒன் மினிட்......ஒரு பர்சனல்போன் பேசிவிட்டு உன்னை உள்ளே கூப்பிடுகிறேன்" என்றான்.

சுதாவுக்கு "சப்"பென்று போய்விட்டது.

"எஸ் ஸார்...." என்று கூறிக் கொண்டே வெளியேறினாள்.

'பர்சஸனல் போனாம், பர்சஸனல்.....! பொல்லாத பர்சஸனல். பர்சஸனல் கிளார்க்குக்குத் தெரியாமல், என்ன பேச்சு வேண்டியிருக்கிறது! அதாவதுப் போகட்டும், எனக்குத் தெரிந்தால் என்னவாம்.....'சலித்துக்கொண்டே தன் இடத்தில வந்து அமர்ந்தாள் சுதா. சின்ன டிபன் பொட்டலத்தைப் பிரித்தாள் அதில் ஒரு வாய் டிபன்தான் இருந்தது. என்ன செய்வது? பெரியப் பொட்டலமாகக் கொண்டு வந்தால் கொஞ்சம் அகௌரவம். இல்லையா? வயிறு சுருங்கலாம், ஆனால் கௌரவம் .சுருங்கலாமா?

**'கி ர் ர் ர்..............."**

பஸ்ஸர் ஒலித்தது. அந்த ஒலிப்பு தனக்குத்தான் என்று புரிந்து கொண்ட சுதா, எழுந்திருந்து, புடவையைச் சரிசெய்துக்கொண்டு, அறைக்குள் நுழைந்தாள்.

"எஸ் சுதா.......ஐயாம் ஸாரி...."என்றான் ஸ்ரீதர்.

நானும் பர்சஸனல் விஷயமாகப் பேசத்தான் வந்தேன்...."என்றாள் சுதா.

"ஈஸ் இட் ....கோ ஆன்....நான் வேண்டுமானால் வெளியே போகட்டுமா?" என்று கேட்டு, தனது பர்சஸனல் டெலிபோனை அவள்பக்கம் திருப்பினான் ஸ்ரீதர். சுதா சொந்த விஷயமாக எதோ டெலிபோன் செய்ய விரும்புகிறாள் என்று எண்ணினான் அவன். சிலசமயம் அவன் அறைக்குள் வந்து அவனுடைய பிரத்யோக உபயோகதிற்காக இருக்கும் டெலிபோனை அவள் பயன்படுத்துவதுண்டு.

"நோ....நோ.....போன் இல்லை ஸார், உங்களுடன்தான் கொஞ்சம் பர்சஸனலாகப் பேச வேண்டும்........" என்றாள் சுதா.

"அப்படியா? ஷ்யூர் ......உட்கார்" என்றான் ஸ்ரீதர்.

புடவைக் கசங்காமல் மென்மையாக உட்கார்ந்த சுதா, தன் கைப் பையைத்திறந்து, ஒரு கவரை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

"என்ன இது?" என்று கேட்டுக் கொண்டே அதை வாங்கினான் ஸ்ரீதர்

"பயப்படாமல் பிரித்துப் பாருங்கள் ........." என்றாள் சுதா சிரித்துக்கொண்டே.

ஸ்ரீதர் அந்தக் கவரைப் பிரித்தான்.அது ஒரு ரோஸும்,மஞ்சளும் கலந்த ஒரு கல்யாணஅழைப்பிதழ்..

"அடடே.. . .கல்யாணமா?.. . . .யாருக்கு? உனக்கா? "கங்கிராஜிலேஷேன்ஸ்"........என்றான் ஸ்ரீதர்.

இதைக் கேட்டதும் சுதாவின் முகம் சுருங்கியது.

“"என்ன ஸார் அப்படிக் கேட்கிறீர்கள்? என் கல்யாணம், உங்களுக்குத் தெரியாமலா...."என்றாள். இன்னும் ஏதேதோ சொல்ல வேண்டும் என்று துடித்தது அவள் மனம். ஆனால் அந்தப் பாழும் தைரியம் சரியான நேரத்தில் கைக் கொடுப்பதில்லையே!

அழைப்பிதழைப் பார்த்துவிட்டு, யார் இந்த ஜெயராம் என்று கேட்டான் ஸ்ரீதர்.

"என்ன ஸார் இது? எல்லாமே மறந்து விட்டதா? என் பிரதர் ஸார்.....உங்களிடம் எவ்வளவோ முறை சொல்லி இருக்கிறேனே; என் அண்ணன் ஜெயராமனைப் பற்றி. ரிசர்வ் பாங்கில் வேலை செய்கிறார். ஸார்........” மறந்துவிட்டீர்களா? என்று குறைபட்டுக்கொள்ளும் தோரணியில் சொன்னாள்சுதா.

"ஓ...ஐஸி...... ஞாபாகம் வருகிறது. அவருக்குக் கல்யாணமா? மணப்பெண்ணின் பெயர்.........வனஜாவா? ஐ லைக் திஸ் நேம்.....என்றான்.

"சுதா என்ற பெயரைவிடவா? என்றுக் கேட்கத் துடித்தாள் சுதா.

"பெண் வேலையாஇருக்கிரா"ளா என்றுக் கேட்டான் ஸ்ரீதர்.

"ஆமாம் சார், "ஜெனலக்ஸ்" மருந்துக் கம்பெனியில் 'ஸ்டெனோ '....."

"ஐஸி........நீயும் ஸ்டெனோ, உன் மன்னியும் ஸ்டெனோவா?"

"என்ன சார் செய்வது? கௌரவமான வேலையாகவும் இருந்து கைநிறையக் காசும் கிடைக்கும் வேலை, ஸ்டெனோ வேலைதானே சார்" என்றாள். முதல் நாளே வந்து விடவேண்டும். முறைப்படி வீட்டிலும் வந்துக் கூப்பிடுகிறோம்.' இது என்னுடைய பர்ஸனல் அழைப்பு, இன்னும் சொல்லப்போனால் இதுதான் முதல் அழைப்பிதழ்.. அச்சாகி வந்தவுடன், முதலில் உங்களுக்குக் கொடுக்கவேண்டும் என்று இருந்தேன் நீங்கள்தான் 'பிஸி'யாக இருந்துவிட்டீர்கள்........என்றாள்.

"யெஸ்........யெஸ், ரொம்ப வேலை.........போர்ட் மீட்டிங்கில் முக்கியமான முடிவுகள் எல்லாம் எடுத்துக்கொண்டோம்...."என்றவன்,"இதோ பார் சுதா, எனக்கு இந்த'பார்மாலிடி" எல்லாம் பிடிக்காது என்பது உனக்குத் தெரியும். வீட்டிற்கு வந்தெல்லாம் கூப்பிடவேண்டாம். அடுத்த ஞாயிற்றுக்கிழமை தானே கல்யாணம்?.... கண்டிப்பாக வந்து விடுகிறேன்......காலையிலோ, மாலையிலோ ஒரு வேளை வந்துவிடுகிறேன்......ஓகே ....." என்று கூறிவிட்டு,"முக்கியமான லெட்டர்ஸ் இருக்கிறது. நீ ரெடியா? என்றான்.

'ரெடி' என்பதுபோல் தலை அசைத்தவள், மீண்டும் தன் ஸீட்டிற்குச் சென்று, 'ஷார்ட்ஹாண்ட்' நோட்டுப் புத்தகத்துடன் திரும்பினாள்.

ஸ்ரீதரின் அன்றைய போக்கு அவளுக்குப் பிடிக்கவில்லை.

"லஞ்ச் -அவரின்போதுகூட கொஞ்சம் மனம்விட்டுப் பேசக்கூடாதா? என்று ஏங்கினாள்.

சுழல் நாற்காலியில் அமர்ந்துகொண்டு, வலக்கையை மேஜைமீது நீட்டிவைத்தபடி 'டிக்டடேஷன்' கொடுக்க ஆரம்பித்தான் ஸ்ரீதர்.

மேஜைமீதிருந்த அந்த வலக்கரத்தில் வளர்ந்திருந்த ரோமபந்திக் கவர்ச்சியில் கணநேரம் தன்னைமறந்த சுதா, அவன் சொன்னதைச் சரியாகக் கேட்டுக்கொள்ளாததால், "ஸாரி.....சார், இன்னொருமுறை சொல்லுங்கள்" என்றாள்.

ஸ்ரீதர் மறுபடியும் சொல்லத் தொடங்கினான்'.

- - - - - - - - - - - - -

'**ந**லம்தானா............நலம்தானா ..............

உடலும் உள்ளமும் நலம்தானா?

'தில்லானா சகோதரர்கள்' நாதசுர இனிமையைப் பொழிந்து கொண்டிருந்தார்கள். அந்த இனிமையை அனுபவித்தவண்ணம், மைசூர்பாகயும், மிச்சரையும் சுவைத்துக்கொண்டிருந்தார்கள் பலர். அந்தக் கீற்றுக் கொட்டகையின் நுழைவாயிலில், கம்பீரமாகச் 'சூட்' அணிந்து நின்றிருந்தான் ஜெயராமன்.அவன் பக்கத்தில் அழகாக அலங்கரித்துக்கொண்டு காட்சி தந்தாள் வனஜா.

அவர்களுக்கு திருமணமாகி,சரியாகப் பதினோரு மணிநேரம் ஆகிவிட்டிருந்தது.. காலையில் நடந்த முகூர்த்தத்திற்கு வந்திருந்தவர்களும், வராதவர்களும்,மாலையில் அப்போது நடந்துகொண்டிருந்த 'ரிசப்ஷ'னுக்கு வந்துகொண்டிருந்தார்கள்.

ஜெயராமனுக்கு நண்பர்கள் அதிகம்.அவர்களுக்கு நாதஸ்வரம் பிடிக்கும். எனவே,அவர்கள் விருப்பதிற்கிணங்க, தில்லான புகழ் மதுரை சகோதரர்களான சேதுராமன் பொன்னுசாமியின் நாதஸ்வரக் கச்சேரியையே ஏற்பாடு செய்திருந்தான். சகோதரர்கள் தங்கள் திறமையைச் சிறப்பாக வெளிப்படுத்திக்கொண்டிருந்தார்கள்.

வருகிறவர்களுக்கெல்லாம் பெருமையுடன் தன மனைவியை அறிமுகம் செய்து வைத்துக்கொண்டிருந்தான் ஜெயராம். கரம்கூப்பி அவர்களை வணங்கிக்கொண்டிருந்தாள் வனஜா..

கண் நிறைந்த ஒருவனைக் கணவராகப் பெற்றுவிட்டோம் என்ற களிப்பில் இருந்தபோதிலும், காலையிலிருந்தே அவள்மனதில் ஒரு சொல்லொணா வேதனை பரவியிருந்தது. அதுதான் சுந்தரத்தின் பாராமுகம். எவ்வளவோ அழைத்தும், அவன் கல்யாணத்திற்கு வரவில்லையே! ஏன்? அவளால் அதைப் புரிந்துக்கொள்ள முடியவில்லை. அவன் வராதது அவளுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாகத்தான் இருந்தது.

அவளால் சுந்தரத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லைதான்.தன் திருமணம் நிச்சயமான மறுநாளே, அந்தச் செய்தியைச் சுந்தரத்திடம்தான் முதலில் சொன்னாள் அவள்.'இந்த மகிழ்ச்சிகரமான செய்தியை முதலில் அவருடன்தான் பகிர்ந்துகொள்ள வேண்டும்' என்று துடிப்பு அவளுக்கு ஏற்பட்டது. ஆனால், அந்தச் செய்தியைக் கேட்டதும் சுந்தரத்திடம் ஏற்பட்ட மாறுதல்..........?அதை இப்போது நினைத்தாலும் வனஜாவுக்கு உடலெல்லாம் சிலிர்த்தது.

" வாழ்க்கை என்பது கனவல்ல சுந்தரம்; ஓர் ஆணும் பெண்ணும் நெருங்கிப்பழகுவதெல்லாம் காதல் அல்ல, சுந்தரம்......"என்று, அவனுக்கு அவள் எடுத்துச் சொல்லி,"என் திருமணத்திற்குக் கண்டிப்பாக நீங்கள் வரவேண்டும்" என்று கூறியிருந்தாள். ஆனால், அவள் அந்தச் செய்தியைச் சொன்ன மறுநாளிலிருந்தே, சுந்தரம் காரியாலயத்திற்கு வரவில்லை. வனஜாவும் ,தன் திருமணத்திற்கு லீவு போட்டுவிட்டாள். அதனால் அவர்கள் இருவரும் அதன்பிறகு சந்தித்துக்கொள்ள வாய்ப்பில்லாமலே போய்விட்டது. இருப்பினும், தன் கைப்பட அவனுக்கு ஒரு கடிதம் எழுதி, அத்துடன் தன் திருமண அழைப்பிதழையும் அனுப்பி இருந்தாள் வனஜா. அப்படி இருந்தும் சுந்தரம் வரவில்லை.

காலையில் முகூர்த்த வேளையின்போதே அவனை எதிர்பார்த்தாள் வனஜா. 'சரி, சாயங்காலம் வருவார்" என்று எண்ணிக்கொண்டாள். மாலை ஏழுமணியாகிவிட்டது. சுந்தரத்தைக் காணவில்லை.

அவளுடைய சக ஊழியர்கள் ஓடியாடி எல்லோரையும் வரவேற்று கொண்டிருந்தனர். நண்பர்களை அருகில் அழைத்து வந்து அறிமுகப்படுத்தி வைத்துக்கொண்டிருந்தனர்.

அப்படி ஒருமுறை தன் அருகில் வந்த சரளாவிடம்," என்ன சரளா, ஏன் சுந்தரத்தைக் காணவில்லை? என்றுக் கேட்டாள் வனஜா.

"என்ன இது வனஜா, இப்போது ஏன் அவரைப்பற்றிக் கவலை ? என்று கீழ்க்குரலில் கேட்டாள் சரளா.

"டோண்ட் பி ஸில்லி.....அவர் ஏன் வரவில்லையென்று உனக்குத் தெரியுமா என்று கேட்டேன். உடம்புக்கு ஒன்றுமில்லையே......?" சாதாரணமான குரலில், யாரிடமிருந்தும் எதையும் மறைக்கவேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் பேசினாள் வனஜா.

"உடம்புக்கு ஒன்றுமில்லை. மனதுக்குத்தான் எதோ....."என்று பதில் சொன்ன சரளா,"அவர் வர மாட்டார்.....'பர்கெட் ஹிம்' என்று சொல்லிவிட்டு, 'ஓ, வாங்க.....வாங்க ....."என்று தன் காரியாலய நண்பர் ஒருவரை வரவேற்க வாயிற்பக்கம் சென்றாள்

நேரம் நகர்ந்துகொண்டிருந்தது. மெல்ல மனைவியின் பக்கம் திரும்பிய ஜெயராமன், "என்ன வனஜா, முக்கியமாக யாரையாவது எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாயா? என்றுக்கேட்டான்.

எதோ சிந்தனையில் இருந்த வனஜா,"ம்..."என்றுக் கேட்டுவிட்டு,"ஆம், என் ஆபிஸ் நண்பர் ஒருவர் வரவில்லை....அவரைத்தான்......"என்றாள்.

"ஓ......."என்று சாதாரணமாகக் கேட்பதுபோல் அதைக் கேட்டுக்கொண்டான் ஜெயராமன்.

வனஜாவும், சரளாவும் பேசிக்கொண்டிருந்தது ஜெயராமன் காதில் விழத்தான் செய்தது.' யார் இந்த சுந்தரம்? வனஜா அவ்வளவு அக்கறைப்படும்படி அவன் யார்?என்ற கேள்விக்குறி அவன் மனதில் எழுந்தது.

வருகிறவர்களை வரவேற்கும் பணியில் ஈடுபட்டிருந்தவர்களில் சுதா முக்கிய பங்கேற்றிருந்தாள். ஆரம்பத்தில் வெகு உற்சாகத்துடன் அந்தப் பணியில் ஈடுபட்டிருந்தாள் அவள். மணியாக ஆக, அவள் உற்சாகம் குறைந்துகொண்டே வந்தது. காலையில் கல்யாணத்திற்கு உதவியாக சிட்டுக்குருவிபோல் ஓடியாடிக்கொண்டிருந்தவள் அவள். அவள் துள்ளலுக்கு அண்ணன் கல்யாணம் மட்டுமல்ல; காரணம் இன்னொன்றும் இருந்தது. தன் இதயத்தில் நிறைந்தவர், தன் இல்லத்தில் அன்று காலடி எடுத்து வைக்கப்போகிறார் என்ற மகிழ்ச்சியில் துள்ளினாள் அவள். அந்த

சுபதினத்தில் அவர்வருவது, அடுத்து ஒரு சுபதினத்திற்கு வழிவகுக்கும் என்ற நினைப்பு தந்த பரவசம், அவள் நெஞ்சில் தென்றலாக வீசிக்கொண்டிருந்தது.

காலையில் முகூர்த்தத்திற்கு வரும் அவகாசம் ஸ்ரீதருக்கு இருக்காது என்பது தெரியும். மாலையில் நிச்சயம் வருவான் என்று நம்பிக்கொண்டிருந்தாள். அவனை வரவேற்க, மாலையில் அவள் வெகு சீக்கிரம் தயாராகிவிட்டாள்.

புதுப்பெண்ணைவிட அழகாக டிரஸ் செய்துக்கொண்டு, உற்சாகத்தில் மிதந்து கொண்டிருந்தாள் சுதா. தினமுமே அவள் நேர்த்தியகத்தான் தன்னை அலங்கரித்துக் கொள்வாள். இடையிலிருந்து சற்று இறக்கித்தான் புடவையைக் கட்டுவாள்.' 'லோஹிப்'' அவளுக்குப் பிடித்த விஷயம். அந்த இடையின் செழுமை பார்ப்போரைக் கொஞ்சம் பரவசப்படுத்தும்; அந்த'ஜாக்கெட்'டை எப்படித்தான் அவளால் போட்டுக்கொள்ள முடிந்ததோ என்று வியக்க வேண்டும்; அவ்வளவு இறுக்கமானது அது. இளமையை எடுப்பாக எடுத்துக்காட்டுவதற்கு என்றே தைக்கப்பட்டது போலும்!.....சுதா மா நிறம்தான். இருந்தாலும் அவளிடம் பூரித்த செழுமை, அவளிடம் ஒரு வித சோபையைத் தந்து கொண்டிருந்தது. இருக்கும் இயற்கை எழிலை, செயற்கை சாதனங்களால் சிறப்பாக எடுத்துக்காட்டுவதில் தேர்ச்சி பெற்றிருந்தாள் அவள். விக்ரகத்திற்குப் புடவை கட்டுவதுபோல் கீழ்புறம் இழுத்துக்கட்டியிருக்கும் அந்தப்பாங்கே, அலாதிதான்.

மணி ஏழரையும் தாண்டிவிட்டது. சுதாவின் கண்கள் பூத்துப் போய் விட்டன. நேரமாக ஆக,'அவர் ஒருவேளை வரமாட்டாரோ' என்ற ஏமாற்றம் நெஞ்சை உறுத்த, நடை அவளுக்கு பாரமாகவும், நடைக்கு அவள் பாரமாகவும் சோர்ந்து போனாள். மணி எட்டும் ஆகிவிட்டது. டின்னரில் இரண்டு பந்தி முடிந்துவிட்டது. ஸ்ரீதர் இன்னும் வரவில்லை.

சுதவால் அதற்கு மேலும் இந்த எமாற்றததைத் தாங்க முடியவில்லை.

தங்கையேயே கவனித்துக் கொண்டிருந்த ஜெயராமன், அவள் நிலைகொள்ளாமல் தவிப்பதைப் புரிந்துக்கொண்டு, அவளை அருகே அழைத்தான்.

"என்னண்ணா?" என்று கேட்டுக் கொண்டே ஜெயராமன் அருகில் வந்தாள் சுதா.

"ஏன் சுதா, ஒரு மாதிரியாக இருக்கே......ஏதாவது உடம்பு சரியாக இல்லையா,என்ன? என்று கேட்டான்.

அதையே சாக்காக வைத்துக்கொண்டு,"ஆமாண்ணா, ஒரே தலைவலியா இருக்கு. நான் டாக்டர் வீடுவரை போய் வருகிறேன்"என்று கூறி, அவசர அவசரமாக அங்கிருந்து வெளியேறினாள் சுதா.

ஸ்ரீதரை பார்த்தால்தான் நிம்மதியாக இருக்கும்போல் இருந்தது அவளுக்கு. அதற்காகத்தான் வீட்டைவிட்டு வெளியேறினான் அவள்.

நடுவீதிக்கு வந்தபோது அவளுக்குத் திகைப்பாக இருந்தது.இதுவரை அவள் ஸ்ரீதர் வீட்டுக்குச் சென்றதில்லை. இந்த வேளையில் அவர் வீட்டுக்குப் போகலாமா,கூடாதா என்று புரியாமல் தவித்தாள்; ஒருவித கலக்கம் அவளையும் மீறி, அவளிடம் ஏற்பட்டது. ஆனால் அதையும் மீறி, அவனைப் பார்க்கவேண்டும் என்ற பதைப்பு நெஞ்சில் பெருகி நின்றது.,

மனதை ஒருநிலைப்படுத்திக்கொண்டு. டாக்ஸியில் ஏறிக்கொண்டாள்.

ஸ்ரீதர் வீட்டு வாசற்புறத்தில் போய் நின்றபோதுதான், அவளுக்கு தான் அங்கே வந்து நிற்பது ரொம்பவும் அசட்டுத்தனமான காரியமோ என்ற பிரமை தட்டியது. கல்யாணத்திற்கு அவர் வரவில்லை என்பதற்காக அவரைத்தேடி இரவு நேரத்தில் ஓடிவந்து நிற்பதா?

"ஏன் வந்தாய்?" என்று கேட்டால் என்ன செய்வது?"நீங்கள் ஏன் வரவில்லை என்று கேட்க ஓடிவந்தேன்'.... என்று பதில் சொல்வதா? அந்த பதில் நன்றாக இருக்காதே! ஆசைவழி வந்ததால், அதுவும் ஒருபெண் நடந்தால், அதுஇப்படித்தான் அசட்டுத்தனத்தில்கொண்டு போய்விடுமோ?

குழம்பியபடி வாசலில் இருந்த வேலைக்காரனிடம் விசாரித்தாள்.

"ஐயா. இன்னும் வீட்டிற்கு வரலீங்களே" என்றான் வேலையாள்.

"அப்படியா? என்று கேட்டவள் திரும்பிப் போய்விடலாமா என்றுஎண்ணியபோது...........

'ச ர் ர் ர்....'என்று வெகு வேகமாக ஒரு கார் வந்து அந்த வீட்டு வாசலில் நின்றது. அதனின்றும் அவசர அவசரமாகக் கீழே இறங்கிய ஸ்ரீதர், வீட்டுக்குள் வெகு வேகமாக ஓடினான்.

போர்டிகோவில்' நின்றிருந்த சுதாவை ஒரு கணம் பார்த்தான் அவன்.ஆனால், அவளிடம் எதுவும் பேசாமல் உள்ளே போய்விட்டான்.அவளை அவன் அடையாளம் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை.

அவன் செயலைக்கண்டு சுதா விக்கித்துப் போய்நின்றாள்.

அதற்குள்........

ஸ்ரீதர் காருக்குப் பின்னால் இன்னொரு கார் வந்து நின்றது. அதனின்றும் ஒரு டாக்டர் இறங்கி வேகமாக உள்ளே நுழைந்தார். டாக்டரின் பையையும், இன்னும் சில கருவிகளையும் தூக்கிக்கொண்டு ஓர் உதவியாள் வெகு வேகமாக உள்ளே ஓடினான்.

'யாருக்கு என்ன?' என்று தெரியாமல், 'அங்கே நிற்பதா,போவதா'என்று புரியாமல் பிரமித்துப்போய் நின்றாள் சுதா.

# 3

இன்பக் கதைக ளெல்லாம் - உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ?
அன்பு தருவதிலே - உனைநேர்
ஆகுமோர் தெய்வ முண்டோ?

-பாரதியார்

**அ**றை வாசலில் அன்றைய காலை பேப்பர் கவனிப்பாரற்றுக் கிடந்தது. இன்னும் அறைக்கதவு திறக்கப் படவில்லை. சாதாரணமாகக் காலை ஐந்தரைக்குள் எழுந்திருந்து, கதவைத் திறந்துகொண்டு பேப்பர் வந்துவிட்டதா என்று பார்க்கும் சுந்தரம், அன்று காலை ஆறரை மணியாகியும் எழுந்திருக்கவில்லை.

அன்று மட்டும்தானா ? கடந்த சில நாட்களாகவே அவன் அப்படித்தான் இருக்கிறான். அவன் போக்கிலே பெரும் மாறுதல் ஏற்பட்டிருந்தது.

எழும்பூர் கெங்குரெட்டித் தெருவிலுள்ள பழங்கால வீட்டின் ஒரு போர்ஷனில்தான் சுந்தரம் குடியிருந்தான். கீழே ஒரு சமையல் அறை. மாடியில் ஒரு படுக்கை அறை. இந்த இரண்டு அறைகள், தாய்க்கும் மகனுக்கும் போதுமானவையாக இருந்தன. காலை வேளையில் குளிப்பதற்கும், மற்ற சௌகரியங்களுக்கும்தான் கொஞ்சம் கஷ்டப்பட வேண்டியிருந்தது. மற்றபடி அந்த போர்ஷன் சுந்தரத்திற்குப் பிடித்திருந்தது.

வாழ்கையில் எதற்கும் அதிக ஆசைப்படாதவன் சுந்தரம்.ஒரு கதர்வேஷ்டி, ஒரு கதர்சட்டை, ஒரு கடிகாரம், மூக்குக் கண்ணாடி, ஒரு ஜோடி செருப்பு - இவை போதும் என்று இருப்பவன் அவன்.

இசைப் பிரியன் ஆதலால், ஒரு சிறிய'ரிகார்ட் பிளேயர்' வாங்கி வைத்திருந்தான்.அதில் அவன் எப்போதும் கேட்கும் இசை, சிட்டிபாபுவின் வீணை!'பகலெல்லாம் வேலை செய்துவிட்டு இரவிலே அந்த இசையைக் கேட்கும்போது, ஒரு புதுத் தெம்பே பிறக்கிறது" என்பான் அவன். முரட்டுக்கதர்துணி அணிவதுபோல் கொஞ்சம் முரட்டு சுபாவமும் கொண்டிருந்தான் சுந்தரம். அந்த வீட்டில் இருக்கும் மற்ற போர்ஷன்கரர்களிடம் அவன் பேசுவதில்லை. ஏனோ யாருடனும் அதிகம் பேச அவன் விரும்புவதில்லை. 'நாம் ஒருவருடன் பேசுவதனால்,அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ள ஏதாவது விஷயம் இருக்க வேண்டும். அப்படியில்லாதபோது பேசி நேரத்தை வீணாக்குவதில் என்ன லாபம்?"என்ற மனப்பான்மை கொண்டவன் அவன்.

சுந்தரம் ஓரளவுக்குக் காந்தியவாதியாக இருந்தான். காந்திஜியின் மனத்தூய்மையும், எளிமையும் அவனுக்கு வழிகாட்டும் தத்துவங்களாக அமைந்திருந்தன.எப்போதும் தன்னைச் சுற்றியும் அமைதியும், தூய்மையும் அமைத்து வாழ்ந்து வந்தான் அவன்.

'ஜெனலக்ஸ்' நிறுவனத்தில் ஒரு சாதாரண உத்தியோகம்தான் அவனுக்கு. இருப்பினும் அதிலேயே பூரண மனநிறைவு பெற்றான்.' இந்த மானேஜர் என்ன கொக்கா? அவன் இடத்தில இருக்கவேண்டியவன் நான். வெறும் காக்காய் பிடிக்கும் பயல்கள்.........'என்ற சவுடால் பேச்சுக்களிலிருந்தும், 'என்ன பொல்லாத உத்தியோகம் இது? சுண்டைக்காய் வேலை! எத்தனையோ கம்பெனிகளில் என்னை'வா வா'என்று அழைக்கிறார்கள்' என்ற ஆர்பாட்டங்களிலிருந்தும் ஒதுங்கிப்போய், நிறைகுடமாக வாழ்ந்து வந்தான் அவன்.

அப்படிப்பட்டவனுடைய மன அமைதிதான், சமீபகாலமாகக் குலைந்து போயிருந்தது.

'அவன் போக்கில் ஒரு மாறுதல், அவன் பேச்சிலே ஒரு பதட்டம், அவன் செயலிலே ஒரு தடுமாற்றம் எல்லாம் ஏற்பட்டிருந்தன.

இவை அனைத்திற்கும் காரணம், ஒரு பெண்.

ஆமாம்! வனஜாதான்.

'வனஜா என்னை ஏமாற்றிவிட்டாள், என் நம்பிக்கையைக் குலைத்து விட்டாள்......' இப்படித்தான் எண்ணிக் குன்றிப்போனான் சுந்தரம். தான்கட்டியிருந்த மனக்கோட்டைகள் எல்லாம் தகர்ந்துவிட்டனவாகக் கருதினான் அவன்.

'எவ்வளவு சாதாரணமாக என்னிடம் வந்து அந்தச் செய்தியைச் சொல்லிவிட்டாள் வனஜா. அவளால் எப்படிஅதைச் சொல்ல முடிந்தது?" இப்படி எண்ணிஎண்ணிக் குமைந்தான் அவன்.

அன்று,

வனஜா, அவனிடம் தனது கல்யாண அழைப்பிதழைக் கொண்டு வந்து கொடுத்த அன்று, ஆபீசுக்கு லீவ் போட்டவன்தான். அதன் பிறகு கடந்த பதினைந்து நாட்களாக அவன் லீவிலேயே இருக்கிறான். தான் உண்டு, தன் அறை உண்டு என்று பித்துப் பிடித்தவன்போல் இருக்கிறான்.அதிகாலையில் எழுந்து பேப்பர் படித்துவிட்டு, காலாற ஸ்பர்டாங் சாலைவரை நடந்துவிட்டு வரும் பழக்கமுள்ள அவன், படுக்கையிலிருந்து எட்டு மணிக்குத்தான் எழுந்திருந்தான். அவன் போக்கே மாறிவிட்டிருந்தது.

'டொக்....டொக்..."

அறைக்கதவு தட்டப்பட்டது. உறக்கம் கலைந்து, உச்சிமுகட்டைப் பார்த்துக்கொண்டு படுக்கையில் படுத்திருந்த சுந்தரம், "யாரது?" என்று சற்றே கடுமையான குரலில் கேட்டான்.

"நான்தாண்டா சுந்தரம்.......மணி எட்டாறதே... எழுந்திருக்கல்லியா?" என்று வெளியிலேருந்து குரல்கொடுத்தாள் அவன் தாய். எழுந்து சென்று கதவைத் திறந்தான். தாயை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தான். பிறகு, கீழே கிடந்த 'ஹிந்து'பத்திரிகையை கையில் எடுத்துக்கொண்டு, அறைக்குள் நடந்தான்.அவன் தாயும் அவனைப் பின்தொடர்ந்தாள்.

அந்த அறையைப் பார்த்ததுமே அந்த அம்மாளுக்கு மகனின் மனநிலை புரிந்தது. எப்போதும் சுத்தமாக இருக்கும் அந்த அறை, மிகவும் கலைந்து காணப்பட்டது. புத்தகங்களும், துணிமணிகளும் ஆங்காங்கே தாறுமாறாகக் கிடந்தன. அவனுடைய 'ரிகார்ட் பிளேயர்' கூடத் தூசிபடிந்து, கவனிப்பாரற்றுக் கிடந்தது.

'ம்ம்.......என்று நீண்ட பெருமூச்சுவிட்ட அந்த அன்னை, மௌனமாக எல்லாவற்றையும் எடுத்துவைக்க ஆரம்பித்தாள். ஓரளவு அறையைச் சுத்தம் செய்தவள், அவனுடைய பழைய துணிகளை எல்லாம் கையில் எடுத்துக்கொண்டு, ஆபீசுக்குப் நேரமாகல்லியோ, சுந்தரம்?" என்று கேட்டாள். அவனை ஏறிட்டுப் பார்க்காமலேயே!

பேப்பரில் எதையோ படித்துக்கொண்டிருந்த சுந்தரம்," நான் இன்னிக்கு ஆபீசுக்குப் போகல்லே.........."என்றான், தலையை நிமிர்த்தாமலேயே.

சாதாரணமாக லீவே எடுத்துப் பழக்கப்படாத மகனிடமிருந்து வந்த பதில்,அந்தத் தாயைச் சற்றேத் திகைக்கச் செய்தது.

'ஏன் கொஞ்ச நாட்களாகவே ஆபீசுக்கே போகமாட்டேன் என்கிறான். ஒருவேளை ஆபீசில் எதாவது தப்பு தண்டா நடந்துவிட்டதோ? இவன் ஏன் இப்படி இருக்கிறான்......?" உண்மை தெரியாத அந்தத் தாய், இப்படியெல்லாம் எண்ண ஆரம்பித்துவிட்டாள்.

"ஏன் லீவ் போட்டிருக்கே...உடம்புக்கு எதாவது...." ஆதங்கத்துடன் கேட்டாள் அவள்.

சுந்தரத்திற்கு ஆத்திரம் வந்துவிட்டது. கையிலிருந்த பேப்பரை விசி எறிந்துவிட்டு,"ஆபீசுக்குப் போறதுக்குப் பிடிக்கல்லே; அதனாலே வீட்டிலே இருக்கேன். நான் வீட்டிலே இருக்கிறது உனக்குப் பிடிக்கலையா? அப்படின்னா நான் வேற எங்காவது தொலையறேனே....."என்று உரத்தக் குரலில் கத்தினான்.அதைக் கேட்டு அவன் தாய் திடுக்கிட்டாள்.'ஒரு நாளும் இப்படிப் பேசியதில்லையே இவன். இவனுக்குத் திடீரென்று என்ன ஆயிற்று? என்றுக் கலங்கியவாறு, அந்த அறையைவிட்டு மௌனமாக வெளியேறினாள்.

அம்மா வெளியே போனபிறகு, தன்னுடைய தவற்றை உணர்ந்து வேதனைப்பட்டான் சுந்தரம்.

சே, என்ன இது? நான் ஏன் இப்படியெல்லாம் நடந்து கொள்கிறேன்...? தாயிடமா நம் எரிச்சலைக் காட்டுவது? என் கோபத்தை நான் அம்மாவிடம் காட்டிவிட்டேன்; அம்மா யாரிடம் காட்டுவாள்...?'

அவன் மனம், தன் செயலுக்காக வேதனைப்பட்டது. தாயிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, அவளை சமாதானப் படுத்தவேண்டும் என்று தோன்றியது. கீழே இறங்கி, பல் தேய்த்துவிட்டு, சமையல் அறைக்குள் நுழைந்தான்.

'ஸ்டவ்' அடுப்பில் தோசை வார்த்துக் கொண்டிருந்தாள் அவன் தாய்.

அம்மாவின் முன் அமர்ந்துகொண்ட சுந்தரம்," அம்மா, என்னை மன்னித்து விடம்மா.....நான் அவசரத்தில் ஏதோ உன்னிடம் கடுமையாகப் பேசிவிட்டேன்..."என்றான்.

மகன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் தாய். பிறகு," நல்லாயிருக்குடா, என்கிட்டேயே வந்து மன்னிப்புக் கேட்கிற அளவுக்கு பெரிய இவனாப் போயிட்டியோ நீ? வழக்கமில்லாத வழக்கமா லீவ் போட்டுட்டு உட்கார்ந்திருக்கியே, உன் உடம்புக்கு எதாவதோன்னு என் மனசு அடிச்சுண்டுது...... உன் கஷ்டத்தைத் தெரிஞ்சுக்கிறதைவிட, எனக்கு வேற என்னடா வேலை" என்றாள் அவள். கம்மிய குரலில்.

"இல்லேம்மா, ஏதோ கொஞ்சம் மனசு சரியா இல்லே; அதோடு நிறைய லீவ் இருக்கு; அதை ஏன் விடணும்னுதான்...."என்று மழுப்பினான் சுந்தரம். பிறகு," அம்மா, நீ சுடச்சுட தோசை வார்த்துப் போடு.....நான் சாப்பிடறேன்.....எத்தனை நாளாச்சு இப்படிச் சாப்பிட்டு...."என்றான்.

மகன் எதையோ தன்னிடமிருந்து மறைக்கிறான் என்பதை அந்தத் தாய் புரிந்து கொண்டாள்.இருப்பினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், எவர் ஸில்வர் தட்டு ஒன்றைவைத்து, அதில் சுடச்சுட தோசையைப் போட்டாள்.மிளகாய்பொடி எண்ணையுடன் அதைச் சாப்பிட்டபோது, ஏனோ வனஜாவின் நினைவு சுந்தரத்திற்கு வந்தது. எவ்வளவு நாள் அவள் இப்படியெல்லாம் டிபன் தந்திருக்கிறாள்!எவ்வளவு ஆசையுடன் தந்திருக்கிறாள்!

எல்லாம் நாடகமா?

இரண்டு தோசைக்குமேல் சாப்பிடமுடியவில்லை அவனால் ."போதும்மா"என்று சொல்லி எழுந்து,மாடிக்குச் சென்று அறைக்குள் தன்னைச் சிறைப்படுத்திக்கொண்டான்.

மன அமைதிக்காகச் 'சத்திய சோதனை'யைக் கையில் எடுத்தான். அனால்.அன்று ' சத்திய சோதனை'யும் அவனைச் சோதித்துவிட்டது.எங்கும்,எதிலும் பற்றற்றுப் போனான் சுந்தரம்.

கையில் காப்பியுடன் மாடிக்கு வந்த அவன் தாய் அவனிடம் அதை நீட்டியவாறே, "சுந்தரம்.... எனக்கு வரவர ரொம்பத் தள்ளலே.;;;;எத்தனை நாளைக்குத்தான் நான் உனக்குச் சமைச்சுப் போட்டுக்கொண்டிருக்க முடியும்? சீக்கிரம் ஒரு கல்யாணத்தப் பண்ணிக்கொள்ளேன்" என்றாள்.

சுந்தரம் தாயையே உற்றுப்பார்த்தான். இப்போது அவனிடம் பதட்டம் இல்லை. நிதானமாக பழைய சுந்தரமாக மாறி, "அம்மா, நீ வழக்கமாச் சொல்ற விஷயத்தை இன்னிக்கும் சொல்லிட்ட. நானும் என்னுடைய வழக்கமான பதிலைச் சொல்லிடறேன். உனக்கு முடியறவறைக்கும் சமைச்சுப்போடு; எப்போ முடியலயோ அப்ப எங்கிட்டே சொல்லு, உன்னை உட்காரவச்சு நான் சமைச்சுப்போடறேன்....என்றான்.

"ம்...நான் இப்படிக் கேட்டுக்கொண்டே இருக்கேன்,நீயும் இப்படியே பதில் சொல்லிக்கொண்டு இரு ..."என்று சொல்லிவிட்டு, காலி காப்பி தம்ளருடன் கீழே இறங்கிச் சென்றாள் அவன் தாய்.

தாய் மட்டுமா அவனை இப்படிக் கேட்கிறாள்? ஒவ்வொரு சமயம் அவனுடைய நண்பர்களும் அவனிடம்," காலாகாலத்தில் கல்யாணம் பண்ணிக்கொள்ளக்கூடாதா?" என்பார்கள்.

அதற்கு அவன்,"எனக்கு ஏற்கனவே கல்யாணம் ஆகிவிட்டது.... அமைதியான எளிய வாழ்க்கைதான் என் மனைவி. பெண்ணைத்தான் துணைவியாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று என்ன கட்டாயம் இருக்கிறது....?"என்று பதில் சொல்வான்.

அப்படிப்பட்டவன் மனத்தில் 'பெண்ணைத் துணைவியாக்கிக் கொண்டால் என்ன? என்ற எண்ணத்தை ஏற்படுத்தியவள் வனஜாதான்.

வனஜாவும், சுந்தரமும் அடுத்தடுத்த ஸீட்டிலேயே இருந்த போதிலும்,ஒரு வருஷ காலத்திற்கு மேல் அவர்கள் பேசிக்கொண்டதே இல்லை என்பது, ரொம்பவும் ஆச்சர்யமான விஷயம். வனஜாவின் அழகும், சௌஜன்யமான சுபாவமும் பல ஊழியர்களை அவளுடைய மேஜை அருகே இழுக்கும். காரணமில்லாமலேயே, ஏதேதோ நொண்டிக் காரணங்களைக் கற்பித்துக்கொண்டு, அவளிடம் வந்து பேச்சுக் கொடுத்துவிட்டுப் போகும் ஊழியர்களைகளுக்குக் குறைவே இருக்காது. ஆனால், அடுத்த ஸீட்டிலிருந்த சுந்தரம்," ஒரு குண்டூசி வேண்டும்'என்றுகூட அவளிடம் கேட்டது கிடையாது.

தான் உண்டு, தன்வேலையுண்டு என்று இருந்துவிட்டு, வேலையில்லாத சமயம் தன் ''சத்திய சோதனை'' உண்டு என்று இருந்த சுந்தரம், அடுத்த ஸீட்டு வனஜாவை வெகுகாலமாக ஆச்சர்யமாகக் கவனித்து வந்தான். அதேபோல், எத்தனையோபேர் எத்தனையோ மனோபாவத்துடன் வந்து பேசினாலும், தன் நிலை பிறழாமல், சிநேகபாவத்துடனும், கணியத்துடனும் அத்தனை பேருடனும் பழகி வரும் வனஜாவின் சுபாவத்தையும் சுந்தரம் அறிந்தே இருந்தான்.

ஒரு நாள்,தற்செயலாக அவர்கள் இருவருக்குமிடையே இருந்த மெல்லிய திரை அகன்றது.. தன் வீட்டில் ஒரு விசேஷத்தை ஒட்டித் தயாரிக்கப்பட்டிருந்த சித்ரான்னங்களை மத்தியானம் டிபனுக்காகக்  கொண்டு வந்திருந்தாள் வனஜா. அதை யாருடனாவது பகிர்ந்து கொண்டால் மனதுக்கு நிறைவாக இருக்கும்போல் தோன்றியது. பக்கத்தில் இருந்த சுந்தரம் அவளுடைய கவனத்தைக் கவர்ந்தான்.

இதுநாள்வரை பேசிப் பழகாதவன் என்ற நிலைதானே ஒழிய, சுந்தரத்துடன் பேசக்கூடாது என்ற தயக்கம் அவளுக்கு ஏற்பட்டதே இல்லை.

"இவரைச் சாப்பாட்டுக்கு அழைத்தால் என்ன?' இந்த என்ணத்தை மறுகணமே செயல்படுத்தத் தீர்மானித்தாள். தன் நாற்காலியை அருகிலிருந்த மரப்பெட்டி பக்கமாக இழுத்துப் போட்டுக்கொண்டு, சார்...."என்று குரல் கொடுத்தாள்.

சற்று பதட்டத்துடனும், அதிர்ச்சியுடனும் திரும்பிப் பார்த்தான் சுந்தரம்.

"என் தம்பிக்கு இன்னிக்குப் பிறந்த நாள். ஸ்வீட்ஸ் எல்லாம் கொண்டு வந்திருக்கிறேன், சாப்பிடுகிறீர்களா? என்று கேட்டாள் வனஜா.

திகைப்பும் தயக்கமும் போட்டிட, என்னபதில் சொல்வது என்று புரியாத சுந்தரம், தட்டுத்தடுமாறி, "வந்து....நானும் கையில் டிபன் கொண்டுவந்திருக்கிறன்........அதுவே எனக்குப் போதும். நீங்கள் கொடுக்கிறதைச் சாப்பிட்டால், நான் கொண்டுவந்தது வீணாகப்போய்விடும்.... உணவுப் பொருளை வீணாக்கக்கூடாது, அது என் கொள்கை..." என்று ஏதோ ஒரு பதிலைச் சொல்லி வைத்தான்.

வனஜா விடவில்லை. "அப்படியென்றால் ஒண்ணு செய்வோமா? உங்க டிபன்லே பாதியை எங்கிட்டே கொடுங்க. என் டிபன்லே பாதியை நீங்க சாப்பிடுங்க....,.. .உங்க டிபனும் வீணாகாது. உங்க கொள்கையும் கெடாது. நீங்கள் என் சந்தோஷத்திலே பங்குகொண்டாப் போலேயும் ஆகும்..." என்றாள் "பளிச்" சென்று

இதற்குமேல் சுந்தரத்தால் பதில் சொல்லமுடியவில்லை. அவளிடமிருந்து தேங்காய் சாதத்தையும், சர்க்கரைப் பொங்கலையும் வாங்கிக் கொண்டான். தான் கொண்டுவந்திருந்த அரிசி உப்புமாவில் பாதியை அவளிடம் தந்தான்.

அன்று ஆரம்பித்த டிபன் பரிமாற்றப் பழக்கம், தினசரித் தொடர்ந்தது. ஆமை தலையை ஓட்டிற்குள் அடக்கி வைத்துக் கொண்டிருப்பதுபோல், தன் உணர்ச்சிகளை மனத்திற்குள் அடக்கி வைத்தே பழகி இருந்தவன் சுந்தரம்.

வனஜா அப்படி இல்லை; ரொம்பக் கலகலப்பு, துடிப்பானவள். எதிர்க்கும் அநாவசிய பயமோ, பதட்டமோ படமாட்டாள்.

போகப்போக, அவளே, பகல் ஒன்றரை ஆனதும், "சுந்தரம், லஞ்ச் டயம் ஆச்சு. உங்க டிபன் பாக்ஸத் திறங்க. இன்னிக்கு எங்க வீட்டிலே புளி உப்புமா" என்று பேச ஆரம்பித்துவிடுவாள்.

கொஞ்சம் கொஞ்சமாகச் சுந்தரத்தின் கூச்சம் விலகியது.அவளிடம் சகஜமாகப் பேசிப் பழக ஆரம்பித்தான். அலுவலகமே அவர்களைப்பற்றி 'என்னவோ, எதோ' என்று பேசிக்கொள்ளும் அளவுக்கு, அவர்கள் சகஜமாகப் பழக ஆரம்பித்தார்கள்.

பொதுவாகப் பெண்களை அற்வாளிகளாகச் சுந்தரம் என்றுமே ஏற்றுக்கொள்வதில்லை. அந்த எண்ணமே, பெண்களிடம் அவன் நெருங்கிப் பழகாததற்கும் முக்கிய காரணமாகவும் இருந்தது.

' பெண்களின் உலகம் தனியானது. அது, அன்பு - பாசம்; இவற்றோடு மட்டுமே சுழன்றுகொண்டிருப்பது....' என்பதுதான் அவன் முடிவு. அதை மாற்றிக்கொள்ளும்படியான சூழ்நிலை அவனுக்கு அதுவரை ஏற்பட்டதில்லை. வீட்டில் தாய் ஒருத்திதான் அவனுடன் நெருங்கிப் பழகும் பெண். அவளுக்கு அவனுடைய உடம்பைப் பற்றியும், நாவுக்கு ருசியாகச் சமைத்துப் போடுவதுபற்றியும்தான் கவலை. வேறு கவலை என்றால், அப்பளம்,வடாம் வீட்டில் இட்டால் லாபமா, கடையில் வாங்கினால் லாபமா?' என்பதாகத்தான் இருக்கும்.

பஸ்ஸிலோ, அக்கம்பக்கத்திலோ அவன் சந்தித்திருக்கும் பெண்களை இரண்டு வகையில் பிரித்திருக்கிறான் அவன்.

"அவள் புடவையைப் பார்த்தியா? ஜரிகை எவ்வளவு அதிகம்? என்றும், "அவள் தோட்டைப் பாரு, எனக்கென்னவோ ரங்கூன் வைரமாகத்தான் இருக்கும் என்று தோன்றுகிறது....." என்றும் பேசும் பெண்கள் ஒருரகம். இன்னும் கொஞ்சம் இளையவர்களோ, இன்னிக்கு 'தேன்கிண்ணம்' கேட்டியா? டி.எம்.எஸ்.ஸோட அந்தப் பாட்டு ப்ரமாதம்டீ......." "சிவாஜி,நடிப்பு நடிப்புத்தான்...."' "ஏன், ஜெய்சங்கருக்கு, என்ன குறைவு?...... இப்பல்லாம் சிவாஜி மாதிரியே வரார் அவரும்...." என்றுதான் பேசிக்கொண்டிருக்கிறார்கள். பெண்களின் லெவலே'அவ்வளவுதான் என்பது அவனுடைய முடிவு.

இதற்கு மேலாக எழும்பி நின்ற எந்தவொரு பிரச்சினையைக் காணும் பாங்கோ, ஓர் உயர்ந்த கண்ணோட் டத்தில் உலக வாழ்க்கையை அணுகும் பாங்கோ எந்த ஒரு பெண்ணிடமும் வெகுகாலமாக அவன் கண்டதே இல்லை.

அந்த நிலையில்தான் வனஜாவைக் கண்டான் சுந்தரம். மற்றவர்களிடமிருந்து அவள் மாறுபட்டிருப்பதைப் புரிந்துகொண்டான். புடவையைப் பற்றியோ, நகையைப் பற்றியோ, சினிமா நடிகர்களைப் பற்றியோ அவள் பேசி அவன் கேட்கவில்லை. அறிவு பூர்வமான விஷயங்களை அவள் அவனுடன் விவாதித் திருக்கிறாள். அவள் பேச்சைக் கேட்கக்கேட்க, அவளிடமுள்ள மரியாதை அவனுக்கு அதிகரித்துக்கொண்டே போயிற்று.

ஒரு நாள் அவர்கள் இருவரும் ''சாமர் செட் மாமி''ன் சிறுகதை ஒன்றைப்பற்றி சர்ச்சை வந்துவிட்டது. அந்தக் கதையில், தாம்பத்திய வாழ்வில் தன் கணவனோடு நிறைந்த மனத்துடன் வாழும் ஒரு பெண், ஓர் எழுத்தாளனின் எழுத்தில் மனப்பூர்வமாக ஒன்றி, அவனுடன் உயிரை விட்டுப் பழகுகிறாள்.

"ஒரு பெண்ணால் இரு ஆடவரிடம் ஒரே அளவு ஈடுபாடு கொண்டிருக்க முடியுமா?" என்ற சந்தேகத்தைக் கிளப்பினான் சுந்தரம். .

'ஒரு பெண்ணால் இரு ஆடவரிடம் இரு வேறு சக்திகளில்தானே அவள் ஒன்றிப்போயிருக்கிறாள்! கணவனுக்கு அவள் வாழ்க்கைத் துணையாக இருக்கிறாள். எழுத்தாளனுடன் அறிவுத்தோழமை கொண்டிருக்கிறாள்" என்றாள் வனஜா

"அறிவு பூர்வமாகவும், அன்பு பூர்வமாகவும் கணவனிடம் ஒன்றிப்போக வேண்டியதுதானே ஒரு மனைவியின் கடமை!"

"அதெப்படி? அறிவிலும், அன்பிலும் கணவன் பூரணத்துவம் பெற்றிருந்தால்தானே அது சாத்தியமாகும். ஒவ்வொரு கணவனும் உலகத்திலேயே பேரறிஞனாக இருக்க முடியுமா? 'தன் கணவன்தான் உலகத்திலேயே அறிவாளி, சகல கலையும் அறிந்தவன்' என்று சொல்லுவது, ஒரு பெண்ணின் பதிபக்தியைக் காட்டுமே தவிர, புத்திசாலித்தனத்தைக்

காட்டாது. கணவனிடம் நிறைந்த பாசத்தைக் கொடுத்து, ஒழுக்கத்தைக் காத்து, இல்வாழ்க்கை நடத்த ஒரு பெண் கடமைப்பட்டிருக்கிறாள். ஆனால், அவனே 'ஒப்பற்ற அறிவாளி' உயர்ந்த கலைஞன்' என்ற உண்மைக்கு எதிராக அவள் தன் கண்களை ஏன் மூடிக்கொள்ள வேண்டும்? இன்றைய வாழ்க்கையில் பலருடனும் பழகுகிறாள் பெண். பழக வேண்டிய அவசியம் அவளுக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பழக்கதின்போது, அவள் காத்துக்கொள்ள வேண்டிய உறவுகள், எல்லைகள், நியதிகள் - இவற்றை அவள் மறந்து விடக்கூடாது. அதுதான் முக்கியம்...." என்று, அன்று ஒரு பிரசங்கமே செய்து முடித்தாள் வனஜா.

அவளுடைய அந்தத் தெளிவான சிந்தனையைக் கண்டு பிரமித்துப் போனான் சுந்தரம்.

அது மட்டுமா?

அவளிடம் பலமுறை பேசிக்கொண்டிருந்தபோது, பல விஷயங்களை விளக்கமாகக் கேட்டிருக்கிறான் அவன்.

"எந்த உறவுக்கும் அதற்குரிய ஒழுக்கம் உண்டு. ஓவ்வொன்றும் தனித் தனியாக இயங்கக்கூடியது. எப்படி ஒரு அப்பாவுக்கும் மகளுக்கும் உள்ள உறவு, அண்ணனுக்கும் தங்கைக்கும் உள்ள உறவிலிருந்து ஒன்றையொன்று பாதிக்காமல் சிறக்க முடிகிறதோ, அப்படி ஒரு கணவனுக்கும் உள்ள உறவும், அறிவு பூர்வமாகப் பழகும் ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள உறவிலுருந்து தனித்து நிற்க முடியும்" என்று அடிக்கடி சொல்லுவாள் வனஜா.

தனக்கும் சுந்தரத்திற்கும் உள்ள உறவை வனஜா எப்படி நிர்ணயித்து வைத்திருந்தபோதிலும், வனஜாவோடு தனக்கு ஏற்பட்ட உறவை வேறு முறையில் சிந்திக்க ஆரம்பித்துவிட்டான் சுந்தரம்.

அவளைத் தன் அறிவுத் தோழியாக மட்டும் அவன் கொள்ளவில்லை. 'அவள் என்னுடைய வாழ்க்கைத் துணைவியாகவும் ஏன் இருக்கக் கூடாது' என்று எண்ண ஆரம்பித்துவிட்டான். இதுவரை அவன் எந்தப் பெண்ணையும் திருமணம் செய்து கொள்ளாததற்குக் காரணமே, தன் அமைதியான வாழ்வுக்கு ஒரு பெண்ணின் உறவு பாதகமானதாக அமைந்துவிடுமோ என்ற அச்சம்தான்.இருக்கும் மன நிறைவை ஒரு பெண்ணால் சுலபமாகக் கெடுத்துவிட முடியுமே! 'இருக்கிற வீடு போதும்'என்ற மன நிறைவை, 'இந்த ஓட்டை வீட்டில் எத்தனை நாள் இருப்பது? என்றோ, 'பக்கத்துக்கு வீட்டுப் பெண் போட்டிருக்கிற மாதிரி வைர பேசரி எனக்கு உண்டா?' என்றோ வரப் போகிறமனைவி கேட்டு, தன் மன நிம்மதியைக் குலைத்துவிடுவாளோ என்று அஞ்சினான் சுந்தரம்.

ஆனால், வனஜா............?

அவள், அவனுக்கு ஒரு நம்பிக்கை தீபமாக மாறினாள். அவள் அவனைப் புரிந்துக் கொண்டாள். 'என்னுடைய அமைதியையும், தன்மையையும் போற்றுபவள் அவள்' என்ற எண்ணம் அவனுக்கு உறுதியாக எழுந்தது.

சுந்தரத்தின் சின்ன உலகம் கொஞ்சம் கொஞ்சமாக விரிய ஆரம்பித்தது. வனஜாவும் வந்து குடியேறுவதற்கு ஏற்றதாக அந்த மனவீட்டை விரிவுபடுத்தினான். பிறகு, விரிவாக்கப்பட்ட அந்த மனவீட்டில் வனஜா எப்போது வந்து குடியேறிக் கலகலப்பூட்டுவாள் என்று எண்ண ஆரம்பித்தான்.

என்றைக்காவது ஒரு நாள் கல்யாணப்பேச்சு எழும்; அப்போது, பேச்சுவாக்கில் "உனக்காகத்தான் நான் காத்திருக்கிறேன், வனஜா" என்று கூறக் காத்திருந்தான்.

ஆனால், அந்தக் கல்யாணப் பேச்சு, வனஜாவின் நிச்சயதார்தச் செய்தியாகவே அவன் காதில் விழுந்தபோது........

தன்னுடைய திருமணத்தை ஏதோ ஒரு செய்தியை அறிவிப்பது போல் வனஜா களங்கமின்றிக் கூறியபோது........

அவன் துடிப்பைப் புரிந்துகொள்ளாமலேயே 'கட்டாயம் நீங்கள் கல்யாணத்திற்கு வந்து விடவேண்டும்' என்று கூறி, தன கல்யாணத்தைப் பற்றியும், அதில் அவன் கலந்து கொள்ள வேண்டிய அவசியத்தைப் பற்றியும் மட்டுமே அவள் பேசியபோது........

சுந்தரம் நிலை குலைந்து போனான்.

அவனால் அவள் திருமணத்திற்குப் போக முடியவில்லை.

ஏன்? அவளைப் பார்க்கவே முடியவில்லை.

எப்படி ''லஞ்ச்' அவரை'க் கழிப்பது என்ற அச்சம் அவனிடமே மேலிட்டது.

எனவேதான் காரியாலயத்திற்கு லீவ் போட்டுவிட்டான்.

ஜன்னல் வழியாக உள்ளே வந்து அவன் உடலில் பட்ட வெயில், அவனைத் தன் உணர்வுக்குக் கொண்டு வந்தது.கண்களில் தன்னையும் மீறி வழிந்த நீரைத் துடைத்துக்கொண்டான் சுந்தரம்.

'சத்திய சோதனை'யைக் கீழே வைத்தான். மேஜை டிராயரிலிருந்து தன்னுடைய டயரியை எடுத்து, அதில் சில வரிகளை எழுதினான்.

''என் எளிய மனக் குடிசையை உனக்காக விரிவுபடுத்தினேன், வனஜா. நீ போய்விட்டாய். இப்போது அந்தக் குடிசையில் - விரிவு படுத்தப்பட்ட குடிசையில், தனியாக இருக்க எனக்குப் பயமாக இருக்கிறது, வனஜா. 'ஓ'வென்று உலகமே வெறிச்சோடிப் போய்விட்டாற்போல் இருக்கிறது. உன்னைக் கேட்டால், 'நான் ஒருத்திதானா உலகம்? இன்னொரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளுங்களேன்; அப்போது அந்தக் குடிசை நிறைவு பெறுமே' என்று நீ சொல்லிவிடுவாய். ஆனால் என்னால் அதை ஒப்புக்கொள்ள முடியாது. என் குடிசை உன் மென்மையான பாதங்களை மட்டும்தான் தாங்கும். உன் ஒருத்தியால்தான் என் அமைதியைக் காக்க முடியும். இன்னொருத்தி வந்தால்......என் மனத்தின் அனுராகம் சிதைந்து விடலாம்.உனக்காக அமைத்தக் கோயில் அது. நீ குடியேறவில்லை. இனி, அந்த வெறுங்கோயிலைச் சுமந்து நின்றாலும் நிற்பேனே தவிர, ஒரு சாதாரண மனித ஜென்மத்தை, தெய்வம் என்று சொல்லி, அந்தக் கோயிலில் பிரதிஷ்டை செய்யமாட்டேன்.

இப்படி எழுதி முடித்தான்.

அப்போது.........

"சுந்தரம், உன்னைத் தேடி யாரோ வந்திருக்கிறார் ......" என்று கூறியபடி உள்ளே வந்தாள் அவன் தாய்.

"யாரது" என்று கேட்டுக்கொண்டே வெளியே வந்தான் சுந்தரம்.

அங்கே.........

அவன் கண்ணை அவனாலேயே நம்ப முடியவில்லை.

மடிப்பு நெகிழாத பட்டுப்புடவை மின்ன, அதைவிட அவளுடைய மனோகரமான புன்னகை ஒளிவிட அங்கே நின்று கொண்டிருந்தாள் வனஜா. அவள் கழுத்தில் ஏற்கெனவே கிடந்த தங்கச் சங்கிலிக்கு மேலாக 'எத்தனைதான் தங்கமானாலும் என் பெருமைக்கு ஈடாகுமா?' என்று சொல்வதுபோல், புத்தம் புதிதாக மஞ்சள் மெருகுடன் ஜொலித்துக்கொண்டிருந்தது மங்கள நாண்.

அவளுடைய சுடர்விடும் மங்கள அழகை நேருக்குநேர் பார்க்கத் திராணியற்ற நிலையில், அவளை 'வா' என்று வரவேற்கவும் தோன்றாமல் நின்றான் சுந்தரம்.

'ஏன் அப்படி நிற்கிறீர்கள்? நான் உங்களுடன் பேசவே போகிறதில்லை, ஆமாம்... " என்று கூறி, முகத்தை 'உம்' மென்று வைத்துக்கொண்டாள் வனஜா.

அவள் பேசிய பிறகே சுயநினைவுக்கு வந்த சுந்தரம், "உள்ளே வா, வனஜா" என்று அவளுக்கு வழிவிட்டு ஒதுங்கினான். பல வினாடிகளுக்கு அவனால் திகைப்பைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

"என்ன அதிசயமான பெண்ணாக இருக்கிறாள் இவள்? நேற்றுதான் திருமணம் நடந்திருக்கிறது. இன்று இங்கு வந்து நிற்கிறாளே! எதற்காக வந்திருக்கிறாள்? ஏன் வந்திருக்கிறாள்?'

'சட்'டென்று அவள் கையிலிருந்த ஒரு பொருளைக் கவனித்தான் சுந்தரம்.

அது.......

ஒரு புத்தம் புதிய எவர்ஸில்வர் டிபன் பாக்ஸ். அதன் உள்ளே என்ன இருக்கும்?

சுந்தரம் குழம்பித் தவித்தான்.

இதற்குள் வனஜா ''விறுவிறு'' வென்று சுந்தரத்தின் தாயின் அருகில் சென்று, "அம்மா....நான்தான் உங்கள் பிள்ளையுடைய நெருங்கின சினேகதி வனஜா. எனக்கு நேத்திக்குத்தான் கல்யாணம் ஆச்சு.....என்னை ஆசீர்வாதம் பண்ணுங்கள்......." என்று கூறி அவளை நமஸ்கரித்தாள்.

"தீர்க்க சுமங்கலியா இரம்மா....." என்று அவளை வாழ்த்தியவள், "அவர் வரவில்லையா?" என்று கேட்டாள்.

"இல்லேம்மா. நான்மட்டும்தான் வந்தேன். இப்போ உங்க பிள்ளையோட அவசரமா சண்டை போட வந்திருக்கிறேன்" என்றாள்.

"உட்கார்ந்து சொல்லும்மா.....என்ன விஷயம்?" என்று புன்முறுவலுடன் விசாரித்தபடி, தானும் அமர்ந்து கொண்டாள் சுந்தரத்தின் தாய்.

"பின்னே என்னம்மா? உங்க பிள்ளை நடந்துகொண்டது கொஞ்சமாவது சரியான்னு அவரையே கேளுங்கள். எங்க ஆபீசிலேயே - ஏன், இந்த ஊருக்குள்ளேயே என்று கூடச் சொல்லலாம் - நான்தான் அவருக்கு 'டியரஸ்டு பிரண்டு', அவர் கல்யாணத்திற்கு நான்தான் பெண்ணோட தோழியா இருந்திருப்பேன். என் கல்யாணத்துக்கு, அவர்தான் மாப்பிள்ளைத் தோழனா இருந்திருக்கணும். ஆனால் அவர் என்ன செய்தார் தெரியுமா? என்று கூறி, சுந்தரத்தைத் திரும்பிப் பார்த்தாள்.

"என்னம்மா செய்தான்?" என்று சற்றே படபடப்புடன் வினவினாள் அவன் தாய்.

"என் கல்யாணத்துக்கே வரல்லம்மா........!" - மிக நிதானமாகச் சொன்னபோதும், அவள்கண்களில் அவளையும் மீறி நீர் துளிர்த்தது.

"வனஜா.....வந்து.....வந்து...."என்று என்னசொல்வதென்று தெரியாமல் திணறினான் சுந்தரம்.

"என்ன, வந்து......வந்து......ஆபிசுலே லீவு போடறதுக்குக் காரணம் எழுதற மாதிரி எதையாவது புளுகாகாதீங்க, எனக்கு இந்தப் புளுகுண்ணித்தனமெல்லாம் பிடிக்காதுன்னு உங்களுக்குத் தெரியுமோல்லியோ?...... என்னவோ நீங்க வரல்லே! நீங்க நம்ப 'பிரண்ட்ஷிப்பை' மதிச்சது அவ்வளவுதான்னு வச்சுக்கறேன்...."......என்றாள் குறைபடும் குரலில்.

சில கண நேரம் அங்கே மௌனம் நிலவியது. அதைக் கலைத்துக் கொண்டு "முதல்லே வராததுக்கு ஸாரி சொல்லுங்க.......ஸே, ஸாரி என்றாள்.

"வந்து.....இதோ பாரு, வனஜா......."

"நோ........ஒன்றும் கேட்கமாட்டேன். முதல்ல ஸாரி சொல்லுங்க......."

"ஸாரி........."

'குட்......இனிமே அதைப்பத்தி ஒண்ணும் பேச வேண்டாம். நீங்க வராவிட்டாலும் நான் சும்மா இருந்துட மாட்டேன். அதான் வந்துவிட்டேன். முதல்லே உட்காருங்கோ....." என்றாள்.

சுந்தரம் புதிருடன் அவளைப் பார்த்து விழித்தான். அவன் தாயார் வனஜாவைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. 'இப்படியும் ஒரு பெண்ணா? என்ற திகைப்புடன் அவளைப் பார்த்தாள்

"உட்காரச் சொன்னால் நிற்கிறீர்களே...."என்று அதட்டினாள் வனஜா.

"உட்காருகிறேன், என்னவிஷயம் சொல்....." என்றுகூறி, அவள் எதிரில் அமர்ந்தான் சுந்தரம்..

டிபன் பாக்ஸைத் திறந்துகொண்டே பேசினாள் வனஜா. அவள் குரல் நெகிழ்ந்திருந்தது. "சுந்தரம், எங்க கல்யாணத்துக்கு வந்திருந்து எத்தனையோ பேர் சாப்பிட்டார்கள். ஆனால், நீங்கள் ஒருத்தர் வந்து சாப்பிடாம இருந்தது என் மனசு நிறையல்லே..... டிபன் பரிமாறிக் கொள்வதிலே நம்ப நட்பு ஆரம்பிச்சு வளர்ந்தது. என் வாழ்க்கையிலே ஒரு புதுத் திருப்பம் ஆரம்பிக்கிற இந்த நாளிலே, மீண்டும் நாம இரண்டுபேரும் டிபன் பரிமாறிச் சாப்பிட்டு, உங்ககிட்டே ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டு போகணும்னு வந்தேன். இந்த டிபன் பாக்ஸிலே என் கல்யாணப் பட்சணங்கள், கட்டுச் சாதத்திற்கு வைத்த இட்லி எல்லாம் இருக்கு....... எங்கே, உங்கள் வீட்டிலே என்ன இருக்கு?...... கொண்டுவாங்க....என்றாள்.

"இன்னும் டிபன் பண்ணலியே, அம்மா" என்று இழுத்தாள் சுந்தரத்தின் தாய்.

"பரவாயில்லை...இட்லி கொண்டுவந்திருக்கேன். உங்க பிள்ளைக்கு ரொம்பப் பிடிக்கும்..... வீட்டில் சாம்பார் வைத்திருப்பீர்களே, கொண்டுவாருங்கள்" என்றாள்.

சுந்தரத்தின் தாயார் சமையல் அறைக்குச் சென்று சாம்பார் கொண்டுவந்தாள்.

எவர்சில்வர் டிபன்பாக்ஸ் மூடியிலே ஓர் இட்லியை வைத்து, தன் கையால் சாம்பாரை ஊற்றினாள் வனஜா.

மௌனமாகத் தலை குனிந்து அமர்ந்திருந்தான் சுந்தரம்.

"ஊம்.....சாப்பிடுங்கள்...." நானும் உங்க வீட்டுச் சாம்பாரை 'டேஸ்ட்' பண்ணப்போகிறேன்....." என்ற வனஜா, தானும் ஓர் இட்லியைப் போட்டுக்கொண்டாள்.

வேறு வழியின்றி, இட்லியைச் சாம்பாருடன் சேர்த்துச் சாப்பிட்டான் சுந்தரம். அன்று அவன் தாயார் பாகற்காய்ச் சாம்பார் செய்திருந்தாள்.

சுந்தரத்திற்கு அது கசந்தது.

# 4

புதுமைப் பெண்ணிவள் சொற்களும் செய்கையும்
பொய்மை கொண்ட கலிக்குப் புதிது. – பாரதியார்

**ப**ழைய தினத்தந்தி பேப்பர் ஒன்றில் மடித்து வைக்கப்பட்டிருந்த பட்சணப் பொட்டலம், அந்த மேஜையில் கடந்த ஒருமணி நேரமாக கவனிப்பாரற்றுக் காணப்பட்டது. சுதாதான் அதை அங்கே வைத்திருந்தாள். தன் அண்ணன் திருமணத்தின் பட்சணங்களை, தன் அன்பு ஸ்ரீதருக்கு கொடுப்பதற்காக, காகிதத்தில் 'பாக்' செய்துகொண்டு வந்திருந்தாள் அவள். அதிரசத்தின் எண்ணெய், பேப்பரைத் துளைத்து வெளியே படர்ந்து கொண்டிருந்தது.

நிலைகொள்ளாமல் தன் இடத்தில அமர்ந்தவாறு, ஸ்ரீதரின் அறை வாசலையும், கடிகாரத்தையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் ஆபீசுக்கு வந்து இரண்டுமணி நேரம் ஆகிவிட்டது. சாதாரண நாளாக இருந்தால், இதற்குள் பத்துத்தடவையாவது ஸ்ரீதரின் ரூமிற்குள் போய் வந்திருப்பாள்.

ஆனால், அன்று.......

அவளுக்கு அவன்மீது கோபம். வருந்தி வருந்தி அழைத்தும் தன் அண்ணனின் திருமணத்திற்கு வரவில்லையே என்ற தாபம். வீடு தேடிச் சென்றவளை 'வா' என்றும் அழைக்கவில்லையே என்ற வருத்தம். இப்படி வருத்தமும், தாபமும், கோபமும் போட்டியிட, தன் இடத்திலேயே அமர்ந்துவிட்டாள் அவள்.

ஸ்டெனோவை அழைப்பதற்கென்று அந்தக் கம்பெனியில் ஒரு 'பஸ்ஸர்' வைத்திருந்தார்கள். அது ஒலித்தால், நோட்டு சகிதம் மானேஜரின் அறைக்குள் நுழைவாள் சுதா. அவள் 'பிஸி'யாக இருந்தால், அவளுடன் பணிபுரியும் மற்ற இரண்டு ஸ்டெனோக்களில் ஒருத்தி போவாள்.

அன்று காலையிலிருந்து ஐந்தாறு முறை 'பஸ்ஸர்' ஒலித்தும், சுதா ஸ்ரீதரின் அறைக்குள் போகவில்லை. முதன்முறை விஜயாவைப் போகச் சொன்னாள்; அதன் பிறகு, "சரோஜ்,நீ போ" என்றாள். அவர்கள் போய்த் திரும்பிய போதெல்லாம் 'எங்கே சுதா?" என்று தன்னைப்பற்றி விசாரித்திருப்பான் என்று எதிர்பார்த்து, அதைப் பற்றி அவர்கள் தன்னிடம் சொல்லப் போகிறார்கள் என்று காத்திருந்து ஏமாந்தாள்.

ஆறாவது முறையாக பஸ்ஸர்' ஒலித்தது.

'டக் டக்' என்று குதிகால் உயர்ந்த 'ஷு' ஒலிக்க, கிறித்துவப் பெண்மணி சரோஜ் உள்ளே சென்றாள். ஐந்து நிமிஷம் கழித்ததுத் திரும்பிய அவளைப்பார்த்து, பொறுமை இழந்தவளாக, "என்ன சரோஜ், மானேஜர் என்னைப்பற்றி எதாவது விசாரித்தாரா?" என்று கேட்டாள் சுதா.

"உன்னைப்பற்றியா? நோ.... உன்னைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. என்னைப்பற்றித்தான் கேட்டார்..."என்றாள் சரோஜ்.

"உன்னைப்பற்றியா? என்னகேட்டார்?"-எதோ ஒரு பதைபதைப்புடன் வினவினாள் சுதா.

"ஸம் பர்சனல் மேட்டர்....என் சொந்த சமாசாரம்.....ஸ்ரீதர் ஈஸ் எ வெரி நைஸ் மேன் ....என்றோ நான் சொன்னதை நினைவில் வைத்துக்கொண்டு இன்று விசாரித்தார்........வெரி கைன்ட் ஆப் ஹிம் ....அவரை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது" என்று, சற்றே உணர்ச்சி வசப்பட்டுக் கூறியவாறு, தன இடத்தில் போய் அமர்ந்தாள் சரோஜ்.

சுதாவுக்குத் தாங்கவில்லை.

'நல்ல விசாரிப்பு வேண்டியிருக்கிறது! கல்யாணத்திற்கு வராமல் போனதற்கு என்னைக்கூப்பிட்டு மன்னிப்புக் கேட்கவில்லை.... யார்யாரயோ போய் எதைஎதையோ விசாரித்துக் கொண்டிருக்கிறார்....'-குமுறினாள் அவள். அநாவசிய கௌரவம் பார்க்காமல் தானே உள்ளேபோய் அவரிடம் பேசிவிடலாம் என்றும் எண்ணினாள். இருப்பினும் ஏதோ ஒரு போலி கௌரவம் அவளைத் தடுத்தது.

'கூப்பிடட்டுமே..... இவர்கிட்டே நாம போய் வலிய பேசறதுனாலதானே என்னை இப்படி அலட்சியம் பண்றார். இந்த சுதா யார்னு அவருக்குக் காட்டுகிறேன், முகம் கொடுத்தே பேசாமல் இருக்கிறேன்....' என்று மனதிற்குள் குமுறிக்கொண்டே டைப்ரைட்டிங் மெஷின்மீது தன் கோபத்தைக் காட்டினாள்.

"கி ர் ர் ர்........"

மீண்டும் பஸ்ஸர் ஒலித்தது.

விஜயாவும், சரோஜும் முக்கியமாக ஏதோ 'டைப்' செய்து கொண்டிருந்தார்கள். எனவே, அவர்கள் இருவரும் 'நீ போ' என்பதுபோல் சுதாவின் முகத்தைப் பார்த்தாகள்.

'இனியும் இப்படியே இருந்தால், விஜயா என்னிடம் வந்து அவளைப்பற்றி ஸ்ரீதர் அக்கறையுடன் விசாரித்ததைச் சொல்லுவாள். என்னால் அதையெல்லாம் தாங்க முடியாது. என்னைப்பற்றி மட்டுமே என் ஸ்ரீதர் விசாரிக்கலாம்..... ஆமாம், என்னைப்பற்றி மட்டும்தான் அவர் அக்கறை எடுத்துக்கொள்ளலாம்......"

இந்த முடிவுடன், கையில் பட்சணப் பொட்டலத்தையும் எடுத்துக்கொண்டு 'ஷார்ட்ஹாண்ட்' நோட் சகிதம், ஸ்ரீதர் அறைக்குள் நுழைந்தாள் சுதா.

அவள் உள்ளேநுழைந்தபோது, ஸ்ரீதர் மும்முரமாக டெலிபோனில் பேசிக்கொண்டிருந்தான். பேசி முடிந்ததும், எதிரே சற்றுத்தள்ளி நின்று கொண்டிருந்த சுதாவைப் பார்த்து, மிகவும் சாதாரணமாக "குட்மார்னிங்" சுதா......கமான்....." என்றான்.

முகத்தை ''உம்' என்று வைத்துக்கொண்டு, பல்லைமட்டும் லேசாகக் காட்டி, ஓர் அசட்டுச் சிரிப்பு சிரித்தாள் சுதா. அதாவது அந்த முகத்தில் உள்ள 'உர்', தன் 'இவரான' ஸ்ரீதருக்குக் காட்டும் எதிர்ப்பு, இலேசாகக் காட்டும் 'புன்சிரிப்பு' உத்தியோக மரியாதை. அசட்டுச் சிரிப்பு எப்படி இருக்கும் என்பதை அழகாக எடுத்துக்காட்டினாள் சுதா.

தன் கையிலிருந்த பேப்பர் பொட்டலத்தை ஸ்ரீதரின் மேஜை மீது வைத்துவிட்டு, இரண்டடி தள்ளி நின்றுகொண்டாள் சுதா.

"வாட் ஈஸ் திஸ்........." என்ன இது? என்று கேட்டான் ஸ்ரீதர்.

"பட்சணம்......." ஒரே வார்த்தையில் பதில் சொன்னாள் சுதா.

"பட்சணமா? என்ன விசேஷமோ?" மிக சாதாரணமாக கேட்டு விட்டான் ஸ்ரீதர்.

அவ்வளவுதான்! சுதாவுக்கு அழுகையே பொத்துக்கொண்டு வந்துவிட்டது.

நல்ல கேள்வி, சார்......இன்னும் கொஞ்சம் போனால், "நீ யார்?' என்றுகூடக் கேட்பீர்கள் போலிருக்கிறதே.... ஏன் பிரதருக்குக் கல்யாணம் ஆனது தெரியாதா உங்களுக்கு? நீங்கள் கல்யாணத்துக்குத்தான் வரவில்லையே! கல்யாணப் பட்சணமாவது உங்களுக்குக் கொடுக்கலாம் என்று கொண்டுவந்தேன் என்றாள் குத்தலாக.

"ஓ.......யெஸ் யெஸ்......ஐயம் ஸாரி, மறந்தே போய்விட்டது. நான் அந்தக் கல்யாணத்திற்கு வரமுடியவில்லை. என்னை மன்னித்து விடு..... அன்றையதினம் பார்த்து ஏதேதோ சொந்த வேலைகள். ஐ வாஸ் காட் அப்.... கல்யாணம் நன்றாக நடந்ததா?" என்று விசாரித்தான் ஸ்ரீதர்.

"ஊம்......... ஜோராக நடந்தது. நீங்கள் வராததுதான் எனக்குப் பெரியகுறை.......அதோடு........" என்று கூறி, மேலே சொல்லலாமா வேண்டாமா என்பது போல் தயக்கம் காட்டினாள் சுதா.

"கமான்.....சொல்லு.....ஏதோ சொல்லவந்தாயே......கோ ஆன்......என்று அவளைத் தூண்டினான் ஸ்ரீதர்.

"நீங்கள் வரவில்லையே என்று துடித்துப் போய் நான் உங்களைத் தேடிக்கொண்டு உங்கள் வீட்டிற்கு வந்தால், நீங்கள் என்னை ஏறிட்டுக்கூடப் பார்க்காமல் போய்விட்டீர்கள். நீங்கள் என்னை இவ்வளவு அலட்சியப் படுத்துவீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை......" இதைக் கூறி முடிக்குமுன், சுதாவின் கண்கள் கலங்கிவிட்டன.

ஸ்ரீதர் தன் இடத்தைவிட்டு எழுந்துவிட்டான்.

"டோன்ட் பி ஸில்லி..... இதைப்போய் பெரிதாக எடுத்துக்கொண்டு.......ஏதோ வரமுடியவில்லை, அவ்வளவுதான். நான் என்ன சம்பந்தி மனுஷனா, வரவில்லை என்பதற்காக வருத்தப்படுவதற்கு......... "என்று ஆறுதலாகப் பேசினான்.

வீடு தேடிச்சென்ற தன்னைக் கண்டுகொள்ளாததைப்பற்றி இப்போதும் கண்டுகொள்ளாமல் பேசுகிறாரே இவர்......' என்று எண்ணியபடி, ஸ்ரீதரை உற்றுப் பார்த்தாள் சுதா. பிறகு, "சார், நீங்கள்தான் வரவில்லை, உங்கள் வீட்டுக்கு வந்த என்னை ஏன் சார் கவனிக்கவில்லை ?....... என்று கேட்டாள்.

"ஓ.......அதுவா? ஐயாம் ஸாரி........நீ வந்த நேரம் அப்படி........ நான் உன்னைப் பார்த்தேன். ஆனால், ஒரு விநாடிகூட உன்னுடன் நின்று பேசமுடியாத சூழ்நிலையில் இருந்தேன். என் பவானி மிகவும் ஸீரியஸாக இருந்தாள். அதனால்தான்....."என்றான் நிதானமாக.

'என் பவானியா? யார் அவள்?' - சுதாவுக்கு தரை கீழே நழுவுவது போல் இருந்தது.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள், சார்?" என்றாள் கரகரத்த குரலில்.

நத்திங்....அது என்னுடைய பர்சனல் பிராப்ளம்... தவறிப்போய் உன்னிடம் சொல்லி விட்டேன்...." என்றவன், "நேரமாகிறது......... ஏதேதோ பேசிக்கொண்டிருக்கிறோமே..... டேக் டௌன்.......மெசர்ஸ் கீமர் அண்ட் பென்ஸ்ட்.......டியர் ஸார்........" என்று 'டிக்டேஷன்' ஆரம்பித்தான்.

சுதா இயந்திர ரீதியில் 'நோட்ஸ்' எடுத்துக்கொண்டாலும் அவள் மனம் என்னவோ 'யார் அந்த பவானி? அவளுக்கும் இவருக்கும் என்ன உறவு?" என்றே கேட்டுக்கொண்டிருந்தது.

டிக்டேஷன் முடிந்ததும், 'சீக்கிரம் டைப் அடித்துக் கொண்டுவா. நான் அதில் கையெழுத்திட்டுவிட்டு வெளியே போக வேண்டும்.......என்றான்.

சுதா தன் இடத்தை அடைந்தாள். அவளுக்கு கைகால் ஓடவில்லை. ஸ்ரீதரின் பேச்சும், போக்கும் அவளுக்குப் பிடிக்கவில்லை. அவசர அவசரமாக எதையோ டைப் செய்தாள். அதை எடுத்துக்கொண்டு, மீண்டும் ஸ்ரீதரின் அறைக்குள் நுழைந்தாள்.

சுதா உள்ளே நுழைவதைக்கண்டதும் மேஜையிலிருந்து எதோ ஒன்றை அவசர அவசரமாக தன் கோட்டுப் பைக்குள் வைத்துக்கொண்டான் ஸ்ரீதர். அவனது அந்தச்செயல் கொஞ்சம் சந்தேகத்திற்கு உரியதாகவே சுதாவுக்குத் தோன்றியது. அவன் அப்படி அவசரமாக மறைத்தது ஒரு போட்டோ என்றும் அவளுக்குப் புரிந்தது.

அந்த லெட்டரை வாங்கிப் பார்த்த ஸ்ரீதரின் முகம் லேசாகச் சுருங்கியது.

"என்ன இது? நான் ஏதோ சொன்னால், நீ ஏதோ டைப் பண்ணியிருக்கிறாயே....... டிக்டேஷன் கொடுக்கும்போது கவனமாக இருந்தால்தானே?" என்றான் சற்றுக் கடுமையாக. இதைக் கேட்டுக் கல்லாய் உறைந்துபோய் நின்றாள் சுதா.

தன்னையா ஸ்ரீதர் கடிந்து கொள்கிறான்? அவளால் நம்பவே முடியவில்லை.

"சார்........வந்து......" என்று அவள் எதோ சொல்ல முற்படுமுன், ஸ்ரீதரின் மேஜைமீதிருந்த டெலிபோன்மணி ஒலித்தது.

"யெஸ்.......ஸ்ரீதர் ஹியர்......" என்று ரிஸீவரை எடுத்தவன் அடுத்தகணம், "என்ன? மீண்டுமா? டாக்டர் இல்லையா? நான் வரேன்........அதுவரைக்கும் நீங்க பவானி பக்கத்திலேயே இருங்கள்" என்று பரக்கப் பரக்கக் கூறிவிட்டுச் 'சட்'டென்று எழுந்திருந்து, அறைக்கதவைத் திறந்துகொண்டு புயலென வெளியே சென்றான். மறுவினாடி ''புர்'' என்ற பேரொலியைக் கிளப்பிக்கொண்டு அவனுடைய 'பியட்' கார் காரியாலத்தைவிட்டுக் கிளம்பியது.

சுதா ஸ்தம்பித்துப் போனாள். மெல்ல தன் இடத்தில் வந்து அமர்ந்துகொண்டாள். வெகு நேரம்வரை அவளால் எதையுமே சிந்திக்க முடியவில்லை. 'லஞ்ச்அவர்' வரை அவள் பிரமைபிடித்தவள் போல்தான் அமர்ந்திருந்தாள்.

உள்ளே........

ஸ்ரீதரின் மேஜை மீது.........

பழைய தினத்தந்தி பேப்பர் ஒன்றில் மடித்து வைக்கப்பட்டிருந்த பட்சணப் பொட்டலம், கவனிப்பாரற்றுக் கிடந்தது.

************

**வெ**ள்ளிக் குத்துவிளக்கு சுடர்விட்டு ஒளிவீசி, அறையிலிருப்போரைக் கவனித்துக் கொண்டிருந்தது.

ரேடியோவிலிருந்து 'மதுர மன்னன்' மதுரை சோமுவின் இன்னிசை நிகழ்ச்சி ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது.

இரண்டு தலையணைகளை முதுகுக்கு அண்டக் கொடுத்தவாறு, இசையை ரசித்துக்கொண்டே, அந்தவாரக் 'கல்கி' இதழைப் புரட்டிக் கொண்டிருந்தான் ஜெயராமன். அவனுக்கு பிடித்தமான வித்துவான், மதுரை சோமுதான். "அவர் இசையிலே கற்பனை தவழ்வதைக் காண்கிறேன். இனிமை இழையோட, கம்பீரம் தாண்டவமாட, நம்மை மறக்கச் செய்யும் இசை அவருடையது" என்று நண்பர்களிடம் கூறுவான் அவன்.

ஜெயராமனுக்கு திருமணமாகி அன்றோடு இரண்டு நாள் முடிந்துவிட்டது. திருமண அலைச்சல், சந்தடி எல்லாம் ஓய்ந்து, வாழ்க்கையை நிதானமாகப் பார்க்கும் நேரம் அப்போதுதான் தொடங்கி இருந்தது.

தன் மனைவி வனஜா மீது அவனுக்குத் தனி பிரேமையே ஏற்பட்டிருந்தது. தான் அறிமுகப்படுத்தி வைத்த நண்பர்களிடம் அவள் பழகிய முறை, தன் உறவினர்களுடன் அவள் கலந்துகொண்ட பாங்கு எல்லாம் அவனை மிகவும் கவர்ந்தது. இப்போதுகூட அவள் உள்ளே சமையல் வேலையில்தான் ஈடுபட்டிருந்தாள். அதை முடித்துக்கொண்டு அவள் வருவதற்காகக் காத்திருந்தான் அவன்.

'ஐயாம் லக்கி......வரப்போகிற மனைவி, நம் வீட்டாருடன் எப்படிப் பழப்போகிறாளோ என்ற அச்சத்தைப் போக்கிவிட்டாளே.......இன்று சாயங்காலம் சுதாவிடம் அவள் பேசியது ஒன்றுபோதுமே, அதற்குச் சான்று சொல்ல......ஆனால், ஒரு விஷயத்தில் மட்டும் அவள் போக்கு........'

எதையோ யோசித்தவண்ணம் பத்திரிகையைக் கீழே வைத்துவிட்டு, இரண்டு கைகளையும் அண்டக் கொடுத்துக் கொண்டு கட்டிலில் நன்றாகச் சாய்ந்தான் ஜெயராமன்.

அன்று மாலை நடந்த அந்த நிகழ்ச்சி அவன் மனதில் மீண்டும் பளிச்சிட்டது.

'எவ்வளவு துடுக்காகப் பேசிவிட்டாள் இந்தச் சுதா?' என்று எண்ணினான்.

பாவம், சுதாவின் மனநிலை அவனுக்குத் தெரியாது. அவளுக்குத்தான் எல்லாவற்றிலும் சுவாரசியம் குறைந்துவிட்டதே.

சுதாவினுடைய மகிழ்ச்சிக்கும் சரி, துன்பத்திற்கும் சரி ஆதார சுருதியாக இருப்பது ஸ்ரீதர் தான். ஸ்ரீதர் அவளிடம் 'கலகல' வென்று பேசிச்சிரித்தால், அவளுக்குத் தன்னைச் சுற்றியுள்ள உலகமே மகிழ்ச்சியாக இருப்பதுபோல் தோன்றும். ஸ்ரீதர் வழக்கமாகப் பேசும் வார்த்தைக்கு இரண்டு வார்த்தை குறைவாகப் பேசினால், உலகமே குறைபட்டுப்போனது போலவும், உலகத்தில் சந்தோஷமே இல்லாமல் வறண்டு போனது போலவும் தோன்றும் அவளுக்கு.

அப்படியிருக்க, அன்று கொண்டுபோன பட்சணங்களை அவன் அலட்சியப் படுத்திவிட்டதோடு, யாரோ 'பவானி' என்ற பெயரையும் வேறு சொல்லிவிட்டான். கேட்க வேண்டுமா? குன்றிப் போனாள் அவள். உலகையே வெறுத்தாள்.

அந்த வெறுப்போடு மாலையில் அவள் வீடு திரும்பும்போது தான் ஜெயராமனும், வனஜாவும் ஹாலில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். வேலைக்குப் போய்விட்டுக் களைத்துப் போய் வீடு திரும்பும் பெண்ணை ''வா' 'என்று சிரித்து அழைப்பது, அவளுக்கு தெம்பைத் தரும் என்றெண்ணி சிரித்தமுகத்துடன் "வா, சுதா.......ஆபீசில் வேலையெல்லாம் எப்படி? என்று கேட்டாள் வனஜா.

ஏனோ, அப்போது மகிழ்ச்சியாக, ஜோடியாக அமர்ந்திருக்கும் அவர்களைக் காணவே சுதாவுக்குப் பிடிக்கவில்லை. எனவே, அலட்சியமாக, "வேலை எப்படி இருக்கும்? வேலை மாதிரிதான் இருக்கும்......" என்று 'சுருக்'கென்று கூறிவிட்டுத் தன அறைக்குள் சென்றுவிட்டாள் சுதா.

இதைக்கேட்டு வனஜா வருத்தப்படவில்லை; அனால் ஜெயராமன் வருத்தப்பட்டான். 'என்ன இது? சுதா ஏன் இப்படி நடந்துகொள்கிறாள்? என்று புரியாமல் "சுதா......." என்று சற்றுக் கண்டிப்பான குரலில் அழைத்தான்.

'என்ன' என்பது போல் நின்று திரும்பிப் பார்த்தாள் சுதா.

"அன்பாகக் கேட்ட கேள்விக்கு இப்படியா பதில் சொல்வது? என்றான் ஜெயராமன்.

"பின் எப்படிசொல்வதாம்!....இனிமேல் உங்களிடம் பேசக் கற்றுக்கொள்கிறேன்......" என்று குத்தலாகக் கூறிவிட்டு, அறைக்குள் சென்று விட்டாள் சுதா.

பரிதாபமாக வனஜாவைப் பார்த்தான் ஜெயராமன். வனஜா சிரித்துக்கொண்டே, பாவம், மானேஜர் ஏதாவது 'டோஸ்' கொடுத்திருப்பார். அதுதான் இப்படிக் கோபமாகப் பேசுகிறாள். வேலைக்குப் போகிற பெண்களுக்கு இதெல்லாம் சகஜம். இதற்கு நீங்கள் ஏன் பதட்டப்படுகிறீர்கள்.......' என்றாள். பிறகு, "நான் சுதாவுக்குக் காப்பி கொடுத்துவிட்டு வருகிறேன்" என்று கூறி உள்ளே எழுந்து சென்றாள்.

காப்பி தம்ளருடன் சுதாவின் அறைக்குள் நுழைந்த வனஜா, "ஏம்மா ஒரு மாதிரி இருக்கே....? ஆபீசில் ஏதாவது...." என்று ஆதுரத்துடன் விசாரித்தாள்.

"உம்....." என்று நிஷ்டூரமாகக் கேட்டு வனஜாவை வெறுப்புடன் நிமிர்ந்து பார்த்து, ஏன் சொந்த விஷயத்திலெல்லாம் யாரும் தலையிட வேண்டாம்" என்று கூறிவிட்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டாள் சுதா.

இதைக்கேட்டு வனஜா கோபப்படவில்லை. மென்மையாகச் சிரித்துக்கொண்டே, "தலையிடாமல் எப்படியம்மா இருக்க முடியும் ? இந்த வீட்டிலுள்ள உங்க எல்லோருடைய பிரைவேட் மாட்டரையும் கவனிக்கத்தானே உங்கள் அண்ணா என்னை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறார்" என்றாள்.

அண்ணாதானே அழைத்துக்கொண்டு வந்தார்! அவரோட பிரைவேட் மாட்டரை மட்டும் கவனித்துக் கொள்ளுங்கள், என் விஷயத்தை நான் பார்த்துக்கொள்கிறேன்....." என்றாள், முகத்தைச் சுளித்துக்கொண்டு சுதா.

விசித்திரமாக அவளைப் பார்த்துவிட்டு, ஹாலில் இருந்த கணவன் அருகில் வந்து அமர்ந்துகொண்டு, "எனக்காக ஏற்கெனவே இங்கே ஒரு குழந்தை இருக்கிறாளே......."என்றாள் வனஜா.

ஜெயராமன் அப்போது அவளிடம் பதில் சொல்லவில்லை. அவனுக்கு வனஜாவை நினைத்துப் பெருமையாக இருந்தது.

ணங்....... ணங்'

மெட்டி ஒலி கேட்டது. தலையைத் திருப்பிப் பார்த்தான் ஜெயராமன். கையில் பால் தம்ளருடன் உள்ளே நுழைந்த வனஜா கதவைத் தாளிட்டுக்கொண்டிருந்தாள். அவள் தலையிலிருந்த ஜாதி மல்லிகையின் நறுமணமும், சோமுவின் 'மோக'ராக இனிமையும், அறையிலிருந்த ஊதுபத்தியின் வாசனையும் சேர்ந்துகொண்டு ஜெயராமனைப் பரவசப்படுத்தின. கட்டிலை விட்டு எழுந்திருந்து, அவளை நெருங்கி இறுக அணைத்தான். அணைத்தபடியே நடந்து வந்து அவளைக் கட்டிலில் கிடத்தினான். அவள் தலையில் இருந்த மல்லிகையின் மீது நாசியை வைத்து, அந்த வாசனையை அனுபவித்தான். கணவனின் பிடிக்கேற்ப தன்னைச் சரிசெய்துகொண்டாள் வனஜா. அரை மணிநேரம் அவர்கள் இருவரும் தங்களை மறந்திருந்தனர். வனஜாவின் செழுமையில் தன்னை முழுமையாகப் பறிகொடுத்தான் ஜெயராமன்.

சற்றுப் பொறுத்து இருவரும் கட்டிலில் நிமிர்ந்து அமர்ந்தனர்.

"இந்தாருங்கள், இந்தப் பாலைச் சாப்பிடுங்கள்" என்று வெள்ளித் தம்ளரை நீட்டினாள் வனஜா.

அதைக் கையில் வாங்கிக்கொண்டே அழகாக எரியும் குத்து விளக்கைச்சுட்டிக்காட்டி, "வனஜா, இன்று அறையிலுள்ள குத்துவிளக்குக்கு ஒரு விசேஷ முக்கியத்துவம் உண்டாம். இன்றைக்கு இந்த விளக்கு , இந்த அறைக்கு மட்டும் வெளிச்சம் தருவதில்லை; நாம் ஒருவர் மனத்தை ஒருவர் தெரிந்துகொள்வதற்கும் வெளிச்சம் தருகிறதாம். இப்படி நான் எங்கேயோ படித்திருக்கிறேன்" என்றான்.

"நன்றாக இருக்கிறது, மனைவியிடம் பேசக்கூட, புஸ்தகப்படிப்பைத் தேட வேண்டுமா? என்று நாணிச் சிரித்தாள் வனஜா.

"நீ அறிவிலே புஸ்தகப் படிப்பை மீறினவள் என்பதை நான் எப்போதோ புரிந்துகொண்டுவிட்டேன், வனஜா" என்றான் ஜெயராமன்.

"ஐயய்யோ........அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நான்தேடி வைத்திருக்கிற அறிவு, படித்திருக்கிற படிப்பு எல்லாவற்றையும் உங்களிடம் ஐக்கியப்படுத்திக்கொண்டு, உங்கள் நிழலாக நிற்கிறவள் நான்; உன் அறிவு என்று நீங்கள் பிரித்துப் பேசக்கூடாது" என்றாள் வனஜா, கண்களில் நீர் மல்க.

ஜெயராமன் உள்ளம் நெகிழ அவளை அணைத்துக்கொண்டான். பிறகு, "வனஜா, நீ ஓர் அறிவாளியாக இருப்பதை நான் குறையாகச் சொல்லவில்லை. உன் அறிவை நானும் புரிந்து கொண்டுவிட்டேன் என்பதைத்தான் தெரிவித்துக்கொள்கிறேன். சுதா சாயங்காலம் அப்படிப் பேசியதற்கு, வேறு ஒருத்தி என்றால், என் முன்னால் நின்று, முந்தானையைத் தெப்பலாக நனைத்திருப்பாள். நீயோ, நான் சொல்வதற்கு முன்னால் அவள் குழந்தைத்தனத்தைப் புரிந்து கொண்டுவிட்டாய். அதற்கேற்ப நிலமையைச் சமாளித்தும்விட்டாய். எங்கள் எல்லோரையுமே நீ நொடியில் புரிந்துக்கொண்டுவிட்டாய். ஆனால், உன்னை நான் முழுமையாகப் புரிந்துக் கொண்டுவிட்டேனா என்றுதான் என்னால் நிச்சயமாக சொல்ல முடியவில்லை......" என்றான்.

கணவன் கண்களையே உற்றுப் பார்த்தாள் வனஜா. பிறகு, "என்னைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்வதற்குப் புதிதாக ஒன்றுமே இல்லை. நான் அப்படியொன்றும் அழுத்தமானவளோ, அல்லது 'ரிசர்வ்டு' டைப்போ இல்லை. எதையும் மனம்விட்டு வெளிப்படையாகப் பேசுகிறவள்தான். எதையும் நான் மறைத்து வைக்கிறதில்லை ...." என்றாள்.

"அப்படிச் சொல்லாதே, வனஜா. ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, அவரவர்கள் வாழ்க்கையில் மறைக்க வேண்டியதென்று சில விஷயங்கள் இருக்கத்தான் செய்யும், அப்படி மறைக்கிறது தப்பு இல்லையென்றுகூட நான் சொல்வேன்......" என்றான்.

கட்டிலில் நிமிர்ந்து அமர்ந்துகொண்ட வனஜா, கலைந்திருந்த தன் உடையைச் சீர்படுத்திக்கொண்டு, முழங்கால்களை இரு கைகளாலும் கட்டிக்கொண்டு பேசினாள்.

"மறைக்கிறது தப்பு இல்லாமலிருக்கலாம். ஆனால், என்னைப் பொறுத்தவரையில் தப்பா எதுவும் மனசில் இருந்ததில்லை. அதை நான் மறைக்க வேண்டிய அவசியமும் எப்போதும் இருந்ததில்லை. இனிமேலும் இருக்கப்போறதில்லை......" என்றாள்.

படுக்கையில் சிதறியிருந்த மல்லிகை மலர்களைக் கையில் எடுத்து, அதை முகர்ந்து பார்த்தபடி ஜெயராமன் பேசினான் :

"அதெப்படி? உலகத்தில் நாம் எத்தனையோ பேர்களிடம் பழகுகிறோம். அவர்களிடம் எத்தனையோ விதங்களிலே பழக நேர்ந்திருக்கலாம். அதில் எத்தனையோ சிக்கல்கள் ஏற்பட்டிருக்கலாம். அதையெல்லாம் தன் கணவனிடம் ஒரு பெண் சொல்லிக்கொண்டிருக்க முடியுமா?"

"அதென்ன? கணவனிடம் சொல்லிக்கொண்டிருக்க முடியுமா?" என்று தனியாகச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள் வனஜா.

"ஏனென்றால், ஒரு பெண்ணுக்கு புருஷன்தானே ஒசத்தி....."

"பெண்ணுக்குப் புருஷன் ஒசத்தியா இருக்கலாம்......ஆனால், உண்மைக்கு எல்லோரும் ஒண்ணுதான். ஆணானாலும் சரி, பெண்ணானாலும் சரி, யாரும் யார்கிட்டேயும் எதையும் மறைக்க வேண்டிய அவசியமில்லை....."

இப்படிக் கூறிய வனஜாவைத் துளைத்து விடுவதுபோல் பார்த்து, "அப்போ, நீ என்னைக் கணவர் என்கிற ஸ்தானத்திலே வைத்து ஒசத்திய மதிக்காவிட்டாலும், சாதாரண முறையிலாவது மதிச்சு, எல்லா உண்மைகளையும் சொல்லி இருக்கிறாயா? என்று கேட்டான் ஜெயராமன். இதைக் கேட்டதும் வனஜாவின் நெற்றி சுருங்கியது. 'இவர் ஏன் இப்படிப் பேசுகிறார்' என்று புரியாமல் ஒருகணம் தடுமாறினாள். பிறகு தன்னை சமாளித்துக்கொண்டு, "நான் சொல்றதை நீங்க சரியா எடுத்துக்கலேன்னு நினைக்கிறேன். கணவன் என்கிற

மரியதையிலே உசத்தியா வைத்து, உங்களுக்கு நான் மரியாதை கொடுக்காதமாதிரி பேசுகிறீர்கள். என் எண்ணம் அது இல்லை. புருஷனுக்கு மரியாதை கொடுக்கிறது தனி விஷயம். ஒரு பெண்ணோட தவமே அதுதான். ஆனால், உண்மைங்கிறது பொதுவான விஷயம். அதை எல்லோர்கிட்டேயும் சொல்லணும்னுதான் நான் சொல்ல வந்தேன்......" என்றாள்.

"எங்கிட்டே எல்லா விஷயத்தையுமே நீ சொல்லி விட்டாயா?" என்று "குறுகுறு" வென்று அவளைப் பார்த்துக்கொண்டே கேட்டான் ஜெயராமன்.

"நாம் வாழ்க்கையிலே இணைந்தே இரண்டு நாள்தானே ஆகியிருக்கு! அதற்குளே எல்லாவற்றையும் சொல்ல முடிஞ்சிருக்குமா? சிலதை சொல்லாமல் விட்டுப் போயிருக்கலாம். ஆனால், எதையும் உங்ககிட்டேயிருந்து மறைக்கிறதா எனக்கு உத்தேசம் இல்லே....." என்றாள்.

ஆபீசிலே நீ மனம் விட்டுப்பழகிய ஆண்களைப் பற்றிக்கூடவா? என்று கேட்டான் ஜெயராமன்.

"நிச்சயமாக! என்றாள் வனஜா.

"அது எப்படி? கல்யாணத்திற்கு முன்னால், நீ எத்தனையோ ஆண்கள்கிட்டே பழகியிருப்பே...... நான் எத்தனையோ பெண்கள்கிட்டே பழகியிருப்பேன். அதைப்பற்றியெல்லாம் உண்மையைச் சொன்னா, ரஸாபாஸ மாயிடாதோ?"

"உண்மையைச் சொல்றதனாலே எதுவும் ரஸாபாஸமாயிடாது.. உண்மை தவறி நடக்கிறதனாலேதான் எதுவும் ரஸாபாஸமாயிடறது..... என்னைப் பொறுத்த அளவில் நான் இதுவரை என் அத்யந்த நட்புக்குரியவராக ஒரே ஒருவரைத்தான் மதிச்சிருக்கேன். அவரைப்பற்றி சொல்றதிலே எனக்குத் தயக்கமில்லே........" என்றாள்.

"யார் அந்த ஒருவர்? கல்யாணத்துக்கு வந்திருந்தாளே உன் தோழி சரளா, அவளா? என்று வேண்டுமென்றே தெரியாதமாதிரி கேட்டான் ஜெயராமன்.

"இல்லை; கல்யாணத்துக்கு வராத நண்பர், அவர் பெயர் சுந்தரம். அவர்தான் என் அத்யந்த நண்பர்....."

"என்னைவிடவா?" என 'சட்'டென்று குறுக்கிட்டான் ஜெயராமன்.

"அவர் இடத்திற்கு நீங்கள் போட்டிபோட விரும்பாதீர்கள்......."

"ஏன்?"

"ஏன் என்றால் அவர் என் உயிர் நண்பர்; நீங்கள் என் உயிர்; அதாவது என் உயிரையே ஆக்கிரமித்துக்கொண்ட கணவர், தெய்வம் எல்லாம் நீங்கள்தான்.........." என்றாள்.

சாதாரணமாக ஜெயராமனுக்கு இந்தப்பதில் நிறைவைத் தந்திருக்க வேண்டும். ஆனால், ஏனோ அவன் நிறைவு பெறவில்லை. நினவு வைத்துக்கொள்ளும் அளவுக்கு ஒரு நண்பர் தன் மனைவிக்கு இருப்பதையோ, அவர் பெயரை அவள் சொல்வதையோ அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

"சரி, உன் உயிர் நண்பர் சுந்தரம் ஏன் உன் திருமணத்திற்கு வரவில்லை?" என்று கேட்டான், குரோதத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல்.

"என்னவோ வரவில்லை.........."

"அதில் உனக்குக் கஷ்டமில்லையே ?"

"சாதாரணமாகக் கேட்டுவிட்டீர்களே! இவ்வளவு நாள் உயிரைவிட்டுப் பழகிய மனிதர், என் வாழ்க்கையின் பொன்னாளான என் திருமண நாளுக்கு வராவிட்டால், என் மனசு கஷ்டப்படாதா? நீங்களே சொல்லுங்கள்........" என்று வெகுளித்தனமாகக் கேட்டாள்.

ஒருகணம் மௌனம் சாதித்தான் ஜெயராமன். பிறகு ஒரு பெருமூச்சுவிட்டு, "அவர் மனசு எந்த முறையிலே கஷ்டப்பட்டதனால் அவர் வரவில்லையோ! என்றான்.

"அதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் நான் அவர் வீட்டுக்கே போயிருந்தேன். உங்களையும் அழைத்துக்கொண்டு போகலாம் என்று நான் நினைத்தேன். ஆனால், அவர் இங்கே வந்து உங்களை சந்தித்தப் பிறகே நீங்கள் அவர் வீட்டுக்குப் போவதுதான் சரி என்று தோன்றியது. அதனால் நான் மட்டும் போனேன். பார்த்துப் பேசிவிட்டு அவர்கிட்டே ஆசீர்வாதம் வாங்கிக்கொண்டுவந்தேன்........" என்றாள்.

"ஓ, ஆசீர்வாதம்......" என்று கூறிச் சிரித்தான் ஜெயராமன். அவன் சிரிப்பில் களங்கமிருந்தது. ஆனால், அந்தக் களங்கத்தைப் புரிந்துகொள்கிற அழுக்கு இல்லாத மனதுடன் தன் நண்பன் சுந்தரத்தைப் பற்றியும், தானும் அவனும் எப்படிப் பழகுவோம் என்பதைப் பற்றியும் விஸ்தாரமாகச் சொல்லிக்கொண்டு போனாள் வனஜா.

ஜெயராமன் அவளையே வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தான்.

'யாரிடம் எதைப் பேசுகிறோம் என்று புரியாத முட்டாளா அவள்?"

'அல்லது, -'

'யாரிடமும் எதைப் பற்றியும் பேசலாம் என்ற அலட்சிய மனோபாவம் கொண்ட அகம்பாவக்காரியா?'

ஜெயராமனுக்குப் புரியவில்லை.

வனஜா பேசிக்கொண்டே இருந்தாள்.

அந்த அறையில் ......

வெள்ளிக் குத்துவிளக்கு சுடர்விட்டு ஒளிவீசி, அவர்கள் இருவரையும் கவனித்துக் கொண்டிருந்தது.

## 5

நேர முழுதிலுமப் பாவிதன்னையே - உள்ளம்
நினைத்து மறுகுதடி தங்கமேதங்கம்

– பாரதியார்

வலது கை விரல்களால் 'ஈவ்ஸ்வீக்லி'யைப் புரட்டிக்கொண்டு, இடது கைவிரல் நகத்தைச் சுவாரசியமாகக் கடித்தபடி, டெலிபோன் அருகே அமர்ந்திருந்தாள் சுதா. அந்தச் சிறிய ஹாலில் சற்றுத் தொலைவிலிருந்த ரேடியோவிலிருந்து 'திரைகானம்' நிகழ்ச்சியில், ஆயிரம் நிலவே வா' பாடல் அஞ்சலாகிக்கொண்டிருந்தது. சுசீலாவின் குரலினிமையில் சுதா தன்னை மறந்து ஈடுபட்டிருந்தபோதுதான், 'ட்ரிங். . . . ட்ரிங் . . . .'என்று டெலிபோன் மணி ஒலித்தது. 'சட்'டென்று ரிஸீவரை எடுத்து, "ஹலோ, சுதா ஹியர்" என்று பரக்கப் பரக்கக் கூறினாள் சுதா.

மறு பக்கத்திலிருந்து வந்த பதிலைக் கேட்டதும் சுதாவின் முகம் சுருங்கியது.

"நான் போன் பண்ணினேன் என்று சொன்னீர்களா? என்ன. . . ஐஸீ. . . வெளியே வந்ததும் சொல்லுங்கள் . . . ." என்று கூறிவிட்டு, 'டொக்'கென்று ரிஸீவரை வைத்தாள்.

'எப்ப பார் பிஸி! தூங்குகிறார், குளிக்கிறார், யாருடனோ பேசிக்கொண்டிருக்கிறார் . . .சே, சே! ஏதாவது சாக்குச் சொல்லிக்கொண்டே இருக்கிறார். இந்த ஸ்ரீதருடன் டெலிபோனில் பேசுவதற்குள் சந்திரனுக்கே போய் வந்து விடலாம் போலிருக்கிறது. . . . ' என்று அலுத்துக் கொண்டே, மீண்டும் 'ஈவ்ஸ்வீக்லி'யைப் புரட்டினாள் சுதா. அவள் விரல்கள் பக்கங்களைப் புரட்டின; அவள்மனம் அதில் ஈடுபடவே இல்லை. திரைப்பாடல் அவளைக் கவர்ந்தது.

'மன்னவனின் தோளிரண்டை
மங்கைஎன் கைதழுவ,
கார்குழலும் பாய்விரிக்கும்,
கண்சிவந்து வாய்வெளுக்கும். . . .
இன்ப மயக்கம், எழில்முகம்
முத்தாக வேர்க்கதோ.......'

சுசீலா பாடும் இந்த வரிகளை கண் மூடி ரசித்தாள் சுதா. அந்த மன்னவனின் - அவள் ஸ்ரீதரின் - முகம் மானசீகமாக அவள் கண் முன் தோன்றி நின்றது. அவன் தோள்களை அவள் தழுவினாள்; அவள் கண் சிவந்தது; அவள் வாய் வெளுத்தது; அவள் முகம் வேர்த்தது.

"சுதா. . . . சுதா. . . . "

குரல் கேட்டுத் திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தாள் சுதா.

எதிரே வனஜா நின்றுகொண்டிருந்தாள். ஏதோ கற்பனை மயக்கத்தில் இருந்த அவளுக்கு, தன் எதிரே வனஜாவைக் கண்டதும் 'சப்'பென்று போய்விட்டது.

"என்ன? . . . என்றாள் சற்றே வெறுப்புடன்.

"இல்லை, உட்கார்ந்துகொண்டே தூங்குகிறாயே; என்ன விஷயம் ?" என்று கேட்டாள் வனஜா.

"இது என் வீடு! நான் உட்கார்ந்து தூங்குவேன், நின்று கொண்டும் தூங்குவேன்; அதைக் கேட்க நீங்கள் யார்?" என்றாள் சுதா மிடுக்காக.

இதைக் கேட்டு வனஜா பதட்டப்படவில்லை.

"நான் யாரா? நான் உன் மன்னி. . . அந்த விசாரணை இருக்கட்டும்; நீ ஏதாவது முக்கியமான போன் காலுக்காகக் காத்திருக்கிறாயா? என்று கேட்டாள்.

"உங்களிடம் சொல்லித்தான் ஆக வேண்டுமா?" கண்களைச் சுருக்கிக்கொண்டு கேட்டாள் சுதா.

"இல்லை. . வெகுநேரமாகப் போன் அருகிலேயே உட்கார்ந்திருக்கிறாயே என்று கேட்டேன். . . . ."

"உட்காரக் கூடாதோ?"

"என்ன இது, சுதா? எதேற்கெடுத்தாலும் இப்படிப் பேசினால் எப்படி?"

"தெரிகிறதில்லையா! தயவு செய்து என் பேச்சுக்கு வராதீர்கள்! எல்லா விஷயங்களிலுமா உங்கள் கண்டிப்பு. இரண்டு நாட்களாக 'பெட்காப்பி'தான் இல்லையென்று ஆக்கிவிட்டீர்கள். அண்ணாவும் உங்களுடன் சேர்ந்துகொண்டுவிட்டார். இப்படி ஒவ்வொரு விஷயமாகத் தலையிட்டு என் அந்தரங்கத்தையே குலைத்துவிடுவீர்கள் போலிருக்கிறதே. . . . !" எரிச்சலும் ஆத்திரமும் பொங்கக் கேட்டாள் சுதா.

சுதாவை உற்றுப் பார்த்தாள் வனஜா. பிறகு, 'உம்ம் . . . ' என்று நீண்ட பெருமூச்சுவிட்டு, அந்த இடத்தைவிட்டு நகர்ந்து, சமையல் அறைக்குள் நுழைந்தாள்.

அது ஒரு சிறிய, அழகிய 'பிளாட்!' ரிசர்வ் பாங்க் அதிகாரிகளுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள காலனியில் இருந்தது. இரண்டு படுக்கை அறைகள், ஒருஹால், ஒரு சமையல் அறை, ஒரு வராண்டா. ஜெயராமன் குடும்பத்தினருக்கு அது போதுமானதாக இருந்தது.

ஹாலின் ஒரு மூலையில் டெலிபோன் இருந்தது. அதையொட்டிச் சமையல்அறை இருந்ததால்தான், சுதாவின் பரபரப்பும், டெலிபோனுக்காக காத்திருக்கும் துடிதுடிப்பும் வனஜாவுக்குத் தெரியவந்தது. எதையும் ஒட்டுக் கேட்கவேண்டும் என்ற எண்ணத்தில் அவள் இருக்கவில்லை; ஆனால், எல்லாம் அவள் செவியில் தெளிவாக வந்து விழுந்தது. அதனால்தான், திறந்த மனதுடன் அவளிடம் வந்துபேசி, அவள் ஆத்திரத்தை அதிகப்படுத்திவிட்டுப் போனாள்.

சாதாரணமாக ஜெயராமன் வீட்டில் காலை வேளையில் ஏழரை மணிவரை எந்தவிதச் சத்தமும் இருக்காது. அண்ணனும் தங்கையும் தங்கள் தங்கள் படுக்கையறையில் நன்றாகத் தூங்கிக்கொண்டிருப்பார்கள். ஏழரை மணிக்குமேல்தான் சுதா எழுந்திருந்து, காப்பி போட்டுக் கொண்டுபோய், அண்ணனுக்கு 'பெட்காப்பி' கொடுப்பாள். அதன் பிறகே - எட்டு மணியான பின்பே அந்த வீடு கொஞ்சம் கலகலப்பாக மாறும்.

ஆனால். . . . . . .

கடந்த ஒரு வாரமாக . . . .அதிகாலையிலேயே அந்தவீடு களை பெற்றுவிடுகின்றது.

சுப்ரபாதம் ஒலிக்க, அந்த மங்களகரமான தெய்வீக இசையின் ஜீவனைப் பிரதிபலிப்பது போல், வீட்டின் மங்களகரமும் வனஜாவின் கையினால் தூய்மையான சோபைபெற்றுத் துலங்கியது..

முன்பெல்லாம் வீட்டு நிர்வாகம் சுதாவின் மேற்பார்வையில்தான் இருந்து வந்தது. ஜெயராமனின் அக்கா ஒருத்தி வீட்டோடு இருந்து, சமையல் வேலைகளை கவனித்துவந்தாள். அவள் இல்லாதபோது, சுதாவும் சமைப்பாள். அவள் சமையலைவிட ஓட்டல் சாப்பாடே மேல் என்று எண்ணி 'எடுப்பு'ச் சாப்பாடு கொண்டு வந்து இருவரும் சாப்பிட்டுவிடுவார்கள்.

சுதாவுக்கு தன் அறையையே சுத்தமாக வைத்துக்கொள்ளத் தெரியாது.. கண்ட கண்ட நாவல்களைப் படித்துப் பொழுதைப் போக்கி, அவற்றை கண்டபடி மூலையில் எறிந்துவிட்டு ஆபீசுக்கு ஓடுவாள். சிறு வயதிலிருந்தே அப்படித்தான். இப்போது இன்னும் மோசம். ஸ்ரீதர் பேரிலுள்ள காதல் கற்பனைகளிலும் தன்னை மறந்து, பித்துப்பிடித்தாற்போல் உட்கார்ந்திருப்பாள். ஜெயராமன் தன் தேவைக்காக, "சுதா, சுதா...." என்று கத்தினால்தான், தன் மயக்கத்திலிருந்து விடுபட்டு ஓடுவாள்.

"இப்படிப் பொறுப்பில்லாமல் இருக்கிறாயே, நாளைக்கு ஒருவன் வீட்டுக்குப் போனாலும் இப்படித்தானே இருப்பாய்?" என்று அண்ணன் கேட்டால், "நான் போகிற வீட்டில் என்னை ஒன்றும் வேலை செய்யவிடமாட்டார்கள். கரண்டியையும், துடைப்பத்தையும் பிடிக்கப் பிறந்த கையல்ல அண்ணா இது......" என்பாள் மிடுக்காக. அப்போது அவள்கற்பனையில், ஸ்ரீதரின் அந்தஸ்து தோற்றமளிக்கும்.

சமயங்களில் ஜெயராமனுக்கும் கோபம் வந்துவிடும்.

"வீட்டை ஒழுங்காக வைத்துக் கொள்வதைவிட, ஒரு பெண்ணுக்கு என்ன வேலை ? நம் அம்மாவெல்லாம் எப்படி வீட்டுக்காரியங்களை ஒழுங்காகக் கவனித்தார்கள் என்பதை நினைத்துப்பார்..... என்று அவன் கத்துவான்.

நம் அம்மாவெல்லாம் உத்தியோகத்திற்குப் போய் முன்னூறும், நானூறும் சம்பாதித்தார்களா? உன்னை மாதிரிதான் நானும் ஆபிஸில் கையொடிய வேலை செய்கிறேன். நான் படும்பாடு, உனக்குத் தெரியாவிட்டாலும் வரப்போகிறவளுக்குத் தெரியும்......." என்பாள் மிடுக்காக.

பதில் சொல்ல வழியில்லாமல் வாயடைத்துப் போவான் ஜெயராமன்.

அப்படிப்பட்ட வீட்டில்தான், இப்போது புதிய ஜீவாலை பிறந்துவிட்டது. எங்கும் எதிலும் ஒருவித மங்கலத்தன்மை 'பளிச்'சிட்டது.

செல்லமாகக் கண்டித்து, அண்ணனுக்கும் தங்கைக்கும் 'பெட் காப்பி' இல்லையென்றாக்கிவிட்டாள் வனஜா.

ஏழரை மணிப் பள்ளிஎழுச்சியை, ஆறரை மணியாக்கினாள். 'பழக்கத்திற்கு நாம் அடிமையாகக் கூடாது; பழக்கம்தான் நமக்கு அடிமையாக வேண்டும்' என்று பாடம் புகட்டினாள். சமையல் அறையில் பம்பரமாக சுழுன்றாள்.

தன் மனைவியைக் கண்டு பெருமிதம் கொண்டான் ஜெயராமன்.

'கம கம'வென்று தாளிக்கும் மணம் சமையல் அறையிலிருந்து வெளியாகியது. முத்துமுத்தாக நெற்றியில் வியர்க்க, 'காஸ்' அடுப்பின் முன்னால் நின்று, சமையல் காரியத்தில் ஈடுபட்டிருந்தாள் வனஜா.

அப்போது..........

"ட்ரிங்......ட்ரிங்......."என்று டெலிபோன் மணி ஒலித்தது.

"பாவம்! சுதா எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் 'போன்காலாக' இருக்கும்..." என்று சொல்லியபடி, கரண்டியால் பீன்ஸ் கூட்டைக் கிளறினாள் வனஜா.

ரிஸீவரை எடுத்து "ஹலோ......" என்று கேட்ட சுதா........"மிஸ்டர் ஜெயராமனா!..அவர் வீட்டில் இல்லையே"......என்று கூறி, 'டொக்'கென்று ரிஸீவரை வைத்தாள்.

சுதாவின் இந்தப் பதிலைக்கேட்டு வனஜா திகைத்துப்போனாள்.

"வீட்டுக்குள்ளே அவர் இருக்க, இவள் இல்லையென்று சொல்லிவிட்டாளே..... என்னஇது.....? ஏன் இப்படி?'

குழப்பத்துடன் வெளியே வந்தவள், அவளை நெருங்கி, "இதெல்லாம் என்ன, சுதா ? என்று கேட்டாள்.

"எதெல்லாம் என்ன ?" தலை நிமிர்த்தாமலே கேட்டாள் சுதா.

"அவர் இல்லையென்று நீ ஏன் சொன்னாய்?"

"என் இஷ்டம்! நான் ஒரு முக்கியமான அழைப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்..... அப்போது அண்ணாவுக்குப் போன் வந்தது. அண்ணா வந்தால் அரைமணி பேசுவார். அந்த நேரத்தில் அவர் எனக்குப் போன் செய்துவிட்டு, 'எங்கேஜ்ட்' என்று சாக்கு சொல்லி, போனே பண்ணாமல் இருந்துவிடுவார்.........புரிகிறதா?" என்றாள்.

"யாரது அவர்? உன்னுடைய......' வனஜா முடிக்கவில்லை. "மன்னி...... கொஞ்சம் கௌரவமாக நடந்து கொள்ளுங்கள். "இன்னொருவருடைய பிரைவேட் மேட்டரில் தலையிட வேண்டாம்' என்று உங்களிடம் எத்தனையோமுறை சொல்லியிருக்கிறேன், படித்திருந்தும் கொஞ்சம் அறிவு மந்தம்தான் போலிருக்கிறது" என்றாள்.

அப்போது........

"சுதா......"

கடுமையான குரல் எழுந்தது. இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

கையில் 'ஷூ'வுடன் ஜெயராமன் நின்று கொண்டிருந்தான். ஆபீசுக்குப் புறப்படும் நேரம் அது. பாண்ட் போட்டுக்கொண்டுதான் சாப்பிடுவான். சாப்பிட்டவுடன் 'ஷூ'வைப் போட்டுக்கொள்வான்.

"வந்து........" என்று சுதா எதோ சொல்ல ஆரம்பிக்குமுன், "ஒன்றுமில்லை; எங்களுக்குள் எதோ ஒரு விவாதம்.....கொஞ்சம் காரமாகப் பேசிக்கொண்டோம்.... உங்களுக்கு ஒன்றுமில்லை. நீங்கள் சாப்பிட வாருங்கள்......... என்றாள் வனஜா.

"நோ ......நோ! நீ மழுப்புகிறாய்.... நானும் பார்த்துக்கொண்டுதான் வருகிறேன். இந்தச் சுதாவின் போக்கு சரியாக இல்லை. மன்னியிடம் பழகும் முறையா இது.....!" என்ற கூறி, சுதாவை முறைத்தான் ஜெயராமன்.

'ஈவ்ஸ் வீக்லி.யைப் "பட்"டென்று மூடிவிட்டு, அலட்சியமாக அண்ணனை ஒருமுறை பார்த்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள் சுதா.

"நீங்கள் வாருங்கள் சாப்பிட ......." என்று கணவனை அழைத்தாள் வனஜா.

ஜெயராமன் மௌனமாக 'டைனிங்டேபி'ளில் போய் அமர்ந்தான். அவனுக்குப் பிடித்த பீன்ஸ் கூட்டையும், முருங்கைக்காய் சாம்பாரையும் பரிமாறிக் கொண்டிருந்தாள் வனஜா.

அப்போது........

ஹாலில், டெலிபோன் எண்ணைச்சுழற்றும் ஒலி கேட்டது. இருவரும் அதை உற்றுக் கேட்டனர்.

சுதாதான் போன் செய்துகொண்டிருந்தாள்.

"ஹலோ......மிஸ்டர் ஸ்ரீதர் இருக்கிறாரா?.........என்ன.......வெளியே போயிட்டாரா? நான் போன் பண்ணினேன்னு சொன்னீகளா?.... என்னது...... காதிலே வாங்கிக்கலையா..... நீங்க யாரு பேசறது? .....ஓ.....ஐஸி....சரி....சரி.."

'டொக்' என்று ரிஸீவரை வைத்துவிட்டு, தன் அறைக்கு ஓடினாள் சுதா. அவளுக்கு துக்கம் கட்டு மீறியது.

'ஏன் இவர் இப்படிச் செய்கிறார்? பலமுறை போன் செய்தும் பதிலுக்குக்கூட ஒருமுறைகூட போன்செய்யவில்லையே!. . . . என்னை ஏன் இப்படி அலட்சியப்படுத்துகிறார்? என்று பொருமினாள்.

சமையல் அறையில், வனஜா ஜெயராமனை ஏறிட்டு நோக்கினாள். ஜெயராமன் வனஜாவை உற்றுப்பார்த்தான். இருவரும் பேசாமல் ஏதேதோ பேசிக்கொண்டனர்.

'யார் அந்த ஸ்ரீதர்? என்ற கேள்வி, வனஜாவின் மனதில் எழுந்தது. அவள் அப்போது எதுவும் கேட்கவில்லை.

"சாவி ஜாக்கிரதை......" என்று மூன்றாம் முறையாக சொன்னாள் வனஜா.

எல்லாம் தெரியும்......நான் என்ன பச்சைக் குழந்தையா சாவியைத் தொலைக்க?......" - அதே மிடுக்குடன் பதில் சொன்னாள் சுதா.

"இல்லையம்மா......ஒரு பூட்டுக்கு மூன்று சாவிதான் கிடைக்கும். அதனால்தான் சொன்னேன்......" என்று கூறியவள் தன் சாவியைக் கைப்பைக்குள் போட்டுக்கொண்டு, சாலையில் இறங்கி நடந்தாள்

ஆமாம்!

வனஜா மறுபடியும் வேலைக்குப் புறப்பட்டு விட்டாள். அவள் வேலைக்குப் போவதை ஜெயராமன் ஆமோதித்தான். மூன்று பேரும் வெளியே போவதால், வீட்டைப் பூட்டிக்கொண்டு போனார்கள். ஒவ்வொருவரிடமும் ஒரு சாவி இருந்தது.

பஸ் ஸ்டாண்டை நோக்கி சுதாவும் வனஜாவும் நடந்து கொண்டிருந்தனர். இருவரும் ஒரே பஸ்ஸில்தான் போகவேண்டும். பஸ் ஸ்டாண்டை அடைந்ததும், சுதா, இன்னிக்கு சாயங்காலம் சீக்கிரமா வந்துடு...... நாம் மூன்று பேரும் ஏதாவது சினிமாவுக்குப் போகலாம் ...... என்றாள் வனஜா.

"எனக்கு வரமுடியாது; வேலை இருக்கும்" என்றாள் சுதா.

"வேலை இருக்கும் என்று இப்பவே ஏன் சொல்ற, ஆபீசுலே வேலை முடிந்ததும் சீக்கிரமா வந்துவிடு........எல்லோரும் போகலாம் என்றாள் வனஜா விடாமல்.

"பார்க்கலாம்......" என்ற சுதா, 'என்ன பெரிய சினிமா!.... அதுவும் உன்னோட....' என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டாள்..

கல்யாணத்திற்குப் பின் அன்றுதான் முதன் முறையாக வனஜா ஆபீசுகளுச் சென்றாள். வாழ்த்துக்கள், வரவேற்புக்கள் எல்லாம் ஒரேயடியாக அமர்க்களப்பட்டன.

"விஷ் யூ பெஸ்ட் ஆப் லக்....."

இதைக் கேட்டுக் கேட்டு, கொஞ்சம் சலித்துக்கூடப் போய்விட்டது வனஜாவுக்கு. எதிலும் அதிகமாகப் பட்டுக்கொள்ளாத ஹெட்கிளார்க்கூட, வனஜாவை அருகில் அழைத்து "காட் ப்ளேஸ் யூ....." என்று ஆசீர்வதித்தார்.

ஆனால், ஒரேயொரு குரல் மட்டும் அவளுக்குக் கேட்கவில்லை.

அது, சுந்தரத்தின் குரல்தான்.

'எங்கே அவர்?'

'மிஸ்டர் சுந்தரம் ஆபீசுக்கு வரவில்லையா?" என்று ஹெட்கிளார்க்கைக் கேட்டாள் வனஜா.

"அவர் லீவ் முடியல்லே......" என்றார் ஹெட்கிளார்க்.

அப்போது........

அவளுடைய சக ஊழியன் சாரி, தன் பக்கத்துக்கு ஸீட்காரனிடம் "பார்த்தியா? நாம் இத்தனைபேர் வாழ்த்துவது அவளுக்குப் பெரிதாக இல்லை. அது சரி, நாம் எத்தனைபேர் வாழ்த்தினாலும் அது சுந்தரத்தின் வாழ்த்துக்கு ஈடாகுமா? பாவம், மிஸ்டர் ஜெயராமன்........." என்று குரோதத்துடன் சொன்னான்.

"மிஸ்டர் கிருஷ்ணமாச்சாரி, ஏன்தான் உங்களுக்கு இந்த விஷம புத்தியோ...." என்று அவனைக் கண்டித்தான், அந்த அடுத்த மேஜைக்காரன்.

ஆனால், இவை எதுவும் வனஜாவின் காதில் விழவில்லை. அவள் வேலையில் மூழ்கிவிட்டாள்.

'லஞ்ச் டய'த்தின்போதுதான், மீண்டும் சுந்தரத்தின் நினைவு வந்தது வனஜாவுக்கு. டிபன் பாக்ஸைத் திறந்து, அதிலிருந்த அரிசி உப்புமாவைப் பார்த்ததும், 'பாவம், அவர் இருந்தால் ரசித்துச் சாப்பிடுவார்.......' என்று எண்ணிக்கொண்டாள். அதைச் சாப்பிட்டு முடித்த பிறகு, 'சுதாவுக்குப் போன் செய்து, சாயங்கால எங்கேஜ்மெண்ட்டை உறுதிப்படுத்திக்கொண்டால் என்ன?" என்று தோன்றவே, ஹெட்கிளார்க் மேஜை அருகே சென்று, சுதாவின் ஆபீசுக்குப் போன் செய்தாள்.

"ஹலோ......விஜயா மெட்டல் எஜன்ஸீஸ்ஸா? "

"யெஸ்......"

'மிஸ் சுதாவிடம் பேச முடியுமா?'

"ஒன் மினிட் ......."

"ஹலோ....."

"யாரு.........சுதாவா?"

"இல்லை.......சுதா உள்ளே ஜி.எம். ரூம்லே இருக்கா. நீங்க யாரு பேசறது?.......

"நான் அவளுடைய சிஸ்டர் இன்-லா, வனஜா பேசறேன்...."

"ஐஸி! உள்ளேயிருக்கா, கூப்பிடட்டுமா?"

"வேண்டாம்....வந்தா சொல்லுங்க.......வந்து..... நீங்க யார் பேசறதுன்னு தெரிஞ்சுக்கலாமா?"

"நானும் சுதா மாதிரி ஒரு ஸ்டெனோதான். ஏன் பெயர் சரோஜ்."

"மன்னிக்கணும்....உங்க குரல் கொஞ்சம் பழக்கமானதா இருக்கு..... சரோஜ்னா..... நீங்கள் எந்த ஸ்கூல்லே படிச்சீங்க?......."

"உங்க குரலும் எனக்குத் தெரிஞ்சதா இருக்கு..... நான் பிரிசிடென்ஸி கேர்ல்ஸ் ஸ்கூல்லே படிச்சேன்."

"எந்த இயர்?"

"சிக்ஸ்டி த்ரீ...."

"நானும் அதே வருஷந்தான்.... நீங்க வந்து மிஸ்டர் மைக்கேலோட டாட்டரா? பாந்தியன் ரோடிலே....."

"எக்ஸ்ஸாக்ட்லி...... நீ வந்து மாம்பலத்திலிருந்துதானே வருவே..... குப்புசாமியோட பெண்."

"கரக்ட்....."

"ஓ...... ஹௌ ஆர் யூ, சரோஜ்?...... உன்னைப் பார்த்து எவ்வளவு நாளாச்சு! நீ ஏன் என் கல்யாணத்துக்கு வரல்லே? ....."

நீ கூப்பிட்டியா?

சுதா கூப்பிட்டிருப்பாளே!"

"சுதாவா, அவளுக்கு இந்த ஆபீசுலே ஜி.எம். ஒருத்தரைத் தவிர வேற யாரும் பொருட்டில்லே...... அவரைத்தான் கூப்பிட்டா. ஆனா, அவரும் போகல்ல போல இருக்கு."

"அப்படியா? ஜி.எம். அவளுக்கு ரொம்ப பிரண்டா?"

"அவளையே கேளேன்..... ஸ்ரீதர்னு பேரைச் சொன்னா போதும், உருகிடுவா...."

"ஐஸி .... சரி.... அவள் வந்தா நான் போன் பண்ணினேன்னு சொல்லு.... நாம் சீக்கிரம் 'மீட்' பண்ணுவோம். ஓகே......"

"ஓயெஸ்....."

'டொக்....'

வனஜா தன இடத்தில் வந்து அமர்ந்துகொண்டாள்.

'ஓ..... ஸ்ரீதர் அவள் மானேஜரா? அதுதானா அவ்வளவு துடிப்பு....' என்று ஒருகணம் மனத்துக்குள் எண்ணிக்கொண்டாள். மறுகணம், சரோஜைப் பற்றியும், பள்ளிக்கூட நாட்களைப்பற்றியும் எண்ண ஆரம்பித்துவிட்டாள் வனஜா.

கைக்கடிகாரத்தை அடிக்கடி பார்த்துக்கொண்டாள் வனஜா. மணி ஆறடித்து ஐந்து நிமிஷம் ஆகிவிட்டது. படத்திற்குப் போவதென்றால், இன்னும் பத்து நிமிஷத்திற்குள் புறப்பட்டாக வேண்டும். அனால் சுதா இன்னும் ஆபீசிலிருந்தே திரும்பவில்லை.

"நான் ரெடி" என்று சொல்லிக்கொண்டே, அவள்எதிரில் வந்து அமர்ந்தான் ஜெயராமன்.

கணவனையே கண் கொட்டாமல் பார்த்தாள் வனஜா.

"என்ன அப்படிப் பார்க்கிறாய்?" என்று கேட்டான் ஜெயராமன்.

"இல்லை..... இந்த கலர் ஸ்லாக் உங்களுக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது. இதில் உங்கள் அழகு கொஞ்சம் அதிகமாகவே தெரிகிறது" என்றாள்.

"தாங்க் யூ, லேடி." என்று எழுந்து நின்று வேடிக்கையாக கூறிய ஜெயராமன், புறப்படலாமா?" என்று கேட்டான்.

"இன்னும் சுதா வரவில்லையே" என்றாள் வனஜா.

"அவள் இப்படித்தான்; சொன்னபடி எதுவும் செய்யமாட்டாள். அவளை விட்டுவிட்டு நாம் போவோமே........" என்று ஆசையோடு அழைத்தான் ஜெயராமன்.

"வேண்டாம். நாம் இன்னொரு நாள் பார்த்துக்கொள்வோம். சுதாவோடு சந்தோஷமாக இன்று மாலையைக் கழிக்கலாம் என்று தான் சினிமா யோசனையைத் தெரிவித்தேன். நாம் லீவ் நாளில் பார்த்துககொண்டால் போகிறது' என்றாள் வனஜா. ஜெயராமனின் முகம் சுருங்கியது. 'பொத்'தென்று சோபாவில் விழுந்து, சலிப்புடன் ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான்.

அதன் பிறகு அவர்களிடையே மௌனம் நிலவியது.

ஹால் கடிகாரம் 'டாண்.......டாண்' என்று ஏழு முறை ஒலித்தபோது, அவர்கள் வீட்டுவாசலில் ஒரு கார் வந்து நின்றது. முன் ஸீட்டில் அமர்ந்திருந்த சுதா, பெருமையோடு கதவைத் திறந்துகொண்டு கீழே இறங்கினாள். பிறகு

குனிந்து, "சார், வீடுவரை வந்தீர்கள். உள்ளே வந்து ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகக்கூடாதா? என்று கேட்டாள்.

"எதற்கு, சுதா? எனக்கு வேலை இருக்கிறது. இன்னொருநாள் வருகிறேனே" என்றான், டிரைவர் ஸீட்டில் அமர்ந்திருந்த ஸ்ரீதர்.

"ஆமாம், பொல்லாத வேலை. வாங்கன்னா, வாங்க சார்..... கலயாணத்திற்குத்தான் வரல்லே..... இப்ப வந்தாவது எங்கண்ணாவை வாழ்த்தவேண்டாமா?" என்று காரின் கதவைப் பிடித்துக்கொண்டு சிணுங்கினாள் சுதா. அதற்கு மேலும் மறுத்தால் அங்கு ஒரு நாடகமே நடந்துவிடுமோ என்று அஞ்சிய ஸ்ரீதர் காரைவிட்டு கீழே இறங்கி, சுதாவைப் பின்தொடர்ந்தான்.

'இறக்கை கட்டிப் பறப்பது' என்பார்களே அப்படித்தான் உற்சாகத்தில் மிதந்தாள் சுதா. காலையில் அவள் முகத்தில் காணப்பட்ட எரிச்சலும் கோபமும் எங்கோ மறைந்துவிட்டன. சிட்டுக்குருவி மாதிரி வீட்டுக்குள் பறந்தாள்.

ஹாலில் இருந்த ஜெயராமனும், வனஜாவும் யாரோ ஒரு புதிய இளைஞன் உள்ளே நுழைவதைக் கண்டதும் எழுந்து நின்றனர்.

"மீட் மை பிரதர் ஜெயராமன், இது மிஸஸ் ஜெயராமன்...." என்று அவர்களை அறிமுகப்படுத்திய சுதா, "இவர், மிஸ்டர் ஸ்ரீதர்.... எங்கள் ஜெனரல் மானேஜர்" என்று ஸ்ரீதரை அறிமுகப்படுத்தினாள்.

பதில் வணக்கம் சொல்லும்போதே 'ஓ' இதுதான் அந்த ஸ்ரீதரா? என்று ரகசியமாக அவனை ஆராய்ந்தாள் வனஜா.

வனஜாவும் சுதாவும் சமையல் அறைக்குள் நுழைந்தார்கள்.

"மன்னி, ஸ்பெஷல் காப்பி....மன்னி, ஷெல்பிலிருக்கும் அந்த சால்ட் பிஸ்கெட்டை எடுத்துக்கொள்ளுங்கள்" என்று பரபரத்தாள் சுதா.

ஹாலில் ஸ்ரீதர் ஜெயராமனுடன் கலகலப்பாகப் பேசினான். அவர்களுடைய குடும்பத்தைப்பற்றியெல்லாம் அக்கறையுடன் விசாரித்தான்.

"சுதா ஈஸ் எ வெரி ஸ்மார்ட் கேர்ல்" என்று சுதாவைப் பாராட்டினான். ஜெயராமனின் கல்யாணத்திற்கு வராததற்கு ரொம்பவும் வருத்தம் தெரிவித்தான்.

அன்று வனஜா காப்பி தயாரிப்பதற்குள் படாதபாடு பட்டுவிட்டாள். "மன்னி, அவருக்கு ஒன்றரை ஸ்பூன்தான் சர்க்கரை போடணும். டிகாக்ஷன் ஜாஸ்தியாக இருக்கணும்...... இவ்வளவு சூடு போதாது" என்று சரமாரியாக அபிப்ராயம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ஐந்து நிமிஷம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் புறப்பட்டான் ஸ்ரீதர்.

அண்ணனும் மன்னியும் நிற்பதைக்கூட பொருட்படுத்தாமல், ஸ்ரீதரோடு ஒட்டினாற் போல் சென்று, அவன் வலப்புறமாகக் காரில் ஏறி, வண்டியை எடுக்கும்வரை இடப்புறக் கதவு பக்கமாகத் தலையை உள்ளே நீட்டி அவனிடம் பேசினாள் சுதா. பிறகு அவன் கார் தெருக்கோடிக்குச் செல்லும்வரை, 'டாடா' சொல்லி வழியனுப்பிவிட்டு வீட்டுக்குள் நுழைத்தாள்.

"சுதா, நீ இன்னும் காப்பி சாப்பிடலையே...." என்று சமையல் அறையிலிருந்து குரல் கொடுத்தாள் வனஜா.

"இதோ ..." என்று கூறி, உள்ளே நுழைத்தாள் சுதா.

காப்பி தம்ளரைச் சுதாவிடம் நீட்டிக்கொண்டே, "மிஸ்டர் ஸ்ரீதருக்கு எதெது பிடிக்கும், எவ்வளவு சர்க்கரை வேண்டும் என்பதையெல்லாம் ரொம்பத் தெரிந்து வைத்திருக்கிறாய் போலிருக்கிறதே......" என்றாள் வனஜா.

இதைக் கேட்டதும் மன்னியைக் 'குறுகுறு'வென்று ஒருமுறை பார்த்துவிட்டு, "நான் அவருக்கு அந்தரங்கமானவள். உத்தியோகத்தில்கூட அந்தரங்க குமாஸ்தா" என்றாள் சுதா.

"ரொம்ப அந்தரங்கமோ?" என்று புன்னகையுடன் கேட்டாள் வனஜா.

"அதெல்லாம் என் அந்தரங்கம்..... தயவுசெய்து தலையிடாதீர்கள்.... என்று கூறிவிட்டு, தன் அறைக்குப் போய்விட்டாள் சுதா.

வனஜா மீண்டும் ஹாலை நோக்கி நடந்தாள்.

அங்கே, ஜெயராமன் சுவாரசியமாக சிகிரெட்டை ரசித்தபடி, மெயில்' பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தான்.அவன் அருகில் போய் அமர்ந்து கொண்ட வனஜா, "மிஸ்டர் ஸ்ரீதரைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? என்று மெதுவாகவே கேட்டாள்.

"ஹி ஈஸ் எ குட் மேன்....." என்று கூறி, பேப்பரை நாளாக மடித்து மேஜைமீது வைத்தான் ஜெயராமன்.

"அவருடன் நம்ப சுதா ரொம்ப நெருங்கிப் பழகறாப்போல் இருக்கு, இல்லையா?" தயங்கித் தயங்கிக் கேட்டாள் வனஜா.

சில கணநேரம் மனைவியையே உற்றுப்பார்த்தான் ஜெயராமன். பிறகு, "இது ஒருவகை ஆபீஸ் நட்பாக இருக்கும் என்றான் குத்தலாக.

அந்தக் குத்தலைப் புரிந்துகொள்ளாத வனஜா, "வெறும் நட்பாக இருந்தால் பரவாயில்லையே...... காதல், அது இது என்று போய்விடுமோ என்றுதான்....... என்று இழுத்தாள்.

"போனால்தான் என்ன? பையன்தான் நல்லவனாகத் தெரிகிறான்..... எல்லா ஆபீஸ் காதலுமே நிறைவேறாமல் போகணுமா என்ன? என்றான் ஜெயராமன், அதே குத்தலான குரலில்.

வனஜா அப்போதும் அவன் வார்த்தைகளில் உள்ள விஷமத்தையும், விஷத்தையும் புரிந்துகொள்ளவில்லை.

"எதற்கும் நாம் கொஞ்சம் கண்காணிக்க வேண்டுமென்று தோன்றுகிறது" என்றாள்.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போதே, "சாரி" என்று ஒரு குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தான் ஜெயராமன்.

அங்கே, வனஜாவின் சக ஊழியன் சாரி நின்றுகொண்டிருந்தான்.

அவனைக் கண்டதும் 'இவன் எங்கே வந்தான்?' என்று வனஜா நினைக்கவில்லை. மாறாக, 'வாங்க.... வாங்க, மிஸ்டர் சாரி......என்று அவனை வரவேற்றாள்.

## 6

பாலுங் கசந்ததடீ! -சகியே
படுக்கை நொந்ததடீ!

- பாரதியார்

ரேடியோவில் துதிப்பாடல்கள் அஞ்சலாகிக்கொண்டிருந்தன. ஸ்நானம் செய்துவிட்டு, தலையை அள்ளி முடிந்துகொண்டு, சமையல் அறையில் கணவனுக்காகக் காப்பி கலந்து கொண்டிருந்தாள் வனஜா.

இப்போதெல்லாம் அதிகாலையிலேயே எழுந்திருக்க ஆரம்பித்துவிட்டான் ஜெயராமன். சுதா மட்டும்தான் லேட். 'கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அவளை வழிக்குக் கொண்டு வரவேண்டும்' என்ற முடிவுடன், சுதாவை வற்புறுத்தவில்லை வனஜா.

டிகாக்க்ஷனைத் தம்ளரில் விட்டுப் பாலை ஊற்றினாள், சர்க்கரை டப்பாவைத் திறந்தபோது, பின்னாலிருந்து "மன்னி" என்ற குரல் கேட்டது. ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்த வனஜா, "என்ன இது! சுதாவா? ஏது இவ்வளவு காலையில் மழை வரப்போகிறது என்றாள்

"தூக்கம் கலைந்துவிட்டது. எழுந்து பல்லையும் தேய்த்துவிட்டேன். நீங்கள் காப்பி கலக்கும் சத்தம் கேட்டது. வந்துவிட்டேன்......." என்று கூறிக்கொண்டே வனஜாவை நெருங்கினாள் சுதா.

"வெரிகுட்! அதுதான் சமத்துக்கு அடையாளம். இந்தா, உன் அண்ணாவுக்கு கலந்த காப்பி..... நீ சாப்பிடு...." என்றுகூறி, கலந்த காப்பிக்குச் சர்க்கரை போடப் போனாள் வனஜா.

"மன்னி,மன்னி! சர்க்கரையை அதிகம் போட்டுவிடாதீர்கள். ஒன்றரைஸ்பூன் போதும்....." .என்று பரக்கப் பரக்கக் கூறினாள் சுதா.

"என்ன.........? என்று கேட்டு, ஒரு மாதிரியாகச் சுதாவைப் பார்த்தாள் வனஜா. 'சாதாரணமாக மூன்று ஸ்பூன் சர்க்கரைப் போட்டாலும், "ஐயோ, காப்பி கசந்து வழிகிறதே" என்று கூறும் சுதாவா இவள்? என்று அதிசயத்தாள்.

வனஜாவின் அதிசயப் பார்வைக்கு சமாதானம் சொல்வது போல், ஒன்றரை ஸ்பூன் சர்க்கரை உபயோகிப்பதுதான் உடம்புக்கு ஆரோக்கியமாம்" என்றாள் சுதா.

அந்தப் புதிய ஞானோத்யத்துக்கு விளக்கம் கேட்கவில்லை வனஜா. காப்பி குடிக்கும் சுதாவையே உற்றுப்பார்த்தாள். அவளுக்கு எல்லாம் கேட்காமலே புரிந்தது. இரண்டு மூன்று நாட்களாகச் சுதாவை ஊடுருவிக் கவனித்துவருகிராளே அவள். அதிலும் ஶ்ரீதர் அந்த வீட்டுக்கு வந்து சென்ற தினத்திலிருந்து, விடாமல் சுதாவைக் கண்காணித்து வருகிறாள். ஶ்ரீதருக்குப் பிடித்ததையெல்லாம் இப்போதே பழக ஆரம்பித்துவிட்டாள் சுதா. காப்பியைக் குடிக்கும்போது ஶ்ரீதர் கையாண்ட பாணியிலேயே வைத்துக்கொண்டு குடித்தாள்.

ஶ்ரீதர் வீட்டுக்கு வந்து போனதிலிருந்தே சுதா ஓர் உல்லாசப் பறவையாகி விட்டாள். தான் இருக்கும் வீட்டில அண்ணன் இருக்கிறார், மன்னி இருக்கிறாள் என்ற பிரக்ஞையே அவளுக்கு இருந்ததில்லை. வழக்கமாகப் படுக்கப்போகும்முன், சமையல் அறைக்கு வந்து பாலைக் குடித்துப்போகும் அவள், ஶ்ரீதர் வந்த அன்று, அதை மறந்தே விட்டாள். எனவே, வனஜா பாலை எடுத்துக்கொண்டு அவள் அறைக்குச் சென்றாள். சுதாவின் அறை உட்புறம் தாளிடப்பட்டிருந்தது.. உள்ளிருந்து ஆங்கில இசை கேட்டது. வனஜா கதவைத் தட்டியதும், சுதா திறந்தாள்.

"என்ன சுதா, பாலை மறந்துட்டியா?" என்று அவளிடம் தம்ளரை நீட்டினாள் வனஜா.

வழக்கமாக எதாவது முறைப்பாகப் பேசும் சுதா, அன்று எடுத்தெறிந்து பேசவில்லை. சினிமாவில் வரும் குரும்புக்காரிகள், கைகளைப் பின்னால் கட்டிக்கொண்டு, தலையை முன்னால் நீட்டி கொனஷ்டை செய்வதுபோல், சுதாவும் தலையை நீட்டி, "பாலும் கசந்ததடீ, படுக்கையும் நொந்ததடீ......" என்றுப் பாடினாள்.

ஒரு பெண் வெளிப்படையாக இப்படியெல்லாம் அசட்டுத்தனமாக நடந்து கொள்வாள் என்று நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. ஆனால், இதோ எதிரே ஒருத்தி நிற்கிறாளே.......! வனஜாவுக்கு அந்த அசட்டுத்தனத்தை சகிக்கமுடியவில்லை. "ராத்திரியில் என்ன, பாட்டும் கூத்தும்? பாலைக்குடித்துவிட்டுப் படுத்துத் தூங்கு........"என்று அவளிடம் கூறிவிட்டுத் திரும்பினாள். அவளுக்குப் பின்னால் 'உறக்கம் கொள்ளவில்லை', என்ற சுதாவின் பாட்டுக் கேட்டது.

அப்போதே..........

'இந்தப்பெண் போகிற வேகம் சரியில்லை; இதைக் கொஞ்சம் கவனிக்க வேண்டும்' என்று தோன்றிவிட்டது வனஜாவுக்கு.

சுதா, காப்பியை உறிஞ்சிக் குடித்துத் தம்ளரை வைத்துவிட்டு வெளியேறும் வரையில் அவளையே துளைக்கும் பார்வையில் அளந்துகொண்டிருந்தாள் வனஜா. அறையை விட்டு வெளியேறிய சுதா, அரை மணிக்குள் குளித்துவிட்டு, கண்ணாடி முன்னால் போய் நின்றாள். ஒற்றைப் பின்னல், இரட்டைப் பின்னல், கொண்டை என்று மாற்றி மாற்றிப் போட்டுக் கலைத்துக்கொண்டிருந்தாள். எதிலும் அவளுக்குத் திருப்தி ஏற்படவில்லை போலும். கடைசியில் சலிப்புடன் வனஜாவை நெருங்கி, "நான் ஒரு 'ஹேர் ட்ரெஸ்ஸ'ரிடம் போகவேண்டும் மன்னி ...... வரவர என்னுடைய ட்ரெஸ்ஸே எனக்குப் பிடிக்கவில்லை. என்னோடு வேலை செய்யும் சரோஜ், தினம் ஒருவிதத் தலையலங்காரத்துடன் வருகிறாள். 'ஹேர்டு' நன்றாக இல்லையென்றால், பெண்ணுக்குப் பாதி அழகு போய்விடுகிறது......" என்று சலித்துக்கொண்டாள்.

"சுதா, எனக்கென்னவோ, உன் முகத்துக்குக் கொண்டையெல்லாம் சரிப்படவில்லை என்றுதான் தோன்றுகிறது. அழகாக ஒற்றைப்பின்னல் போட்டு, ஒரே ஒரு ரோஜாவைச் செருகிக்கொண்டாலே மிக அழகாக இருக்கும்.... கண்ட கண்ட 'ஹேர் ட்ரெஸ்ஸ'ரிடம் போனால், தலைமுடி சிடுக்காகி, அறுந்து அறுந்து விழுவதுதான் மிச்சமாகிறது........என்றாள்.

சுதாவுக்கு வனஜாவின் இந்த 'காமெண்ட்' பிடிக்கவில்லை. பழைய தூக்கி எறியும் சுபாவம் தலை எடுத்தது. "போயும் போயும் உங்களை வந்துக்கேட்டேனே........" என்று கூறிவிட்டு மீண்டும் தனது அறைக்குள் நுழைந்தாள்.

'நல்ல பெண் இவள்....' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட வனஜா, மீண்டும் காப்பி கலந்துகொண்டு கணவன் அறைக்குள் நுழைந்தாள்.

'ஹிந்து' பத்திரிகையை ஜெயராமன் ஆழ்ந்து படித்துக்கொண்டிருந்தபோது ரேடியோவில் டி.எம்.எஸ்.ஸின் குரல் ஒலித்துக்கொண்டிருந்தது.. அதையும் மீறி மெட்டிஒலி கேட்டதும், 'ஏன் இன்னிக்கு லேட்? என்று, பத்திரிகையிலிருந்த தலையை எடுக்காமலேயே கேட்டான்.

"உங்களுக்குப் போட்டியாக உங்க தங்கை வந்துவிட்டாள்..... அதுதான்......." என்று சொல்லிக்கொண்டே அவனிடம் காப்பியை நீட்டினாள் வனஜா.

"என்னது? சுதா அதுக்குள்ளே எழுந்துவிட்டாளா? ஐ கான்ட் பிலீவ் இட்; என்னால் நம்ப முடியவில்லை.." என்றான் ஜெயராமன்.

"அவளிடம் இப்போது திடீரென்று பல மாறுதல்கள் ஏற்பட்டிருப்பது உங்களுக்குப் புரியவில்லையா?" என்று கேட்டு கணவனைக் 'குறுகுறு'வென்று பார்த்தாள் வனஜா.

"மாற்றமா? வாட் டு யூ ஸே?....." காப்பியைக் குடித்த படி கேட்டான் ஜெயராமன்.

"நன்றாயிருக்கிறது, தங்கையை வளர்க்கிற லட்சணம்.... வயது வந்த ஒரு பெண்ணுக்குக் கார்டியனாக இருப்பது ரொம்பவும் கஷ்டமான காரியம்; புரிகிறதா? அந்த ஸ்ரீதர் வந்து போன தினத்திலிருந்து அவளை நான் கவனித்துக்கொண்டுதான் வருகிறேன்........" என்றாள் வனஜா.

இதற்கு ஜெயராமன் பதில் சொல்லவில்லை. காப்பியைக் குடித்துவிட்டு, காலி தம்ளரை அவளிடம் நீட்டியபடி, "இந்த ஆபீஸ் காதல், ஆபீஸ் நட்பு விவகாரங்களெல்லாம் எனக்குச் சரியாகவே புரியவில்லை. இதில் எது தப்பு, எதுசரி என்று தீர்மானிக்க எனக்குச் சக்தி இல்லை" என்றான் குத்தலாக. வனஜா அதைப் புரிந்து கொள்ளவில்லை.

"உங்களுக்குப் புரியாவிட்டால் பரவாயில்லை, எனக்குப் புரிகிறது, நான் கவனித்துக் கொள்கிறேன்...." என்று கூறி, எதோ ஒரு முடிவுக்கு வந்தவள்போல் அந்த அறையைவிட்டு வெளியேறினாள்.

அடுத்த ஒருமணி நேரத்திற்குள் சமையலை முடித்துவிட்டு, டிரஸ் செய்துகொண்டு வெளியே புறப்படத் தயாரானாள்

"என்ன வனஜா இது?...... மணி எட்டுத்தானே ஆகிறது!.... அதற்குள்ளாகவா ஆபீஸ்....." என்று கேட்ட ஜெயராமனிடம், "ஒரு பிரண்டைப் பார்த்துவிட்டு ஆபீசுக்குப் போகவேண்டும், அதுதான் சற்று முன்பாகவே புறப்பட்டுவிட்டேன். சாப்பாடெல்லாம் ரெடியாக இருக்கிறது. போட்டுக்கொண்டு சாப்பிடுங்கள்..... நான் புறப்படுகிறேன்....." என்று கூறியபடி, செருப்பை மாட்டிக்கொண்டு வாசலில் இறங்கினாள்.

மனைவியின் போக்கைப் புரிந்துகொள்ள முடியாமல், 'பிரண்டா? யார் அது? என்ற யோசனையில் ஆழ்ந்தான் ஜெயராமன்.

சுதாவின் போக்கை ஒவ்வொன்றாகக் கவனித்துக்கொண்டிருந்த வனஜா, ஒரு தீர்மானமான முடிவுக்கு வந்துவிட்டாள். சுதாவைப்பற்றிக் கொஞ்சம் விசாரிக்க வேண்டும் என்ற முடிவுதான் அது.. பொதுவாக வனஜாவுக்கு அப்படியெல்லாம் செய்வது பிடிக்காது. பிறருடைய அந்தரங்கத்தை அவர்களுக்குத் தெரியாமல் சோதிப்பதை அவள் விரும்புவதில்லை. இருந்தாலும், சுதாவின் அந்தரங்கத்தின்மீது, தனக்கு ஒரு தார்மீகப் பொறுப்பு இருப்பதை உணர்ந்தாள். அதை நிறைவேற்றாவிட்டால், இன்று அவளுக்குத் தாய் ஸ்தானத்தில் இருக்கும் தான், கடமையிலிருந்து வழுவிவிட்டதாகும் என்ற உள்ளுணர்வு அவளை இயக்கியது. சுதாவைப் பற்றி அறிந்துகொள்ளத்தான், தன் பள்ளித் தோழியும், சுதாவுடன் பணியற்றுபவளுமான சரோஜ் வீட்டை நோக்கிப் புறப்பட்டாள்.

எழும்பூருக்குப் போகும் பஸ்ஸை எதிர்நோக்கி, பஸ்ஸ்டாண்டில் காத்திருந்தாள் அவள்.

**பி**யானோவின் கட்டைகளைத் தன் நீண்டவிரலால் தடவிக்கொண்டிருந்தாள் சரோஜ். காலையில் கொஞ்சநேரம் பியானோ வாசிக்காவிட்டால், அவளுக்கு நாள் தொடங்கியதாகவே தோன்றாது. அதிகாலையில் எழுந்திருந்து, குளித்துவிட்டு, டிரஸ் செய்துகொண்டு விடுவாள் அவள். பிறகு டாடியுடனும், மம்மியுடனும் டைனிங்

டேபிளில் அமர்ந்து கார்ன்பிளேக்ஸ் மில்க், பிரெட் டோஸ்ட், ஆம்லெட் என்று காலைச் சிற்றுண்டி சாப்பிடுவாள். அன்று அவளுக்குப் பிடித்தமான 'லாராஸ் தீமை' அவள் வாசித்துக் கொண்டிருந்தபோதுதான் 'ட்ரிங்....' என்று அழைப்பு மணிஓசை எழுந்தது.

"எஸ்....." என்று குரல் கொடுத்துக்கொண்டே, எழுந்து சென்று, கதவைத் திறந்தாள். "ஹல்லோ...... வனஜா ....... கமான் கமான் ......என்று உற்சாக மிகுதியால் கூவினாள்.

வெகு நாளைக்குப் பிறகு பள்ளித் தோழியைப் பார்த்த ஆர்வம் அவள் குரலில் பளிச்சிட்டது. வனஜாவின் கையைப் பிடித்துக்கொண்டு உள்ளே அழைத்துவந்து, சோபாவில் அமரச் செய்தாள். பிறகு தானும் அவள் எதிரில் அமர்ந்துகொண்டு, முழங்காலில் தன் இரண்டு முழங்கைகளையும் பதியவைத்து முகத்தை இருகரத்தால் தாங்கிக் கொண்டு 'குறுகுறு'வென்று வனஜாவையே பார்த்தாள்.

'என்ன சரோஜ், ஏன் அப்படிப் பார்க்கிறாய்?" என்று சற்றே வெட்கம் மேலிடக் கேட்டாள் வனஜா.

'யூ லுக் வெரி சார்மிங்..... பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது நீ இவ்வளவு அழகாக இல்லையே, இப்போது எங்கிருந்து இவ்வளவு அழகு வந்தது என்று பார்க்கிறேன்.." என்று சிரித்துக்கொண்டே கூறினாள் சரோஜ்.

"ஓ, அழகு ஆராய்ச்சியா? தாங்க்யூ..." என்று வெண்பற்கள் தெரியச் சிரித்தாள் வனஜா.

"ஒன் மினிட், வனஜா........ இதோவருகிறேன்......." என்று கூறியபடி, உள்ளே எழுந்து சென்றாள் சரோஜ்.

தனித்து விடப்பட்ட வனஜா, அந்த வீட்டைச் சுற்றுமுற்றும் பார்த்தாள். சிறிய வீடுதான், ஆனாலும் சிறப்பாக வைக்கப் பட்டிருந்தது. ஜன்னல் திரைச்சீலைகளில் கண்ணாடிச் சரங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. காற்றில் அவை அசைந்து, 'கிணுகிணு'வென்று ஒருவித இனிய ஒலியை எழுப்பிக் கொண்டிருந்தன. சுவரில் சரோஜின் அழகிய படம் ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அதில், மிகப் பிடிப்பான உடை அணிந்திருந்தாள் அவள். 'பெண்மையின் அழகையெல்லாம் பளிச்சென்று காட்டவே எடுக்கப்பட்ட படம்போலும் அது' என்று எண்ணிக்கொண்டாள் வனஜா.

"ஸாரி வனஜா..." என்று கூறிக்கொண்டே, ஒரு பீங்கான் கோப்பையில் காப்பியுடன் அவள் எதிரே வந்து அமர்ந்து கொண்டாள் சரோஜ்.

"காப்பியா? நான் சாப்பாடே சாப்பிட்டுவிட்டேன், சரோஜ்....." என்றாள் வனஜா.

"என்னது, சாப்பாடா? அதற்குள்ளாகவா? மணி எட்டரை கூட ஆகவில்லை. ஹௌ ஈஸ் இட் பாசிபிள்?..." என்று வியந்தாள் சரோஜ்.

"நீ எட்டுமணி 'பிரேக்பாஸ்ட்' சாப்பிடுவதில்லையா? அதைபோல்தான் இதுவும்....." என்றவள், "சரி, முதன்முறையாக நீண்டநாட்களுக்குப் பிறகு உன் வீட்டுக்கு வந்திருக்கிறேன்.... நீ கொடுப்பதை வேண்டாம் என்று சொல்வானேன்......" என்று கூறியபடி, சரோஜைப் பார்வையால் அளந்தபடி, காப்பியைப் பருகினாள். சரோஜ் போட்டிருந்த ட்ரஸ்ஸில் கொஞ்சம் கவர்ச்சி அதிகமாக இருந்தது. அவள் அணிந்திருந்த 'ஜாக்கெட்' அவள் மார்பின் பெரும்பகுதியை மூடவில்லை. முழங்காலின் வெறுமை 'பளிச்'சென்று தெரிந்தது.

காப்பியை குடித்து முடித்து, கோப்பையை டீபாய்மீது வைத்தவண்ணம், "இது என்ன, வீட்டு டிரஸ்ஸா?" என்று சாதாரணமாகக் கேட்பதுபோல் கேட்டாள் வனஜா. .

"நோ...நோ.... இதுதான் ஆபீஸ் டிரஸ்...... என்னயோசிக்கிறாய்? கொஞ்சம் மாடர்னாக இருக்கிறதே என்று பார்க்கிறாயா? அப்படி இருந்தால்தான் எங்கள் ஜி.எம்.முக்குப் பிடிக்கும்." என்றாள் அவள், பெருமை தொனிக்கும் குரலில்.

"ஓ..... உங்கள் ஜி.எம் உங்கள் டிரஸ்ஸைத்தான் அதிகமாக கவனிப்பாரா? என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் வனஜா.

அதற்கு சரோஜ் அளித்த பதில் வெறும் சிரிப்புதான் !

மிக ஜாக்கிரதையாகப் பேச்சுக் கொடுக்கவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டாள் வனஜா. தான் வந்த நோக்கம், சுதா - ஸ்ரீதர் நடப்பு பற்றித் தெரிந்து போகத்தான் என்றாலும், தோழியிடம் விசாரிக்கும்போது, ஜாக்கிரதையாக இருக்கவேண்டுமல்லவா?

"என்ன சரோஜ், உன் வேலையெல்லாம் எப்படி? என்று மீண்டும் பேச்சைத் தொடங்கினாள் வனஜா.

'ஸ்டெனோவுக்கு என்ன பிரமாத வேலை? அதுவும் நாங்கள் ஜி.எம்.முடன் 'அட்டாச்' ஆன ஸ்டெனோ கிராபர்கள். பொதுவாக வேலை குறைவுதான். அதிலும் உங்கள் சுதா எங்களுக்கு வேலையே வைக்கமாட்டாள். ஜி.எம். பக்கம் மற்றவர்களை நெருங்கவிடாமல், அவளே எல்லா வேலைகளையும் பார்த்துக்கொள்வாள்" என்று கூறிச் சிரித்தாள்.

வனஜாவும் விதியே என்று சிரித்து வைத்தாள்

"ஆமாம், உங்கள் ஜெனரல் மானேஜர் எப்படி?" என்று அடுத்தக் கேள்வியைக் கேட்டாள்,. சற்றுப்பொறுத்து.

"ஓ! ஹி ஈஸ் எ வெரி நைஸ் மேன்" என்று கண்ணை உருட்டினாள் சரோஜ்.

வனஜாவுக்கு "துணுக்"கென்றது.. 'ஏதேது, சரோஜ், சுதாவைவிட ஒன்றரை பங்கு அதிகம் கண்களை உருட்டுகிராளே' என்று திகைத்தாள்.

'நைஸ் மானேஜர்' என்றால், உத்தியோகபூர்வமான பாஷையாக இருக்கும். 'நைஸ் மேன்' என்றால், அதில் கொஞ்சம் 'பர்ஸனாலிட்டி' விஷயமும் கலந்திருக்கிறதே! அதை வாய்விட்டே கேட்டாள் வனஜா.

" சரோஜ், அவர் நைஸ் மேனா, நைஸ் மானேஜரா .......?"

"இரண்டும்தான். நைஸ் மானேஜர்களை சாதாரணமாகக் காணமுடியும். ஆனால், ஸ்ரீதர் மாதிரி நைஸ் மேனைக் காண்பது ரொம்பக்கஷ்டம். சச் எ குட் பெல்லோ; அவ்வளவு நல்லவர்" என்றாள் பெருமை தொனிக்கும் குரலில்.

"ரொம்பவும் நன்றாகப் பழகுவாரோ?" என்றுக் கேட்டாள் வனஜா.

"ஆமாம்! ரொம்பவும் 'அட்டாச்'டாகப் பழகுவார்...."

"அட்டாச்'டாகவா? அந்தரங்கமாகவா?

" சாதாரணமாக அவர் பழகும்போதே அதில் அந்தரங்கமாக நெஞ்சைத் தொடுகிற பரிவு இருக்கும். எங்களையெல்லாம் அவர் தனக்குக் கீழே வேலை பார்க்கும் ஊழியர்களாக நினைக்கிறதே இல்லை. ரொம்பக் 'குளோசா' மூவ் பண்ணுவார்."

"குளோசான்னா?" துருவினாள் வனஜா.

"எஸ்! சமயத்திலே சைட் பை சைடா உட்கார வைத்தே டிக்டேஷன் கொடுப்பார். வித்தியாசம் பாராட்டமாட்டார். என் சொந்த விஷயத்தைப் பற்றியெல்லாம் மனம்விட்டுப் பேசியிருக்கிறார். ரொம்ப அக்கறையோடு என் கஷ்ட நஷ்டங்களை விசாரித்திருக்கிறார். ஏன், என் டிரஸ்ஸைப் பற்றி எவ்வளவோ தரம் புகழ்ந்திருக்கிறார். உனக்கு இந்தக் கலர் ரொம்ப ஸூட் ஆகிறது என்று சொல்லுவார். 'லிப்ஸ்டிக்' கலரை மாற்று என்பார். இவ்வளவெல்லாம் ஏன், எனக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது என்றுகூடத் தெரிந்து வைத்திருக்கிறார் என்றால் பார்துக் கொள்ளேன்......." பெருமை பிடிபடாமல் பேசிகொண்டே போனாள் சரோஜ்.

அப்போது அவள் முகத்தில் படர்ந்திருந்தது நாணமா, கர்வமா? வனஜாவுக்குப் புரியவில்லை.

"அவருக்கு ஏதெது பிடிக்கும், பிடிக்காது என்று நீ தெரிந்து வைத்திருக்கிறாயா?" என்று கேட்டு வைத்தாள் வனஜா

"ஓ எஸ்! அவரே சொல்வாரே! எங்கிட்டே எத்தனையோ தடவை தனியே பேசிக்கொண்டிருந்தார். காப்பியிலே அவருக்கு ஒன்றரை ஸ்பூன் சர்க்கரைதான் போடவேணும் என்பதைக்கூட எங்கிட்டே சொல்லியிருக்கார். வெரி இன்ட்ரஸ்டிங் மேன்..... அவருடைய கம்பெனி எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவரோடு பேசிக்கொண்டே இருந்தால், இந்த உலகமே மறந்துவிடும். அப்படிப் பேசுவார். திரும்ப எப்போ பேச சான்ஸ் கிடைக்கும் என்று ஏங்கத்தோன்றும். அப்படி அவருக்கு ஒரு இன்ட்ரஸ்டிங் பர்ஸனாலிட்டி."

"ஐஸி......" என்று வனஜா குறுக்கிட்டிருக்காவிட்டால், ஸ்ரீதர் புகழை நிறுத்திருக்கமாட்டாள் சரோஜ்.

கைக்கடிகாரத்தைப் பார்த்தாள் வனஜா, "ஓ, ஆபீசுக்கு நேரமாகிறது......." என்று எழுந்தாள்

"அதற்குள்ளாகவா? என்ற சரோஜ், "அது சரி, இந்தப்பக்கம் ஏதாவது வேலையாக வந்தாயா? ஏது காலைவேளையில் திடீர் விஜயம்? என்வீடு உனக்கு மறந்திருக்குமோ என்று நினைத்தேன்...... என்றாள்.

. உன் வீட்டை மறப்பதா? வாட் டு யூ மீன்...." என்று கூறிய வனஜா, "ஜஸ்ட் லைக் தட், இங்கே வந்தேன். உன்னைப் பார்க்கவேண்டும்போல் தோன்றியது, வந்தேன். வரக்கூடாதா? என்று கேட்டாள்.

"சீ, சீ! என்ன இது? அடிக்கடி வா. நான் பியானோ வாசித்து நீ கேட்டதில்லையே! ஸ்ரீதர் பலமுறை கேட்டிருக்கிறார். என் வாசிப்பில் அவருக்கு ஒரு தனி மோகம், சில சமயம் இங்கே வந்து, சரோஜ், 'ப்ளூ டான்யூப்' வாசியேன், 'ஆடம் லீவ்ஸ்' வாசியேன் என்றெல்லாம் கேட்பார்...." என்று மீண்டும் 'ஸ்ரீதர் புகழ்' பாட ஆரம்பித்தாள்.

அவள் குறிப்பிட்ட அந்த ஆங்கில வார்த்தைகள், பிரபல பியானோ ட்யூன்களாக இருக்க வேண்டும் என்பது வனஜாவுக்குப் புரிந்தது. அது மட்டுமா புரிந்தது! இன்னும் என்னென்னவோ புரிந்தததே! அது புரிந்ததால், அவள் மனம் குழம்பியது. சுதா ஸ்ரீதரைப்பற்றி எப்படி எப்படியெல்லாம் பிதற்றுகிறாளோ, அப்படியே ஒன்று விடாமல் சரோஜும் பிதற்றுகிறாளே! அப்படியானால் ஸ்ரீதர்மேல் சுதா கொண்டிருக்கும் பயித்தியம், சரோஜுக்கும் இருக்கிறதா?

அல்லது.......

இப்படி எல்லாப் பெண்களிடமும் தனித்தனியாகப் பழகி, அவர்களைப் பயித்தியமாக அடித்தக் கொண்டிருக்கிறானோ இந்த ஸ்ரீதர்? அவனுடைய அயோக்கியத்தனத்துக்கு இந்தப் பெண்கள் எல்லோரும் பலியாகிக் கொண்டிருக்கிறார்களா?"

சில குழப்பங்களைத் தெளிவித்துக்கொள்ள வந்தவள் புதிதுபுதிதாகப் பல குழப்பங்களோடு சரோஜிடம் விடைபெற்றுச் சென்றாள்.

ஆபீசில் வனஜாவுக்கு வேலையே ஓடவில்லை. மனம் சுதாவைப் பற்றியே சுழன்று கொண்டிருந்தது. எதாவது மாற்றாக வேறு விஷயத்தைப் பற்றி இரண்டு வார்த்தை பேசலாம் என்றால், சுந்தரமும் இல்லை.

'சுந்தரம் இருந்தால் எதையாவது பேசலாம். ஏன், இந்த சுதா விஷயத்தைப் பற்றிக்கூட அவரிடம் பேசி, அவர் ஆலோசனையைக் கேட்கலாம். தெளிவான அபிப்ராயங்களைச் சொல்வார் அவர்.... !

சுந்தரத்தின் நினைவு வந்ததும், அவளுக்கு மேலும் இன்னொரு கவலை ஏற்ப்பட்டது.

'ஏன் அவர் இப்படி ஒரேயடியாக லீவ் போட்டுக்கொண்டிருக்கிறார்? சாதாரணமாக இப்படிக் காரணமில்லாமல் போடக்கூடியவர் அல்லவே அவர்!'

இடைவேளையின் போதுதான் அவளுக்குச் சுந்தரத்தினுடைய நீண்ட லீவுக்கான காரணம் தெரிந்தது :

"சுந்தரம் உடம்புக்கு முடியாமல் படுத்தபடுக்கையாகக் கிடக்கிறான்....." என்றார் ஒரு சகஊழியர்.

அதைக் கேட்டதும் வனஜாவுக்கு மனம் துடித்தது.. ஆப்த நண்பர் ஒருவரின் வேதனை அவள் நெஞ்சைப் பிழிந்தது. அவனைப்போய் உடனே பார்க்கவேண்டும் என்று துடித்தாள். தனியாகப் போவதைவிட, கணவனுடன் போவது சிறந்தது என்று தோன்றவே, கணவனுக்குப் போன் செய்தாள்.

"இன்னிக்கு சாயங்காலம் கொஞ்சம் சீக்கிரம் வருகிறீர்களா?"

"ஏன், எதாவது சினிமா ப்ரோக்ராமா?"

"இல்லை, என் நண்பர்னு உங்ககிட்டே சொல்லல்லே..... அவர்தான் சுந்தரம்.... அவர் உடம்புக்கு முடியாம கிடக்காராம்.... எனக்கு இன்னிக்கே அவரைப்போய்ப் பார்க்கணும் போல இருக்கு...... நாம் இரண்டுபேரும் போகலாம், கொஞ்சம் சீக்கிரமா வந்துடுங்க ....... கவலையுடன் பேசினாள் வனஜா.

ஜெயராமன் இதற்குப் பதில் சொல்லவில்லை. சில வினாடிகள் மௌனத்தில் கழிந்தன.

"என்ன, பேசாமல் இருக்கிறீர்கள்? என்றாள் வனஜா.

"ஒண்ணுமில்லே, நானும் வரணுமான்னு யோசிக்கிறேன்..."

"இது என்ன கேள்வி......? நீங்க இல்லாமலா! நீங்க இதுவரை அவரைப் பார்த்தது கூடஇல்லை... அன்னிக்குப் போறபோதுதான் உங்களை அழைத்துக்கொண்டு போக முடியல்லே...." இன்னிக்கு நீங்க கட்டாயம் வரணும்......" ப்ளீஸ் ........"

"சரி......." சுரத்தின்றிப் பதில் சொன்னான் ஜெயராமன்.

"நான் சாயங்காலம் சீக்கிரமா வந்துடறேன். நீங்களும் வந்துடுங்க....." என்று கூறி, போனை வைத்தாள் வனஜா.

அவள் போனில் பேசிக்கொண்டிருந்ததை, ஏதோ சாக்காக வந்தவன் போல், சிறிது தொலைவில் நின்று ஒட்டுக்கேட்டுக்கொண்டிருந்தான் சாரி.

மாலை ஐந்தரை மணிக்கு வனஜா தன் வீட்டிற்குள் நுழைந்து கொண்டிருந்தபோது, அவளுடைய வீட்டிலிருந்து வெளியே வந்துகொண்டிருந்தான் சாரி. வனஜாவைக் கண்டதும் அசட்டுச் சிரிப்புடன் "வனஜா, இப்பத்தான் வர்றியா? ஹி..... ஹி ... ஜெயராமன்கூட சும்மா கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தேன்..... ஹி......ஹி.....வர்ரேன்......" என்று சொல்லிக்கொண்டே வெளியேறினான்.

மூன்று நாளைக்கு முன்புதான் முதன்முதலாக வந்து, தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொண்டு பேசிப்போன சாரிக்கு, அதற்குள் தன் கணவனிடம் தனியாகப் பேச என்ன இருக்கும் என்பதைப்பற்றி வனஜா யோசிக்கவில்லை. அவள் கவலையெல்லாம் சுந்தரத்தைப் பற்றியே இருந்தது. சாரியின் வரவையோ, பேச்சையோ பொருட்படுத்தாமல், உள்ளே நுழைந்தாள்.

ஜெயராமன் ஆபீஸ் உடைகளைக் களைந்துவிட்டு சோபாவில் ஏதோ சிந்தனையாகச் சாய்ந்திருந்தான். அப்போது அவன் வெளியே புறப்படக்கூடிய மனநிலையில் இருப்பதாகத் தோன்றவில்லை.

"என்ன இது? சுந்தரத்தைப் பார்க்கப் போகவேண்டும் என்று சொன்னேனே, புறப்படவில்லையா?" என்று கேட்டாள் வனஜா.

ஜெயராமன் சர்வ சாதாரணமான குரலில், இன்னிக்குக் கட்டாயம் போய்தான் ஆகணுமா?" என்று கேட்டான்.

## 7

புதுமைப் பெண்ணிவள் சொற்களும் செய்கையும்
பொய்மை கொண்ட கலிக்குப் புதிது.

– பாரதியார்

பொழுது இன்னும் சரியாகப் புலரவில்லை. பரவசமூட்டும் ஒருவித அமைதி எங்கும் பரவிக்கிடந்த அந்த வேளையில், பூஜை அறையில், ராமர் பட்டாபிஷேகப் படத்திற்கு முன்னால் கண்மூடி அமர்ந்து தியானித்துக் கொண்டிருந்தாள் செல்லம்மாள்.

ஸ்நானம் செய்து முடிந்த தலையும், நெற்றியிலே ஒரு கீற்று விபூதியுமாக அவள் தோற்றத்திலே ஒரு புனிதம் 'பளிச்'சிட்டது. பார்த்தாலே ஒரு வித மரியாதை ஏற்படும் கோலம் அது.

வெகுநேரமாக அவள் அந்தச் சிறிய பூஜை அறைக்குள் தன்னைச் சிறைப்படுத்திக் கொண்டிருக்கிறாள். தெய்வ சன்னிதானந்தான் தனக்குச் சமாதனம் அளிக்கும் இடம் என்பது அவளுடைய உறுதியான முடிவு. அதனால்தான், அதிகாலையில் எழுந்து குளித்துவிட்டு, அவள் சுவாமி அறைக்குள் போய்விடுவாள்.

மூடியிருந்த அந்த அறையின் கதவைத் திறந்துகொண்டு மெல்ல உள்ளே நுழைந்த வனஜா, செல்லம்மாளின் அந்த தவக்கோலத்தைப் பார்த்தவண்ணம் சிறிதுநேரம் மௌனமாக நின்றிருந்தாள். பிறகு அவளிடமிருந்து நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது.

"அக்கா......." என்று மெல்லிய குரலில் அழைத்தாள் வனஜா.

ஏதோ பிரமையிலிருந்து விடுபட்டவள் போல் கண் விழித்த செல்லம்மாள், எதிரே வனஜாவைக் கண்டதும், "ஓ..... ரொம்ப நேரமாகிவிட்டதோ?" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு, சுவாமிக்கு நமஸ்காரம் செய்துவிட்டு எழுந்திருந்தாள். இருவரும் அந்த அறையைவிட்டு வெளியேறி, சமையல் அறைக்குள் நுழைந்தனர்.

ஜெயராமனின் மூத்த சகோதரி செல்லம்மாள். இளம் வயதிலேயே விதவைக்கோலம் பூண்டுவிட்ட துர்பாக்கியவதி. கணவன் விட்டுச் சென்ற சொற்ப நிலவருமானம் அவளுக்குப் போதுமானதாக இருந்தது. வாழ்க்கையையே ஒரு லட்சியமற்ற விரதமாகப்பூண்டு, விரக்தியாக கிராமத்தில் வாழ்ந்து வந்தாள். 'அக்கா, தனியாகக்

கிராமத்தில் ஏன் வாழவேண்டும், என்னோடு வந்துவிடு' என்று ஜெயராமன் வருந்தி வருந்தி அழைத்தாலும் வரமாட்டாள். 'நான் எங்கே இருந்தாலும் ஒன்றுதான். ஏதோ இந்தக் கிராமத்தில் எனக்கு மன நிம்மதி இருக்கிறது' என்பாள்.

அவசியம், அவசரம் என்று ஜெயராமன் நிர்பந்தப்படுத்தி அழைத்தால் ஒழிய, சென்னைக்கே வரமாட்டாள். வந்தாலும் பத்து இருபது நாட்கள்தான் இருப்பாள். மீண்டும் கிராமத்திற்கு ஓடிவிடுவாள். அப்படி ஒதுங்கிப்போன ஒரு வாழ்க்கை. யாருக்கும் பாரமாக இல்லாமல், யாரையும் தன் தலைக்குப் பாரமாக எடுத்துப் போட்டுக்கொள்ளாமல் அமைதியான வாழ்க்கையில் எவ்வித சஞ்சலமுமில்லாமல் வாழப் பழகிக்கொண்டவள் அவள். பிஞ்சிலேயே வெம்பி வாடிப்போன வாழ்க்கை, அவளுக்கு இளமையிலேயே அளவுக்கு மீறிய ஞானத்தைக் கற்பித்திருந்தது. அவளுடைய இந்த எளிமையான அடக்கம் மற்றவர்களுக்கு அவள்மீது ஒரு பக்தியையே உண்டாக்கி இருந்தது.

ஜெயராமனுக்கு அவள்மீது உயிர். தன் வாழ்க்கையில் அவன் அன்பவித்த அளவிலாத துயரம், அவன் அக்காள் செல்லம்மாள், அவளது இருபத்தெட்டாவது வயதில் விதவையான நாளன்றுதான். செல்லம்மாள் தன்னைப் புதுவாழ்க்கைக்குப் பக்குவப்படுத்திக் கொண்ட பிறகுகூட, அவன் அவளுடைய சுமங்கலிக் கோலத்தை நினைத்து நினைத்து மருகுவான். யாரோ சிலர், அவளை மீண்டும் மணம் செய்து கொள்ளச்சொல்' என்று அவனிடம் கூறியிருக்கிரார்கள். அப்படி ஓர் எண்ணத்தை அக்காளிடம் வெளிடும் தைரியம்கூட ஜெயராமனுக்கு ஏற்படவில்லை.

ஜெயராமனின் கல்யாணத்திற்கு வந்திருந்த செல்லம்மாள், பத்து நாள் அவனோடு தங்குவதாகத்தான் திட்டமிட்டிருந்தாள். ஆனால், அதற்குள் கிராமத்தில் நில சம்மந்தமான தகராறு ஒன்று ஏற்பட்டுவிட்டதால், அவள் அவசரமாகக் கிராமத்திற்குப் போகவேண்டி வந்துவிட்டது. இப்போதுதான் மீண்டும் ஜெயராமன் வேண்டுகோளுக்கு இணங்கி, அவன் வீட்டுக்கு வந்திருக்கிறாள். 'அக்கா, நாங்கள் மூன்று பேரும் வீட்டைப் பூட்டிக்கொண்டு போக வேண்டியிருக்கிறது. நீ வந்து இருந்தால் மிகவும் சௌகரியமாக இருக்கும்; மறுக்காமல் வா' என்று கேட்டிருந்தான் ஜெயராமன். வீட்டில் இருக்கும் மூன்று பேரும் வேலைக்குப் போவதென்றால், அதிலுள்ள சிரமம் புரிந்தது செல்லம்மாளுக்கு. தம்பியின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு, அவன் வீட்டிற்கு அவள் வந்து அன்றோடு ஐந்து நாளாகிறது.

வனஜாவிற்கு செல்லம்மாள்மீது அளவற்ற மரியாதை ஏற்பட்டிருந்தது. கல்யாண தினத்தன்று மட்டும்தான் அவளுடன் பழக நேர்ந்தாலும், செல்லம்மாளின் கனிவு ததும்பும் தோற்றமே வனஜாவின் மனத்தைக் கவர்ந்துவிட்டது. மாப்பிள்ளை வீட்டுக்கரர்களுக்கு கல்யாண தினத்தன்று மட்டும் ஸ்பெஷலாக வரும் ஆதிக்க மனப்பான்மை, துடுக்குத்தனம் ஏதும் செல்லம்மாளிடம் காணப்படவில்லை. ஓரோர் சமயம் அனாவசியத்திற்குக் கோபிக்க ஆரம்பித்த சுதாவை, தன் பார்வையின் மூலமே செல்லம்மாள் அடக்கிய சாமர்த்தியத்தை, வனஜா கவனித்திருந்தாள்.

சமையல் அறையில் வேலை ''பரபர''வென்று நடந்து கொண்டிருந்தது. வனஜா காப்பி போட்டாள்; செல்லம்மாள் காய்கறி நறுக்கி பிரஷர் குக்கரை அடுப்பில் வைத்தாள். அவள் வாய் ஏதோ ஒரு ஸ்தோத்திரத்தை முணுமுணுத்துக் கொண்டே இருந்தது. எப்போது அந்த ஸ்தோத்திரம் நிற்கும், நாம் சொல்ல இருப்பதை சொல்வோம் என்று காத்திருந்தாள் வனஜா. கடந்த இரண்டு நாட்களிலே அவள் அந்த விஷயத்தைப் பற்றிச் சொல்லத் துடித்துக்கொண்டிருந்தாள்.

மிக நெருங்கிப் பழகிய உற்ற நண்பன் சுந்தரத்திற்கு உடம்பு சரியில்லை என்று செய்தி தெரிந்து ஒரு வாரமாகியும், வனஜாவால் அவனைப் போய் பார்க்க முடியவில்லை. பார்க்க முடியாதபடி சந்தர்ப்பமும் சூழ்நிலையும் சதி செய்துகொண்டிருந்தன. அதைப்பற்றி அக்காவிடம் சொல்லி, ஒரு வழி காணவேண்டுமென்று முடிவு செய்திருந்தாள் வனஜா.

அன்றொருநாள் மாலை சுந்தரத்தைப் பார்க்கப் போகவேண்டுமென்று அவசர அவசரமாக வீட்டுக்கு வந்தபோது ஜெயராமன் நிதானமாக 'இன்று கண்டிப்பாகப் போய்தான் ஆகவேண்டுமா? என்று கேட்டபோது, வனஜாவுக்கு ஒன்றுமே புரியவில்லை.

'என்ன இது? நாம் இவ்வளவு பரபரக்கிறோம். இவர் இவ்வளவு நிதானமாக இப்படிக் கேட்கிராரே' என்றுதான் எண்ணிப் பரிதவித்தாள். "என்ன கேள்வி இது? ஒரு நல்ல ஆத்மா கஷ்ட்டப்படும்போது நாம் போய்ப் பார்த்து ஆறுதல் சொல்வது அவசியம் என்று உங்களுக்குப் படவில்லையா? என்று கேட்டாள். ஆனால் அதற்கு ஜெயராமன் கூறிய காரணத்தைக் கேட்டதும், அவளால் எதுவும் சொல்ல முடியவில்லை!

"ஐயாம் ஸாரி, வனஜா, இன்று மத்தியானம் நீ போன் செய்தபோது, நான் ஒரு விஷயத்தை மறந்தே போய்விட்டேன். செல்லம்மா அக்காவை அழைத்து வர நாம் இருவரும் பஸ்ஸில் ஊருக்குப் புறப்படவேண்டும். எட்டு மணி பஸ்ஸில் புறப்பட்டால்தான் இரவு பதினோரு மணிக்குப் போய், நாளைக் காலை அவளையும் அழைத்துக்கொண்டு, நேரத்தில் திரும்ப முடியும். அதனால்...... நாளைக்கு வேண்டுமானால் சுந்தரத்தைப் பார்க்கப் போகலாம்..........." என்றான்.

செல்லம்மாள் தங்களோடு வீட்டில் தாங்காமல் கிராமத்திற்குப் போய்விட்டது வனஜாவுக்கும் குறையாகவேதான் இருந்தது.. அவளை வீட்டுக்கு அழைக்கச் சொல்லி, ஜெயராமனை அவள் வற்புறுத்தி வந்தாள். அந்த நிலையில், சுந்தரத்தின் உடல்நிலையைக் காட்டி, செல்லம்மாளை அழைக்கச் செல்லும் விஷயத்தைத் தள்ளிவைப்பது சரியென்று வனஜாவுக்குத் தோன்றவில்லை.

"சரி, நாளைக்கே போகலாம் சுந்தரத்தைப் பார்க்க......" என்று அப்போது ஒப்புக் கொண்டாள்.

சுந்தரத்தைப் பார்க்கப் போவதைத் தவிர்ப்பதற்காகவே ஜெயராமன் செல்லம்மாள் விஷயத்தை முன்னால் கொண்டு வந்து நிறுத்தியதாக அவளால் கற்பனை செய்து பார்க்கவும் முடியவில்லை.

"ஒரு நாள்தானே இடையில்! அக்காவை அழைத்துக்கொண்டு வந்து விட்டால், நாளைக்கே நிம்மதியாகப் போய்ச் சுந்தரத்தைப் பார்த்துவிட்டு வரலாம்' என்று நினைத்துக் கொண்டாள். அத்துடன் சுதா விவகாரங்களைச் சரி செய்வதற்குத் தனக்கு ஒரு துணை இருப்பது நல்லது என்றும் அவள் நினைத்தாள். ஜெயராமனைவிட, செல்லம்மாள் அதற்கேற்ற பொருத்தமான துணை என்றும் தோன்றியது.

செல்லம்மாளின் வாழ்க்கையை விதி அமங்கலப்படுத்தி விட்டாலும், பிறர் வாழ்க்கைக்கு மங்கலத்தைத் தரும் ஒரு தேஜஸை செல்லம்மாள் பெற்றிருந்தாள். அதை எந்த விதியாலும் அவளிடமிருந்து பறிக்க முடியவில்லை. இப்படித்தான் வனஜாவால் நினைக்க முடிந்தது. வீட்டுக்கு அக்காள் வந்ததும் தன்னிடமிருந்த பெரிய பெரிய பாரமெல்லாம் இறங்கிவிட்டதாகத் தோன்றியது வனஜாவுக்கு. எனவே, மறுநாள் நிம்மதியான மனநிலையுடன், "அக்கா வந்தாச்சு, இன்னிக்காவது சுந்தரத்தைப் போய்ப் பார்க்கலாமா......." என்று அழைத்தாள்.

"சாயங்காலம்தானே போகணும்! போனால் போயிற்று....." என்று சொல்லி வைத்தான் ஜெயராமன்.

ஆனால் அவன் மாலையில் வீடு திரும்பவே மணி எட்டாயிற்று. இந்தமுறை எப்படியும் கணவனை அழைத்துக்கொண்டு சுந்தரத்தைப் பார்க்கச் செல்லவேண்டும் என்று வைராக்கியத்துடன் இருந்தாள் வனஜா. அந்த வைராக்கியத்திற்கு வேறு தனிக் காரணம் எதுவும் இல்லை. 'சுந்தரம் சுகமில்லாத நேரத்தில் அவரை அழைத்துக் கொண்டு போக முடியாவிட்டால், இன்னொரு சந்தர்ப்பத்தில் வருவதை அவர் முக்கியமாகக் கருதமாட்டார். இவர்கள் சந்திப்பு தப்பிக்கொண்டே போய்விடும்......" என்ற சாதாரண நோக்கம்தான் அதற்குக் காரணம்.

எட்டு மணிக்கு வந்த ஜெயராமன் சுந்தரத்தின் சமாசாரத்தையே வனஜா எடுக்க முடியாதபடி ஒரு செய்தியைச் சொன்னான்.

"வனஜா, இன்றைக்கு என் அருமை நண்பன் ஒருவனுக்கு ஸ்கூட்டரிலே போய்க் கொண்டிருந்தபோது, லாரியில் மோதி திடீரென்று விபத்து ஏற்பட்டுவிட்டது. அவனை ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டு, அவன் வீட்டில் போய் ஆறுதல் சொல்லிவிட்டு வருகிறேன். அதுதான் நேரமாகிவிட்டது......" என்றான்.

'இவ்வளவு ஆகியிருக்கிறது, நடந்ததற்கு வருத்தப்படாமல், நேரமானதற்குச் சமாதானம் சொல்வதுபோல் பேசுகிறீர்களே ....." என்றாள் வனஜா, உண்மையான பதற்றத்துடன்.

ஜெயராமன் "நீ காத்துக்கொண்டிருந்திருப்பியே, அதற்காகச் சொன்னேன்" என்றான்.

"அதனானல் என்ன! உங்களுக்கு நண்பர் என்றால், நம் குடும்பத்துக்கே நண்பர்தான். அவருக்கு ஒன்று வந்தால், நம் எல்லோருக்குமே வேதனைதானே! சிநேகிதம் எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பது எனக்குத் தெரியாதா?"

அந்தப் பதிலைக் கேட்டு ஜெயராமன் மகிழ்ச்சி அடையவில்லை. எதையோ சொல்ல வாயெடுத்து, பின் அடக்கிக்கொண்டான்.

அப்போதுதான், "யார் அந்தச் சிநேகிதன்? என்ன விபத்து?" என்று கேட்டுக் கொண்டே செல்லம்மாள் வந்தாள். அவளிடம் அந்த விபத்துச் செய்தியை விரிவாகவும், விளக்கமாகவும் சொல்லவில்லை ஜெயராமன்.

"ரொம்ப டியரஸ்ட் பிரண்ட்! ஆபீஸ் நண்பன் ..... ஆமாம், ஆபீஸ் பிரண்ட்! உன்னை போன்ற வீட்டுப் பெண்களுக்கெல்லாம் அது புரியாது" என்று வனஜாவை ஒரு மாதிரியாகப் பார்த்துக்கொண்டே சொல்லிவிட்டு உள்ளே சென்றுவிட்டான்.

இரவு மீண்டும் சுந்தரத்தின் பேச்சை எடுத்தாள். "நாளை காலையிலே ஆபீசுக்குப் போறபோது, கொஞ்சம் சீக்கிரமாகப் புறப்பட்டு, சுந்தரத்தைப் பார்த்துவிட்டுப் போகலாமா.... என்றாள்.

"ஓ ...... போகலாம் ....... ஆனால், என் பிரண்டை ஆஸ்பத்திரியில் பார்க்க வருவதாகச் சொன்னேன்..... அதுதான் ....." என்று இழுத்தான்.

வனஜா அப்போதும் விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று.

இப்படி, விபத்துக்குள்ளான விலாசமில்லாத நண்பன் பெயரால் இரண்டு நாட்களை , ஓட்டிவிட்டான் ஜெயராமன்.

அதன் பிறகு வனஜா சோர்ந்துவிட்டாள். ஜெயராமனின் போக்கை வனஜாவால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதிலும் படுக்கையில் உடல்நலமின்றிப் படுத்திருக்கும் சுந்தரத்தை பார்க்க முடியாதபடி நாலு நாட்கள் தொடர்ந்து 'அசந்தர்ப்ப'மாக இருப்பதை நினைத்து சஞ்சலப்பட்டாள். அந்த அசந்தர்ப்பங்கள் இயற்கையாக ஏற்படுகின்றனவா என்பதை அவள் எண்ணிப்பார்க்கவில்லை. 'சுந்தரத்தைப் பார்க்க இவர் ஏன் தட்டிக்கழிக்கப் போகிறார்" என்று சுபாவமாகவே எண்ணினாள்.

அதனால்தான், அன்று எப்படியாவது அக்காவிடம் நிலைமையை விளக்கி, அவள் உதவியுடன் கணவனை சுந்தரத்தின் வீட்டுக்கு அழைத்துப் போய்விடவேண்டும் என்று தீர்மானித்து, செல்லம்மாளிடம் அதைச் சொல்வதற்கான சந்தர்ப்பத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தாள்.

சமையல் வேலை முமுரமாக நடந்துகொண்டிருந்தது. ஒரு வழியாகச் செல்லம்மாளின் ஸ்தோத்திரங்களும் முடிவடைந்தன. இலுப்பச்சட்டியில் பருப்பு உசிலியை கிளறிக்கொண்டிருந்தபோது, "அக்கா...." என்று பேச்சை ஆரம்பித்தாள் வனஜா.

"என்னம்மா ...... ஏன் ஒரு மாதிரியா சோர்வா இருக்கே? ..... என்று கேட்டாள் செல்லம்மாள்.

"ஒண்ணுமில்லே ..... என் ஆபீஸ் நண்பர் ஒருவர் என்கிட்டே ரொம்ப உயிரைவிட்டுப் பழகியவர். அவர் கொஞ்ச நாளா படுத்தப் படுக்கையா இருக்கார். நானும் அவருமாக அந்த நண்பரைப் போய் பார்த்துவிட்டு வரணும்னு நாலு நாளா பார்க்கிறேன், முடியவே மாட்டேங்கிறது. ஏதாவது வேலைவந்து தடைபட்டுக்கொண்டே போறது. பாவம் சுந்தரம், அவருக்கு என்னைத் தவிர வேறு நண்பர்களே கிடையாது. அவரைப் பார்த்து இரண்டு வார்த்தை ஆறுதலா பேசிவிட்டு வரலாம்னு நினைத்துக் கொண்டிருக்கேன். நான் போய் வந்தால் அவருக்கும் தெம்பா இருக்கும். எப்ப வேளை ஒத்துவரப்போறதோ, தெரியல்லே....." என்றாள்.

"எவ்வளவு முக்கியமான விஷயம் இது! உள்ளூரிலே ஒரு நோயாளியை போய்ப் பார்த்துவிட்டு வர்றதுக்கா ஜெயராமன் நாளும் கிழமையும் நல்லாயிருக்கு என்ற செல்லம்மாள், ஜெயராமன் அறையை நோக்கி நடந்தாள். ஹிந்து பத்திரிகையில் வெளியாகியிருந்த சினிமா விமர்சனம் ஒன்றைப் படித்துக்கொண்டே, ரேடியோவில் அஞ்சலாகிய வயலின்மேதை லால்குடி ஜெயராமனின் இன்னிசையை அனுபவித்துக் கொண்டிருந்த ஜெயராமனின் முன்னால் போய்நின்று, "ஜெயராமா, எந்த வேலை கிடந்தாலும் அதை தள்ளி வைத்துவிட்டு நீயும் வனஜாவும் போய் அவள் பிரண்டைப் பார்த்துவிட்டு வந்துடுங்க. உன் பிரண்டுக்கு ஒண்ணுன்னா மணிக்கணக்கா போய் உட்கார்ந்திருக்கியே ....

அவளுக்கு வேண்டப்பட்டவர்கள் வீட்டிலேயும் அப்படி நடந்து கொண்டாத்தானே குடும்பத்திலே ஒற்றுமை இருக்கும்! இன்னிக்கே இரண்டு பேரும் போய் வாங்கோ... என்றாள், சற்றே கண்டிப்பான குரலில்.

செல்லம்மாளின் வாக்கை ஜெயராமனால் மீறமுடியவில்லை. 'சரி' என்று ஒப்புக்கொண்டான்.

**டா**க்ஸி அந்த வீட்டு வாசலில் நின்றது.

ஜெயராமன் டிரைவரிடம் பணத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும் போதே அவசர அவசரமாக வெகு சுவாதீனத்துடன் அந்த வீட்டின் உள்ளே நுழைந்தாள் வனஜா. 'அவ்வளவு சுவாதீனமா?' என்று கேள்விக்குறியுடன், ஜெயராமன் அவளைத் தொடர்ந்தான். வாசற்புறத்தில் சுந்தரத்தின் தாய் எதிர்பட்டாள்.

"சுந்தரத்திற்கு எப்படியம்மா இருக்கிறது?" என்று தவிப்புடன் கேட்டாள் வனஜா. அந்தத் தாயின் கண்களிலிருந்து 'குபுகுபு' என்று கண்ணீர் பொங்கி வழிந்தது.

"அந்தக் கற்பகாம்பாள்தானம்மா என் பிள்ளையைக் காப்பாற்றித்தரணும். ஒரு வாரமாச்சு, ஜுரம் விட்ட பாடில்லை, ஏதேதோ பேத்தறான்..... என்ன ஜுரம்னு டாக்டர்களுக்குப் புரியல்லே! அன்ன ஆகாரமில்லாம கிடக்கிறான். என் வயிறு கலங்குகிறதம்மா ....." என்றாள்.

"எங்கே இருக்கார் அவர்? அவ்வளவுமோசமாகவா இருக்கார்?" வனஜாபரபரப்புடன் விசாரித்தாள்.

" கொஞ்சம் நினைவு வரபோதேல்லாம் உன்னைப்பற்றித்தான் விசாரிப்பான். நான் எவ்வளவோ சொல்வேன். 'அவ கல்யாணமான பொண்ணுடா, வீட்டிலே எவ்வளவு வேலை இருக்கும் ..... முன்னே மாதிரி எங்கேயும் நினச்ச உடனே புறப்பட முடியாது'ன்னு சொல்வேன்......"

சுந்தரத்தின் தாய் எந்தவித உள்நோக்கும் இல்லாமல், பொதுப்படையாகத்தான் பேசினாள். ஆனால், 'முன்னே மாதிரி' என்று அவள் சொன்னதில் பல உள்ளர்த்தங்களைக் கற்பனை செய்துகொண்டு அவஸ்தைப்பட்டான் ஜெயராமன்.

சுந்தரத்தின் தாய் கல்யாணத்தைப்பற்றிச் சொன்னபோதுதான், ஜெயராமனை அறிமுகப் படுத்தாதது நினைவுக்கு வந்தது வனஜாவுக்கு. உடனே, அந்த பரபரப்பிலும், "அம்மா, இவர்தான் என் வீட்டுக்காரர் ...." என்று ஜெயராமனைப் பெருமையோடு அறிமுகப்படுத்தினாள்.

"வாங்கோ.... "என்று அவனை மரியாதையும் அன்பும் கலந்து அழைத்தாள் சுந்தரத்தின் தாய். ஒருகணம் தன் குழப்பங்களையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, அந்த அம்மாளை வணங்கி, "மிஸ்டர் சுந்தரத்திற்கு என்ன உடம்பு?" என்று விசாரித்தான் ஜெயராமன்.

கணவன் அப்படிக் கனிவோடு விசாரித்தைக்கண்டு வனஜா பூரித்தாள். அதைக் கவனித்த ஜெயராமன், அந்தப் பூரிப்பை ரசிக்கவில்லை.

இருவரும் மாடியேறிச் சென்றனர். அங்கே சுந்தரம் கிழிந்த நாராகக் கட்டிலில் கிடந்தான். பிரக்ஞை இல்லை. வாய் மட்டும் 'ம்ம்' பும்ம்' என்று முனகிக்கொண்டிருந்தது.

அவனைக் கண்டதும் வேதனையைக் கட்டுப்படுத்த முடியாமல் வனஜா அழுதேவிட்டாள். அழுகையினூடே, இவ்வளவு மோசமா இருக்காரரே..... இது தெரிஞ்சிருந்தா நாங்க முன்னாலேயே வந்திருப்போமே......" என்றுக் கூறிக் கணவனைப் பார்த்தாள்.

'ம்ம் ....' என்று ஆமோதிப்புக்கும், அழுத்தமான பேச்சுக்கும் பொதுவான அர்த்தம்படும்படி இழுத்துச் சொன்னான் ஜெயராமன். பிறகு, "ஆமாம், டாக்டர்கள் என்னதான் சொல்றாங்க....." என்று சுந்தரத்தின் தாயைப் பார்த்துக் கேட்டான்.

"என்ன சொல்றாங்கனே புரியல்லே! உடல் வியாதிமட்டும் இல்லையாம்! மனோ வியாதியும் இருக்காம். என்ன மனோவியாதியோ, எனக்கொன்றும் புரியல்லே? அவனுக்கு மனக்குறை என்ன இருக்கு? ரொம்ப சந்தோஷமாத்தானே இருந்தான்! இத்தனை நாளும் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு சொன்னவன், கொஞ்ச நாளைக்கு முன்னாலே சந்தோஷமா கல்யாணம் பண்ணிக்கிறேன்னு கூடச்சொன்னான். அவனுக்கு மனசிலே குறை இருந்தா அப்படியெல்லாம் சொல்வானா?" - சுந்தரத்தின் தாய் பேசிக்கொண்டே போனாள். அவள் பேச்சில் எதை எதையோ எடுத்து, ஜெயராமனின் மனதிற்குள்ளிருந்த 'கம்ப்யூட்டர்' வித்தியாசமாகப் பதிவு செய்துகொண்டே இருந்தது.

'ம்ம்.......ம்ம்ம்......" என்று முனகிக்கொண்டிருந்த சுந்தரம், திடீரென்று தெளிவாகப் பேச ஆரம்பித்தான்:

"நீ என்னை மறந்துட்டாலும், என்னாலே உன்னை மறக்க முடியல்லியே....."

ஜெயராமனின் மனம் 'பளிச்'சென்று விறுவிறுப்படைந்தது. 'அடுத்தாற்போல் என்ன சொல்லப்போகிறான். ஏதாவது பெயரைக் குறிப்பிடுகிறானா' என்று கவனித்தான்.

சுந்தரம் மீண்டும் 'ம்ம் ....." என்று இயந்தர கதியில் முனக ஆரம்பித்தான். தனக்கு கிடைக்க வேண்டிய ஆதாரம் கை நழுவிப் போய்விட்டது போல் தோன்றியது ஜெயராமனுக்கு. அதே நேரத்தில் அந்த ஆதாரத்தை எப்படியாவது தோண்டி எடுத்துவிடவேண்டும் என்ற வெறி பிறந்தது அவனிடம்.

"ஆமாம், அவருக்கு என்னவோ ஏக்கம் இருக்கு போல இருக்கு .... யாரையோ மறக்க முடியல்லேன்னு சொல்றாரே.... யாரா இருக்கும்?" என்று அப்பாவிபோல கேட்டான்.

வனஜா 'பளிச்'சென்று, "வேறு யாராக இருக்கும்! அவரால் மறக்க முடியாத ஒருவர் உண்டு என்றால், அது நான்தான்" என்றாள்.

இதை கேட்ட மறுகணம் .....

ஆமாம்! திடீரென்று ஜெயராமனுக்கு என்ன ஆயிற்று?

## 8

ஓய்வு மொழிதலுமில் லாமல் - அவன்
உறவை நினைத்திருக்கு உள்ளம்.

- பாரதியார்

பிரம்மாண்டமான கட்டடத்தில், நூற்றுக்கணக்கானபேர் வேலை செய்யும் ஓர் அலுவலகத்தில் அவளும் பணிப்பெண். நகரத்தின் எங்கோ ஒரு சிறிய சந்தில், ஒரு பழைய வீட்டில், காற்று கூடப் புகமுடியாத ஓர் அறையில் வாசம் செய்து வருகிறாள். தினம் காலை, தானே சமைத்த உணவைச் சாப்பிட்டுவிட்டு, வேலைக்குச் செல்வாள். போகும் போதும், திரும்பி வரும்போதும், பணம் படைத்தவர்களின் ஆடம்பர வாழ்க்கையைக் கண்டு மனம் வெதும்புவாள். இளம் வயது, அழகிலும் அப்படி ஒன்றும் சோடை இல்லை. மாலை வேளைகளில் சாலையோடு நடந்து போகும்போதும், கடை ஜன்னல்களில் பார்வைக்காக 'டிஸ்ப்ளே' செய்து வைக்கப்பட்டிருக்கும் அழகிய உடைகளையும், ஆபரணங்களையும், ஓர் இளம்பெண்ணின் எழிலை எடுத்துக்காட்டக்கூடிய அலங்காரப் பொருட்களையும், தெருவையே அடைத்துக்கொண்டு ஓடும் கப்பல் போன்ற கார்களையும் கண்டு, 'இவையெல்லாம் எனக்கு எட்டாக் கனவுகள்' என்று ஏங்கி, பெருமூச் செறிவாள். இரவில் தன் அறையில் வந்து மறுபடி படுக்கையில் படுத்து, தனக்குக் கிடைக்காத அந்த பாக்கியங்களை எண்ணி ஏங்கியபடியே உறங்கிவிடுவாள்.

அவள் கனவுகளில் நகைகளும், அழகிய ஆடைகளும், பணம் படைத்த வாலிபர்களும் வலம் வருவார்கள்.... கனவு களைந்து மறுபடியும் நனவுலகிற்கு வரும்போது, அவளுக்கு வருத்தமாக இருக்கும். இப்படியே கனவு கண்டு கொண்டே இருக்கக்கூடாதா என்று ஏங்குவாள். மறுபடியும் காலை உணவு, வேலைக்குப் போவது, எட்டாக் கனியான இன்ப வாழ்க்கைக்கு ஏங்குவது, மீண்டும் வந்து கனவு காண்பது .......

ஒரு நாள், அலுவலகத்திலிருந்து கிளம்பி 'விண்டோ ஷாப்பிங்' செய்துகொண்டே வந்தவள், ஒரு ஜன்னலில் வைக்கப்பட்டிருந்த விலை உயர்ந்த வைரமாலையை மனத்தில் ஆசை ஒழுகப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

உனக்கு அது அழகாத்தான் இருக்கும்; 'அது வேண்டுமா? என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தவள் அங்கே, வயது முதிர்ந்த கிழவன் ஒருவன் நிற்பதைக் கண்டாள்.

"எனக்கு அதற்கெல்லாம் ஏது வாய்ப்பு?" என்று நொந்துகொண்டளைப் பார்த்து அவன், "வேண்டுமென்றால் இதென்ன, நீ கனவு காண்பதெல்லாம் கிடைக்கும்படி செய்வேன்!" என்றான்.

ஒன்றும் புரியாமல் அந்தக் கிழவனைப் பார்த்தாள் அவள். கிழவன் தொடர்ந்தான்: "ஆனால், இனாமாக ஒன்றும் தரமுடியாதே. நீ கேட்கும் போகபோக்கியங்களெல்லாம் உனக்குக் கிடைக்கும்படி செய்கிறேன். அதற்குப் பதிலுக்கு நீ என்ன தருவாய்?"

என்னிடம் என்ன இருக்கிறது, என் கனவுகளைத் தவிர?

"ஆ! . . . அவை போதும்! உன் கனவுகளை இவற்றுக்கெல்லாம் ஈடாகத்தந்து விடுகிறாயா?"

'இதேதடா பரிதாபம்!' என்று எண்ணியவாறே தன் கனவுகளைத் தாரைவார்த்துக் கொடுத்துவிட்டாள். அந்தப்பெண்.

இரண்டொரு நாட்களுக்குள் எதிர்பாராத செல்வம் அவளை வந்தடைந்துவிட்டது. அவள் விரும்பிய கார், நகைகள், ஆடம்பரப் பொருள்கள் அனைத்தும் - அவள் கனவுகள் அனைத்தும் - குவிந்துவிட்டன.

ஆனால் . . . . .

நாள்பட நாள்பட, அவளுக்கென்னவோ, தனக்கு ஒரு பெரிய குறை இருப்பதாகத் தோன்ற ஆரம்பித்தது. புது வாழ்வின் மோகத்தில் முதலில் புலப்படாத அதை, நாளாவட்டத்தில் என்னவென்று கண்டுகொண்டாள். அவள் தூக்கத்தில் கனவுகளே இல்லை. அழகு அழகுக் கனவுகள் கண்டே பழகிப்போய்விட்ட அவளுக்கு, ஒவ்வொருமுறை தூக்கத்திலும் வறண்ட, கண்ணுக்கு எட்டியவரை வனாந்தரமான பாலைவனத்தில் சஞ்சரிப்பதாகவே தோன்றியது. தூக்கம் அவளை மெல்லமெல்ல விட்டகன்றது. துககம் அவளைப் பற்றிக்கொண்டது. அவள் புது வாழ்வு அவளுக்கு வெறுத்துவிட்டது. 'என் எளிய வாழ்வே போதும், எனக்கு வேண்டியது ஆசைக்கனவுகள்தான்' என்று எண்ணத் தொடங்கிவிட்டாள்.

அந்தக் கிழவனைக்கண்டு "இந்தா, நீ கொடுத்த சுகபோகங்களையெல்லாம் எடுத்துக் கொண்டு விடு. என் கனவுகளைத் தயவுசெய்து எனக்குத் திருப்பித் தந்து விடு .... அவையின்றி என்னால் வாழ முடியாது ....... என்று கேட்டுவிடுவது என்று, அவனை ஒவ்வொரு நாளும் சல்லடைபோட்டுச் சலித்தாள்; அவன் அகப்படவேயில்லை.

கடைசியில், மனம் நம்பிக்கையை இழக்கும் தறுவாயில் அவனை மறுபடியும் கண்டாள். அப்போது அவளைப் போன்ற இன்னோர் இளம் பெண்ணிடம் அந்தக் கிழவன் 'கனவு பேரம்' செய்துகொண்டிருந்தான்.

கிழவனின் காலில் வீழ்ந்தாள் அவள். "நான் செய்தது பெரியதவறு. .கனவுகளில்தான் மனிதன் வாழ்கிறான். அவை பறிபோன பின் என்னால் உயிர் வாழ்வது கஷ்டமாகயிருக்கிறது. தயவு செய்து, நம் உடன்படிக்கைபடியிலிருந்து எனக்கு விடுதலை கொடு. என் கனவுகளைத் திருப்பித் தா. சொத்தும், சுகபோகமும் எனக்கு வேண்டாம்; அறவே வேண்டாம் ....." என்று மன்றாடினாள்.

'நான் கனவுகளை வாங்குபவனே ஒழிய, விற்பவன் இல்லை" என்று சொல்லிப் போய்விட்டான் அந்தக் கிழவன்.

அவள் இனி வாழ்ந்தென்ன பயன்?

ஒரு வேளை அந்தக் கிழவன் சாத்தான்தானோ?

'ட்ரூமன் கபோட்' என்ற ஆங்கில ஆசிரியர் எழுதிய ''இரவுமரம்'' என்ற இந்தக் கதையை இரவு முழுவதும் வாசித்துவிட்டு, அந்தப் புத்தகத்தை அப்படியே மார்புமீது போட்டபடி உறங்கிக்கொண்டிருந்தாள் சுதா. இரவு வெகுநேரம் கழித்தே உறங்கப்போனாள் அவள். அந்தக் கதை அவளை வெகுவாகக் கவர்ந்துவிட்டது. 'வாழ்க்கையில் கனவு எவ்வளவு முக்கியம் என்பதை, எவ்வளவு அழகாகச் சொல்லிவிட்டார் ஆசிரியர்' என்று எண்ணி வியந்தாள். தான் காணும் கனவுகளைப்பற்றி - கனவில் ஸ்ரீதருடன்தான் வாழும் இன்ப வாழ்க்கையைப்பற்றி – எண்ணி எண்ணி வெகுநேரம் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தாள். அதனால்தான் காலை மணி ஏழரை ஆகியும் அவள் படுக்கையைவிட்டு எழுந்திருக்கவில்லை.

மணி ஏழரை ஆகியும், 'மன்னி, காப்பி ரெடியா? என்ற சுதாவின் குரல் கேட்காதது, வனஜாவுக்கு ஆச்சர்யமாக இருந்தது. சமையல் அறையிலிருந்து எட்டிப் பார்த்தாள்.டெலிபோன் அருகிலும் அவள் இல்லை. காப்பியை எடுத்துக் கொண்டு சுதாவின் அறைக்கே சென்றாள். கண்ணாடியின் முன்பும் அவள் இல்லை.

எங்கே அவள்?

சுதா படுக்கையில் படுத்திருந்தாள். இரண்டு கரங்களையும் தலைக்குப் பின்புறமாகச் சேர்த்துக்கொண்டு, கால் பெருவிரல்களை ஒன்றை ஒன்று சீண்டி விளையாட, உதடுகளில் புன்னகை தவழ, ஏதோ கனவுலகில் சஞ்சரிப்பவள் போல் படுத்திருந்தாள். அவள் தலைமாட்டில் இருந்த சின்னஞ்சிறு ஜப்பான் தேசத்து டிரான்ஸிஸ்டரிலிருந்து, லதாவின் தேன்குரல் நாதத்தைப் பொழிந்துகொண்டிருந்தது. .

அவளைப் பார்த்ததும், 'இப்படிக் காலை வேளையிலேயே சோம்பேறித்தனமாகப் படுத்திருக்கற அளவுக்கு இந்தப்பெண் அசடாக மாறிவிட்டாளே' என்று எரிச்சலாக இருந்தது வனஜாவுக்கு. அத்துடன், இன்னும் தான் அவளிடம் மூடி மூடிப் பேசிக்கொண்டிருப்பதும் , அவளைக் கண்டிக்காமல் இருப்பதும், அவளுக்கு செய்யும் உதவிகள் அல்ல என்று அவளுடைய உள்ளுணர்வு அறிவுறுத்தியது. எனவே சற்று கோபத்துடன் "சுதா, ஏன் இப்படிக் காலை வேளையிலே படுத்திருக்கே? ஆபீசுக்குப் போற பொண்ணா லட்சணமா இல்லாமல், தூங்கிவழியறயே, ஏன்?" என்று கேட்டாள்.

சுதா உடம்பை நெளித்துக்கொண்டாள். அப்போது அவள் இளமையின் பூரிப்பு அடங்காமல் பொங்கி வழிந்தது.

' மன்னி, தூங்கி விழிக்கிறதிலே இருக்கிற சுகம் எவ்வளவு தெரியுமா? தூக்கத்திலேதான் கனவுகள் வரும். அந்தக் கனவுகளிடம் உள்ள சுகம் எவ்வளவு தெரியுமா?" என்றவாறே எழுந்து, "காப்பியைக் கொடுங்க.." என்றாள்.

"ஒரு பெண் அளவுக்குமீறிக் கனவுகண்டால் ஆபத்தில்தான் போய்முடியும், தெரியுமா?" என்றாள் வனஜா, காப்பித் தம்ளரை சுதாவிடம் நீட்டியவாறு.

"அனுபவம் போல் இருக்கு" என்று குத்தலாகச் சொன்ன சுதா, காப்பித் தம்ளரைக் கையில் வாங்கிக்கொண்டு, " மன்னி, காப்பியிலே ஒன்றரை ஸ்பூன் சர்க்கரைதானே போட்டிருக்கீங்க?" என்று கேட்டாள்.

"அதென்ன ஒன்றரை ஸ்பூன் கணக்கு?" என்று கோபத்துடன் கேட்டாள் வனஜா, தெரிந்தும், தெரியாததுபோல்.

"அது என் கனவுக் கணக்கு" கண்களை சிமிட்டியவாறே பதில் சொன்னாள் சுதா.

"என்ன, ஒரேயடியா கனவு, கனவுங்கறே?" என்றாள் வனஜா.

"வேறே ஒண்ணும் இல்லே, மன்னி, நேற்று இரவு கனவுகளைப் பற்றி ஒரு கதை படிச்சேன். இதோ, இந்தப் புத்தகத்தை நீங்ககூட படிச்சிருக்கணுமே" என்று கூறி, அந்தப் புத்தகத்தை மன்னியிடம் நீட்டி, அவளை ஒரு மாதிரியாகப் பார்த்தாள் சுதா.

"படிச்சிருக்கேன் ....." என்று ஒரே வார்த்தையில் பதில் சொன்ன வனஜா, இந்தப் புத்தகம் இவள் கையில் எப்படிக் கிடைத்தது?" என்று எண்ண ஆரம்பித்தாள்.

"மன்னி, அந்தக் கதாநாயகி, வாழ்க்கையோடு போராடித் தன் கனவுகளை நனவாக்கியிருந்தால், அந்தக் கனவு நனவாகவே நிலைத்திருக்கும். ஆனால் அதை விட்டுவிட்டு, திடீரென்று சாத்தான் கொடுத்த சுகபோகத்திலே கனவை இழந்துவிட்டாள். ஆனால், என் கனவுகள் அப்படி இல்லை. நான் தினம் தினம் போராடுகிறேன். ஒவ்வொரு ஸ்டேஜிலேயும் முயற்சி செய்கிறேன். ஒவ்வொன்றாக வெற்றி பெறுகிறேன். என் கனவு நிலைத்திருக்கும் ......" பேசிக் கொண்டேபோனாள் சுதா.

இவ்வளவு தூரம் வெளிப்படையாகச் சுதா பேச ஆரம்பித்த பின்னரும் வனஜாவால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்க முடியவில்லை.

"சுதா, கனவுகள் காணாமல் வாழ்க்கையில் வெற்றிகளைப் பெற முடியாது என்பது எனக்கும் தெரியும். ஆனால், அந்தக் கனவுகளில் நியாயம் இருக்க வேண்டும். நம் வாழ்க்கைக்கு நன்மை செய்யக்கூடிய விஷயங்களைப் பற்றிதான் நாம் கனவு காண வேண்டும். நம் கனவுகளில் புனிதத் தன்மை இருக்கவேண்டும்" என்றாள்.

"மன்னி, அதைப்பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். நல்ல மனசிலே நல்ல கனவுகள்தான் தோன்றும். என் மனசு ரொம்பப் புனிதமானது. அந்த மனசிலே மாசு இல்லாத கனவுகள்தான் தோன்றும். ஒவ்வொருத்தர் மாதிரி கள்ளம் கபடு இருக்கிற மனசிலேதான் வெளியே ஒன்று, உள்ளே ஒன்று என்று வாழற எண்ணம் இருக்கும். அவர்கள்

கனவெல்லாம்தான் அரை குறையாகவே முடிந்திருக்கும். நீங்க அப்படி எதையோ நினைத்து பேசறீங்க போல இருக்கு...." என்று கூறி, விஷமமாகச் சிரித்தாள்.

அவள் சுட்டிக்காட்டுவதை வனஜா புரிந்து கொள்ளவில்லை.

"சுதா, உன் மனசு கெட்டதுன்னு நான் சொல்லல்லே... அது எவ்வளவுக்கெவ்வளவு நல்லதா இருக்கோ, அந்தஅளவுக்கு அசட்டுத்தனமாகவும், அப்பாவித்தனமாகவும் இருந்து விடக்கூடாதே என்பது தான் என் கவலை" என்றாள்.

"நான் ஒன்றும் நீங்க நினைக்கிற மாதிரி அசடு இல்லே" என்றாள் சுதா வீராப்புடன்.

"பெண்கள் இயல்பாக அசடாகஇல்லாவிட்டால்கூட, சில ஆண்களோட ஆசை வார்த்தைகளில் மயங்கி அசடாகிவிடுவதுண்டு."

" என்ன மன்னி, எதையோ மறைத்துப் பேசறாப் போலத் தெரிகிறதே. தெளிவாகத்தான் சொல்லுங்களேன்!....

"நான் பொதுவா யார்கிட்டேயும் எதையும் மறைச்சுப் பேசறதில்லே. உங்கிட்டேயா மறைச்சுப் பேசப் போறேன்? நீ அந்த ஸ்ரீதருடைய ஆசை வார்த்தைகளில் மயங்கி, அசடாகவும், ஏமாளியாகவும் மாறிவிடக்கூடாதே என்பதுதான் என் கவலை...." 'பளிச்'சென்று சொல்லிவிட்டாள் வனஜா.

இதைக் கேட்டதும் சுதா, சற்றே திகைத்தாள்.

"ஓகோ, இவ்வளவு வெளிப்படையாகக் கேட்ட பிறகு நான் மட்டும் ஏன் மறைக்கணும்? அவர் மேல் நான் அன்புகொண்டிருப்பது உண்மை. ஏன் என் வாழ்க்கையையே அவரிடம் தான் ஒப்படைக்கவேண்டும் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறேன் ..... ஆனால், நீங்கள் என்னவோ, அவர் ஆசை வார்த்தைகளில் நான் மயங்கிவிட்டதாகச் சொல்கிறீர்கள். ஒரு கௌரவமான பெண் பேசற பேச்சா இல்லே இது ....." என்றாள் வெறுப்புடன்.

"சுதா, என் கௌரவத்தைப் பற்றி நீ எடுத்துக்கொண்ட அக்கறைக்கு நன்றி, அந்த அளவு நீ உன் வாழ்க்கையைப் பற்றி அக்கறை எடுத்துக் கொண்டால் நன்றாக இருக்கும். நான் பேசுவது கௌரவமோ, இல்லையோ, உன்னுடன் ஸ்ரீதர் பழகுவது அவ்வளவு கௌரவமாக இல்லை ....." என்றாள்.

"எதை வைத்து அப்படிச் சொல்கிறீர்கள்?'

" அப்படிச் சொல்ல என்ன தெரிய வேண்டுமோ, அதை தெரிந்து கொண்டுதான் சொல்கிறேன்."

"அவரைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?"

"நீ தெரிந்துகொண்டிருப்பதைவிடக் கொஞ்சம் அதிகமாகவே தெரிந்து வைத்திருக்கிறேன்."

"ஓ! உங்களுக்கு நிறைய ஆண்களைப்பற்றித் தெரிந்திருக்கும் என்பது எனக்கு அடிக்கடி மறந்து போய்விடுகிறது. ஆனால், நீங்கள் ஸ்ரீதரைப்பற்றித் தெரியும் என்று சொல்வதை நம்ப, நான் முட்டாள் இல்லை. அவரைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?" - குரலில் கடுமை தொனிக்கக் கேட்டாள் சுதா.

"நீ அவரை நம்ப ஆரம்பித்து விட்டாய் என்பதைத் தெரிந்து கொண்ட உடனே, அவர் உன் நம்பிக்கைக்கு உரியவரா என்று தெரிந்து கொள்வதை ஒரு கடமையாகக் கருதி, நானே அவரைப் பற்றி விசாரித்தேன்" என்றாள் வனஜா.

இதைக் கேட்டதும் சுதாவுக்கு கடுங்கோபம் வந்துவிட்டது.

"மன்னி, இப்படிச் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை? என் அந்தரங்கத்தை ஆராய நீங்கள் யார்? என் பர்ஸனல் விஷயங்களில் தலையிட உங்களுக்கு என்ன அதிகாரம்?
ஹூ ஆர் யூ? என்று கர்ஜித்தாள்.

"நான் உன் மன்னி! தாயில்லாத உனக்குத் தாயைப் போன்றவள். நீ சிரித்தால் உன்னோடு சேர்ந்து சிரிப்பதற்கும், நீ அழுதால் உன்னோடு சேர்ந்து அழுவதற்கும் கடமைப்பட்டவள்" சாந்தமாகப் பதில் சொன்னாள் வனஜா.

"இல்லை, நான் சிரித்துவிடக்கூடாதே என்று எப்போதும் அழுது கொண்டிருக்கும் பொறாமைக்காரி நீங்கள் ..." சுதாவிடம் இருந்து வார்த்தைகள் வெடித்துச் சிதறின.

இதைக் கேட்டு வனஜா ஒரு முறை பற்கள் தெரிய சிரித்தாள். பிறகு, "அட அசடே, என்னைப் பற்றி இவ்வளவுதானா தெரிந்து வைத்திருக்கிறாய்? சதா சிரித்துக்கொண்டே இருக்க வேண்டிய என் சுதா, எப்போதும் அழுதுகொண்டே இருந்துவிடக்கூடாதே என்று தவிக்கிறவள் நான்..." என்றாள்.

"ரொம்ப கரிசனந்தான். உண்மையிலேயே என் சந்தோஷத்தில் உங்களுக்கு அக்கறை உண்டென்றால் என் விஷயத்தில் இனி தலையிட வேண்டாம்" - கண்டிப்பான குரலில் பேசினாள் சுதா.

"உன் விஷயத்தில் உனக்கே அக்கறை இருக்கிறதென்றால் நீ ஸ்ரீதருடன் பழகுவதை நிறுத்த வேண்டும்!"

"ஏன், அவரோடு பழகுவதில் எனன தப்பு?"

"பெரும்பாலான ஆண்கள் தெளிவான மனத்துடன் பழகுவதில்லை....."

"ஓகோ?

பெண்களை ஆசைவார்த்தை காட்டி, ஏமாற்றிக் கைவிட்டுவிடுவதைப் பல ஆண்கள் ஒரு கலையாகக் கொண்டிருக்கிறார்கள்......"

அப்படியா?" விஷமம் தோய்ந்த குரலில் வினவினாள் சுதா.

"ஆபீசில் ஆணும் பெண்ணும் பழக நேரிடும்போது, நட்பு ஏற்படுவது சகஜம். ஆனால், அதில் எச்சரிக்கையாக இல்லையென்றால், ஏமாந்துவிடுவோம்."

"ஐஸி ......"

"பிறகு வாழ்க்கையே பாழாகிவிடும்."

"ஊம்ஹும்...... ரொம்பவும் அனுபவித்துச் சொல்கிறீர்களே.... ஆனால், மன்னி, உங்களுக்கு ஏற்பட்டிருக்கிற மாதிரி அப்படியொரு கசப்பான அன்பவம் எனக்கும் ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை.

இதைக் கேட்டு வனஜா திகைத்துப் போனாள்.

"சுதா, எனன சொல்கிறாய் நீ?" என்றாள் கவலையுடன்.

"உங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட தோல்வி, என் வாழ்க்கையிலும் ஏற்படும் என்று நினைக்கிறீர்கள். ஒரு வேளை அப்படியில்லாவிட்டால், உங்களுக்கு ஏற்பட்ட மாதிரி எனக்கும் காதலிலே தோல்வி ஏற்படட்டுமே என்று, ஸ்ரீதர் மீது பழி சொல்லிப் பிரித்து வைக்கப் பார்க்கிறீர்களோ, என்னவோ?" என்றாள் குரலில், குரோதம் கொப்புளிக்க.

நிதானமும் அடக்கமும் பொருந்திய வனஜாவே, ஒருகணம் குமுறி விட்டாள்.

"சுதா, உன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமே என்பதற்காகப் பிறர்மீது சேற்றை வாரி இறைக்காதே.... அபாண்டமாகப் பழி போடாதே..."

"நான் ஒன்றும் அபாண்டமாகச் சொல்லவில்லை; ஆதாரத்தோடுதான் சொல்கிறேன். இதோ..." என்று கூறி, தன் கையிலிருந்த 'இரவு மரம்' என்ற அந்த கதைப் புத்தகத்தை வனஜாவிடம் நீட்டினாள் சுதா.

அதை வாங்கிக்கொண்ட வனஜா, "இது எப்படி உனக்குக் கிடைத்தது?" என்று கேட்டாள்.

"அதைப் பற்றி என்ன? உங்கள் பெட்டிமீது இருந்தது. பேச்சை மாற்றாதீர்கள். இப்போது என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"இது சுந்தரம் எனக்கு எப்போதோ ஒருநாள் பரிசாகக் கொடுத்த புத்தகம்" என்றாள் வனஜா நிதானமாக.

'சாதாரண பரிசாகத்தான் கொடுத்தாரா? இல்லே, தன் இதயத்தையே பதிய வைத்துக் கொடுத்தாரா?"

"சுதா, என்ன உளர்றே!"

"நான் உளறல்லே .... உங்களுக்கு உதறல் ஏற்பட்டிருக்கிறது. புத்தகத்தில் முதல் பக்கத்தைப் பிரித்துப் படித்துப் பாருங்கள்...... ஐயாம் ஸாரி..... இப்போது நான்தான் அசடு. உங்களைபோய் படிக்கச் சொல்கிறேனே..... அந்த வார்த்தைகள்தான் உங்கள் நெஞ்சில் பதிந்திருக்குமே...... அதைக் கொஞ்சம் நினவுபடுத்திப் பாருங்கள்" என்றாள்.

அந்தப் புத்தகத்தில் முதல் பக்கத்தில் சுந்தரந்தான் எழுதியிருந்தான்.: வனஜாவுக்கு என் அன்பளிப்பு, என் இதயத்தின் கனவுகள் நனவாகுமா?'

வனஜாவின் பார்வை அந்தப் புத்தகத்தின் முதல் பக்கத்தில் ஓடி முடியுமுன்னரே, கேலியான குரலில் சுதா, 'என் இதயத்தின் கனவுகள் நனவாகுமா? என்று அழகு சுந்தரம் கேட்க, 'அப்படியே ஆகாதா? என்று நீங்கள் தவிக்க, அந்த

இனிய திட்டமெல்லாம் இப்படிக் கனவாகப் போய் விட்டதால், மற்ற பெண்களுக்கு தங்கள் காதலில் வெற்றிபெற்று வாழ்ந்துவிடக் கூடாது என்கிற நல்லெண்ணத்தில்தான் இந்தக் காவல் வேஷமும், துப்புத் துலக்கும் வேஷமும் போடுகிறீர்களோ.....? என்று நீட்டி முழக்கிக்கொன்டே போன சுதாவை, "ஷட் - அப்" என்ற கம்பீரக் குரல் ஒன்று அடக்கியது.

இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

வாயிற்புறத்தில் ஜெயராமன் நின்று கொண்டிருந்தான்.

அவனைக் கண்டதும், இருவரும் பேச வாயெழாமல் நின்றனர். மறுகணமே இருவரும் ஒரே சமயத்தில் ஏதோ சொல்ல ஆரம்பித்தனர்.

அதற்குள் ஜெயராமன் ஆவேசம் தெறிக்கும் பார்வையுடன் அவர்கள் அருகே சென்று நின்றான். பிறகு, சுதாவின் கையிலிருந்த புத்தகத்தைச் 'சட்'டென்று பறித்து, அவளை நோக்கி கோபத்துடன், "மரியாதை கெட்ட கழுதை.... யாரிடம் என்ன பேசுகிறோம் என்று நினைவிருக்கிறதா?..... அவள் உன் மன்னி ..... தெரியுமா?" என்று கூறிவிட்டுத் திரும்பினான்.

பின்னர் வனஜாவை எரிப்பதுபோல் பார்த்துவிட்டு, அந்தப் புத்தகத்துடன் நடந்தான். அறையைவிட்டு வெளியேறுமுன், மீண்டும் ஒருமுறை வனஜாமீது அவன் பார்வை பட்டது. 'என்னோடு வா' என்று அந்தப் பார்வை அவளிடம் கூறியது.

வனஜாவுக்கு அவன் பார்வையில் ஒரே குழப்பம். ஜெயராமன் அப்படிப் பார்ப்பது இரண்டாவது தடவை.... முதல்நாள், சுந்தரம் வீட்டில் பேசிக்கொண்டிருக்கும்போதும் இப்படித்தான் ஒரு பார்வை பார்த்துவிட்டு, அவளைத் திகைப்படைய வைத்துவிட்டு, சொல்லிக்கொள்ளாமல் திடீரென்று எழுந்து வந்துவிட்டான்.

‘ சுந்தரத்தால் மறக்க முடியாதவர் ஒருவர் உண்டென்றால் அது நான்தான் என்று நான் சொன்ன விஷயம் ஏன் அவரை அப்படிக் குழப்பிற்று? நாம் தெளிவாக திறந்த மனதோடு பேசியதை அவர் திறந்த மனதோடு எடுத்துக் கொள்ளவில்லையா?'

ஒன்றும்புரியாமல் கணவனைப் பின்தொடர்ந்து, அவன் அறைக்குள்சென்றாள் வனஜா.

அவள் உள்ளே நுழைந்ததும், அறைக் கதவை உட்புறம் தாளிட்டான் ஜெயராமன்.

## 9

உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில்
உள்ளம் நிறைவாமோ? - நன்னெஞ்சே

– பாரதியார்

அந்த அறையில் அமைதி நிலவியது.. பொதுவாக அமைதியை விரும்பும் வனஜாவுக்கு, அப்போது அந்த அமைதி கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஏதோ ஒரு பயங்கரத்திற்கு முன்னோடியாகத்தான் அவள் அந்த அமைதியைக் கருதினாள். உள்ளமும் உடலும் லேசாக நடுங்க, தலைப்பை இழுத்துப் போர்த்தியபடி, கணவனையே வெறிக்கப் பார்த்துகொண்டு நின்றாள் அவள்.

வெறுப்பும், குரோதமும், வேதனையும் மிகுந்த பார்வையால், மனைவியை அளந்து கொண்டிருந்தான் ஜெயராமன்.

அவன் கையில், 'கனவு'களை பற்றிய கதைப் புத்தகம் காணப்பட்டது. வெகுநேர அமைதிக்குப் பிறகு, மீண்டும் ஒருமுறை அந்தப் புத்தகத்தைப் பிரித்தான் அவன்.

முதல் பக்கத்திலிருந்த அந்த வாசகம் ........

'வனஜாவுக்கு என் அன்பளிப்பு. என் இதயக்கனவுகள் நனவாகுமா?'

அந்த வார்த்தைகள் அவனிடம் ஆயிரமாயிரம் விஷயங்களைப் பேசின. ஏதேதோ காட்சிகளை அவன் மனக்கண் முன் காட்டின. அவனுடைய உதடு துடித்தது, உடல் வியர்த்தது.

அவனுடைய அந்தப் பதட்டத்தைப் பர்த்துக்கொண்டிருந்த வனஜா, இனியும் மௌனமாயிருப்பது சரியில்லை என்ற முடிவுடன், மௌனத்தின் போக்கை மாற்றும் எண்ணத்துடன், "க்கும் ...." என்று கனைத்தாள்.

என்ன இருந்தாலும் நீங்கள் சுதாவிடம் அவ்வளவு கோபித்துக்கொண்டிருக்க வேண்டாம் ..... அவள் விவரம் தெரியாத பெண்தானே ....." என்று பேச்சை ஆரம்பித்தாள் வனஜா.

"ஹம்ம்ம்" என்ற ஜெயராமன், "உன்னைப்பொருத்தவரை இந்த வீட்டில் எல்லோருமே விவரம் தெரியாதவர்கள்தான் ...... "என்றான்.

நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" - உண்மையிலேயே புரியாமல் கேட்டாள் வனஜா.

"சொல்வதற்கு என்ன இருக்கிறது? இனிமல் என்ன செய்வது என்றுதான் யோசித்துக்கொண்டிருக்கிறேன்" என்றான்.

"உங்களுக்கு என்ன பிரச்சனை என்று சொல்லுங்கள். நானும் உங்கள் சிந்தனையில் பங்குகொள்கிறேன்" என்று அன்புடன் கூறி, ஆசையுடன் அவனை நெருங்கினாள் வனஜா அப்பாவியாக.

அவளுடைய சலனமற்ற, அழுத்தமான பேச்சைக் கேட்கவே சகிக்கவில்லை ஜெயராமனுக்கு.

" எனக்காக என் சிந்தனையில் நீ பங்குகொண்டது போதும். முதலில் உனக்காக, உன் எதிர்காலத்திர்க்காகச் சிந்தித்துக்கொள்...." என்றான் ஆத்திரத்துடன்.

இப்போதும் வனஜா பதட்டப்படவில்லை.

"நிகழ்காலத்தில் தெளிவாக இருப்பவர்கள், எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். என் நிகழ்காலம் மிகவும் தெளிவாகவும், சீராகவும் அமைந்திருக்கிறது. கண் நிறைந்த கணவர், மனம் நிறைந்த வாழ்க்கை......"

"நிகழ்காலம் இருக்கட்டும். கடந்த காலம் எப்படி?" குறுக்கிட்டான் ஜெயராமன்.

என்கடந்த காலத்திலும் மனத்தெளிவோடும், சந்தோஷத்தோடுந்தான் நான் இருந்தேன்....." என்றாள்.

"ரொம்ப சந்தோஷமா?" அவளை நெருங்கிக் கேட்டான் குரோதமாக.

"அப்படியென்றால் ...... " வனஜாவின் புருவம் சுருங்கியது.

"இப்போது இருப்பதைவிட ரொம்ப சந்தோஷமாக இருந்தாயா என்று கேட்கிறேன்......" வார்த்தைகளில் அழுத்தம் காணப்பட்டது.

இதைக் கேட்டு வனஜா லேசாகச் சிரித்தாள். பிறகு, "இரண்டையும் எப்படி ஒப்பிடமுடியும்? இது ஒரு மாதிரி வாழ்க்கை, அது ஒரு மாதிரி வாழ்க்கை. லட்டும் இனிப்புதான், ஜாங்கிரியும் இனிப்புதான். அனால், இரண்டையும் ஒப்பிடமுடியாதல்லவா? அதைப்போல ....."

"ஆமாம், ஒப்பிடமுடியாதுதான். ஏனென்றால், இது கல்யாண வாழ்க்கை, அது காதல் வாழ்க்கை, இல்லையா?" நெருப்புத் துண்டங்களை வீசி எறிவதுபோல் வார்த்தைகளை வீசி எறிந்தான் ஜெயராமன்.

ஒருகணம் கல்லாக உறைந்து நின்றாள் வனஜா. பிறகு கணவனின் முகத்தை ஊடுருவிப் பார்த்தாள். தன்னுடைய தீட்சண் யமான பார்வையால் ஜெயராமனின் முகத்தில் ஓடிக்கொண்டிருக்கும் விகாரமான, வினோதமான, விரோதமான உணர்ச்சிகளை அளவெடுத்தாள். பின்னர், "நீங்களும் சுதா மாதரிதான் பேசுகிறீர்கள்?" என்றாள், வேதனைக் கசப்புடன்.

அந்தக் கசப்பு, ஜெயராமனின் முகத்திலும் தெரிந்தது.

" சுதாவையும் என்னையும் ஒப்பிடாதே! சுதாவுக்கு அப்படிப் பேசக்கூடிய உரிமையும் அருகதையும் இல்லை. ஆனால், எனக்கு இப்போது, அதாவது உன்னுடன் பேச ஆரம்பித்த இந்தசமயத்தில், அப்படிப் பேச உரிமை இருக்கிறது. என்பேச்சை முடிக்கும்போது அந்த உரிமை இருக்குமா என்பதை, உன் பதிலிலிருந்துதான் முடிவு செய்யவேண்டும்...... என்றான்.

"என்ன பதில் வேண்டும் உங்களுக்கு?" தெளிவாகக் கேட்டாள் வனஜா.

ஒருகணம் நிதானித்துவிட்டு, பிறகு உறுதியான குரலில் கேட்டான் ஜெயராமன்:

"உனக்கும் சுந்தரத்திற்கும் என்ன உறவு?"

இதைக் கேட்டு வனஜாவின் முகம் சுருங்கியது. மனம் ஏதேதோ எண்ணியது. இருப்பினும், எல்லாவற்றையும் அடக்கிக்கொண்டு, நிதானமாகப் பேசினாள். எக்காரணம் கொண்டும் நிதானத்தைத் தவறவிடக் கூடாது, பதட்டப்பட்டுவிடக்கூடாது என்று உறுதிபூண்டாள் :

"எத்தனையோ தடவை உங்களிடம் சொல்லிருக்கிறேன், இப்போதும் அதையேதான் சொல்கிறேன். நானும் அவரும் நெருங்கிய நண்பர்கள்......"

" எவ்வளவு தூரம் நெருங்கிய நண்பர்கள்?"

ஒருவரையொருவர் புரிந்துகொண்டிருக்கும் அளவு ...."

" நீ அவரைப் பற்றி என்ன புரிந்து கொண்டிருக்கிறாய்?"

" அவர் ஒரு பண்புள்ள மனிதர், என்னைப் பொருத்தவரை ஒரு நல்ல நண்பர் ....."

" அவர் உன்னை எப்படிப் புரிந்துகொண்டிருக்கிறார்? ...."

"அதை எப்படி நான் சொல்வது? அவர் தான் சொல்ல வேண்டும் ...."

" அவர் உன்னைப் பற்றி எப்படி நினைக்கிறார் என்று நீ புரிந்து கொள்ளவில்லை என்றால், நீ அவரை புரிந்து கொண்டதாகச் சொல்வதற்கு என்ன அர்த்தம்?"

" ஒரு மனிதருடைய சுபாவத்தையும், பழகும் தன்மையையும் புரிந்து கொள்ளலாமே தவிர, அவருடைய மனதில் ஓடும் எண்ணங்களையெல்லாம் தெரிந்துகொள்ள முடியுமா என்ன?

"முடியும் ...... நெருங்கிப் பழகும் ஒருவருக்கு, எதிராளியினுடைய மனத்திலுள்ள எண்ணங்களை முழுமையாகத் தெரிந்துகொள்ள முடியாவிட்டாலும் அவற்றின் போக்கை ஓரளவாவது தெரிந்துகொள்ளாமல் இருப்பதாகச் சொன்னால் ....." வார்த்தைகளை முடிக்காமல் நிறுத்தினான் ஜெயராமன்.

" சொன்னால் ...." என்று கேட்டு, 'சொல்ல வந்ததைச் சொல்லுங்களேன்' என்பதுபோல் கணவனைப் பார்த்தாள் வனஜா.

"அப்படிச் சொன்னால் நீ எதையோ மறைக்கிறாய் என்றுதான் அர்த்தம்" என்றான் ஜெயராமன்.

" எனக்கு எதையும் யாரிடமும் மறைத்துப் பழக்கமில்லை ....." - பளிச்சென்று பதில் சொன்னாள் வனஜா.

மனைவியையே முறைத்துப் பார்த்தான் ஜெயராமன். பிறகு, மெல்ல நடந்து அவள் முகத்தருகில் சென்று, "உங்கள் தொடர்பு எப்படிப்பட்டது என்று நான் சொல்கிறேன் .... மறைக்காமல் ஒப்புக்கொள்கிறாயா?" என்று கேட்டான் கட்டைக்குரலில்.

கணவன் பார்வையும், குரலும் வனஜாவைக் கலக்கின, இருப்பினும் நிதானம் தவறாமல், சத்தியத்தின் நிழலில்தான் நிற்கிறோம் என்ற தைரியத்தில், "உண்மையானவற்றைக் கண்டிப்பாக ஒப்புக்கொள்வேன் நான்......" என்றாள்.

" நீ சுந்தரத்துடன் சினிமாவுக்குப் போவதுண்டா?" - குற்றவாளிக் கூண்டில் இருப்பவர்களை விசாரிப்பது போல் கேட்டான் ஜெயராமன்.

" உண்டு ...." என்றாள் வனஜா.

"ஹோட்டலுக்கு?...."

"போயிருக்கிறேன் ...."

"எந்த உறவில் ........"

"நண்பர் என்ற உறவில் ..."

" இந்த நாட்டில், வயது வந்த பெண்கள், சகோதரன் முறைஉள்ள இளைஞர்களோடு கூடவெளியே போவதில்லை, அது தெரியுமா உனக்கு?"

"அது, அந்த ஆண் - பெண் அந்தரங்க சுத்தத்தையும், மன உறுதியையும் பொறுத்தது...."

"ஓஹோ! அப்படியா? சுத்தமான மனமா உங்களுடையது!.... அப்படியானால், ஒரு நாள் நீங்கள் இருவரும் சினிமாவுக்குப் போயிருந்தபோது ஹோட்டலுக்குப் போனீர்களே, அப்போது உங்கள் ஆபீஸ் சாரியைக் கண்டு சுந்தரம் ஒதுங்கினாராமே, அது ஏன்?" மடக்கிவிட்டது போல் கேள்வி கேட்டான் ஜெயராமன்.

'இது என்ன அசட்டுக் கேள்வி' என்பதுபோல், " அவர் ஒதுங்கியதற்கு நான் எப்படி விளக்கம் சொல்லமுடியும்?...." என்றாள் வனஜா.

"அவரைப் பற்றி ரொம்பப் புரிந்தவளாயிற்றே நீ! அதனால் தான் உன்னால் சொல்லமுடியவில்லை, நான் சொல்கிறேன், உங்கள் உறவில் கள்ளம் இருந்தது ...."

“அப்படியென்றால்?......”

சின்னப் பாப்பா! புரியாதது மாதிரி கேட்கிறாயா? வெளிப்படையாகச் சொல்கிறேன்.... . நீயும் சுந்தரமும் ஒருவரை ஒருவர் காதலித்தீர்கள்....."

“நோ ..... ஸர்ட்டன்லி நாட் .... இல்லவே இல்லை, எங்களுடைய தெளிவான நட்புக்கு அநாவசியமாக ஒரு புது விளக்கம் கொடுக்காதீர்கள். காதல் என்ற அன்புக்கு ஒரு சுயநலநோக்கு இருக்கும். எங்கள் நட்பு அதைவிட உயர்ந்தது ...." குழப்பமில்லாமல் தெளிவாகப் பேசினாள் வனஜா.

"ஓகோ! உயர்ந்த அன்பு, உயர்ந்த மனிதர்களிடம்தானா ஏற்படும்?

“உயர்ந்த மனிதர்களிடந்தான் உன்னதமான அன்பு செலுத்தப்படும் என்று கட்டாயமில்லை. ஆனால், என்னைப்பொருத்த அளவில் சுந்தரம் ஓர் உயர்ந்த மனிதர்தான்....."

ஒருகணம் பேச்சற்றுக் குமுறலுடன் நின்றான் ஜெயராமன். வனஜாவின் அழுத்தமான பதில், அவன் நெஞ்சக் கனலை, வினாடிக்கு வினாடி விசிறிக்கொன்டிருந்ததது. சுந்தரத்தை உயர்ந்த மனிதன் என்று தன்னிடமே வனஜா சொல்வதை, அவனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவனுக்கு அது சகித்துக்கொள்ள முடியாத பேச்சாக இருந்தது.

"அப்படியானால் நீ என்னிடம் உண்மையை சொல்லவேண்டும். உன்னாலேயே உயர்ந்த மனிதன் என்று ஒப்புக்கொள்ளப்பட்ட சுந்தரத்தைக் கல்யாணம் செய்துகொள்ளவேண்டும் என்று நீ விரும்பியது உண்டா?" - மடக்கிவிட்டதுபோல் மனைவியைப் பார்த்தான் ஜெயராமன்.

“நான் அவருடன் அப்படி ஒரு நோக்கத்தில் பழகவில்லை. அதனால் அப்படியொரு விருப்பமோ, எண்ணமோ என் மனத்தில் ஏற்படவேயில்லை...." சலனமின்றிப் பதில்சொன்னாள் வனஜா.

“ஒரு வேளை, நீ அவரைக் கல்யாணம் செய்துகொண்டிருந்தால். முன்பின் தெரியாத என்னைக் கல்யாணம் செய்துகொண்டிருப்பதைவிட, அதிக மகிழ்ச்சியோடு இருந்திருப்பாய் அல்லவா?

வனஜா இதைக் கேட்டுத் திடுக்கிட்டாள். பிறகு, கணவன் அருகில் சென்று, "என்ன, இப்படியொரு அர்த்தமற்ற கேள்வியைக் கேட்கிறீர்கள்? நமக்குக் கல்யாணமாகிவிட்டது. மிக மகிழ்ச்சியாக நாம் வாழ்கை நடத்துகிறோம். அப்படியிருக்க, இல்லாத ஒரு நிலையை ஏன் கற்பனை செய்கிறீர்கள்?" என்றாள்.

நெருங்கி நிற்கும் அவளிடமிருந்து விலகிப்போய், "இது அர்த்தமற்ற கேள்வி அல்ல. என்னைப் பொருத்தவரை ரொம்பவும் அவசியமான கேள்வி. கணவன் என்ற ஸ்தானத்தில் சுந்தரம் வாய்த்திருந்தால், நீ அதிகச் சந்தோஷப் பட்டிருப்பாயா, இல்லையா? எனக்கு பதில் வேண்டும். உண்மையான பதில் வேண்டும். சத்தியமான பதில் வேண்டும்.

"ஐ வான்ட் ஏன் ஆன்சர்' குரலைக் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்திக்கொண்டே போய் கர்ஜித்தான் ஜெயராமன்.

வனஜா சிறிது நிதானித்து, பிறகு தெளிவான குரலில் "ஏன் சுந்தரம் மட்டும் கல்யாணம் செய்துகொள்ளக்கூடிய ஒரு பொறுப்பான மனிதர் இல்லையா என்ன? அவரைக் கல்யாணம் செய்துகொண்டால் எந்தப் பெண்ணும் மகிழ்ச்சியாகவே இருப்பாள் ....." என்றாள்.

“எந்தப் பெண்ணும் இருக்கட்டும். நீ . . .? உன்னைப் பற்றிக் கேட்கிறேன்..." ஆத்திர மேலீட்டால் கத்தினான் ஜெயராமன்.

“நானும் ஒரு பெண்தானே . . . ஒருவேளை அவருக்கும் எனக்கும் திருமணம் ஆகியிருந்தால், நானும் சந்தோஷமாக இருந்திருப்பேன்...."

இதைக் கேட்டு கட்டடமே இடிந்து தன் தலைமீது விழுந்துவிட்டது போல் திடுக்கிட்டான் ஜெயராமன்.

தன் எதிரே.........

தன்னோடு இணைந்து வாழ முனைந்திருக்கும் ஒரு பெண் நிற்பதாகத தோன்றவில்லை. பெண்மையின் இழைவு, இங்கிதம் எதுவும் இல்லாத, திமிர் பிடித்த அகங்காரக்காரி ஒருத்தி தன்னோடு வாதாடிக்கொண்டிருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. அவள் பதிலை எண்ண எண்ண ரத்தம் கொதித்தது அவனுக்கு.

'என்ன திமிர் இவளுக்கு?' என்று பொருமினான். பிறகு, ஆவேசமாக ஒரே வார்த்தையில் தெளிவாகக் கேட்டான்:

"வனஜா, நீ எப்படிப் பேசினாலும் உனக்கும் சுந்தரத்திற்கும் உள்ள உறவை இயல்பானதாக என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. அவனோடு சினிமா தியேட்டர், ஹோட்டல் என்றெல்லாம் சுற்றியிருக்கிறாய் . . . . ஆபிசில் டிபன் பரிமாறிக்கொண்டு, உயிரைவிட்டுப் பழகி இருக்கிறாய்.. . . கேட்டால், 'இது வெறும் நட்பு' என்கிறாய். இது நட்பு என்றால் – நீ நினைப்பது போல் அவனும் இதை வெறும் நட்பாகக் கொண்டிருந்தால், ஏன் உன் நண்பன் நம் கல்யாணத்திற்கு வரவில்லை? நம் கல்யாணம் ஆன உடனேயே அவன் ஏன் மன வியாதியில் கிடக்கிறான்? ஏன் உன்னை நினைத்துப் புலம்புகிறான்? இதோ, இந்தப் புத்தகத்தில், கனவுகள் நனவாக வேண்டும்' என்று எழுதியிருக்கிறானே, என்ன கனவு? நீ புத்திசாலித்தனமாகப் பேசலாம், அதற்காக நான் முட்டாள் என்று நினைக்கவேண்டாம். இதுநாள் வரை நீ அசடா, அழுத்தக்காரியா என்று புரியாமல் குழம்பி வந்தேன். இப்போது எனக்குத் தெளிவாகப் புரிந்துவிட்டது. நீ அசடு அல்ல; உன் குற்றங்களையெல்லாம் நியாயப்படுத்திப் பேசத்தெரிந்த அழுத்தக்காரி. எனக்கு வேண்டியது, என் மனத்துக்கு இதமாக, என்னைப் போற்றி வாழக்கூடிய ஒரு மனவி; உன்னைப்போல இங்கிதம் தெரியாமல் சித்திரவதை செய்பவள் இல்லை. உன்னைப் போன்ற புத்திசாலிகள், சாமர்த்தியசாலிக ளெல்லாம் எப்படியும், எங்கேயும் சந்தோஷமாக வாழ்வீர்கள். உன்னைப் போல் ஒரு மனைவியை வைத்துக்கொண்டு என்னால் நிம்மதியாக வாழமுடியாது. ஐ கான்ட் லிவ் வித் யூ . . . . இதுவே என் முடிவு. . . ." என்று கூறிவிட்டு, அறைக் கதவைத் திறந்துகொண்டு, வெகு வெகுவேகமாக வீட்டை விட்டே வெளியே கிளம்பினான்.

எதுவுமே புரியாமல், பிரமை பிடித்தவள் போல் நின்றால் வனஜா. பிறகு, அவசர அவசரமாக பூஜை அறையை நோக்கி ஓடினாள்.. . . ."

அங்கே. . . .

தனது சிறிய டேப் ரிக்கார்டரில் இசைமேதை எம்.எஸ்.ஸின் வேங்கடேச சுப்ரபாதத்தைக் கேட்டுக்கொண்டு, கண்மூடி தியானத்தில் அமர்ந்திருந்தாள் செல்லம்மாள்.

அவளைக் கண்டதும், அதுவரை கட்டுப்படுத்தி வைத்திருந்த துக்கமெல்லாம் உடைத்துக்கொண்டது வனஜாவுக்கு.

"அக்கா" என்று கதறியவாறு அவளுடைய காலில் வீழ்ந்தாள் வனஜா.

# 10

உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில்
உள்ளம் நிறைவாமோ? - நன்னெஞ்சே .

- பாரதியார்

**க**ண்ணாடி முன் நின்று அவசர அவசரமாகத் தலையைப் பின்னிக்கொண்டிருந்தாள் வனஜா. கண்ணாடிக்குப் பக்கத்தில் இருந்த ரேடியோவிலிருந்து, கந்தரவகான மேதை பாலமுரளி கிருஷ்ணாவின் 'தேவாதி தேவா' கீர்த்தனம் ஒலிபரப்பிக் கொண்டிருந்தது. அது வனஜாவுக்கு மிகவும் பிடித்தப் பாட்டு. இதே 'சுநாத வினோதினி' ராகத்தில் அவளுக்கு இன்னும் இரண்டொரு பாட்டுத் தெரியும். அந்த ராகம் அவளைக் கவர்ந்த ஒன்று. எனவே, அந்தப் பாட்டை மிகவும் ரசித்தவாறு தலையைப் பின்னிக் கொண்டிருந்தாள்.

கூடத்தில் இருந்த மகளை, கம்பிக் கதவின் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்த குப்புசாமிக்குக் கோபம் கோபமாக வந்தது. 'எப்படித்தான் இந்த மனநிலையிலும் இவளால் பாட்டை ரசிக்க முடிகிறதோ? என்று ஆச்ச்ரியப் பட்டார்.

ஆமாம்!

சாதாரணமாக யாராலும் அப்படி இருக்கமுடியாது தான்.

கணவன் வீட்டை விட்டுப் பிறந்த வீட்டுக்குத் திரும்பிவிட்ட ஒரு பெண்ணால், அதுவும் கொடூரமாக ஒதுக்கி வைக்கப்பட்டுவிட்ட ஒரு  பெண்ணால் எப்படி  நிம்மதியாக இருக்கமுடியும்? எப்படி சங்கீதத்தை ரசிக்க முடியும்? வனஜாவைப் பார்க்கப் பார்க்கக் குப்புசாமிக்கு ஆச்சரியமாகவும் இருந்தது, ஆத்திரமாகவும் இருந்தது.

இப்படி ஒரு பெண் இருப்பாளா?

பிரளயமே ஏற்பட்டாலும் வனஜாவைப் பாதிக்காதா?

விடியற்காலையில் எழுந்திருந்து, குளித்து, அலங்காரம் செய்துகொண்டு, இதோ ஆபீசுக்கும் புறப்படத் தயாராகிவிட்டாள். ஒரு மாதத்திற்கு முன்னால் அந்த வீட்டிலிருந்து அவள் ஆபீசுக்குப் புறப்பட்ட போதிருந்த அதே உற்சாகம், அதே சுறுசுறுப்பு! ஒரு மாதத்திற்கு முன்னால் அவள் அந்த வீட்டில் இருந்ததற்கும், இப்போது இருப்பதற்கும் வித்தியாசமே இல்லையா? அவள் கழுத்தில் அர்த்த புஷ்டியுடன் தொங்கிக்கொண்டிருக்கும் மாங்கல்யம் அவள் வாழ்வில் ஏற்பட்டுள்ள மாற்றத்திற்குச் சான்று இல்லையா? அந்த மாங்கல்யத்தை அணிந்துகொண்டு, பிறந்த வீட்டிலிருந்து ஆபீசுக்குப் போய்க் கொண்டிருக்கும் நிலைக்கு உள்ள வேதனைமிக்க அர்த்தத்தை அவள் புரிந்துகொள்ளவில்லையா? ஒருவேளை புரிந்துகொண்டும் அதைப் புதைத்துகொண்டு விட்டாளா?"

தலையைப் பின்னி முடித்ததும், வேகமாக ஒப்பனை செய்துகொண்டாள் வனஜா. பிறகு, கடிகாரத்தை ஒருமுறை பார்த்துவிட்டு, பரக்கப் பரக்கச் சமையல் அறைக்குள் நுழைந்து, " அம்மா, உனக்கு எத்தனை தடவை சொன்னாலும் மறந்து போயிடறியே! மணி என்ன ஆறது தெரியுமா? எட்டே முக்காலுக்குள்ளாவது நீ டிபன் கட்டிக் கொடுத்தால் தானே, சௌகரியமாகப் பஸ்ஸைப் பிடித்துக்கொண்டு போகமுடியும்! இல்லாவிட்டால் கூட்டத்தில் அவஸ்தைப்பட வேண்டியிருக்கிறது. . . . " என்றாள் உரத்த குரலில்.

'உன் அவஸ்தையைவிட என் அவஸ்தைதான் பெரிதாகப் போய்விட்டது' என்று எண்ணிக்கொண்ட அந்தத் தாய், " இந்த டிபன் கட்டற உத்தியோகத்தை மறக்காமல் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கணும் என்று நான் எதிர்பார்த்தேனா என்ன? என்று வேதனை பொங்கக் கூறினாள்.

அது சரி!

அந்த நிலையை யார்தான் எதிர்பார்த்தார்கள் !

இரண்டு நாட்களுக்கு முன், திடுதிப்பென்று பெட்டியும் படுக்கையுமாக வந்து இறங்கினாள் வனஜா.

மகளைக் கண்ட மகிழ்ச்சியைவிட அவள் மூட்டை முடிச்சுடன் வந்து நின்ற கோலந்தான் அந்தப் பெற்ற வயிற்றைக் கலக்கியது. ஆனால், மகளின் முகத்தோற்றதிலிருந்து எந்த அசம்பாவிதத்தையும் தந்தை குப்புசமியால் கற்பனை செய்யமுடியவில்லை. என்றைக்குமே வனஜாவின் முகத்திலிருந்து அவள் மனதிலுள்ளதைப் புரிந்துகொள்ள முடியாது.

"என்னம்மா இது, திடீர்னு வந்திருக்கே?" என்று, திகிலுடன் விசாரித்தார் குப்புசாமி.

" அங்கேயிருந்து திடீர்னு புறப்பட்டேன். அதனால்தான் இங்கே திடீர்னு வந்திருக்கேன்" என்று சிரித்தவண்ணம் பதில் சொன்னாள் வனஜா. அது வேதனைச் சிரிப்பாக இல்லை; வேடிக்கை சிரிப்பாகவும் இல்லை.

"அவர் உன்னோட வரவில்லையா?"

"வரவில்லை."

"அவர் சௌக்கியமா?"

"ஊம் . . . .  சௌக்கியந்தான்."

மகளின் பதிலிலிருந்து தந்தைக்கு எந்தப் பிடியும் கிடைக்கவில்லை. ஆனால், மகளிடம் ஏதோ பிடி நழுவியிருக்கிறது என்பதை மட்டும் அவரால் புரிந்துகொள்ள முடிந்தது..  ஐம்பத்தைந்து ஆண்டுகளாக

இந்த உலகத்தில் வாழ்ந்த அனுபவம் இருக்கிறதே! அப்போதைக்கு மகளை எதுவும் கேட்டுக் கொள்ளவில்லை. எப்படிக் கேட்பது? வீட்டுக்கு வந்த மகளை "எதற்காக இங்கு வந்திருக்கிறாய்?" என்றா கேட்க முடியும்!

வனஜா, கொஞ்சங்கொஞ்சமாக, அந்த வீட்டில்தான் நிரந்தரமாக தங்க உத்தேசிப்பதற்கான அறிகுறிகளைப் புலப்படுத்திய போதுதான், வீட்டாருக்கு விஷயம் புரிந்தது.

" அப்பா, என் லைப்ரரி டிக்கெட் எங்கே?' - என்னுடைய வாடிக்கையான சலவைக்காரியை வீட்டுக்கு வரச்சொல்லவேண்டுமே!" என்றெல்லாம் கேட்க ஆரம்பித்தபோதுதான், அந்த விஷயத்தையும் வனஜா தெரிவித்தாள்.

" நான் கொஞ்சநாள் நம் வீட்டில்தான் தங்க வேண்டியிருக்கிறது.. . " என்றாள் தாயிடம் நிதானமாக.

" கொஞ்சநாள் என்றாள்?" - தாய் பதட்டத்துடன் கேட்டாள்.

"சில வாரங்களோ, சில மாதங்களோ, சில ....."

"ஏன்?" வயிற்றை கலக்கியது வனஜாவின் தாய்க்கு.

" அவருக்கு என்னோடு என்னோடு வாழ முடியவில்லையாம்.... அதனால்தான் ...." பதட்டமோ, குமுறலோ இல்லாமல் பெற்றோரிடம் நடந்தவற்றை விவரித்தாள் வனஜா.

' உன்னோடு என்னால் வாழ முடியாது' என்று ஜெயராமன் தெளிவாகச் சொன்ன பிறகு, வனஜாவுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. நேராகப் பூஜை அறையிலிருந்த செல்லமாளிடம் சென்று, குமுறிக் குமுறி அழுதாள். அந்த அழுகையின் பொருள் ' எனக்கு வாழ்வு கொடுங்கள்' என்று  செல்லமாளிடம் மன்றாடியதாக இல்லை. பூஜை அறையிலிருந்த செல்லம்மாளிடம் பேசுவது, தெய்வத்திடம் பேசுவதுபோல் தோன்றியது அவளுக்கு. தன் மனத்தில் இருப்பதை யாரிடமாவது சொன்னால் தேவலை என்று தோன்றியது அவளுக்கு. எனவே தான் செல்லமாளிடம் குமுறிக் கொட்டினாள்.

"என்னம்மா, என்ன நடந்தது?" என்று வினவினாள்செல்லம்மாள்.

" அக்கா, உங்க தம்பி என்னைப் புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறார். என்னை அவர் புரிந்துகொள்ள ஆண்டவன்தான் கருணை புரியவேண்டும். " என்று நெக்குருகக் கூறினாள் வனஜா.

செல்லம்மாள் ஜெயராமனிடம் சென்று பேசினாள். அவன் தன் பக்கத்துக்கு நியாயத்தை தமக்கையிடம் விளக்கினான்.

" நானும் சாதாரண மனிதன், அக்கா. அர்த்தமில்லாமல் அநாவசியமாக மனைவியிடம் சந்தேகப்படும் அற்ப புத்தி படைத்தவன் அல்ல நான். அவள் அப்படிப் பேசியபோது, நான் என்னக்கா செய்யமுடியும்! எனக்கு வேண்டியது, என்னிடம் இங்கிதமாக நடந்துகொண்டு, சொலத்தகாதவற்றை மறைத்தாவது என் மகிழ்ச்சி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள மனைவிதான் . . . ."

செல்லம்மாளுக்கு குழப்பமாகப் போய்விட்டது.

தம்பியின் பேச்சில் நியாயம் இருப்பது அவளுக்குப் புரிந்தது. அதை அவள் ஒப்புக்கொள்வாளா? அல்லது, ' தலையே போனாலும் உண்மையை மறைக்காமல் பேசுவேன்' என்று உறுதியாக நிற்கும் வனஜாவைத்தான் குற்றவாளி என்று சொல்ல முடியுமா?

அவளால் முடிந்தது ஒன்றுதான் இருந்தது. அது, ஆண்டவனிடம் முறையிடுவது.

" தேவி, இந்தக் குழப்பத்தை தீர்த்து வை" என்று முறையிட்டுக் கொண்டாள்.

அந்த சம்பவத்திற்குப் பிறகு, ஜெயராமன் போக்கில் ஒழுங்கீனங்ககளைக் கவனித்தாள் வனஜா. சரியான நேரத்திற்கு அவன் வீடு திரும்புவதில்லை. அவள் படுக்கச் சென்ற பின்தான் வீடு திரும்ப வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டவன்போல், நடு இரவில்தான் வீட்டுக்கு வருவான். அவளோடு பேசுவதையே நிறுத்திவிட்டான். அவள் எதிர்பட்டால் தலையைக் குனிந்துகொள்வான். அவள் பரிமாறி அவன் சாப்பிடுவது அறவே நின்றுவிட்டது. படுக்கையும் பிரிந்துவிட்டது.

ஒருநாள் இரவு அவன் வீட்டுக்குத் திரும்பவில்லை. இரவு முழுவதும் கண்காணித்துக்கொண்டு விழித்துக் கொண்டிருந்த வனஜா, விடியற்காலையில் வந்து நின்ற கணவன் எதிரில் துணிவாகப் போய்நின்று, " இரவு எங்கே தங்கியிருந்தீர்கள்?" என்று கேட்டாள்.

அவளை ஏறிட்டுப் பார்க்காமல், "ஒரு நண்பன் வீட்டில்...." என்றான் ஜெயராமன்.

"நண்பனுடனா .....?"

"ஏன் அப்படிச் சந்தேகத்துடன் கேட்கிறாய்? உன்னைத்தவிர மற்றவர்கள் எல்லோரும் பொய்தான் சொல்வார்கள் என்ற திமிரான எண்ணமா?"

"நான் சந்தேகமாகக் கேட்கவில்லை. நான் ஏன் சந்தேகப் படவேண்டும்? உங்கள் ஒழுக்கத்தைக் காத்துக் கொள்ளவேண்டியது உங்கள் பொறுப்பு. நீங்கள் ஒழுக்கம் தவறுவது என்று தீர்மானித்து விட்டீர்களானால், நான் என்ன செய்யமுடியும்? நான் ஒன்றும் சந்தேகப்பட்டுக் கேட்கவில்லை. வீட்டைவிட்டு நண்பன் வீட்டில் தங்குவானேன் என்று கேட்டேன்."

" காரணம் தெரிய வேண்டுமா?"

"ஆமாம்......."

"வெளிப்படையாகச் சொல்லட்டுமா?"

"தயவு செய்து சொல்லுங்கள்....."

"நீ இருக்கும் வீடு எனக்கு வீடாகத் தெரியவில்லை.... புரிகிறதா?" - நிர்தாட்சண்யமாகச் சொன்னான் ஜெயராமன்.

அன்றே கணவன் வீட்டை விட்டுப் புறப்பட்டுவிட்டாள் வனஜா.

பெற்றோரிடம் இந்த விஷயத்தை விளக்கியபோது. . . ..

"ஏம்மா, உன் நாத்தனார் செள்ளம்மால்கூட உன்னைத் தடுக்கவில்லையா?" என்று ஆவேசத்துடன் கேட்டாள் அவள் அன்னை.

"அவர் தடுத்து நிறுத்துகிறாற்போல் அங்கு நிலவரம் இல்லை ...." என்று பதில் சொன்னாள் வனஜா.

"உன்னை அவளாவது புரிந்துகொண்டாளா ?" என்று கேட்டார் தந்தை குப்புசாமி. இதைக் கேட்டதும், வனஜாவின் தாய் குமுறி எழுந்தாள்.

"அடுத்த வீட்டுப்பெண் உங்கள் மகளைப் புரிந்து கொள்வதைப் பற்றிக் கேட்கிறீர்களே, பெற்றவள் என்னாலேயே அவளைப் புரிந்து கொள்ளமுடியவில்லை. வேலை பார்க்கப் போன இடத்தில எவனோ ஒருவனுடன் சிநேகமாக இருந்தாளாம். அதைப் போய் புருஷனிடம் பீற்றிக் கொண்டாளாம். இப்படி நடந்து கொண்டாள் எந்தப் புருஷன்தான் 'வெளியே போ ' என்று சொல்லமாட்டான். நீங்கள் சொல்லமாட்டீர்களா?.... இந்தக் குடும்பத்திலேயே என்றைக்கும் இல்லாத தலை குனிவு இன்றைக்கு வந்துவிட்டதே" என்றுக் கூறிக் குமுறினாள்.

தாயின் முகத்தையே பார்த்த வனஜா, நிதானமாக, " ஏம்மா, ஏன் இப்படிப் பதர்றே? இப்போ ஒரு தப்பும் நடந்து விடவில்லையே.... என்றாள்.

"இன்னும் என்னடி நடக்கணும்? எவனோ ஒருத்தன்கூட பழகிட்டு, அதைப்போய்....." என்று அவள் மீண்டும் ஆரம்பிக்குமுன், வனஜா ஆத்திரத்துடன் குறுக்கிட்டாள்.

"பழகினா என்னம்மா? உன் காலத்தை நினைத்துக்கொண்டு இன்றைக்கு நடக்கிறதை யெல்லாம் எடைபோடாதே" என்றாள் கண்டிப்பான குரலில்.

"காலம் என்னடி காலம்... ஒழுக்கம் எல்லாக்காலத்திலும் ஒண்ணுதான்" என்று சீறினாள் தாய்.

"இப்ப என்ன ஒழுக்கம் தவறிவிட்டதுன்னு நீ பேசறே ...... ? கால மாற்றத்துக்கு ஏற்றாற்போல் ஏற்படுகிற சில பழக்க வழக்கங்களினால் ஒழுக்கம் பிசகிவிடுமா? அந்தக் காலத்தில் கல்யாணம் ஆகிறவரை, பூவைப்போல் உன்னை வீட்டுக்குள்ளேயே வைத்திருந்தார் தாத்தா. இன்றைக்கு நாங்கள் எல்லாம் மாடா உழைக்கப்போகிறோம். அன்றைக்கு நீ வீட்டிற்குள்ளேயே அண்ணன் தம்பிக்கிட்டே பழகுவதுபோல், நாங்கள் வெளியே போறஇடத்திலே பல ஆண்களிடம் சகஜமாகப் பழகவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அப்படி ஏற்படுகிற பழகத்திலே, சில இடங்களிலே தவறு நேர்வதும் உண்டு. அதற்காக எல்லாமே ஒழுக்கம் தவறவிட்டதுன்னு முடிவுகட்டினா எப்படி?" பதட்டத்துடன் பேசினாள் வனஜா.

மகளின் முகத்தையே பார்த்த அந்தத் தாய், சற்றே நிதானமடைந்து அவளை அரவணைத்துக் கொண்டாள். பிறகு, "அம்மா வனஜா, நீ தப்பு பண்ணாதவளாக இருக்கலாம்மா. என் வயிற்றிலே பிறந்தவ, ஒரு தப்பும் பண்ண மாட்டன்னு நான் நம்பறேன். ஆனால், உலகம்? உலகத்துக்கு ஏற்றார்போல நம்ம பேசும் நடத்தையும் இருந்தாதானே உலகம் நம்பும்? அதை விட்டுவிட்டு, உண்மை பேசறேன்னு எதையும் இசைகேடாப் பேசினா, உலகம் எப்படி நம்பும்? உலகத்திலே வாழ அறிவுமட்டும் இருந்தா போதாது, கொஞ்சம் விவேகமும் வேண்டும். உன் மனத்தில் இருக்கிற புனிதத்தன்மையைப் புரிந்துகொள்ளாதவர்களிடம் கொஞ்சம் மறைத்துதான் பேசணும். அப்படிப் பேசினாத்தான் வாழமுடியும். புரிகிறதா?" என்றாள்.

இதைக்கேட்டு வனஜா சிரித்துக்கொண்டாள். பிறகு, " அம்மா, இந்த உலகத்திலே உண்மைன்னு ஒண்ணு இருக்கில்லே, சத்தியம்ன்னு ஒண்ணு இருக்கிலே, அதை நான் பிடிவாதமா நம்பறேன். அதனாலே வருகிற எந்தச் சோதனையையும் தாங்கிக்கொள்கிறேன். அதற்குரிய பலத்தை நீங்க எனக்கு ஏற்படுத்திக்கொடுத்திருக்கீங்க! ஆம்மாம்மா! 'கணவனாலே ஒதுக்க்கப்படறவ, வயத்துக்கும் வாய்க்கும் வழியில்லாது அலைஞ்சா' என்கிற நிலைமைமாறி, வயிற்றுப் பிரச்சனையை பற்றிக் கவலைப் படாமல், நியாயமான வாழ்க்கைக்காக ஒரு பெண் நியாயமாகப் போராடக்கூடிய சுழ்நிலை இன்றைக்கு இருக்கு. அந்தப் பலத்திலே என் உண்மையான மனசை என்றைக்காவது அவர் புரிந்துகொள்வார் என்கிற நம்பிக்கையிலே நான் வாழப்போறேன். உங்களுக்கு என்னை இந்த வீட்டிலே வேதனையா இருக்கும்னா சொல்லுங்க; 'ஒர்க்கிங் உமன் ஹாஸ்டல்' இருக்கு. அங்கே தங்கிக்கிறேன். “என்றாள்.

இப்படி ஒரு பெண் பேசினால், பெற்றவர்கள் என்ன செய்யமுடியும்?

தந்தை, வீட்டுக்கு வெளியே உள்ள திண்ணையில் அமர்ந்து கொண்டு ஊமை அழுகையுடன் தன் வேதனையைக் கரைத்துக்கொண்டிருந்தார். தாய் சமையல் அறைக்குள் அமர்ந்துகொண்டு புடவைத்தலைப்பை நனைத்துக் கொண்டிருந்தாள்.

வனஜா, தெளிந்த மனதுடன், தான் தவறேதும் செயவில்லை என்ற உறுதியுடன் ஆபீசுக்குப் போய்க் கொண்டிருந்தாள்.

வனஜா பிறந்த வீட்டுக்கு வந்துவிட்ட செய்தி, ஆபீஸ் முழுவதும் பரவிவிட்டது.

அது, சாரியின் உபயம்.

"ஆபீசில் பெரிய ஆட்டம் போட்டுவிட்டு ஒண்ணும் தெரியாத அப்பாவி மாதிரி ஒருத்தன் கிட்டே தலையை நீட்டிவிட்டா, அவளை வைத்துக்கொண்டு வாழறதுக்கு அவன் என்ன அப்பாவியா! ஏமாளியா!"

இது பலரின் விமர்சனம்.

வனஜா தோழி சரளாகூட, " என்ன இருந்தாலும் நீ அவர்கிட்ட எல்லா விஷயத்தையும் சொல்லி இருக்கக் கூடாதுதான்" என்றாள்.

ஹெட் கிளார்க் இதமாக, "உன் நிலைமையைப் பற்றிக் கேள்விப்பட்டேம்மா... உனக்கு என் அனுதாபங்கள் .... என்று உணர்ச்சிபூர்வமாகச் சொன்னதைகூட, வனஜாவால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

தன்னைக் குத்திக்காட்டுபவர்களைவிட, தன்மீது அனுதாபம் காட்டியவர்கள் மீதுதான் அவளுக்கு வெறுப்பாக இருந்தது. 'உண்மைபேசி, சத்தியத்துடன் நடக்கும் ஒருத்திக்கு இவர்கள் ஏன் அனுதாபம் தெரிவிக்க வேண்டும்? உண்மைக்கே அனுதாபம் தெரிவிக்கும் அளவுக்கு இவர்கள் உயர்ந்து விட்டார்களா? அல்லது, இவர்களிடம் அனுதாபத்தை பெரும் அளவுக்கு உண்மை தாழ்ந்துவிட்டதா?' - வனஜாவின் உள்ளம் பொங்கியது.

தன்னை - தன்மனத்தை புரிந்துகொள்ளக்கூடிய ஆத்மாவைத் தேடினாள் வனஜா.

வேறு யார்?

சுந்தரந்தானே அவளைப் புரிந்துகொள்ளக்கூடியவன்.

எந்தச் சுந்தரத்தால் தனக்கு இந்தப் பழியும் சோதனையும் ஏற்படுகிறதோ, அந்த சுந்தரத்தைத்தான் வனஜா தேடிக்கொண்டிருந்தாள்.

தாய் வீடு திரும்பி அன்று மூன்றாவது நாளாக வனஜா ஆபீசுக்குப் புறப்பட்டாள். வழக்கப்படி கையில் டிபன் பொட்டலத்தை எடுத்துக்கொண்டு, நிமிர்ந்த நடையுடன்தான் அவள் சென்றாள். அன்று காரியாலயத்தை அடைந்ததும் அவள் முதலில் செய்தகாரியம், அடுத்த 'சீட்'டைப் பார்த்ததுதான். கடந்த இரண்டு நாட்களாகச் சுந்தரம் வரவில்லை. அன்று அவன் வந்து இடத்தில் அமர்ந்திருந்தான். அவனைக் கண்டதும் பதட்டமும், ஆர்வமும் மேலிட, "சுந்தரம், உங்களுக்கு உடம்பு சரியாகிவிட்டதா?" என்று விசாரித்தாள்.

"ஊம்...." என்று அசிரத்தையாகப் பதிலளித்தான் சுந்தரம். அவளை நேருக்கு நேர் பார்த்துப் பேசமுடியவில்லை அவனால். அவனுக்கு ஏற்கெனவே ஜாடைமாடையாக எல்லா விஷயங்களும் தெரிந்திருந்தன.

அவன் மனநிலையைப் புரிந்துகொள்ளாமல் வனஜா பேசிக்கொண்டே போனாள்: " சுந்தரம், நானும் அவரும் உங்கள் வீட்டுக்கு வந்திருந்தோமே, அன்றைக்கு நீங்கள் நினைவு இல்லாமல் படுத்திருந்தீர்கள். மறுபடியும் வந்து ஒருமுறை பார்க்க முடியாமல் போய்விட்டது. ஐயாம் ஸாரி..... வந்து, இப்ப குணமாகிவிட்டதா?" என்று அவன் நலனைப்பற்றி விசாரித்தாள்.

வனஜாவின் போக்கு சுந்தரத்திற்கே புதிராக இருந்தது. சுந்தரத்தின் வீட்டுக்கு வந்ததிலிருந்துதானே அவளுடைய வாழ்க்கையில் விரிசல் ஏற்பட்டிருந்தது. அப்படி ஏற்பட்ட விரிசலைப்பற்றி முக்கியமாகக் குறிப்பிடாமல், அந்த வருகையை அவள் மிக சாதாரணமாகக் குறிப்பிட்டதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

"வனஜா, உங்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை..."என்றான்.

"என்னாலுந்தான்..... " என்றாள் வனஜா.

"அப்படியென்றால்.... "

"இத்தனை நாளும் இல்லாமல் திடீரென்று எனக்கு என்ன 'நீங்கள்' பட்டம்....."

"அதுவா, நீங்கள் மணமானவராயிற்றே! மரியாதையைகுரியவர் அல்லவா?

“வார்த்தையில் இல்லை மரியாதை! மனசில் வேண்டும். நீங்கள் இப்படி அழைப்பது ஒரு போலி சம்பிரதாயம். அது இருக்கட்டும்; என்னைப் புரிந்து கொள்ளமுடியவில்லை என்றா சொன்னீர்கள்?" என்று கேட்டாள்.

"ஆமாம் . . . . ."

“உங்களாலுமா?" என்று புன்முறுவலுடன் கேட்டு " எல்லாவற்றையும் புரியும்படி சொல்கிறேன். டிபன்வேளை வரட்டும்" என்றாள்.

லஞ்ச் டயத்தின் போது, வனஜா நடந்தவற்றையெல்லாம் ஒன்று விடாமல் கூறினாள். " அர்த்தமில்லாமல் உங்களை அவர் சந்தேகிக்கிறார். இந்தச் சந்தேகத்திற்கு ஆதாரம் இல்லை. எனவே இது விரைவில் போய்விடும்... " என்று உறுதியுடன் பேசினாள். எல்லாவற்றையும் கூறி முடித்த பின்னர், "இப்போது உங்களால் என்னைப் புரிந்துகொள்ள முடிகிறதா?" என்று கேட்டாள்.

“உன்னைப் பூரணமாகப் புரிந்துகொண்டுவிட்டேன், வனஜா. அதே நேரத்தில் ஒரு கடமையும் என் முன் இப்போது இருப்பதை நான் புரிந்து கொண்டுவிட்டேன்..... "உணர்ச்சி பொங்கக் கூறினான் சுந்தரம்.

“கடமையா? என்ன அது?" புரியாமல் கேட்டாள் வனஜா.

“நான் ஜெயராமனைச் சந்திக்கப் போகிறேன்....... "

“சந்தித்து.... "

“நீ குற்றமற்றவள் என்பதை அவரிடம் சொல்லப் போகிறேன் ...."

“சொல்லி......"

“உன் வாழ்க்கையை நிறைவாக்கப் போகிறேன்....... "

இதைக் கேட்டு வனஜா விரக்தியுடன் சிரித்தாள். பிறகு, "மிஸ்டர் சுந்தரம், பிறர் பிச்சை போட்டு வாழ்க்கை நிறைவதில்லை. உங்கள் சிபாரிசால் என் கணவர் என்னைப் புரிந்துகொண்டு வாழ்க்கையைத் தருவதென்றால், அதை நான் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? ப்ளீஸ் .... நீங்கள் இதில் தலையிட வேண்டாம். நான் சத்தியத்தின் வழிப்படி நடப்பது உண்மையானால், அந்த சத்தியந்தான் எனக்கு சிபாரிசு செய்யவேண்டும்..... ‘ என்று கூறி, கணநேரம் உணர்ச்சி வசப்பட்டாள். பிறகு, "தாங்க்யூ சுந்தரம் ...... உங்கள் மனம் எனக்குப் புரிகிறது. என்னைப் புரிந்துகொண்ட

நண்பராக நீங்கள் என்றென்றும் இருந்தால், அதுவேபோதும்..... " என்று கூறி, " நேரமாகிறது; டிபனைச் சாப்பிடுங்கள்" என்று, தான் கொண்டுவந்திருந்த தோசையில் ஒன்றை அவன் இலையில் போட்டாள்; அவன் கொஞ்சம் தயிர்ச்சாதத்தை அவள் பாக்ஸில் போட்டான்.

சாரியும் ஒருசில நண்பர்களும் இந்தக் காட்சியைக் கண்டு "அடேயப்பா! வனஜாவைவிட நெஞ்சழுத்தக்காரி இந்த உலகிலே கிடையாதப்பா....." என்று சொல்லிக் கொண்டனர்.

# 11

. நானும் பலதினங்கள் பொருத்திருந்தேன் - இது
நாளுக்கு நாளதிக மாகிவிட்டதே. - பாரதியார்

ஐந்தாறு முறை தன் அறைக் கதவைத் திறந்துகொண்டு அண்ணன் அறையைப் பார்த்து விட்டு வந்துவிட்டாள் சுதா.

ஊஹூம்! ஜெயராமன் எழுந்திருப்பதாக இல்லை. அறை உட்புறம் தாளிடப்பட்டு இருந்தது. அவன் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தான்.

இது, சுதாவின் பொறுமைக்குப் பெரும் சோதனையாக இருந்தது.

“இன்னுமா தூக்கம் ..... வரவர இந்த அண்ணா ரொம்பச் சோம்பேறியாகிவிட்டார்" என்று முனகியபடி, கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். மணி ஐந்தேமுக்கால்தான் ஆகியிருந்தது. கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே சிறிது நேரம் யோசித்தாள். பிறகு தனக்குள் சிரித்துக்கொண்டாள் பிறகு, " என்றைக்குமில்லாமல் நாம் இன்றைக்கு ஐந்து மணிக்கே எழுந்துகொண்டுவிட்டு அவரைக் கோபித்துக் கொள்வதில் அர்த்தமில்லைதானே. ..... இருந்தாலும் நம் அவசரம் நமக்கு..... அவர் எழுந்திருக்கிற நேரத்தில்தானே அவர் எழுந்திருப்பார்....." என்று சொல்லிக்கொண்டாள்.

ஆமாம்! சுதாவுக்கு ரொம்ப அவசரந்தான். அண்ணனிடம் பேசியாகவேண்டிய முக்கிய விஷயம் இருந்தது. தலை போகிற அவசரம் என்பார்களே, அதைவிட ஒரு படிமேல். உடல், பொருள், ஆவி எல்லாம் போகிற அவசரந்தான்.

இருக்காதா பின்னே! தன்னோடு உட்கார்ந்து டைப் மெஷினைத் தட்டிக் கொண்டிருந்த சரோஜே, தனக்கு இப்படி வில்லியாகக்கூடிய நெருக்கடி உண்டாகும் என்று அவள் கனவில் கூட எதிர்பார்க்கவில்லையே! தன் ஒருத்திக்கே ஸ்ரீதர் சொந்தம் என்று இறுமாந்திருக்கும்போது, இந்த சரோஜ் வேறு போட்டியாக முளைத்திருக்கிராளே! அவள் உடையும், மினுக்கும் சிரிப்பும் ..... சீ ! அவளை நினைக்கவே சுதாவுக்கு எரிச்சலாக வந்தது. அவளிடம் போய்ப் பேச்சுக்கொடுத்து வயிற்றெரிச்சலைக் கட்டிக்கொண்ட தன்புத்தியைச் சொல்லவேண்டும் என்று நினைத்துக்கொண்டாள்.

சிலருக்குக் காப்பி இல்லாவிட்டால் தலையே வெடித்துவிடும்போல் இருக்குமாமே, அப்படி சுதாவுக்கு ஒரு பழக்கம். தன் காதலைப்பற்றி ஓர் அரை மணிநேரமாவது யாரிடமாவது பேசிக் கொண்டிருக்காவிட்டால், அவளுக்குத் தலை வெடித்துவிடும்.

அன்று வேறு யாரும் கிடைக்கவில்லை. சரோஜ்தான் கிடைத்தாள். பொதுவாக சரோஜிடம் சுதா தன் காதலைப் பற்றிப் பேசுவதில்லை. சரோஜைக் கண்டால் அவளுக்கு அவ்வளவாகப் பிடிக்காது. அதற்கு முக்கிய காரணம், சரோஜும் ஸ்ரீதருடன் குழைந்து குழைந்துப் பேசுவதுதான்.

ஸ்ரீதர் அறைக்குப் போவதென்றாலே சரோஜ் தன உடை அலங்காரத்தைச் சரி செய்துகொண்டு - கொஞ்சம் மினிக்கிக்கொண்டுதான் போவாள். சுதா எவ்வளவுதான் அவளுக்கு இடங்கொடுக்காமல் தானே ஸ்ரீதரின் அழைப்புக்கு ஓடிக்கொண்டிருந்தாலும், சில சமயம் சுதா எழுந்துபோகுமுன், சரோஜ் ஸ்ரீதர் அறைக்குள் ஷார்ட் ஹாண்ட்

நோட்புக்குடன் பென்ஸிலுமாக நுழைந்துவிடுவாள். அவள் திரும்பும்வரை சுதா பொருமிக்கொண்டே இருப்பாள். 'சனியன்கள்! எப்போது கூப்பிடுவார் என்று காத்துக்கொண்டே இருக்கிறதுகள்.....' என்று சலித்துக்கொள்வாள்.

ஸ்ரீதரின் அறையிலிருந்து திரும்பி வரும்போதாவது சரோஜ் நாலு திட்டு வாங்கிக் கொண்டு வரவேண்டுமே..... ஊஹும்!

' ஆனாலும் இந்த ஸ்ரீதரும் மோசம்தான். "ஏம்மா, உன்னையா கூப்பிட்டேன்? சுதாவுக்குத்தானே பஸ்ஸரை ஒலித்தேன்! நீ ஓடி வருகிறாயே" என்று ஒரு நாளாவது இந்த சரோஜை மூஞ்சியில் அடித்தாற்போல் சொல்லி விரட்டக்கூடாதா? எல்லாம் கல்யாணம் ஆகட்டும், பேசிக்கொள்கிறேன்...."

இப்படிதான் சுதாவின் மானசீக பகைக்கு உள்ளாகி இருந்தாள் சரோஜ். இருப்பினும், அன்று வேறு யாரும் கிடைக்காததால், சரோஜிடம் பேச வேண்டியதாயிற்று. சரோஜிடம் பேச்சுக் கொடுக்க இன்னொரு காரணமும் வைத்திருந்தாள். 'நமக்கும் ஸ்ரீதருக்கும் உள்ள காதல் பிணைப்பை, இந்த சரோஜுக்கு மறைமுகமாகவாவது உணர்த்தி, வீணாக அவருக்கு ஆசைப்படாதேயம்மா' என்று சொல்லிவிடவேண்டும்" என்பதுதான் அது.

ஸ்ரீதர் அன்று ஆபீசுக்கு வர கொஞ்சம் லேட்டாகி விட்டது. எனவே, சுதாவுக்குப் போரடித்ததுக் கொண்டிருந்தது. சரோஜ் 'சீட்' அருகே சென்று, "சரோஜ், அவர் ஏன் வரவில்லை? என்று கேட்டாள்.

பொதுவாக அவள் ஸ்ரீதரை 'ஜி.எம்' என்றுதான் குறிப்பிடுவாள். ஆனால் அன்று, அவர்மேல் தனக்கிருக்கும் நெருக்கமான உறவை உணர்த்துவதற்காகவே 'அவர்' என்று குறிப்பிட்டாள்.

சரோஜ் சுதாவை 'ஒரு மாதிரி'யாகப் பார்த்தாள். பிறகு, "என்ன சுதா, என்னைக் கேட்கிறாய்? உனக்குத் தெரியாததா எனக்குத் தெரியும்?" என்றாள்.

இதைக் கேட்டதும் சுதாவுக்குப் பரம திருப்தி. 'உனக்குத் தெரியாததா?' என்று சரோஜே தன் நெருக்கத்தை அங்கீகரித்ததும், சரோஜின் மேலுள்ள தன் கோபங்கூட அர்த்தமற்றது என்று ஒரு வினாடி நினைத்துக்கொண்டாள்.

" ஆமாம் சரோஜ், என்னிடம் சொல்லாமல் ஒரு நாள்கூட இருக்கமாட்டார்தான். ஆனால், இன்றைக்கி ஏனோ சொல்லவில்லை...." என்றாள் பெருமிதம் கலந்த குரலில்.

"என்னிடம் கூடச் சொல்லவில்லை" என்றாள் சரோஜ்.

" என்னிடமே சொல்லவில்லை, பாவம் உன்னிடம் எங்கே சொல்லி இருக்கப் போகிறார்....." என்றாள் சுதா அனுதாபத்துடன்.

ஆனால், சரோஜ் விஷமச் சிரிப்புடன் பொடிவைத்துப் பதில் சொன்னாள்.

'அப்படி ஒரேயடியாகச் சொல்லிவிட முடியாது, சுதா. உன்னிடம் சொல்வாரோ இல்லையோ, என்னிடம் அவருடைய டெய்லி மூவ்மெண்ட்ஸயும், எங்கேஜ்மெண்ட்ஸையும் கண்டிப்பாகச் சொல்வார்...."

சுதாவுக்கு 'பட'தென்று கோபம் பொங்கியது.

' என்ன இந்த ஸ்ரீதர், இவளிடம் எல்லாவற்றையும் சொல்கிறாராமே.... ஒருவேளை இந்த சரோஜ் பொய் சொல்கிறாளோ....'

" சரோஜ், சும்மா கதை விடாதே, அவர் ஒன்றும் எல்லாவற்றையும் எல்லோரிடமும் சொல்லிக்கொண்டிருப்பவர் அல்ல. வேண்டுமானால், நீயும் ஸ்டெனோவாக இருக்கிறாயே என்று சில ஆபீஸ் சமந்தமான எங்கேஜ்மெண்ட்டுகளை சொல்லியிருப்பார்..... " என்றாள்.

சரோஜ் விடவில்லை : " அப்படியா? ரோமியோ அண்ட் ஜூலியட் படம் பார்க்கிறது, ரவிசங்கர்தான் எனக்குப் பிடித்த வித்துவான், நேற்று அவர் கச்சேரியை வெகுநேரம் கேட்டுக் கொண்டிருந்தேன். அவருடைய எல்.பி. ரிகார்ட் நான்கு வாங்கினேன் என்பதெல்லாம்கூட ஆபீஸ் விஷயமா? அதை பற்றியெல்லாம் என்னிடம் பேசி இருக்கிறாரே..... " என்றாள்.

சுதாவுக்கு மறுபடியும் பொறாமைக்கனல் பிறந்தது. 'இந்த சரோஜ் ஏதோ சதி செய்கிறாள்' என்று திட்டவட்டமாக அவள் முடிவு செய்துவிட்டாள்.

""ஏன் சரோஜ், சினிமாவைப்பற்றியும், ரவிசங்கரைப்பற்றியும் நீ ஏன் அவரிடம் கேட்டுக் கொண்டிருக்கிறாய்...." என்று முறைத்தாள்.

“நான் எங்கே கேட்டேன்! அவரேதான் சொல்லிஇருக்கிறார்......"

"வேலை வெட்டியில்லாமல் யாரும் போய் நின்றால், எதையாவது பேசுவதுதான்.... " என்றாள் சுதா, தனக்கே சமாதானம் சொல்லிக்கொள்ளும் குரலில்.

"நோ, யூ ஆர் ராங். அவரேதான் என்னை அழைத்து வைத்துப் பேசி இருக்கிறார்" என்று எரிகிற கொள்ளியில் எண்ணையை வார்த்தாள் சரோஜ்.

“ஆமாம், ஆபீசில் அவர் வேலை மெனக்கெட்டு உன்னை அழைத்து, ரவிசங்கரைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தாராக்கும்" என்று எரிந்து விழுந்தாள் சுதா.

“அவர் ஆபீசில் என்னுடன் பேசுகிறார் என்றா சொன்னேன்...." - சாந்தமாகக் கேட்டாள் சரோஜ்.

“பின்னே?" - அதிர்ச்சியுடன் கேட்டாள் சுதா.

“சில நாள் பீச்சிலிருந்து திரும்பி வரும்போது சொல்லியிருக்கிறார். சில நாள் தியேட்டரிலிருந்து வரும் போது சொல்லியிருக்கிறார். என்னது, பீச்சிலிருந்தும், தியேட்டரிலிருந்தும் வரும்போதா? - சுதாவுக்கு பகீர் என்றது.

"ஆமாம். சிலநேரம் பீச்சுக்கோ, தியேட்டருக்கோ போய்விட்டு, பஸ்ஸுக்காக நின்று கொண்டிருக்கும்போது, அவர் என்னைக்கண்டு, காரை நிறுத்தி, ' லிப்ட்' கொடுதிருக்கிறார். அப்போதுதான் இதயெல்லாம் சொல்லுவார்.... "

இதைகேட்ட பிறகுதான் சுதாவுக்குக் கொஞ்சம் ஆறுதல் பிறந்தது; 'நல்ல வேளை' அவர் தன்னை பீச்சுக்கும் தியேட்டருக்கும் அழைத்துக்கொண்டு போனதாகச் சொல்லாமல் 'லிப்ட்' கொடுத்ததாக மட்டும் சொல்கிறாளே, அதுவரையில் புண்ணியந்தான்.....'

அதற்கு மேலும் சரோஜிடம் பேசவே சுதா பயந்தாள். இன்னும் துருவித்துருவிக் கேட்டு, 'ஆமாம், என்னை அவர் ஒருநாள் பீச்சுக்கே கூட்டிக்கொண்டு போனார்' என்று சரோஜ் சொல்லிவிட்டால்..... சுதாவால் கண்டிப்பாக அதைத் தாங்கிக்கொள்ளமுடியாது. எனவே, "ஆண்களிடம் 'லிப்ட்' கேட்டு ஏறிக்கொள்வது ரொம்பத் தப்பு... " என்று சரோஜிடம் தன் வன்மையான கண்டனத்தைத் தெரிவிப்பதோடு நிறுத்திக்கொண்டாள்.

சரோஜ் விடுவதாக இல்லை. " நானா அவரை நிறுத்தி 'லிப்ட்' கேட்டேன்? அவராகவே என் பக்கத்தில் காரை நிறுத்தி ' ஏறிக்கோ, சரோஜ்' என்று கனியக் கனியக் கேட்கிற போது, எப்படி வேண்டாம் என்று சொல்லுவதாம்? அதுவும் ஸ்ரீதர் போன்ற ஒரு ஸ்வீட் ஜென்டில் மேனுடன் பேசிக்கொண்டு போவதற்குக் கசக்குமா?" என்றாள் சரோஜ்.

சுதா அதற்குப் பிறகு வாயையே திறக்கவில்லை. அவள் மனதில் பூகம்பம், எரிமலை எல்லாம் சேர்ந்து குமுறியது. ' இந்த சரோஜ் நமக்கு எதிரியாகப் போர்க்கோலம் பூண்டுவிட்டாள். ஏமாந்தால் ஸ்ரீதரை மயக்கினாலும் மயக்கிவிடுவாள்' என்று பயம் ஏற்பட்டுவிட்டது அவளுக்கு.

லஞ்ச் டயம் வரை, 'உம்'மென்று முகத்தைத் தூக்கிவைத்துக் கொண்டு பொறுத்திருந்தாள். மணி ஒன்றரை ஆனதும், அடுத்தக் கட்டடத்தில் பணிபுரியும் தன்னுடைய சிநேகதியான சாந்தாவைத் தேடிக்கொண்டு போனாள்.

சாந்தா, சுதாவுக்கு நம்பகமான ஒரு தோழி. சமீபத்தில் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவள். 'காதலைப் பற்றிய சகல நுணுக்கங்களையும் தெரிந்தவள்' என்று சாந்தா பேரில் சுதாவுக்கு ஒரு மரியாதை. காதலித்துக் கல்யாணம் செய்துகொண்டிருப்பவளாயிற்றே! அவளிடம் அவ்வப்போது தன் காதலைத் தெரிவித்து யோசனைகளைப் பெற்றிருந்தாள்.

தன் காதலைச் சாந்தாவிடம் தெரிவித்து, ஆலோசனைக் கேட்கவேண்டும் என்ற துடிப்புடன் அவளைத் தேடிச் சென்றாள் சுதா.

சுதா சொன்ன அத்தனையையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்தாள் சாந்தா. பின் தீவிரமாக ஆலோசித்தாள். கடைசியில் ஒரு தத்துவத்தை உதிர்த்தாள்:

"இதோ பார் சுதா, ஆண்கள் மனம் தண்ணீர் மாதிரி. அதில் எந்த சாயத்தைக் கலந்தாலும் அந்த நிறமாக மாறிவிடும். எந்தப் பெண் அவனைப் பாதுகாத்து, அங்கே இங்கே அசையவிடாமல் கல்யாணத்தை முடித்துக்கொண்டு விடுகிறாளோ, அவள்தான் வெற்றி பெறுவாள். தன் காதலில் உறுதியாக நின்று நிறைவேற்றும் உறுதியான மனம் ஆண்களுக்குக் கிடையாது....."

"ஆமாம், ஆமாம்! ஸ்ரீதர்கூட அப்படிப் பட்டும் படாமலுந்தான் இருக்கிறார். அதைப் பயன்படுத்திக் கொண்டுதான் இந்த சரோஜ் அவரை மயக்கப் பார்க்கிறாள்" என்று குமுறலுடன் சொன்னாள் சுதா.

" அவள்மேல் குற்றம் இல்லையடி. அவரை ஆண்டவன் ஆணாகப் படைத்த குற்றம். ஆண்வர்க்கம் முழுவதுமே அப்படிதான். நாம் கொஞ்சம் அசந்தாலும், நம்மைக் கைகழுவிவிட்டு விடுவார்கள்" என்றாள் சாந்தா.

" இப்போது நான் என்னடி செய்கிறது?" என்று பரிதாபமாகக் கேட்டாள் சுதா.

"இரண்டு வழிகள் இருக்கு" என்றாள் சாந்தா.

""என்ன?"

"ஒன்று, நான் செய்த வழி, அதாவது, ஒருநாள் திடுதிப்பென்று 'அவரை' ரிஜிஸ்ட்ரார் ஆபீசுக்கு அழைத்துக்கொண்டு போய்ச் சட்டுப்புட்டென்று தாலி கட்ட வைத்து விட்டேன். என் அப்பா அம்மாவுக்குக் கூட அப்புறந்தான் சொன்னேன்..... அந்த வழி உனக்கு ஒத்துக்கொள்ளாது. அந்தச் சாமர்த்தியமும் உனக்குக் கிடையாது....."

"ஆமாண்டி! அந்த வழி எனக்கு வேண்டாம். ரொம்பப் பயங்கரமான வழியா இருக்கு. இன்னொரு வழி இருக்குன்னியே, அது என்ன? என்று கேட்டாள் சுதா.

"அது ரொம்ப ஆர்டினரி வழி. உங்க வீட்டிலே பெரியவங்க கிட்டே போய்ச் சொல்லி, அவங்க மூலமா உடனடியா கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யறது" என்றாள் சாந்தா.

"இது ரொம்ப ஆர்டினரி வழின்னாலுங்கூட, இப்ப எனக்குக் கொஞ்சம் சிக்கலான வழிதாண்டி" என்று இழுத்தாள் சுதா.

"ஏன்?"

"இப்ப ஏன் காதலைபற்றி எங்க அண்ணாகிட்ட சொல்றது அவ்வளவு நல்லதில்லே, வீட்டிலே வேற இப்ப காதல் கீதல்னு குழப்பம் வந்திருக்கு."

"அதென்ன குழப்பம்.... உங்க வீட்டிலே காதல் குழப்பமா? உங்க அண்ணாவுக்குக்கூட கல்யாணம் ஆயிடுத்தே.... வேற யாருக்குக் காதல்... புரியாமல் கேட்டாள் சாந்தா.

"ப்ளீஸ்! அதைக் கேட்காதேடி... அது குடும்ப விஷயம்" என்றாள் சுதா..

அவளுக்கு வனஜா மீது எவ்வளவுதான் கோபதாபம் இருந்தபோதிலும், அந்த ' அவமானகரமான' குடும்பச் செய்தியைப் பிறரிடம் சொல்ல விருப்பமில்லை. சாந்தாவும் வற்புறுத்திக் கேட்கவில்லை.

"குடும்ப விஷயம்னா சொல்லவேண்டாம். அனால், நீ உன் குடும்ப விஷயத்துக்காக உன் பர்ஸனல் விஷயத்தைத தள்ளிப் போட்டுக்கொண்டே போனால், கடைசியில் உன் 'காதல்' டிராஜடியில்தான் முடியும். காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும். சூடுள்ள போதே காதலை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும்....." என்று பொன்மொழிகளை உதிர்த்தாள் சாந்தா.

சுதாவுக்கு அது சரியென்றே பட்டது.

'சரோஜின் நடவடிக்கை வேறு சரியாக இல்லை, எந்த நிமிஷமும் எதுவும் நடக்கலாம்......"

'சரி சாந்தா, நான் என் அண்ணனிடம் உடனே சொல்லி ஏற்பாடு செய்கிறேன் ...." என்றாள்.

அதன் பிறகு சுதாவுக்கு அதுவே சிந்தனையாகிவிட்டது. ஆபீசிலிருந்து வீட்டுக்கு வந்து வெளியே எங்கும் போகவில்லை. அண்ணனுக்காகக் காத்திருந்தாள் இரவு வெகுநேரமாகியும் ஜெயராமன் வரவில்லை

இப்போதெல்லாம் ஜெயராமன் அப்படி நேரம் கழித்துவருவது சகஜமாகிவிட்டது. வனஜாவின் போக்கால் ஏற்பட்ட மனக்குழப்பம் அது.. அவனைத் தட்டிக்கேட்டு, அவன் மனத்தைப் புண்படுத்த செல்லம்மாள் உட்பட யாருக்கும் துணிவில்லை.

சுதாவுக்கு தன் காதலைப் பற்றி செல்லம்மாளிடம் சொல்ல விருப்பமில்லை. அவள் கொஞ்சம் கர்நாடகம். எடுத்தவுடனே ஏட்டிக்குப் போட்டியாக எதையாவது பேசிக்கண்டிப்பாள். அண்ணன் ஜெயராமன்தான் கொஞ்சம் அனுசரணையாகப் போகக் கூடியவன். எனவே, இரவு வெகு நேரம்வரை காத்திருந்துப் பார்த்துவிட்டு, காலையில் பேசிக்கொள்ளலாம் என்று படுக்கைக்குப் போய்விட்டாள். அதிகாலையில் ஐந்து மணிக்கே எழுந்து அண்ணன் இன்னும் எழுந்திருக்கவில்லையே என்று பரபரப்புடன் காத்திருந்தாள்.

ஏழு மணி சுமாருக்கு ஜெயராமன் கண் விழித்தான். அவன் அறையே கவனித்துக் கொண்டிருந்த சுதா, உடனே ஓடோடி சமையல் அறைக்குப் போய், அக்காவிடம் காப்பியை வாங்கிக்கொண்டு அண்ணனிடம் சென்றாள். எப்போதுமே, எந்த நெருக்கடியிலும் 'பெட் காப்பி'' சாப்பிட்டு அரை மணிவரை ஜெயராமன் நல்ல 'மூடி'ல் இருப்பான்.

தங்கையிடமிருந்து காப்பியைப் பெற்றுக்கொண்ட ஜெயராமன், 'என்ன சுதா, இன்னிக்கு நீயே காப்பி கொண்டு வந்திருக்கே .... என்ன விசேஷம்?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

விஷயமிருக்கு அண்ணா......" என்று நாணினாள் சுதா.

"அதுதானே பார்த்தேன்....... என்ன விஷயம்?" படுக்கைவிட்டு எழுந்திருந்து ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டான் ஜெயராமன்.

"அண்ணா, நீ அடிக்கடி ...... ' சுதாவுக்கு ஒரு கல்யாணத்தை முடித்துவிட்டால், என் பாரம் குறைந்துவிடும்' என்று சொல்வாய் அல்லவா? உன் பாரம் குறையற நேரம் வந்துவிட்டது..." என்றாள் தலை குனிந்தவாறு.

"என்ன சுதா சொல்லற?......" புருவம் சுருங்கக் கேட்டான் ஜெயராமன்.

"வந்து அண்ணா....எங்க ஆபீஸ் ஜெனரல்மானேஜர் ஸ்ரீதர் இருக்கார ...அவர் ரொம்ப நல்லவர்....வந்து ....அவர்....."

ஜெயராமனுக்குப் புரிந்துவிட்டது. " ஓகோ ! காதலா?" என்று குரலை உயர்த்தினான்.

சுதா தயங்கி நின்றாள்.

"வேலைக்குப் போக வேண்டியது; நாலு மாசத்திலே வந்து..... அவர் நல்லவர், கெட்டவர்" என்று உளறவேண்டியது, அப்படிதானே..... "

சுதா ஒருவினாடி தயங்கினாள். மறுவினாடி குரலை உறுதிப்படுத்திக்கொண்டு, "அண்ணா, உண்மையை மனம் திறந்து, மரியாதையாகச் சொல்கிறவளுக்கு இந்த வீட்டிலே காலமில்லே, தப்பெல்லாம் பண்ணிவிட்டு, ' நான் காதலிக்கவில்லை, பிரண்டாகத்தான் பழகினேன்'னு சொல்றவளுக்குதான் காலம்" என்றாள் சூடாக.

அந்த வார்த்தைகள் ஜெயராமனைச் சுருக்கென்று தைத்தன. சுதா வனஜாவைக் குறிப்பிட்டுப் பேசுவது அவனுக்குப் புரிந்தது. அந்த வார்த்தையில் அவன் சோர்ந்துபோனான்.

அந்த சமயத்தைப் பயன்படுத்திக்கொண்ட சுதா, " அண்ணா, உன்கிட்டே சொல்லாமல் நான் வேற யார்கிட்டே இதைச் சொல்வேன்? எனக்கு அம்மா, அப்பா எல்லாம் நீதானே!..... அதனால்தான் உன்கிட்டே சொல்றேன்..... எனக்கு ஸ்ரீதர்தான் எல்லாம். அவர் இல்லாவிட்டால் எனக்கு வாழ்வே இல்லை..... " என்றாள் உறுதியடன்.

ஜெயராமன் சிறிது நேரம் மௌனமாக யோசித்துக்கொண்டிருந்தான். 'நம் வாழ்கைதான் இப்படி ஆயிற்று, சுதாவின் வாழ்க்கையாவது மனம்போல் நிறையட்டுமே....' என்று எண்ணினான்.

"சுதா, உன் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கிறேனம்மா ... இன்றைக்கே, இப்போதே நான் ஸ்ரீதரைச் சந்திக்கிறேன் ......"

"அண்ணா" என்று ஆனந்தக் கண்ணீர்மல்க, நெகிழ்ச்சியுடன் கூவினாள் சுதா.

**மு**ன் ஹாலில் அமர்ந்து பேப்பர் படித்துக்கொண்டிருந்தான் ஸ்ரீதர்.

"யாரோ ஜெயராமனாம்... " என்று வேலையாள் வந்து சொன்னபோது, "ஜெயராமனா? என் பிரண்டா? அப்படி யாரும் கிடையாதே..... " என்று கூறிவிட்டு, ஒருகணம் யோசித்து, " சரி, வரச்சொல்" என்றான்.

"குட் மார்னிங்... " என்று கூறிக்கொண்டே, உள்ளே நுழைந்தான் ஜெயராமன்.

அவனைப் பார்த்த பிறகுதான், ஓகோ, இவரா?' என்று தனக்குள் எண்ணிக்கொண்டான்.

"வாருங்கள் ...... கம் ஆன்...." என்று அவனை வரவேற்று, கையிலிருந்த பேப்பரை மடித்து வைத்துவிட்டு, " என்ன?" என்றான்.

"ஒன்றுமில்லை, சுதா எல்லா விஷயகளையும் சொன்னால்.... " என்று நேரடியாக 'சப்ஜெட்டு'க்கு வந்தான் ஜெயராமன்.

"என்ன சொன்னாள்?" என்று சாதாரணமாகக் கேட்டான் ஸ்ரீதர்.

“எல்லாம் உங்கள் கல்யாண விஷயந்தான் ..... " 'டக்'கென்று கூறிவிட்டான் ஜெயராமன்.

“என் கல்யாண விஷயமா?"

“ஆமா, உங்களுக்கும் சுதாவுக்குந்தான்.

“எனக்கும் சுதாவுக்கும் கல்யாணமா?" என்று திகைப்புடன் கேட்டான் ஸ்ரீதர்.

“என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? எல்லாம் நான் கேள்விப்பட்டேன். சுதாவிடம் நீங்கள் நெருங்கி மனம்விட்டுப் பழகியதை சுதாவே சொன்னாள். உங்கள் இரண்டு பேருக்கும் திருமணம் நடப்பதில் எனக்கொன்றும் ஆட்சேபணை இல்லை.... " என்றான் ஜெயராமன்.

ஸ்ரீதர் ஒரு நிமிஷம் மௌனம் சாதித்தான். பிறகு, ஜெயராமனையே முறைத்துப் பார்த்து, " என்ன மிஸ்டர் ஜெயராமன்! உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றால் எல்லாம் ஆகிவிடுமா? என்ன பேசுகிறோம், யாரிடம் பேசுகிறோம் என்று தெரிந்துதான் பேசுகிறீர்களா? நெருங்கிப் பழகினால், காதலா? பரிவுடன் பேசினால் ''லவ்''வா? மிஸ்டர் ஜெயராமன், நான் சுதாவிடம் மட்டுமல்ல, அலுவலகத்தில் உள்ள எல்லோரிடமும் அன்புடனும், பரிவுடனுந்தான் பழகுகிறேன். மானேஜர் என்ற முறையில் அது என் கடமையுங்கூட; அதற்காக நான் பழகுகிற எல்லாப் பெண்களையும் திருமணம் செய்துகொண்டுவிட முடியுமா? நான் யாரிடமும் கடிந்து பேசமாட்டேன். இன் முகத்துடன் பேசுவேன்... தட் ஈஸ் மை நேச்சர்...... சிரித்த முகத்துடன் பேசுவது தப்பா?" பேசிக்கொண்டே போனான் ஸ்ரீதர்.

அதைக் கேட்கக் கேட்க, ஜெயராமனுக்குத் தலை சுற்றியது. 'பாவம், சுதா' என்ற பரிதாப உணர்ச்சிதான் அப்போது அவனிடம் எழுந்தது..

# 12

கூண்டுக் கிளியினைப் போல் – தனிமை
கொண்டு மிகவும் நொந்தேன்.

– பாரதியார்

“அவரா அப்படிச் சொன்னார்? இருக்கவே இருக்காது?" ஏமாற்றத்தாலும், அந்த ஏமாற்றத்தைத் தாங்கிக்கொள்ளமுடியாத பேதை மனத்தின் போராட்டத்தாலும், சுதா முரட்டுத்தனமான பிடிவாதத்துடன் கூறினாள்.

அவளுக்குத் தன் அண்ணன் ஜெயராமன்மீதே சந்தேகம் ஏற்பட்டது. ' என் காதலை நிறைவேறவிடாமல் செய்வதற்காக அண்ணன் இரட்டை நாடகம் ஆடுகிறார! உன் மகிழ்ச்சிக்குக் குறுக்கே நான் நிற்கப்போவதில்லை என்று என்னிடம் கூறிவிட்டுப்போய் ஸ்ரீதரிடம் என் காதலைக் குலைக்க என்னென்ன சொன்னாரோ? அல்லது ஸ்ரீதர் சொல்லாதையெல்லாம் என்னிடம் சொல்கிறாரோ என்னவோ?'

அவளுக்குப் பலவித சந்தேகங்கள் எழுந்தன.

எல்லோர்மீதும் சந்தேகமாக இருந்தது. ஆனால், ஸ்ரீதர் மீது மட்டும் அவளுக்குச் சந்தேகம் வரவில்லை. ஸ்ரீதர் தன்னைக் காதலிக்கிறார் என்பதில் அவளுக்குக் கொஞ்சமும் சந்தேகம் இருக்கவில்லை.

“அண்ணா, என்ன நடந்தது? உண்மையைச் சொல்" என்று நீதிபதியைப் போல் துருவித் துருவிக் கேட்டாள்.

ஜெயராமனால் சுதாவின் மனநிலையைப் புரிந்துகொள்ள முடிந்தது. அவள் தன் வார்த்தையை நம்ப மறுத்தபோதும், அவன் மனம் அவள்பால் இறக்கம் கொண்டது.

இந்த அப்பாவிப் பெண் அந்த ஸ்ரீதர்மீது எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாள்? இன்று என் வார்த்தையை இவள் நம்ப மறுத்தாலும், நாளை அவன் வாயினாலேயே அந்த உண்மையைத் தெரிந்துகொள்ளத்தானே போகிறாள்? அப்போது இவள் என்ன செய்வாள்? - இதுதான் அவனது அப்போதைய கவலையாக இருந்தது.

"சுதா, காதல் ஒரு சபலம்தானம்மா, சில சமயங்களில் நாம் எந்தவித ஆதாரமு மில்லாமல், வெறும் நம்பிக்கையில் அதை வளர்த்து, அதனால் ஏற்படுகிற துன்பங்களுக்கு ஆளாகி விடுகிறோம். உணர்ச்சிவசப்பட்டு ஒரு முடிவுக்கு வராமல் நிதானமாகச் சிந்தித்தால்தான் நம் தவறு நமக்குப் புரியும்...." என்றான்.

"கரெக்ட் அண்ணா, என் தவறு இப்போதுதான் எனக்குப் புரிகிறது. நீ என் காதலை முழு மனதுடன் நிறைவேற்றிவைப்பாய் என்று பயித்தியக்காரிமாதிரி நம்பினேன் பார், அதுதான் அண்ணா, நான் செய்த தவறு..... " மனம் வருந்தச் சொன்னாள் சுதா.

"சுதா ...... என்ன இது?" மனம் வெதும்பக்கேட்டான் ஜெயராமன்.

"வருத்தப்படாதே அண்ணா, நீ நினைக்கிற மாதிரி நான் ஆதாரமோ, அடித்தளமோ இல்லாமல் ஆசைகளை வளர்த்துக் கொண்டவள் அல்ல. அவர் என்னை விரும்பினார் என்பதற்கு எத்தனையோ ஆதாரம் இருக்கிறது. ஆனால், என் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளத்தான் ஆதரவாளர்கள் இல்லாதவளாக ஆகிவிட்டேன் ....." குலுங்கிக் குலுங்கி அழுதாள் சுதா.

" சுதா, என்னம்மா இது, குழந்தை மாதிரி..... பத்துபேர் சேர்ந்து ஒரு குதிரையை தண்ணீர்தொட்டி அருகில் இழுத்துப்போவோம். ஆனால், அதைத் தண்ணீர் குடிக்க வைக்க ஒருவராலும் முடியாது. அதுவேதான் குடித்தாக வேண்டும். அதேபோல், உன் ஆசையை நிறைவேற்றி வைக்க நாங்கள் எத்தனைபேர் ஒத்துழைத்தாலும், அந்த ஆசையை ஏற்றுக்கொள்ள வேண்டியவர் ஸ்ரீதர் தானேம்மா., உனக்கு என் வார்த்தையில் நம்பிக்கை இல்லை என்பது புரிகிறது. நம் தாயின்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன், அவர் உன்மீது எந்தவித ஆசையையும் வளர்த்துக் கொள்ளவில்லை என்று சொல்லிவிட்டார், போதுமா? என்றான் உணர்ச்சி வசப்பட்டு.

ஜெயராமன் இப்படி ஆணையிட்டுக் கூறியதும், சுதா திடுக்கிட்டுப் போனாள். இன்றும் ஜெயராமன் தாயின்மீது கொண்டிருக்கும் மரியாதை அவளுக்குத் தெரியும். அந்தத் தாய்மீது அண்ணன் ஆணையிட்டதும், அவளுக்கு அதிர்ச்சியாக இருந்தது. அண்ணன் சொல்வது உண்மைதானோ என்ற ஐயங்கூட அப்போது லேசாக எழுந்தது.

மறுகணம் அவள் ஆத்திரம் சரோஜ் மீது பாய்ந்தது. ' எல்லாம் அந்தப் பாவி சரோஜின் வேலையாகத்தான் இருக்கும். அவரோடு தியேட்டரிலிருந்தும் பீச்சிலிருந்தும் காரில் சேர்ந்தே வந்தாளாமே! தனிமையில் என்னென்னவெல்லாம் பேசினாளோ? எப்படியெல்லாம் மடக்கினாளோ? அவர் இவளுக்கு 'லிப்ட்' கொடுத்ததாகச் சொன்னதுகூடப் பொய்யாகத்தான் இருக்கும். இவரை அவள் ஏமாற்றி, பீச்சுக்கும் தியேட்டருக்கும் அழைத்துப் போயிருப்பாள். அவரிடம் போய்ப் பல்லைக் காட்டிக்கொண்டு 'ஸார், என்னை ஒரு பிலிமுக்கு அழைத்துக்கொண்டு போங்க, டல்லாயிருக்கு, பிளீஸ்' என்று கெஞ்சியிருப்பாள். அவரும் போனால் போகிறதென்று அழைத்துக்கொண்டு போயிருப்பார். இந்தக்கழுதை, அந்தச் சமயத்தில் அவரிடம் 'எப்படி எப்படியோ' பழகி, அவருடைய புத்தியை மாற்றி இருப்பாள். இல்லாவிட்டால் அவர் என்னைக் காதலிக்கவில்லை என்று சொல்வாரா?"

எண்ணி எண்ணிக் குமுறினாள் சுதா. பயங்கரமாகத் தன் முன்னால் விசுவரூபம் எடுத்து நிற்கும் ஏமாற்றத்தைப் போக்கினால் ஒழிய, தனக்கு அமைதி ஏற்படாது என்று தோன்றியது அவளுக்கு.

இதற்கு யாரிடம் போய் ஆலோசனை கேட்பது?

ஜெயராமன் கன்னத்தில் கை வைத்துக்கொண்டு ஒருமூலையில் உட்கார்ந்துவிட்டான். சுதாவுக்கு ஒரே பரபரப்பாக இருந்தது. தன் வேதனையை யாரிடமாவது சொல்லி முடிவுகட்டியாக வேண்டும் என்ற துடிப்பு அவள் நெஞ்சில் குடைந்தது.

அவசர அவசரமாக வீட்டைவிட்டு வெளியேறி, தன் காதல் ஆசானான சாந்தாவின் வீட்டை நோக்கிச் சென்றாள். தண்ணீரில் மூழ்கிக்கொண்டிருப்பவனுக்கு, சிறு கழியும் தெப்பமாகத் தோன்றுவதுபோல், சாந்தா ஒருத்திதான், தன்னை, இந்தத் தோல்விச் சுழலிலிருந்து காக்க வழி சொல்லக்கூடியவள் என்று சுதாவுக்குத் தோன்றியது.

**க**லகலவென்ற சிரிப்பொலி கேட்டுக்கொண்டிருந்தது. 'உ.ம்….உம்……..'' என்ற சிணுங்கல் ஒலி இடையிடைய எழுந்தது.. அறையின் மூலையில் இருந்த ரேடியோவிலிருந்து, இனியகுரல் எம்.எல்.வி.யின் சஹானா ராகக் கீர்த்தனை ஒன்று காற்றில் தவழ்ந்து கொண்டிருந்தது.

வாயிற்கதவு திறந்துகிடகிறதென்றுகூடத் தெரியாமல், அந்தத் தம்பதி, இன்பப் பரவசத்தில் தங்களை மறந்திருந்தனர்.

அது சாந்தாவின் தனிக் குடித்தனம். காதல்ஜோடி தம்பதியாக மாறியிருக்கிறது அல்லவா? காதல் வாழ்கையில் கனவுகண்டுகொண்டிருந்ததையெல்லாம் நனவாகிக் கொண்டிருந்தார்கள். சாந்தாவின் கணவன், மனைவியிடம் ஒரு 'பெட்' எடுத்துக்கொண்டு, அவளை அப்படியே கைகளில் தூக்கிப்படுக்கையறையை மூன்றாவது முறையாகச் சுற்றிக்கொண்டிருந்தான்.

இந்தக் காட்சியைக் கண்டு, ஏக்கத்துடன் அறைவாசலிலேயே நின்றுவிட்டாள் சுதா. வெளிக்கதவு திறந்திருக்கிறதே என்று உள்ளே நுழைந்தாள்..படுக்கை அறைக்குள் பேச்சுக்குரல் கேட்டது. அதனால்தான், தைரியமாக அந்த அறையை அடைந்தாள். ஆனால், உள்ளே நுழையுமுன், அந்தக் காட்சியைக் கண்டு சற்றே சிலிர்த்தாள். ஆடைகுலைய இருந்த சாந்தாவை, ஆர்வம் நிறைய இருந்த அவள் கணவன் அள்ளிக்கொண்டு அலைந்த அந்தக் காட்சி அவள் மனத்தில் பெருமூச்சைக்கிளபபியது.

சற்றும் எதிர்பாராதவிதமாக அறைவாசலில் ஒரு பெண்ணைக்கண்டதும், சாந்தாவின் கணவன் அவளைத் 'தொப்'பென்று படுக்கையில் போட்டுவிட்டு, அறையைவிட்டு வெளியேறினான்.

சிவ பூஜையில் கரடியாகத் தன் வீட்டில் தோன்றிய சுதாவைக் கண்டதும் சாந்தாவுக்கு சற்று எரிச்சலாக இருந்தாலும் அவளுடைய கலங்கிய தோற்றம் அவள் மனத்தில் அன்பை ஏற்படுத்தியது.

“என்னடி, சுதா…..? என்று அவள் பதட்டத்துடன் கேட்டதும், அன்னியர் வீடு என்ற நினைவு கூட இல்லாமல் சந்தாவின் தோளைப் பற்றிக்கொண்டு கண்ணீர் விட்டழுதாள் சுதா.

“என்னடி…. என்ன நடந்தது…….'' என்று அவளை உலுக்கியவாறு கேட்டாள் சாந்தா.

“அந்தப் பாவி சரோஜ், சதி பண்ணிட்டாளடி…'' என்று விம்மலுக்கிடையே கூறினாள் சுதா.

“என்ன சுதா, என்ன சொல்றே?'' என்று அவளை ஆசுவாசப்படுத்தியவாறு விசாரித்த சாந்தா, '' ஒரு நிமிஷம் இருடி'' என்று கூறி, உள்ளே சென்று ஒழுங்காக டிரஸ் செய்துகொண்டு வந்து, சுதாவின் எதிரே அமர்ந்தாள்.

“அந்த சரோஜ் என்ன மாயம் செய்தாளோ, தெரியவில்லை. ஸ்ரீதர் என்னைக் காதலிக்க வில்லையென்று எங்கண்ணாவிடம் சொல்லிவிட்டாராம். இப்போது நான் என்னடி செய்வேன்…. ? என்று, எல்லா விவரங்களையும் கூறி முடித்தாள் சுதா.

சாந்தா சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு, சுண்டு விரலால் உச்சந்தலை அலங்காரம் கலைந்துவிடாமல் சொறிந்தாள். அவள் அப்படிச் செய்தால், எதையோ சிந்திப்பதாகப் பொருள். அவளுக்கு ஒரு யோசனை உருவாகிக்கொண்டிருக்கிறது என்றும் சொல்லலாம். நம்பிக்கையுடன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் சுதா.

திடீரென்று சாந்தா கேட்டாள் ;

“சகுந்தலையை துஷ்யந்தன் ஏன் மறந்தான் தெரியுமா?''

“மோதிரத்தைத் தொலைத்து விட்டதாலே'' என்று ரொம்பச் சிரமப்பட்டு ஞாபகப்படுத்திச் சொன்னாள் சுதா.

“சகுந்தலை ஏன் மோதிரத்தை வாங்கிக் கொண்டாள்?''

இதற்கு சுதாவால், பதில் சொல்ல முடியவில்லை.

“புரியவில்லை, இல்லையா? நான் சொல்கிறேன், கேள். சகுந்தலை துஷ்யந்தனிடம் ஒரு மோதிரத்தை வாங்கிக்கொண்டு ஆளைவிட்டது முட்டாள்தனம். மோதிரம் வேண்டுமென்றால் நகை வியாபாரியிடம் வாங்கிக் கொள்வது, அதை விட்டுவிட்டு, காதலனிடம் போய்மோதிரத்தை வாங்கிக் கொண்டு ஆசாமியை விடலாமா? அவன் இதற்கொருமோதிரம் இருந்தால் போதும் போலிருக்கிறது' என்று ஓசைபடாமல் ஒரு மோதிரத்தைக் கொடுத்துவிட்டு

நழுவிவிட்டான். 'உன் மோதிரத்தை நீயே வைத்துக்கொள், என்னை ஊருக்கு அழைத்துக் கொண்டுபோ...." என்று அந்தச் சகுந்தலை, வெட்டு ஒன்று துண்டு இரண்டாக அடித்துப் பேசியிருந்தால், அந்த ஆள் அப்படி ஓடியிருப்பானா! இல்லை, கடைசியில் 'சகுந்தலையைத் தெரியாது' என்றுதான் சொல்லியிருப்பானா? இப்ப நீயும் சகுந்தலை மாதிரிதான் ஏமாந்துவிட்டாய்..... " என்று ஏதோ பெரிய தத்துவத்தை உதிர்த்தாள்.

"ஐயோ, நான் அவர்கிட்டே மோதிரம் வாங்கல்லியே ....." என்றாள் சுதா.

"மோதிரம் வாங்கிக்கொள்ளவில்லை என்பது உனக்குப் பெருமை இல்லை. உனக்கு கால் சவரன் மோதிரம் கூட வாங்கிப்போடாமல் உன்னை ஏமாற்றி இருப்பது அவர் சாமர்த்தியம். நீ அவருடைய பல் இளிப்பிலேயே எமாந்திருக்கிறாய்..... '

"சீ, சீ! பல் இளிப்பு என்று சொல்லாதேடி..... அசிங்கமா இருக்கு! புன்னகை செய்யும் போது எவ்வளவு அழகாக இருக்கும் தெரியுமா?" என்று ஒரு வினாடி கனவில் திகைத்தாள் சுதா.

சாந்தா தலையில் அடித்துக்கொண்டு, " நீ இப்போது அழுது கொண்டுவந்து நிற்பது, அதைவிட அழகாக இருக்கு. போடீ பயித்தியக்காரி...." என்றாள்.

"இப்போ என்னை என்னதாண்டி செய்யச்சொல்றே....." என்று சுதா கேட்டாள் பரிதாபமாக.

"எப்போ காதல்னு மனசிலே தோணித்தோ, அந்த வினாடியே "என்னங்க, கல்யாணம் எப்போ'ன்னு கேட்டு ஆசாமியை மடக்காமல், இத்தனைநாள் நீ ஆறப் போட்டுட்டே , ஆறின கஞ்சி பழைய கஞ்சி ஆயிடுத்து. அவரும் புது ஜோடியோட பறந்துட்டார்......"

"அந்த சரோஜ் என்னை இப்படிக் கவிழ்ப்பாள் என்றுநான் நினைக்கவேஇல்லை ..... அதோட..."

"என்ன அதோட.... "

"கல்யாணத எப்ப வச்சுக்கலாம்னு நாம் எப்படிக் கேட்கிறது? அவர்தானே சொல்லணும்..... "

"அது அந்தக்காலம். இப்ப காதலிக்கற எந்த ஆண்பிள்ளையும் கல்யாணத்தைப்பற்றிப் பேசறதே இல்லை. எப்படிக் காதலைக் கத்தரித்துக்கொள்ளலாம் என்றுதான் யோசிச்சுக் கிட்டிருக்காங்க..." என்றாள் சாந்தா.

"ஸ்ரீதர் அப்படி இல்லேடி...." என்றாள் சுதா.

"அப்படி உனக்கு அவர் மேலே இன்னும் நம்பிக்கை இருந்தா, ஒண்ணு செய்.."

"என்ன செய்யணும்.....? சொல்லு, சொல்லு....." பரபரத்தாள் சுதா.

"நேரே அவர்கிட்டே போ. போய், இப்படி நம்பிக்கைத் துரோகம் செய்யலாமான்னு கேள். பெண் ஆவேசத்தோட உரிமைக்காகப் போராட ஆரம்பித்தால், எந்த ஆண்பிள்ளையும், அவன் எப்பேர்பட்டவனா யிருந்தாலும் சரி, 'கெக்கே பிக்கே'ன்னுதான் முழிப்பான். உடனே ஆசாமியைக் கைப்பிடியா பிடிச்சுக்கிட்டு, ஒண்ணு, ரிஜிஸ்ட்ரார் ஆபீசுக்குப் போ, இல்லே, உங்கண்ணாகிட்டே போ. உடனே முகூர்த்தத்துக்கு நாள் பாருன்னு சொல்லு. அண்ணா முரண்டு பிடிச்சா நீயே ஒரு சாஸ்திரிகள்கிட்டே போய் நாள் பார்க்கச் சொல். இதுதான் வழி. அப்படிச் செய்ய நீ தவறிட்டா, அப்புறம் 'அம்போ'ன்னு நின்று ''உன்னை நினைத்து நான் வாட''ன்னு சினிமா கதாநாயகி மாதிரி பாடவேண்டியதுதான்.

சாந்தாவின் பேச்சைக் கேட்டு சுதா அப்படியே அசந்து போனாள்.

"என்ன அசந்துட்டே, சுதா? இது வாழ்க்கை, ஆபீஸ் உத்தியோகமில்லே. உத்தியோகம் போனா, வேற உத்தியோகம் சம்பாதிச்சுக்கலாம். வாழ்க்கை போனா போனதுதான். மானேஜர்கிட்டே போய் எப்படி சண்டை போடறதுன்னு யோசிச்சா, வாழ்க்கையே இழந்து விடவேண்டியதுதான்..." என்றாள் சாந்தா மீண்டும்.

"சரி, அவரையே போய்க் கேட்கிறேன்..." என்று கம்பீரமாக எழுந்தாள் சுதா.

'கிர்ர்ர்....' என்று பஸ்ஸர் ஒலித்தது. சட்டென்று சுதா எழுந்திருந்தாள். ஆனால், அவளை முந்திக்கொண்டு, சரோஜ் உள்ளே சென்றுவிட்டாள்

'ம்ஹூம்....' என்று கறுவினாள் சுதா. ஆனால் மறுகணமே வெளியே வந்த சரோஜ், "சுதா, யூ ஆர் வான்டட்... ஜி.எம். உன்னைக் கூப்பிடுகிறார்...." என்றாள்.

சுதாவுக்கு நிம்மதி ஏற்பட்டது. 'நல்லா "நோஸ் கட்" கொடுத்து அனுப்பி இருக்கார்' என்று எண்ணி மகிழ்ந்தாள்.

உள்ளே சென்று ''பட்பட்''டென்று கேட்டுவிடுவது என்ற திடமான முடிவுடன், குரலைச் செருமிக்கொண்டு, ஸ்ரீதரின் அறைக்குள் நுழைத்தாள் சுதா. ஆனால், அவள் திட்டமிட்டுச் சென்றபடி, அவனிடம் சண்டை போடமுடியாமல் போய்விட்டது. காரணம் யாரிடம் நியாயம் கேட்கப் போனாளோ, அவனே அவளைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி, நியாயம் விசாரிக்க ஆரம்பித்தான்.

"சுதா, உன்னை நான் வேறு செக்ஷனுக்கு மாற்றலாம் என்று இருக்கிறேன்..." என்று, எடுத்த எடுப்பிலேயே சற்றுக் கடுமையாக ஆரம்பித்தான் ஸ்ரீதர்.

"என்ன..... டிரான்ஸ்பரா?" மனம் குலுங்கக் கேட்டாள் சுதா.

"எஸ்...... வேறு பிராஞ்சுக்கு இல்லை. வேறு டிபார்ட்மெண்டுக்கு... உன்னைப்போன்ற 'வீக் மைண்டட்' பெண்ணை 'ஸ்டெனோ'வாக வைத்துக் கொண்டிருப்பது எனக்குத் தான் ஆபத்து .நாளைக்கு என்னை பெரிய வம்பில் மாட்டிவைத்துவிடுவாயோ என்று பயமாக இருக்கிறது.....' என்று கரகரதக் குரலில் கூறினான் ஸ்ரீதர்.

"என்ன சொல்கிறீர்கள்?" தொண்டை அடைக்கக் கேட்டாள் சுதா.

"நல்ல வேளையாக, இப்போது உன்அண்ணனிடம் போய் நான் உன்னைக் காதலிப்பதாக அளந்திருக்கிறாய். அந்த அப்பாவிமனிதர் உன் வார்த்தையை நம்பி, கல்யாணமே பேச வந்துவிட்டார். இதே வார்த்தையை நீ ஆபீசுக்குள் நாலுபேரிடம் உளறி வைத்திருந்தால் என்ன ஆகியிருக்கும்? நோட்டீஸ் போர்டில் அல்லவா இதை எழுதிவைப்பார்கள். ஐ காண்ட் டாலரேட் யுவர் பூலிஷ்னெஸ்....." என்று கத்தினான்.

சுதாவுக்கு சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. நான்..... நான்....." என்று கண்ணீர் மல்கத் தடுமாறினாள்.

"என்ன நான், நான்? நீ எந்த ஆதாரத்தை வைத்துக்கொண்டு நான் உன்னை 'லவ்' பண்ணியதாக முடிவு செய்து பறைசாற்றினாய்?" - உரத்தகுரலில் கேட்டான் ஸ்ரீதர்.

சுதா அவமானத்தால் குறுகிப்போனாள். அவள் கை கால்கள் நடுங்கின. மயக்கம் போட்டு விழுந்துவிடுவாள் போலிருந்தது. அதை கவனித்த ஸ்ரீதரின் மனம் இளகிவிட்டது.

"சுதா, முதலில் நாற்காலியில் உட்கார். ஸிட் டௌன்" என்றான் கனிவான குரலில்.

அவனுடைய கனிவு, அவளுடைய குமுறலை அதிகப் படுத்தியது. விக்கி விக்கி அழ ஆரம்பித்துவிட்டாள்..

"சுதா, ப்ளீஸ், டேக் யுவர ஸீட்" என்றான் ஸ்ரீதர்.

"நான் உட்கார வேண்டாம், நிற்கிறேன், என்றாள் சுதா, விம்மலுக்கிடையே.

"சுதா, நீ நிற்கக்கூடிய நிலையில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அதனால்தான் உட்காரச் சொல்கிறேன். கீழே விழுந்துவிடுவாய் போல் இருக்கிறது....." என்றான்.

""விழுந்தால் விழுந்துவிட்டுப் போகிறேன். அப்படியே உயிரும் போய்விட்டால் பரவாயில்லை. நான் இருக்கிறதிலே என்ன லாபம்? உங்கள் வெறுப்புக்கு ஆளாகிவிட்டு நான் உயிருடன் இருக்க வேண்டுமா?"

ஸ்ரீதர் 'சட்'டென்று தன் இடத்தை விட்டு எழுந்திருந்து, பூவைத் தொடுவது போல் சுதாவைத் தொட்டு, நாற்காலியில் உட்காரவைத்தான்.

சுதா சடென்று, "நீங்கள்தான் என்னைக் காதலிக்க வில்லையே.... பிறகு ஏன் என்னைத் தொடுகிறீர்கள்? என்றால் வேகத்துடன்.

ஸ்ரீதர் ஒருகணம் தடுமாறிவிட்டான்.

"சுதா, உன்னை என் சகோதரியாக நினைத்துப் பரிவு காட்டக் கூடாதா?

"ஓர் அந்நியப்பெண், எந்த ஆடவனுக்கும் சகோதரியாகி விடமாட்டாள். எனக்கு அண்ணன் இருக்கிறான். வேறு சகோதரன் வேண்டாம். வேறு யார் சகோதரனாக இருந்தாலும், நீங்கள் சகோதரனாக இருக்க வேண்டாம்..." என்று பொரிந்து தள்ளினாள்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று புரியாமல் தயங்கி நின்றான் ஸ்ரீதர்.

வேதனைக் குமுறலுடன் தொடர்ந்தாள் சுதா : ஒரு பெண்ணின் மனத்தில் கற்பனையைத் தூண்டிவிட்டுப் பின்னால் உன்னைச் சகோதரியாகத்தான் நினைத்தேன் என்று சொல்வது, உங்களைப் போன்றவர்களுக்குச் சாதாரணம். ஆனால், நாங்கள்....."

"நான் கற்பனையைத் தூண்டிவிட்டேன் என்கிறாயே, என்னால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை ......" என்றான் ஸ்ரீதர் நிதானமாக.

"நினைவிருக்கிறதா? எத்தனை தடவை என் அழகைப் புகழ்ந்திருக்கிறீர்கள்? எத்தனை தடவை என் அலங்காரத்தை ரசித்து, 'நீ அப்படி டிரஸ் செய்துகொண்டால் இன்னும் நன்றாக இருக்கும்' என்று யோசனை கூறி இருக்கிறீர்கள்? அன்றொரு நாள் என்னை உட்கார்த்திவைத்து, காதல் கல்யாணத்தின் சிறப்பையெல்லாம் சொன்னீர்கள். இல்லையா? என்னை அழைத்து வைத்து அதையெல்லாம் ஏன் பேசினீர்கள்? அது போகட்டும், ஒரு புத்தகத்தை என்னிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னீர்களே, அதில் என்ன இருந்தது? ஒரு மானேஜரும், ஸ்டெனோவுந்தானே அந்தக் கதையில் காதலிக்கிறார்கள்! என்னிடம் ஏன் அந்தப் புத்தகத்தைத் தந்தீர்கள்? இப்படியெல்லாம் அணுஅணுவாக என் மனத்தை அலைக்கழித்துவிட்டு, இப்போது வந்து. ......" வார்த்தை முடிக்க முடியாமல் விம்மினாள் சுதா.

"ஐயாம் சாரி சுதா, எப்படி என் நிலையை விளக்குவது என்றே புரியவில்லை. நீ இப்படி ஒரு கற்பனையை வளர்த்துக் கொண்டிருப்பது தெரியாமல், நான் உன்னை ஒரு சிநேகதியாகவே மதித்துப் பழகிவிட்டேன்..." என்றான்.

"உங்கள் நிலைமையைச் சொல்லிவிடீர்கள். என் நிலைமையைச் சொல்லிவிடுகிறேன். முட்டாள்தனமாகவோ, இல்லை வேறு விதமாகவோ, நான் உங்கள்மேல் அன்பை வளர்த்துவிட்டேன். முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டது போல் என்று நீங்கள் நினைத்தாலும் சரி, என் நிலை அதுதான். நீங்கள் எனக்கு வாழ்வளிக்க முன்வராவிட்டால், சுதா என்றொரு பெண் இந்த உலகில் இருக்க மாட்டாள் ...."

இதைக் கேட்டு ஸ்ரீதர் ஸ்தம்பித்து உட்கார்ந்தான். சுதா விசும்பிக் கொண்டே இருந்தாள். சில விநாடிகள் அசாதாரண அமைதியில் கழிந்தன.

பிறகு, "சுதா" என்று அழைத்தான் ஸ்ரீதர்.

"ம்ம்......."

"என் நிலையைப்பற்றி நீ முழுமையாகத் தெரிந்த கொள்ளவில்லை. ஏன், ரொம்பப் பேருக்கு என் நிலைமை தெரியாது. இப்போது அதை நீ தெரிந்துகொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். இன்று மாலை நீ என் வீட்டுக்கு வர முடியுமா?" என்று கேட்டான்.

திடீரென்று இருள்சூழ்ந்த அந்தமுகத்தைப் பார்த்து 'சரி' என்று தலை அசைத்தாள் சுதா.

## 13

என்னைப் புரமெனவுங் கருதுவதோ? - கண்கள்
இரண்டினில் ஒன்றையொன்று கண்டு வெள்குமோ?

– பாரதியார்

கடிகாரம் ஐந்து முறை ஒலித்து நின்றது. ஜெனரல் மானேஜர் ஸ்ரீதரின் அறைக்கதவை பியூன் திறந்துவிட, 'டக்டக்' என்று ஷூவின் சத்தம் ஒலிக்க, வெளியே வந்த ஸ்ரீதர், ஸ்டெனோ பெண்மணிகள் இருக்கும் பக்கமாக நடந்தான். ''பஸ்ஸரை'' ஒலிக்க வைத்தால் அலறியடித்துக்கொண்டு வரும் பெண்கள் இருக்கும் அந்த இடத்திற்கு அவன் போகவேண்டிய அவசியம் இல்லை. இருப்பினும், அந்தச் சம்பிரதாயப் பெருமையைப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கமே அந்த மனநிலையில் அவனுக்கு இருந்ததாகத் தோன்றவில்லை.

அதிசயமாக ஸ்ரீதர் அங்கு வந்ததும், அங்கிருந்த பெண்கள் பதறியடித்துக் கொண்டு எழுந்தனர். ஸ்ரீதர் வேறு யாரையும் கவனிக்கவில்லை.

நேராக சுதா அருகே சென்று, "சுதா, போகலாமா?" என்று அழைத்தான்.

சாதாரண நாளாக இருந்து, மற்ற பெண்கள் மத்தியில் ஸ்ரீதர் தன்னை இப்படி அழைத்திருந்தால், எவ்வளவோ இறுமாந்து மகிழ்ச்சிக் கடைக்கண் சிரிப்போடு 'வானிடிபாக்'ஸை அலட்சியமாகத் தோள் வழியாகப் போட்டுக்கொண்டு துள்ளி ஓடியிருப்பாள்.

ஆனால், அன்று? சுதா கூட அபூர்வமான அடக்கத்திற்கு உள்ளாகியிருந்தாள். ஏதோவொரு புலனடக்கமும் பயமும் அவளுள் புகுந்திருந்தன. வளர்ந்த ஆடுக்குட்டிபோல் தன்னடக்கத்துடன் அவனைத் தொடர்ந்தாள் அவள்.

அன்று ஒரு புதிய ஸ்ரீதரையே கண்டாள் சுதா. இதற்கு முன் அவன் இவ்வளவு அழுத்தமான முகபாவத்துடன் இருந்ததைப் பார்த்ததில்லை. ஏதோவோர் அந்தரங்கமும், மௌனமும் அவன் முகத்தில் நிறைந்திருந்தன. அவன் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறானோ, என்ன பேசப் போகிறானோவென்று சுதாவுக்கு ஒவ்வொரு விநாடியும் மர்மமாக இருந்தது.

அசாதாரண மௌனத்துடன் நடக்கும் ஸ்ரீதரையும், அவனுக்குப் பின்னால் மென்னடையாகத் தொடரும் சுதாவையும் அலுவலகமே பிரமிப்புடன் பார்த்துகொண்டிருந்ததை அவர்கள் இருவருமே கவனிக்கவோ, பொருட்படுத்தவோ இல்லை.

ஒரு வார்த்தைகூடப் பேசாமல் காரில் டிரைவர் ஸீட்டில் ஏறி அமர்ந்தான் ஸ்ரீதர். அவனிடமிருந்து எந்த வார்த்தையையும், செய்கையையும் எதிர்பார்க்காமல், காரின் பின் கதவுகளில் ஒன்றை திறந்துகொண்டு, கேள்விக்குறி போல் ஒரு மூலையில் அடங்கி உட்கார்ந்து கொண்டாள் சுதா.

சுமார் இரண்டு மூன்று மைல்கள் கார் ஓடியது. அந்தப் பயணத்தில் அவர்கள் இருவரும் ஒருவரோடொருவர் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. ஆனால், அவர்கள் இருவரிடையேயிருந்த மௌனந்தான், எத்தனையோ விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தது.

பெரிய காம்பவுண்டுக்குள், கச்சிதமாக உள்ளடங்கியிருக்கும் களை பொருந்திய வீடு ஸ்ரீதருடையது. அந்தக் காம்பவுண்டுக்குள் ஸ்ரீதரோடு காரில் நுழையும்போது, சுதாவுக்கு லேசாகப் பரவசப் புல்லரிப்பு மனத்தில் தோன்றியது. அடுத்த விநாடியே ஒருவிதப் புழுக்கம் மனத்தை ஆகரமித்து, அந்தப் பரவசத்தைக் கரைத்துவிட்டது.

வீட்டிற்குள் நுழைத்தவுடன், "சுதா, வி வில் டாக் ஓவர் எ கப் ஆப் டீ... ஓகே ...." என்றான் ஸ்ரீதர்.

மந்திரத்தால் கட்டுண்டவள் போல் அந்த மௌனத்தில் கட்டுண்டிருந்த சுதா, சம்மதத்தை உணர்த்துவதுபோல் தலை அசைத்தாள்.

""அந்தப் பக்கம் முகம் கழுவும் அறை இருக்கிறது, கோ அண்ட் ரிப்ரெஷ் யூவர் செல்ப்..... " என்று சுதாவுக்கு வழிகாட்டிவிட்டு தன் அறைப்பக்கம் சென்றான் ஸ்ரீதர்.

"அந்த வாஷ் ரூமை வைத்திருந்த நேர்த்தியையும், அழகையும் கண்ட சுதா பிரமித்தாள். மிகச் சுத்தமாக, சுகாதார உணர்வுடன் மேல் நாட்டுப்பாணியில் அமைந்திருந்தது. அந்த இடம், தும்பைப் பூவைப்போல வெளுத்து மடித்து வைக்கப்பட்டிருந்த டவல், சோப்.... தன் சோர்வை மட்டுமல்லாது, தன் குழப்பத்தையும் சேர்த்துப் போக்கிவிடும் தீவிரத்துடன் நன்கு முகம், கை, கால் கழுவிச் சுத்தம் செய்துகொண்டு வெளியே வந்தாள் சுதா. அந்தப் பாத்ரூம் வாசலிலேயே பவுடர், சீப்பு போன்ற பொருள்களை ஏந்தியவாறு ஒரு வேலைக்காரி நின்றாள். "உங்களுக்குத்தான் அம்மா, ஐயா கொடுக்கச் சொன்னார்....." என்றாள். அவள்.

ஸ்ரீதர் எவ்வளவு அழகாக ஏற்பாடுகளைச் செய்கிறார் என்று எண்ணி மகிழ்ந்தாள் சுதா.

தன்னை லேசாக அலங்கரித்துக்கொண்டு ஹால் சோபாவில் வந்து அமர்ந்தாள் சுதா. ஸ்ரீதரின் அறையிலிருந்து 'பீட்டல்ஸ்' குழுவினரின் இசை மெதுவாக வெளியாகிக் கொண்டிருந்தது. அவனுக்கு அந்த இசை பிடிக்கும் என்பது அவளுக்குத் தெரியும். அந்த இசைக்கேற்ப, காலால் தாளமிட்டபடி அமர்ந்துகொண்டிருந்தாள் சுதா.

சிறிது நேரத்தில் புத்துணர்ச்சியுடன் வந்தான் ஸ்ரீதர். அவசர அவசரமாகக் குளித்துவிட்டு, பளிச்சென்று துலங்கிய சலவை வேஷ்டியையும் , டெரிலின் சட்டையையும் அலட்சியமாக அணிந்துகொண்டு, 'குப்'பென்று ஒரு புது மணம் பரவ, சுதாவின் எதிரே வந்தமர்ந்தான்.

ஸ்ரீதரிடம் என்னென்னவோ பேசவேண்டும், எப்படி எப்படியெல்லாமோ தன் குமுறலை வெளிப்படுத்தவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த சுதாவுக்கு, சட்டென்று ஒரு வார்த்தைகூடப் பேசத் தோன்றவில்லை. அவனையே பார்த்துகொண்டிருந்ததால் போதும் என்று தோன்றியது. டெரிலின் சட்டையை ஊடுருவித் தோன்றும் ரோமம் அடர்ந்த, ஆரோக்கியமான கட்டமைந்த மார்பையும் வேஷ்டியின் சரிகைக்கரை தொட்டு விளையாடும் செழுமையான சித்திர வடிவம் கொண்ட பாதங்களையும் மாறிமாறிப் பார்த்து, மெய்விதிர்ப்புடன் அமர்ந்திருந்தாள். அந்த விநாடியே அவற்றுள்

சரணடையவேண்டும் என்ற ஏக்கமும் தவிப்பும் அவளைக் குடைந்தன. நிராசை என்ற பயம் அவள் ஏக்கத்தைக் கலைக்கவே, கண்களிலிருந்து 'குபுகுபு'வென்று நீர் கொட்டியது.

இதைக் கவனித்த ஸ்ரீதர், "வாட் ஈஸ் திஸ், சுதா? நான் உன் மனத்தை புண்படுத்தவோ, உன்னைக் கோபித்துக்கொள்ளவோ இங்கு அழைத்து வரவில்லை... டூ யூ அண்டர்ஸ்டண்ட்? என்றான்.

சுதாவின் கண்ணீருக்குப் பயம்தான் காரணமோ என்று நினைத்துவிட்டான் ஸ்ரீதர்.

தன் பேதமையை உணர்ந்து அவசர அவசரமாகக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள் சுதா.

"சுதா, டேக் எவ்வரி திங் ஈஸி! மனத்தில் எந்தவிதக் கலவரமும் இல்லாமல் இருந்தால்தான், நாம் இப்போது மனம்விட்டுப் பேசமுடியும். உனக்கு மனம் சரியில்லையென்றால், நாம் இன்னொரு நாள்கூடப் பேசலாம்...... " என்றான்.

"நோ நோ... ஐ ஆம் ஆல்ரைட்... எனக்கு ஒன்றுமில்லை.. நாம் பேசலாம்..." என்ற சுதா, கண்களையும் முகத்தையும் துடைத்துக் கொண்டாள்.

ஸ்ரீதர் மென்மையாகச் சிரித்துக்கொண்டு, வீட்டின் உட்புறம் பார்த்தான். அங்கிருந்த பணியாள், டீயையும் பிஸ்கெட்டையும் ஒரு ட்ரேயில் வைத்துக்கொண்டு வந்து மேஜைமீது வைத்தான்.

"சுதா..... டேக் இட்..." என்ற ஸ்ரீதர், தானும் ஒரு பிஸ்கெட்டை எடுத்துக்கொண்டான்.

"எனக்காக ஒன்றரை ஸ்பூன் அளவுதான் சர்க்கரை போட்டிருப்பான். உனக்குத் தேவையானால் அதிகமாகப் போட்டுக்கொள்......"

உடனே சுதா பளிச்சென்று, "நானும் உங்களைப்போல் ஒன்றரை ஸ்பூன்தான் போட்டுக்கொள்வேன். அப்படியே பழகி விட்டேன்....." என்றாள், தன்னை மறந்து குழந்தைத்தனமாக

ஸ்ரீதர் மீண்டும் புன்னகைதான். 'சுதா, உன்னைப் புரிந்து கொண்டுதானிருக்கிறேன்' என்ற பாவம் அந்தப் புன்னகையில் இருந்தது.

டீயைப் பருகிக்கொண்டே, "சுதா, நான் உன்னிடம் காலையில் கோபித்துக்கொண்டது, உனக்கு வேதனையாக இருக்கிறது இல்லையா?" என்று அமைதியாகக் கேட்டான் ஸ்ரீதர்.

"இல்லை....... " என்றாள் சுதா.

"இல்லையா?" ஸ்ரீதரின் புருவங்கள் சுருங்கின.

"யெஸ்.. . . நீங்கள் என்னைக் கோபித்துக் கொண்டதில் எனக்கு வருத்தமே இல்லை. நீங்கள் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, என்னைக் கோபித்துக்கொள்ளும் உரிமையை உங்களுக்காக நான் ஒதுக்கிவைத்து எவ்வளவோ நாளாகிவிட்டது. ஆனால், நீங்கள் என்னை விரும்பவில்லை யென்பதை என் அண்ணாவிடம் சொன்னதால், என் அண்ணனின் மனம் மிகவும் வேதனைப்பட்டுவிட்டது. என் துன்பம் என்னுடன் இருந்திருக்கலாம். என் அண்ணனிடம் அதைச் சொல்லாமல், என்னையே அழைத்து நீங்கள் அதைச் சொல்லி இருக்கலாம்."

வார்த்தைக்கு வார்த்தை இடைவெளிவிட்டு, தன் பெருமூச்சை ஒவ்வொரு வார்த்தையோடும் கலந்து வெளிப்படுத்தினாள் சுதா.

ஸ்ரீதரின் குரல் கம்மியது. "யெஸ் சுதா, ஐ அக்ரீ வித் யூ... உன்னை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஒரு தங்கையின் வாழ்வை நினத்து ஒரு அண்ணன் படக்கூடிய வேதனையை என்னால் நன்றாகப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், என்னவோ ஒரு மனநிலையில், காதல் என்ற வார்த்தை காதில் விழுந்ததுமே நான் உணர்ச்சிவசப் பட்டுவிட்டேன். என் மனத்தை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. இல்லாவிட்டால் உங்க அண்ணனிடம் அவர் மனம் புண்படுகிற மாதிரி பேசியிருக்க மாட்டேன். சுதா, உன்னிடம் மனம் விட்டுச் சொல்கிறேன். கொஞ்ச காலமாகவே என் மனத்தை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை.... " - சிந்தனையில் ஆழ்ந்து, பேச்சை நிறுத்தினான் ஸ்ரீதர்.

திடீரென்று சுதாவின் முகத்தில் லேசான மலர்ச்சி தோன்றியது. இதழ்களிலும் புன்னகை அரும்பியது. அதைக் கவனித்த ஸ்ரீதர், " ஏன் சிரிக்கிறாய், சுதா?" என்று கேட்டான்.

"இல்லை, 'உன்னிடம் மனம் திறந்து பேசுகிறேன்' என்று சொன்னீர்களே அதை எண்ணித்தான். நீங்கள் என்னிடம் மனம் திறந்து பேசுவதற்கு தகுதி உள்ளவராக, பாத்தியதை உள்ளவராக இருக்க வேண்டும் என்றுதான் நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். அந்தக் கனவு கைகூடினால் சந்தோஷந்தான்...." என்றாள் தலை குனிந்து கொண்டே.

ஸ்ரீதரின் குரலில் சட்டென்ன்று சற்று கடுமை ஏறியது.

”நோ சுதா..... யூ ஆர் ராங், நீ நினைக்கிறது தப்பு. மனம் திறந்து பேசுவதாக நீ நினைக்கிறாய், இல்லையா? அப்படி ஓர் எண்ணம் உன் மனசிலே ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான், நான் உன்னிடம் மனம்விட்டுப் பேசுகிறேன். சுதா, உண்மையில் நான் உனக்காக ரொம்பவும் பரிதாபப்படுகிறேன். ஐ ரியலி ஸிம்பதைஸ் வித் யூ ...." என்றான்.

“"என்னது! எனக்காகப் பரிதாபப்படுகிறீர்களா?" - ஏக்கத்துடன் கேட்டாள் சுதா.

“யெஸ். உன்மேல் என்னால் பரிதாபப்படத்தான் தோன்றுகிறதே தவிர, கோபிக்கவோ, வெறுப்புக்கொள்ளவோ முடியவில்லை. உன்மேல் மட்டுமல்ல, உன்போன்று 'காதல்' என்ற மன எழுச்சிக்கு அடிமையாகித் தவிக்கும் இளம்பெண்கள் அத்தனை பேருக்கும் சேர்த்துச்சொல்கிறேன். அவர்கள் அனைவரையும் நினைத்து நான் பரிதாபப்படுகிறேன்...." என்றான்.

"ஏன்?" புரியாமல் கேட்டாள் சுதா.

"இப்படி உங்களைத் தவிக்கவிட்டது, இந்த அமைப்பின் கோளாறு. நம் சமுதாயக் கண்ணோட்டததின் குற்றம்.."

"இது என்ன புதுச் சித்தாந்தம்? காதல் என்பது தனிப்பட்டவர்களின் ஆசை, அபிலாஷை. அதை ஏன் சமுதாயத்துடன் முடிபோட்டுப் பேசுகிறீர்கள்?...."

"காரணம் இருக்கிறது சுதா, இப்போது நம் நிலைமையை விட்டு விடுவோம். ஒரு பொதுப் பிரச்சனையை எடுத்துக்கொள்வோம். நான் சொல்லப்போகிற பிரச்னை, வளர்ந்து வரும் இந்தச் சமுதாயத்தில், இளம்பெண்கள் முன்னால் பூதாகரமாகத் தோன்றிநிற்கும் ஒரு பெரும் பிரச்னை...."

ஸ்ரீதரின் முகத்தில் பரவியிருந்த தீவிர சிந்தனையையும், ஆவேசத்தையும் கண்டு, பிரமித்துப் போய் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் சுதா.

"சுதா, காதல் முறிவு என்று ஏற்படுவதற்கு மூல காரணமே, காதல் என்று ஒன்று ஏற்பட்டதுதானோ..... என்ன விழிக்கிறாய்? இப்படி அசட்டுத்தனமாகக் கேட்கிறேன் என்றா? நான் காரியத்தோடுதான் கேட்கிறேன். பதில் சொல். காதல் என்று ஒன்று ஏற்பட்டதால்தானே, காதல் தோல்வி ஏற்படுகிறது...."

இதைக் கேட்டு சிரித்தாள் சுதா. பிறகு, "அதற்காக காதல்லிப்பதே தப்பு என்று சொல்கிறீர்களா?" என்றுக் கேட்டாள்.

"தப்பு என்று சொல்லவில்லை, இந்தக் காலத்தில், ஒரு தர்மசங்கடமான சுழ்நிலையில் காதல் ஏற்பட்டு, பலவிதத் தொல்லைகளும் உண்டாக்குகிறது. அதுவும் பெண்களுக்கு ஏற்படும் தொல்லைகள் மிக அதிகம். நம் நாட்டில் பெண்களுக்கு காதல் ஏற்பட்டு, தோல்வியே ஏற்படாமல் இருந்த சூழ்நிலை ஒன்று இருந்தது. உனக்குத் தெரியுமா அது?" புதிர் போட்டான் ஸ்ரீதர்.

"என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள் சுதா.

"ஆமாம்! அப்படி ஒரு காலம் இருந்தது. அதுதான் 'சாரதா சட்டம்' வருவதற்கு முன்னால் இருந்தகாலம். அப்போது பெண்களுக்கெல்லாம் இளமையிலேயே, விவரம் தெரியாத காலத்திலேயே திருமணம் நடந்துவிடும். ஒரு பெண்ணுக்கு விவரம் தெரிந்து அவள் வாழ்க்கைக்கு தயாராக இருக்கிற காலத்தில், அவளுக்குத் தொட்டுத் தாலி கட்டிய கணவன் ஒருவன் இருப்பான். கொடி துவளும் நேரத்தில், அதைத் தாங்கும் கொழுகொம்பாகக் கணவன் தயாராக இருப்பான். அவள் அந்தக் கணவனையே காதலிக்கத் தொடங்குவாள். வாழ்க்கை சிக்கலே இல்லாமல் போகும். ஆனால், இளமை மணம் தவறு என்று ஒரு கோணத்தில் ஆராய்ந்த சமுதாய சீர்திருத்தவாதிகள், 'சாரதா சட்டம்' கொண்டுவந்தனர். அது ஒரு பழைய கொடுமையை நீக்கிவிட்டு, புதிய சிக்கல் ஒன்றை ஏற்படுத்திவிட்டது.... அதாவது, பெண்ணுக்கு ஒரு குறிப்பிட்ட வயது வந்த பிறகுதான் திருமணம் என்று நிச்சயித்தார்கள். ஆனால், பெண்கள் அந்த வயது வருமுன்னாலே இளமைக் கனவுகளுடன் வாழ்க்கைக்குத் தயாராகிவிடுகிறார்கள். அவர்கள் மனத்தில் இயல்பாகவே, இயற்கையின் தேவைகளில் நாட்டம் ஏற்பட்டுவிடுகிறது. அந்த நாட்டத்திற்குச் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுப்பதுபோல், சமுதாய மாற்றங்கள் வேறு எற்பட்டுவிட்டன. நான் என்ன சொல்கிறேன் என்று உனக்குப் புரிகிறதா? அதுதான், பெண்கள் படிப்புக்காகவும், பிழைப்புக்காகவும் ஆண்களோடு சமமாகப் பழக ஏற்பட்ட வாய்ப்பு. சுதா, இப்போது உன்னையே எடுத்துக்கொள், நீ என்னை விரும்பக்கூடிய சூழ்நிலை ஏன் ஏற்பட்டது? நீ என்னுடன் வேலைபார்க்க வந்ததால்தானே!

வேலை பார்க்க வராமல் இருந்திருந்தால், என்னைப் பார்க்கவோ, பழகவோ நேர்ந்திருக்காது. உன்னைப் 'பெண்பார்க்க' வரும் வரன்களில் உனக்குப் பிடித்தவனை மணந்து கொண்டு, சந்தோஷமாக நீ வாழ்ந்திருப்பாய், இல்லையா?

வெகு நேரத்திற்குப் பிறகு சுதா, வாய் திறந்து கேட்டாள்:

"அப்படியானால் பெண்கள் படிப்பதும், வேலைக்குப் போவதும் சமுதாயத்திற்குத் தேவையற்றவை என்கிறீர்களா?"

"சர்ட்டன்லி நாட்... நான் சொல்வதை நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. இந்த மறுமலர்ச்சி சமுதாயத்தில், பெண்களுக்கு சமவாழ்க்கை மிகவும் தேவை. ஆனால், அப்படி பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களையும் மற்றவர்கள் புரிந்துகொள்ள வேண்டுமே! பெண்கள் படிக்கும்போதும், வேலை செய்யும் போதும் ஆண்களோடு சகஜமாகப் பழகநேருவதையும் மற்றவர்கள் புரிந்து கொள்ளவேண்டும். அதேபோல், பழக நேரிடும்போது தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டிய மன பலமும் ஒரு பெண்ணுக்கு இருந்தாக வேண்டும். இந்த இரண்டு வித மனப்பக்குவங்களும் இரு சாராரிடமும் இல்லாமல் இன்று சமுதாயத்தில் ஏற்படும் தொல்லைகள் ஏராளம். அந்தத்தொல்லைகள் ஒரே விதமானவை அல்ல. பற்பல விதமானவை. ஆனால், அந்தப் பல்வேறு தொல்லைகளாலும் அதிகம் பாதிக்கப்படுவது பெண்கள் இனம் மட்டுந்தான். அப்படிப் பாதிக்கப்பட்டவர்களில் நீ ஒருத்தி, இல்லையா?" என்றான்.

"ஐயாம் நாட் ஏபிள் டு அண்டர் ஸ்டாண்ட் யூ! இருந்தாலும், சரியோ, தவறோ, நான் அப்படி ஒரு சமுதாயக் கொடுமையால் பாதிக்கப்பட்டுவிட்டேன் என்று நீங்கள் சொல்வதை ஒப்புக்கொள்கிறேன். பெண்ணின் சூழ்நிலையைச் சரியாக உணரும் மனநிலை மற்றவர்களுக்கு வேண்டும் என்று நீங்களே சொன்னீர்கள். அதன்படி என் நிலையை உணர்ந்து கொண்ட நீங்களே என்னை ஏற்றுக்கொண்டு விட்டால்......" கேட்கும் விஷயத்திற்காக நாணிக் குறுகி வார்த்தையை முடிக்க முடியாமல் தவித்தாள் சுதா.

ஸ்ரீதர் சட்டென்று பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு, அமைதியுடன், சுதா, நான் உன்னையும் புரிந்து கொண்டிருக்கிறேன், அதே போல் உன் சூழ்நிலையையும் புரிந்துகொண்டிருக்கிறேன். இருந்தாலும், உன்னை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் நான் இருக்கிறேன்..... " என்றான்.

"ஏன்?" - உடலெல்லாம் வியர்த்துவிட்டது சுதாவுக்கு.

"உன்னைப்போல் இன்னொரு சூழ்நிலையால் பாதிக்கப்பட்ட ஒரு பெண்ணுக்கு வாழ்வு தர வேண்டிய சுமை என்னிடம் இருக்கிறது."

"என்ன, இன்னொரு பெண்ணா?" உடல் லேசாக நடுங்கியது சுதாவுக்கு.

"ஆமாம், அவளும் உன்னைப்போல் பாதிக்கப் பட்டவள்தான். ஆனால், பாதிக்கப்பட்ட முறையும் சூழ்நிலையும் வேறு. நீ வேலைக்கு வந்ததால் பாதிக்கப்பட்டாய். அவள் 'கோஎஜீகேஷன்' கல்லூரியில் படிக்கச் சென்றதால், பாதிக்கப்பட்டாள்....." என்றவன், ஒரு விநாடி யோசித்தான். பிறகு சுதாவிடம், "அவளை நீ பார்க்க வேண்டுமா? என்னோடு வா" என்று கூறிவிட்டு, மாடிப்படிகளில் ஏறினான்.

ஒரே விநாடியில் இதயம் கண்ணாடியாக உடைந்து போக, நொறுங்கிய நெஞ்சத்துடன் அவனைப் பின்தொடர்ந்தாள் சுதா.

அவர் வாழ வைக்க வேண்டிய இன்னொரு பெண்?

'இப்படி ஒரு பயங்கரப் பிரச்சனையை என் முன் நிறுத்தவா என்னை அழைத்து வந்தார்? என்று மனம் குமுற, கால்கள் தள்ளாட, படியேறினாள் சுதா.

# 14

நானும் பலதினங்கள் பொறுத்திருந்தேன் - இது
நாளுக்கு நாளதிக மாகிவிட்டதே.

– பாரதியார்

**ம**ங்கிய வெளிச்சத்தில் மாடியிலுள்ள அந்தத் தனியறையில் ஒரு பெண் படுத்திருந்தாள். ஸ்ரீதரும், சுதாவும் மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தார்கள் வாடிய பூப்போல் கண்மூடிப் படுத்திருக்கும் அந்தப் பெண்ணையே வைத்த கண் வாங்காமல் பார்த்தாள் சுதா. அவள் மனத்துக்குள் பெரிய போரரட்டம் நடந்துகொண்டிருந்தது.

"யார் இவள்?"

'இவளுக்கும் ஸ்ரீதருக்கும் என்ன சம்பந்தம்?'

அவள் மனப் போராட்டங்களைப் புரிந்து கொண்டவன் போல் ஸ்ரீதர் பேசினான்.

"சுதா, பார்த்தாயா இவள் இருக்கும் கோலத்தை? துளிர்விட்டு வாழ வேண்டிய பருவத்தில் உலர்ந்துபோய்ச் சருகாகக் கிடக்கும் இந்தப் பெண்ணைப் பார்த்தாயா? சுதா. இவள் யார் தெரியுமா? என் அருமைத் தங்கை சுதா, என் ஒரே தங்கை..... " தொண்டை அடைக்க, வார்த்தைகள் தடுமாறக் கூறி முடித்தான் ஸ்ரீதர்.

'தங்கை.......'

இந்தச் சொல்லைக் கேட்ட பிறகு தான் சுதாவுக்குக் கொஞ்சம் நிம்மதி பிறந்தது. அந்தச் சோக சூழ்நிலையிலும் அவள் சற்று ஆறுதல் அடைந்தாள். மறுகணமே அவள் தனது ஆறுதலை எண்ணி ஏக்கப்பட்டாள். 'அவ்வளவு சுயநலமியா நான்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். 'அப்படிப் பார்த்தால் எல்லோருமே சுயநலமிகள்தான்' என்ற பதிலும் அவளுக்குக் கிடைத்தது.

தன் அருமை ஸ்ரீதரின் அருமைத் தங்கை என்றவுடன் அவளுக்கு அந்தப் பெண்மீது பரிதாபம் அதிகரித்தது. அவளை நன்றாகப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. மங்கிய அந்த வெளிச்சத்தில், அந்தப் பெண்ணின் முகம் சரியாகத் தெரியவில்லை. எனவே சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, விளக்கைப்போட ஸ்விட்ச் அருகே சென்றாள் சுதா.

"ஐயோ, வேண்டாம் சுதா, விளக்கைப் போட்டுவிடாதே... ப்ளீஸ்..." என்று கூவிக்கொண்டே அவளை நெருங்கினான் ஸ்ரீதர்.

"விளக்கைப் போடக்கூடாதா? ஏன்?" - புரியாமல் கேட்டாள் சுதா.

"விளக்கு என் தங்கைக்கு விரோதி. வெளிச்சம் அவள் வாழ்க்கைக்கு வேதனை. ஆமாம் சுதா, இப்படிச் சொன்னால் உனக்குப் புரியாது. அவளைப் பற்றியும், என்னைப் பற்றியும், எங்கள் குடும்பத்தைப் பற்றியும், விளக்கின் வெளிச்சம் இவளை என்ன செய்யும் என்பதைப் பற்றியும் நீ விளக்கமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். கம் ஆன், லெட் அஸ் கோ டௌன்...." என்றவன், அந்த அறையை மெள்ளச் சாத்திக்கொண்டு கீழே இறங்கினான்.

"மாதவா!" என்று தனது சமையல்காரருக்கு குரல் கொடுத்து, "ஒரு விருந்தாளியும் நம்முடன் சாப்பிடுகிறார். சமையல் ரெடியாகட்டும்" என்றான்.

'இன்னும் நான் விருந்தாளிதானா?' என்று சுதாவின் உள்மனம் கேட்டது.

"உட்கார் சுதா...." என்று கூறி, அவள் எதிரில் அமர்ந்து கொண்ட ஸ்ரீதர், எங்கோ சூன்யத்தை வெறித்துப் பார்க்க ஆரம்பித்தான்.

ஆமாம்! கடந்து போன அந்த வாழ்க்கைச் சூன்யத்தில் கண்டான் ஸ்ரீதர். அத்துடன் தன் தங்கையின் வாழ்க்கையே சூன்யமாகிவிட்டதை எண்ணி வேதனைப்பட்டுக்கொண்டான் அவன்.

பியானோ கட்டைகளுடன் அந்த மென்மையான விரல்கள் உறவாடின. 'பீத்தோவனின் சிம்பனி'யை, இசைத்துக் கொண்டிருந்தாள் பவானி. பியானோ மேஜையின் மேலே இருந்த 'ரொம்பாரன்ட்டி' 'ன் வண்ணஓவியங்கள்கூட, அந்த இசையில் மயங்கியதுபோல் அசைந்தது.

அது ஓர் அழகான அறை. ஒரு மூலையில் சோபாசெட்டுகளும், இன்னொரு மூலையில் திவானும், இடையில் ஆடும் நாற்காலியும், வெளிச்சம் தடையின்றிவரப் பெரிய பெரிய ஜன்னல்களும் அந்த வெளிச்சம் வேண்டாம் என்றால் தடுத்து நிறுத்த அழகிய பெரிய திரைச்சீலைகளும், அந்த அறையின் எழிலையும், அந்த அறைக்கு உரியவரின் செல்வச் செழுமையையும் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

அந்த அறையில்தான், நடுநாயகமாக வீற்றிருந்த, ஒரு பியானோவின் முன்னால்தான், பவானி உட்கார்ந்து இசையைப் பொழிந்து கொண்டிருந்தாள். 'டிரஸ்ஸிங் கௌன்' அணிந்து குட்டைத் தலைமுடியை ஒரு ரிப்பனால் முடிந்துகொண்டு, மிகவும் ஈஸி'யாக'அமர்ந்து கொண்டிருந்தாள் அவள். வாழ்க்கையையே அப்படி 'ஈஸி'யாக எடுத்துக்கொண்டாள் பவானி. பெரிய செல்வச் சீமானின் பெண். சிரமம் என்றால் என்னவென்றே தெரியாத ஒருவாழ்க்கை. வாழ்க்கையை ''ஈஸி'யாக எடுத்துக்கொள்வதில் என்ன சிரமம் இருக்கமுடியும்?

சென்னையில் உள்ள குறிப்பிடத்தக்க மிகக் குறைந்த செல்வக் குடும்பங்களில், சாரதியின் குடும்பமும் ஒன்று.

சென்னை வாழ் செல்வந்தர்களை இரு பிரிவாகப் பிரிக்கலாம். மேல்நாடுகள் போய் வந்தாலும் தமிழ் கலாச்சாரத்தில் ஊறி, நம் பழைய பண்பாட்டையும், வைதிகவாழ்க்கை நெறிகளையும் பாதுகாப்போர் ஒரு சாரார், இன்னொரு சாரார், நம் வாழ்க்கை நெறிகளை முற்றிலும் மேல்நாட்டுப் பாணியில் அமைத்துக் கொண்டவர்கள்.

சாரதியின் குடும்பம் இரண்டாவது வகை. சாரதி ஒரு பிரபல ஆங்கில மருந்துக் கம்பெனியின் பாகஸ்தர். பல ஆங்கில டைரக்டர்களுடன் தினசரி பழகுபவர். அதனால் அவர் தினசரி வாழ்க்கையே 'ஆங்கிலப்பாணி'யில் அமைந்துவிட்டது. அந்த வீட்டிலுள்ளவர்களின் பழக்க வழக்கங்கள், கண்ணோட்டம் எல்லாம் மேல்நாட்டுக் கலாசாரத்தில் ஊறியிருக்கும். அவருடைய நண்பர்களும் அந்தப் பாணியில் ஊரியவர்களே. உறவினர்களிலும், அந்த மனப்பான்மை கொண்டவர்கள்தான் அவர்களோடு நெருங்கியிருந்தார்கள்.

சாரதிக்கு ஒரு பெண்ணும், ஒரு பையனும். பையன்தான் ஸ்ரீதர். பெண் பவானி.

கான்வென்டிலே படித்த அந்தக் குழந்தைகள் கேம்பிரிஜிலோ, ஆக்ஸ்போர்டிலோதான் படிக்க வைக்கவேண்டும் என்று சாரதி ஆசைப்பட்டார். ஆனால், பெண்ணை வெளிநாட்டுக்கு அனுப்பத் தாயாருக்கு இஷ்டமில்லை. அதனால் ஸ்ரீதர் மட்டும் மேல்நாட்டுக்குச் சென்று படித்தான். சென்னையிலுள்ள 'கோ- எஜிகேஷன்' கல்லூரி ஒன்றில் படித்துக்கொண்டிருந்தாள் பவானி.

நான்கு சுவர்களுக்குள் ஓர் உலகத்தையே சிருஷ்டித்துக் கொண்டுவிடலாம் என்பதில் அபார நம்பிக்கை கொண்டவள் பவானி. 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்ட தன் படுக்கைஅறை, அந்த அறையை ஒட்டிய வரவேற்பறை இரண்டையும் அவள் வைத்திருந்த விதம் ….' உன் அறைக்குள் வந்துவிட்டால் ஜெனிவாவிலோ, ஜீரிச்சிலோ இருப்பது போன்ற பிரமை உண்டாகிறது பவானி' என்று அவள் தோழிகள் சொல்வார்கள். அப்படி ஒரு பிரமை ஏற்படும். அந்த பங்களாவின் மூன்றாவது மாடியில் இருந்தது அவள் அறை. ஜன்னல் வழியாகப் பார்த்தால், நகரின் வீடுகளோ, வீட்டின் கூரைகளோ தெரியாது. ஓங்கி உயர்ந்த மரங்களும், நீலநிற வானமுந்தான் தெரியும். திரைச்சீலையைத் தள்ளிவிட்டு, அந்த அறையிலுள்ள 'திவானில்' அமர்ந்து கொண்டு வெளியே பார்த்தால், உண்மையிலேயே ஜெனிவாவில் இருக்கிறோமோ என்ற பிரமை ஏற்படும்.

பவானியின் உலகம் தனி; போக்குத் தனி; கனவுகள் தனி, அவற்றில் மற்றவர்கள் தலையிடுவதும் இல்லை, தலையிட அவள் அனுமதிப்பதுமில்லை.

அன்று தன் அறையில் அமர்ந்து வெகுநேரமாகப் பியானோ வாசித்துக் கொண்டிருந்தாள் பவானி. மனம் நிறைய, ஆசைநிறைய வாசித்துக்கொண்டிருந்தாள். அதில் ஒரு நிறைவு கிடைத்தது அவளுக்கு. ஆனால், கடந்த பத்து நிமிஷமாக அவளால் சரியாக வாசிக்க முடியவில்லை. கீழே உள்ள ஹாலில் திடீர்திடீர் என்று சிரிப்பொலியும், ''ஹாஹா'' என்ற இரைச்சலும் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த ஒலி, அவள் இசைக்கு அபசுரமாக அமைந்தது. அவளால் தடையின்றி வாசிக்க முடியவில்லை.

"ஒ காட் ..." என்று கூறி, காலைத் தரையில் உதைத்துத் தன் சகிப்பைக் காட்டிக்கொண்டாள். விடாமல் அந்தச் சத்தம் வந்துகொண்டே இருந்தபோது, 'சங்கீத ஞானம் இல்லாத காட்டு மிராண்டிகள் ..... ப்ரூட்ஸ்..." என்று கத்தியவாறு, கதவைத் திறந்துகொண்டு படிகளில் இறங்கி, கீழே சென்றாள்.அந்தப் பங்களாவின் இரண்டாவது தளத்தில் உள்ள பெரிய ஹாலில் அப்போது சீட்டுக் கச்சேரி நடந்துகொண்டிருந்தது. அந்த சீட்டாட்ட லயிப்பில் ஏற்பட்ட உற்சாகம்தான், அப்போது சிரிப்பொலியகவும், கூச்சலாகவும் வெடித்திருக்கிறது. அன்று விடுமுறை நாளானதால் பல நண்பர்கள் அங்கு கூடியிருந்தார்கள்.

மாடியிலிருந்து வேகமாக இறங்கிய பவானி, "ஏன் இப்படிக் கூச்சல் போடுகிறீர்கள்? சங்கீதத்தை ரசிக்க தெரியாத ஔரங்கசீப்புகளாக நீங்கள் இருப்பது பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை. அட்லீஸ்ட் பிறருடைய இசையை மதிக்கத் தெரிந்த நாகரிகமாவது இருக்கவேண்டாமா?" என்று கத்தினாள்.

அவள் அப்படித்தானே நடந்துகொள்வாள். 'நாலுபேர் முன்னால் இப்படிப் பேசலாமா?' என்றெல்லாம் எண்ணிப் பார்க்கமாட்டாள். மனத்தில் தோன்றுவதைப் பளிச்சென்று சொல்லிவிடுவாள். அதுதான் அவளுடைய பலம். அதுவே அவளுடைய பலவீனமாகவும் இருந்தது.

அந்தக் கூட்டத்திலிருந்து கேலியான ஒரு குரல் அவளை நோக்கிப் பாய்ந்தது:

"புத்தியைக் கூர்மைப்படுத்தும் சீட்டாட்டத்தில் ஈடுபடுவதற்கு அறிவு தீட்சண்யம் இருக்கவேண்டும்.அந்தப் புத்திசாலித்தனம் இல்லாவிட்டால், அந்தப் புத்திசாலித்தனத்தைப் புரிந்துகொண்டு பாராட்டுகிற விவேகமாவது இருக்கவேண்டும்...... இப்படி இடையில் வந்து கலாட்டா பண்ணக் கூடாது...."

அந்தக் குரல்......

அவளுக்குத் தெரியும்.......

அது குமாருடையது.

குமார், சாரதியினுடைய சக டைரக்டரின் பிள்ளை. அவனும் பவானியும் கல்லூரியில் சேர்ந்தே படித்துக்கொண்டிருந்தார்கள். அழகான இளைஞன். துடுக்குத்தனமான விளையாட்டுப் பிரியன். அடிக்கடி அந்த வீட்டுக்கு வருவான். சீட்டு விளையாடுவான். ஸ்ரீதருக்கு நண்பன். அந்த வீட்டில் பவானி என்ற அழகிய இளம்பெண் இருந்தும், அவன் கவனம் அவள்மேல் செல்லவேயில்லை. அதற்கு பவானியின் தனியான முரட்டு சுபாவம் ஒரு காரணம் என்றாலும், குமாரின் போக்கும் ஒரு காரணம். அவனுக்கு மனத்தில் கள்ளத்துடன் ஒரு பெண்ணிடம் பழகும் மனோபாவம் கிடையாது. அதற்காக பெண்களைக் கண்டால் ஒதுங்குவதும் கிடையாது. ''பளிச் பளிச்'' என்று மனத்தில் தோன்றுவதைப் பேசிவிடுவான். அப்படியொரு விளையாட்டுப்பிள்ளை. அதனால்தான் அந்தவீட்டில் உள்ளோருக்கு அவனைப் பிடிக்கும்; பவானியை தவிர. பவானிக்கு அவன் மேல் வெறுப்பு கிடையாது. ஆனால், அவனுடைய அந்தத் துடுக்குப் பேச்சை அவள் வெறுத்தாள். அதனால் எரிச்சல் அடைந்தாள். 'சுத்த 'லூஸாக' இருக்கிறானே இந்த ஆள்' என்று அடிக்கடி கோபம்வரும். அவள் கோபத்தை தூண்டிவிட்டுக் கொண்டிருப்பான் குமார்.அப்படியொரு ராசி அவர்களிடையே. தினமும் இவர்கள் கல்லூரியில் சந்தித்து, சண்டை போட்டுக்கொள்வார்கள்.

அன்றும் அப்படியொருநிலைதான். குமார் சொன்னவார்த்தைகள் பவானியைக் கோபமூட்டின.

"ஷட் அப், குமார். இந்த 'ரெச்செட்' சீட்டாட்டத்தைப் போல்தான் உன் புத்தியும் இருக்கிறது. சங்கீதத்தையும், சீட்டாட்த்ததையும் ஒப்பிட்டுப் பேச வெட்கமாக இல்லை..." என்று கத்தினாள்.

"நோ.... ஐ ஆம் நாட் ஆஷேம்ட்... இரண்டும் இரண்டும் விதக் கலைகள்தான். பியானோவை யார்வேண்டுமானாலும் மாஸ்டர் பண்ணலாம். அதற்கு அறிவு தேவையில்லை. ஆனால், சீட்டாட்டம் அப்படியில்லை. அதில் வெற்றிபெறப் புத்திசாலித்தனம் தேவை" என்று வேண்டுமென்றே இடக்காகப் பேசினான்.

பவானிக்கு ரோஷம் வந்துவிட்டது.

"உங்க சீட்டாட்டத்தைபற்றி எனக்குத் தெரியும். அது சோம்பேறிகளின் ஆட்டம். முட்டாள்கூட ஆடலாம்" என்று கத்தினாள்.

"ஆடிப் பார்த்தால் தெரியும்....." என்று சவால் விட்டான் குமார்.

"என்ன பெரிய ஆட்டம். நான் ஆடி உங்களைத் தோற்கடிக்கிறேன் ... என்று கூறி அவர்களுடன் ஆட உட்கார்ந்தாள் பவானி.

ரோஷத்துடன் ஆட ஆரம்பித்தாள், பவானிக்கு மனத்தில் நிதானம் இல்லை. அதிலும், குமார் வேண்டுமென்றே தப்பாட்டம் ஆடினான். மற்றவர்கள் எல்லோரும் ஆண்கள் ஆதலால், பவானியை மட்டம் தட்டுவதில் அவர்களுக்கு குஷி. அதனால் குமார் தப்பாட்டம் ஆடுவதை அவர்கள் கண்டும் காணமல் இருந்தார்கள். எனவே, பவானி தோற்றுக்கொண்டே இருந்தாள். தோற்கத்தோற்க, அவளுக்குக் கோபம் அதிகரித்துக்கொண்டே இருந்தது. வெகுநேரம் பொறுத்துதான் குமாரின் திருட்டுத்தனம் அவளுக்குத் தெரிந்தது. மறுகணம் கையிலிருந்த சீட்டுகளை சுக்கல் சுக்கலாகக் கிழித்து, அவன் மூஞ்சியில் எறிந்துவிட்டு யூ ஸ்கௌண்ட்ரல்" என்று கத்திவிட்டு மாடிக்கு சென்றாள்.

இதைத் தொடர்ந்து, அடிக்கடி குமாரும், பவானியும் மோதிக்கொள்ளும் சந்தர்ப்பங்கள் வாய்த்தன.

பவானியின் வீட்டில் டென்னிஸ்கோர்ட், பாட்மிண்டன் கோர்ட் எல்லாம் உண்டு. சில சமயம் பாவானியும், குமாரும் 'சிங்கில்ஸ்' ஆடுவார்கள். குமார் விளையாட்டில் உண்மையாகவே கெட்டிக்காரன். அதனால் பவானி இயல்பாகவே தோற்கவேண்டி இருந்தது. இருந்தாலும், பவானி தன் தோல்வியை ஒத்துக் கொள்வதில்லை. குமார் தப்பாகவே ஆடுவதாகக் குற்றம் கண்டுபிடித்து, சண்டை பிடித்தாள்.

இப்படி அடிக்கடி அவர்களுக்குள் ஏற்பட்ட விளையாட்டுச் சண்டைதான், பவானிக்கு குமாரைச் சதா நினைத்து நினைத்து எரிச்சல் படவைத்தது. பொழுது விடியும்போதே 'இன்றைக்கு குமாரைச் சீட்டாட்டத்தில் தோற்கடிக்க வேண்டும். இவன் அப்படிப் பேசினால் நாம் எப்படிப் பேசி அவன் வாயை அடைப்பது, அவனை எந்த விஷயத்தில் மடக்கலாம் ...." இப்படிப்பட்ட சிந்தனைகளோடு படுக்கையை விட்டு எழுவாள். இது, பவானிக்குப் புது அனுபவமாக இருந்தது. கல்லூரியில் அவனை அடிக்கடி சந்திக்க ஆரம்பித்தாள். சண்டை போடத்தான். இதுவரை எந்த ஆணும் அவள் கவனத்தைக் கவர்ந்தது இல்லையே. அப்படியிருக்க இந்தக் குமாரின் நினைவு - அது கோபத்திலும் எரிச்சலிலும் ஏற்பட்டலுங்கூட ஏன் தனக்குச் சதா வந்துகொண்டிருக்கிறது என்று அவளுக்குப் புரியவில்லை. எவ்வளவு முயன்றாலும் அவனுடைய நினைவை அவள் மனத்திலிருந்து அகற்றவே முடியவில்லை.

அது ஏன்?

இந்தக் கேள்விக்குப் பவானிக்கு விடை கிடைக்கவில்லை. அந்தக் கேள்விக்கு ஒருநாள் எதிர்பாராமல் விடை கிடைத்தது.

"சியர்ஸ்....."

மதுக்கோப்பைகளை உயரத்தூக்கி, வாழ்த்திக்கொண்டு அருந்தினர் அனைவரும். அந்தக் கூட்டத்தில் பலர் இருந்தனர். அவர்களில் மிஸ்டர் அண்டு மிசஸ் மிட்சல் முக்கியமானவர்கள். மிஸ்டர் மிட்சல் சாரதியின் கம்பெனியில் ஒரு டைரக்டர். இந்தியாவில் வாழ்ந்தது போதும் என்ற முடிவுடன் இங்கிலாந்துக்குத் திரும்பத் தீர்மானித்தார் அவர். அதையொட்டி சாரதி, தன் வீட்டில் அவருக்கு ஒரு விருந்து கொடுத்தார். சாரதி வீட்டில் விருந்து என்றால், மது இல்லாமல் இருக்காது.

அந்த விருந்துக்குக் குமார் வந்திருந்தான். அழகான உடை உடுத்தி, பவானி வளைய வந்து கொண்டிருந்தாள். மிஸ்டர் மிட்சலுடன் அமர்ந்துகொண்டு உரையாடிக் கொண்டிருந்தான் குமார். வயசில் இளையவனாக இருந்தாலும், குமாருடைய விதரணையானை பேச்சு, மிஸ்டர் மிட்சலைக் கவர்ந்தது. அவனிடம் பல விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தார் அவர்.

அப்போது பவானி, மிசஸ் மிட்சலுடன் பேசிக் கொண்டிருந்தாள். குமார், மிஸ்டர் மிட்சலைக் கவர்ந்ததுபோல், பவானி மிசஸ் மிட்சலைக் கவர்ந்து கொண்டிருந்தாள்.

"கம் ஆன் யங் மேன்...டேக் இட் " என்று, ஒரு கிளாசில் கொஞ்சம் மதுவை ஊற்றி, குமாரிடம் நீட்டினார் மிட்சல்.

"நோ..... தேங்க் யூ..... ஐ வில் ஹாவ் கோக்" என்று கூறி. ஒரு கோகோ கோலாவை எடுத்துக்கொண்டான் குமார். அவனுடைய செயல் அந்த ஆங்கிலேயரை மிகவும் கவர்ந்தது.

" இந்த இளைஞன்தான் உண்மையான இந்திய இளைஞன்" என்று சற்று உரக்கவே ஆங்கிலத்தில் பாராட்டினார்.

அந்தச் சமயம் அடுத்த மேஜையிலிருந்து மிசஸ் மிட்சல், ஐடு ஹாவ் பவுண்ட் எ ட்! இண்டியன் கேர்ல்..." என்று கத்தினாள். தன்னை ஓர் லட்சிய இந்தியப்பெண் என்று திருமதி மிசல் சொன்னதும், பவானி வெட்கத்தால் தலை குனிந்தாள்.

" ஐஸி....." என்ற மிட்சல், பவானியை உன்னிப்பாகப் பார்த்தார்.

மிட்சல் தம்பதியின் பாராட்டைக் கேட்டு, எல்லோருடைய கவனமும் குமார் - பவானி இருவர்பால் திரும்பியது.

மிட்சல் எழுந்திருந்து குமாரை ஒரு கையாலும் பவானியை ஒரு கையாலும் அரவணைத்துக்கொண்டு, " நல்ல ஜோடி.... பெஸ்ட் விஷஸ் ....." என்று பாராட்டினார். இதைக் கேட்டு மற்றவர்கள் எல்லோரும் உற்சாகத்துடன் பாராட்டினர்.

குமார், பவானியைப் பார்த்துக் குறும்பாகச் சிரித்தான். பவானி, உதடுகளைச்சுளித்து, அவனுக்கு அழகு காட்டுபவள் போல், முகத்தை ஒரு வெட்டு வெட்டினாள். அவளுடைய அந்த சேஷ்டை, மீண்டும் மற்றவர்களின் ஆரவாரத்தை எழுப்பியது.

அன்றிரவு பவானியின் மனத்தில் பெரும் போராட்டம். ஏதோ ஒரு மர்மம் அவள் மனத்தில் புலப்பட்டுவிட்டது போலவும், அதே நேரத்தில் எதுவும் புரியாத படபடப்பு நெஞ்சில் ஏற்பட்டது போலவும் குழம்பிக் குழம்பி தவித்தாள்.

மிட்சல் அவளையும் குமாரையும் இணைத்து, 'சரியான ஜோடி' என்று சொன்னதும், முதலில் அவளுக்குக் கோபந்தான் வந்தது. சந்தர்ப்பச் சூழ்நிலையால் தன் கோபத்தை அடக்கிக் கொண்டாள். ஆனால், நேரமாக ஆக, அவள் மனத்திற்குள்ளிருந்த ஒரு குரல், 'அவன்தான் உனக்குச் சரியான ஜோடி. உங்கள் ஜோடிப் பொருத்தத்தை மிட்சல் சரியாகக் கண்டுபிடித்துவிட்டார்.....' என்று கூறுவதுபோல் இருந்தது.

வரவர அந்தக் குரல் அவள் மனத்தில் உரக்க ஒலிக்க ஆரம்பித்தது. அந்தக் குரலை அவள் மனமே நம்ப ஆரம்பித்துவிட்டது.

'அப்படித்தானே இருக்குமோ? இல்லாவிட்டால் அவரைப்பற்றி நான் ஏன் சதா நினைக்கிறேன்? கல்லூரியில் அவரைக் காணும்போது பரவசம் ஏன் ஏற்படுகிறது? அந்த நினைவு எப்போதும் ஏன் என் நெஞ்சில் ஏற்படுகிறது? அவருக்கும் எனக்கும் உள்ள இயல்பான பொருத்தத்தைப் புரிந்துகொள்ளாமல் நான் சண்டை போட்டதெல்லாம் என் அகங்காரத்தினால்தானோ?'

பவானி ஒரு முடிவுக்கு வந்து விட்டாள்.

சார்..... சாப்பாடு ரெடி......"

சமையற்கார மாதவன் குரல் கொடுத்தான். 'ஆஷ்ட்ரே' சிகரெட் துண்டங்களால் நிரம்பி வழிந்தது. அடுத்த அறையிலிருந்து டிரான்சிஸ்டரில் வீணைமேதை பாலச்சந்தரின் இசை, மெதுவாகக் கேட்டுக்கொண்டிருந்தது.

ஸ்ரீதர், சுதாவையே வெறித்துப்பார்த்தான். பவானிக்கு 'மேலே என்ன ஆயிற்று?' என்று கேட்க அவள் துடித்தாள்.

"சுதா, அந்த நாள், அதுதான், மிட்சலுக்கு என் தந்தை விருந்து கொடுத்த அந்த நாள் ஏன் வந்தது என்று எண்ணி நான் எவ்வளவு துடித்திருக்கிறேன் தெரியுமா? 'தட் வாஸ் க்ருயல் டே பார் பவானி.... ' ஆமாம், அந்த நாள் வந்தே இருக்கக் கூடாது .... என்றவன், "கம் ஆன், நாம் போய்ச் சாப்பிடலாம், வா... சாப்பிட்டுக்கொண்டே பேசுவோம்" என்றான்.

பவானிக்கு மேலே என்ன ஆயிற்று என்ற துடிப்புடன், அடை அவன் எப்போது சொல்லப்போகிறான் என்று அறியும் தவிப்புடன் அவனைப் பின்தொடர்ந்து, டைனிங் டேபிளை அடைந்தாள் சுதா.

# 15

கனவு கண்டதிலே ஒருநாள் கண்ணுக்குத் தோன்றாமல்

இனம் விளங்கவில்லை எவனோ என்னகத் தொட்டுவிட்டான்

\- பாரதியார்

**த**னக்கு மிகவும் பழக்கமான ஒரு ட்யூனைத்தான் பவானி மறுநாளும் பியானோவில் வாசித்துக்கொண்டிருந்தாள். ஏனோ தினம் போல் அவளால் அன்று வாசிக்க முடியவில்லை. மனம் அதில் லயிக்கவில்லை. திரும்பத் திரும்ப மிஸ்டர் மிட்சலின் அந்த வார்த்தைகளே அவள் நெஞ்சில் அலைமோதின. குமாரின் முகமே அவள் கண் முன்னால் நிழலாடியது.

கீழே இருந்து குமாரின் சிரிப்பொலி கேட்கிறதா என்று கவனத்தில் இருந்தால் அவள்.

வெகுநேரமாகியும் அமைதி நிலவியது. எந்தவிதச் சத்தமும் கேட்கவில்லை. அந்த அமைதியை அவள் வெறுத்தாள். பொதுவாகத் தன் இசைக்கு எந்த அமைதி தேவை என்று நினைத்தாளோஅந்த அமைதி அன்று இருந்தும் அவளுக்கு அது பிடிக்கவில்லை.

'சிரிப்பொலி...... குமாரின் சிரிப்பொலி ... ' அதுதான் அவளது அப்போதயத் தேவையாக இருந்தது.

'என்ன ஆயிற்று இன்று? இன்றைக்கும் விடுமுறைதானே? லீவ் என்றால் கீழே ஜமா சேர்ந்துவிடுமே..... இன்று ஏன் இப்படி?'

பியானோ வாசிப்பிலிருந்து விடுபட்டு எழுந்திருந்தாள் பவானி.

மெல்லப் படிகளில் இறங்கி முதல் மாடிக்கு வந்தாள்.

என்ன ஆச்சர்யம்!

முதல் மாடி ஹாலில் மும்முரமாகச் சீட்டாட்டம் நடந்து கொண்டிருந்தது. ஆனால், அது மிக அமைதியாக நடந்து கொண்டிருந்தது!

ஏன் அப்படி?

பவானிக்கு எப்படி பியானோவில் கவனம் செல்லவில்லையோ, அப்படி குமாருக்கும் சீட்டாட்டத்தில் கவனம் செல்லவில்லை. உயரேயிருந்து பியானோவின் இனிய ஒலி வருகிறதா என்றுதான் உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அவனும் பவானியின் மனநிலையிலேயே இருந்தான். மிட்சலின் வார்த்தைகள் அவனையும் பாதித்திருந்தன.

'நமக்கும் பவானிக்கும் உள்ள பிணைப்பால்தான் நாம் அவளிடம் இடக்கு வாதம் செய்து, சண்டைபோட்டுக் கொண்டிருந்தோமோ? அவளை நாம் உண்மையில் காதலிக்கிறோமோ?' - இதையே எண்ணி மறுகிக் கொண்டிருந்தான் குமார்.

அந்த எண்ணத்தின் தொடர்ச்சியாக பவானியின் அழகு, துடுக்குத்தனம் ஒவொன்றையும் நினைத்து நினைத்து ரசித்துகொண்டிருந்தான்.

மனித ஜாதிக்கு அசைபோடும் ஆற்றல் இல்லையென்று யார் சொன்னது? இந்தக் காதலர்களுக்கு அது பழக்கப்பட்ட கலையாயிற்றே! நடந்ததை எண்ணி எண்ணி அசைபோட்டே காலத்தைக் கழிப்பவர்கள் அல்லவா அவர்கள்?

'இந்த ஆட்டம் நான் ஆடவில்லை' என்பதுபோல் கையிலிருந்த பதின்மூன்று சீட்டுகளையும் கீழே எறிந்துவிட்டு, தற்செயலாகத் திரும்பினான் குமார். அப்போது அறை வாசலில், சிலைபோல் ஒயிலாகக் கதவில் சாய்ந்து நின்றிருந்த பவானியைக் கண்டதும், அவன் மனம் உற்சாகத்தில் துள்ளியது. இருந்தாலும் இருவரும், பழைய பழகிப்போன குணத்தில், போலியாக முகத்தைக் கடுகடுவென்று வைத்துக்கொள்ள முயன்றனர். ஆனால், இருவரும் அந்த முயற்சில் தோற்றனர். இருவரின் கண்களும் ஏதோ ஓர் ஈர்ப்பில் கலந்தன.

மெல்ல ஹாலுக்குள் நுழைத்தாள் பவானி.

"என்ன .... எங்களுடன் ஜாயின் பண்ணிக்கொள்கிறாயா?" என்று அவளைப்பார்த்துக் கேட்டான் குமார்.

'உங்களுடன் மட்டும் ஜாயின் பண்ணிக்கொள்ளத் தயார்' என்று மனத்திற்குள் சொல்லிக்கொண்ட பவானி, "தப்பாட்டம் ஆடித் தோற்கடிக்கலாம் என்று ஆசையா? என்றாள். எவ்வளவு முயன்றும், அவள் குரலில் கோபம் தொனிக்கவில்லை. அவளுடைய முயற்சியையும் மீறி குழைவுதான் தெரிந்தது.

"ஆடிப் பார்த்து, தப்பாட்டம் ஆடினால் கண்டுபிடிக்கணும். அதுதான் சாமர்த்தியம்..." என்றான் குமார். அவன் குரலில் 'பவானி, ப்ளீஸ் ! என்னோடு இருந்து ஆடேன்.." என்ற ஏக்கம் மிகுந்த அழைப்புதான் ஒலித்தது.

பவானி சீட்டாட்டத்தில் உட்கார்ந்தாள். அவளுக்கு ஆட்டத்தில் லயிப்பு இல்லை. சீட்டைப் பிடித்திருக்கும் விரல்களின் அழகிலேயே லயித்திருந்தது.

அன்றைய சீட்டாட்டம் அவர்களைப் பொறுத்த அளவில் ஒரு புதுமையான அனுபவமாகவே இருந்தது. சீட்டாட்டதிற்காக அவர்கள் நெருங்கி உட்காரவில்லை. ஆனால், எதிரெதிரில் உட்கார்ந்திருப்பதற்காகவே சீட்டாடிக்கொண்டிருந்தனர்.

இப்படி......

அவர்களுடைய நெருக்கம் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தொடந்தது. நெருங்கியிருப்பதற்காகவே அவர்கள் டென்னிஸ் விளையாடினர். நெருங்கியிருப்பதற்காகவே தத்தம் வீடுகளில் 'பார்ட்டி' நடக்காதா என்று ஏங்கினார். முடிவில் ஒருவரையொருவர் விலகி இருக்க முடியாதபடி ஏக்கத்திற்கும் தவிப்புக்கும் உள்ளாகிவிட்டனர்.

அதன் பிறகு....... ?

வெளியிடங்களில் பெரும்பாலும் குமாரையும் பவானியையும் சேர்ந்தே பார்க்கலாம். அவர்களுடைய பழக்கத்தை வீட்டிலுள்ள பெரியவர்களும் தடுக்கவில்லை.

மாலை நான்கு மணியானால் போதும், குமாரும் பவானியும் பீச்சுக்குப் போய்விடுவார்கள். கடற்கரை மணலில் உட்கார்ந்து இரண்டு மணிநேரமாவது பேசிக்கொண்டிருந்தால்தான், அவர்களுக்கு அன்றைய பொழுது கழிந்தாற்போல் இருக்கும். எதற்காக அப்படிக் கட்டாயமாகப் போகவேண்டும், அங்கு போய் எதை பேசுவது என்பதெல்லாம் முக்கியமில்லை. சேர்ந்து போய் எதையாவது பேசிக்கொண்டிருந்துவிட்டுத் திரும்பவேண்டும் என்பதுதான் அவர்களுக்கு முக்கியம். எந்தவேலை, எந்த சூழ்நிலை இருந்தாலும் அந்த மணிப்பிரகாரம் அவர்கள் பீச்சுக்குப் போகத் தவறுவதில்லை.

அன்றொரு நாள்........

வானம் மப்பும் மந்தாரமாக இருந்தது. 'சிலுசிலு'வென்று காற்று வீசிக்கொண்டிருந்தது. 'எந்த நிமிஷம் மழை வருமோ?' என்று பயமுறுத்திக்கொண்டிருந்தது. யாரும் அன்று பீச்சுக்குப் போகத் துணிய மாட்டார்கள்.

ஆனால், குமாரும், பவானியும் இயற்கையின் சீற்றதைக்கண்டு கலங்கவில்லை. 'அடாது மழை பெய்தாலும் விடாது பீச்சுக்குப் போயே தீருவது' என்ற முடிவுடன், புறப்பட்டுவிட்டாட்கள்.

மழை வரும் போலிருக்கிறதே.." என்று லேசாகத் தலையைச் சொறிந்தகொண்டே பவானியைப் பார்த்தான் குமார்.

"வந்தால் நமக்கென்ன....? அதற்காகப் பீச்சுக்குப் போவதைக் கான்ஸல் பண்ணனுமா? காருக்குள் உட்கார்ந்துகொண்டு பேசுவோம். பீச்சில் மழை பெய்வதைப் பார்ப்பதே அழகாக இருக்கும்...." என்றாள் பவானி.

இருவரும் துணிந்து புறப்பட்டனர். அவர்கள் எதைப்பற்றி பயப்பட்டார்களோ, அதுவே நடந்தது. அவர்கள் கடற்கரைக்குப் போய்ச் சேரவும், 'சோ'வென்று மழை கொட்டவும் சரியாக இருந்தது.

ஐ.ஜி. ஆபீசுக்க் எதிரே காந்தி சிலை அருகே காரை நிறுத்திக்கொண்டு சிறிது நேரம் கடற்க்கரைபக்கமாகப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். மழை மேகம் சூழ்ந்த இருட்டு நேரமாதலால், பீச் ஒரே கும்மிருட்டாகத் தெரிந்தது. எனவே, காரைச் சாலைப் பக்கமாகத் திருப்பிக்கொண்டு, தெருவை வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

கார் கண்ணாடியெல்லாம் தூக்கி விடப்பட்டிருந்தது. காரின் உள்ளே ஒருவித வெப்பம் பரவியிருந்தது. மழையில் குறுக்கும் நெடுக்குமாக ஓடிக்கொண்டிருந்த கார்களையும் பஸ்களையும் வேடிக்கை பார்ப்பது ஒரு சுவாரசியமான அனுபவமாக இருந்தது அவர்களுக்கு.

திடீரென்று சாலை விளக்குகள் அணைந்தன. எங்கோ 'பியூஸ்' போய்விட்டது போலும்! எங்கும் இருள் சூழ்ந்தது. காரின் முகப்பு விளக்கைப் போட்டான் குமார். 'வைப்ப'ரை இயங்க வைத்தான். 'டக்.... டக்' என்ற ஒலியுடன், காரின் முன் பக்கத்துக் கண்ணாடியில் விழுந்த நீரை அந்த 'வைப்பர்' துடைத்துக்கொண்டிருந்தது.

"ஒரே இருட்டாகிவிட்டதே..... புறப்படலாமா, பவானி?" என்று கேட்டான் குமார்.

"விளக்கு இப்ப வந்துவிடும்; கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் போகலாம் .... ஐ லைக் திஸ் டார்க்நெஸ் ...." என்றாள் பவானி.

இருட்டில் உட்கார்ந்து, சாலையையே கொட்டக் கொட்ட விழித்துக்கொண்டிருந்தது இருவருக்கும் ஒரு வேடிக்கையாகத்தானிருந்தது.

திடீரென்று அவர்கள் இருந்த இடத்திற்கு எதிராக, எலியெட்ஸ் சாலையில் ரத்தத்தையே உறைய வைக்கும் ஒரு காட்சி! எங்கிருந்தோ ஒற்றைத் தீப்பந்தம் அவர்களை நோக்கி வந்தது. அந்த இருட்டில், அந்த ஒற்றை ஒளி பயங்கரமான கொள்ளிவாய்ப் பிசாசுபோல் தோன்றியது பவானிக்கு.

'டக்... டக்' என்ற வைப்பரின் ஒலியும், வைப்பர் சுத்தப்படுத்திய கண்ணாடி வழியாகத் தீப்பந்தத்தின் ஒளியும பவானியின் மனத்தில் திகிலை எறபடுத்திக்கொண்டே இருந்தது. வரவரத் தீப்பந்தம் பெரிதாகிக்கொண்டே வந்தது. அதோடு தீனமான ஒரு பறையொலியும் கேட்டது.

பவானியால் திகிலைத் தாங்க முடியவில்லை. ரத்தம் சில்லிடக் 'குமார்' என்று கதறிக்கொண்டே, குமாரின் நெஞ்சின் மீது சாய்ந்தாள். அவனது ஆண்மை திரண்ட கரங்கள் அவளை அரவணைத்துக்கொண்டன. அந்தக் கரங்களுக்குள் உடல் நடுங்க, பதுமையாய் அடங்கிக்கிடந்தாள் பவானி.

அதன் பிறகு? .......

**வே**லைக்காரன் வெள்ளி வெற்றிலைத் தட்டை கொண்டுவந்து வைத்தான். பொதுவாகச் சாப்பிட்டவுடன், கொஞ்சம் பாக்கை அள்ளி வாயில் போட்டுக்கொள்வான் ஸ்ரீதர். ஆனால், அன்று அவன் மனம் மிகவும் நொந்திருந்தது. கண்களில் நீர் ததும்பி நின்றது. சாப்பிடும்போதும் சுதாவிடம் தன் தங்கையின் பரிதாபக் கதையைச சொல்லியதால், அவன் உணர்ச்சி வசப்பட்டிருந்தான். சாப்பிட்டு முடிந்து இருவரும் ஹாலில் வந்து மீண்டும் அமர்ந்தனர். அறை மூலையிலிருந்த ரேடியோவிலிருந்து, மிருதங்க மேதை பாலக்காட்டு மணி அய்யரின் தாள ஒலி, லய சுத்தமாகக் கேட்டுக்கொண்டிருந்தது.

மௌனமாக ஸ்ரீதர் எதிரில் அமர்ந்திருந்தாள் சுதா.

'மேலே என்ன நடந்தது?' என்று கேட்கும் ஆர்வம் ஒரு பக்கம், ஸ்ரீதரின் மௌனத்தைக் கலைக்கத் தோன்றாத பயம் ஒரு பக்கமாகத் தவித்துக்கொண்டிருந்தாள் அவள்.

அந்த சிறிது நேர மௌனத்தில் ஸ்ரீதரின் முகத்தில் வேதனை, ஆவேசம், குமுறல் - அத்தனை உணர்வுகளும் போட்டி போட்டு மாறி மாறித் தோன்றின. அவனாக அந்த அமைதியைக் கலைப்பான் என்று சுதாவுக்குத் தோன்றாததால், அவளே மெதுவாகக் கேட்டாள்.

"அந்த தீப்பந்த வெளிச்சம் என்ன?

"ஓர் உடலின் கடைசிப் பயணம்!" வறண்ட குரலில் பதலளித்தான் ஸ்ரீதர்.

"என்ன?"

"ஆமாம், சுதா. ஒரு சடலத்தை எலியட்ஸ் பீச்சுக்கு அருகே உள்ள மயானத்திற்கு எடுத்து வந்திருக்கிறார்கள். மழைக்கு அணையாமல் இருப்பதற்காகத தீப்பந்தத்தைப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். இருளுக்கும் மழைக்கும் மத்தியில் வந்த அந்த தீப்பந்தமும், அதைத் தொடர்ந்து வந்த சவ ஊர்வலமும் பவானிக்குப் பேரதிர்ச்சியையும், மனக் குமுறலையும் ஏற்படுத்திவிட்டன. தன் அருகிலிருந்த ஒரே துணையான குமாரை...." மேற்கொண்டு சுதாவிடம் சொல்ல முடியாமல் தயங்கினான்.

"புரிகிறது ..... சொல்லுங்கள் ....." என்றாள் சுதா.

"ஆமாம், சுதா, ஓர் உயிரின் அஸ்தமனதிலிருந்துதான் பவானியின் வாழ்கையில் ஒரு திடீர் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. அதுவரை அவள் அறியாத இன்ப ... நோ நோ ..... எஸ் எஸ் ..... அது இன்ப அனுபவந்தான்....

வித்தியாசமாக ஒன்றுநடந்துவிட்டாலுங்கூட, ஒரு நெருக்கம் ஏற்பட்டுவிட்டது. அவள் அந்தக் கணத்தில் - இரண்டுவித அதிர்ச்சிக்குள்ளாகிவிட்டாள். அந்த இருண்ட சூழ்நிலையில் சவஊர்வலத்தையும், தீப்பந்த வெளிச்சத்தையும் பார்த்த அதிர்ச்சி ஒன்று; திடீரென்று எதிர் பாராமல் ஓர் ஆடவனை ஸ்பரிசிக்க நேர்ந்த அதிர்ச்சி மற்றொன்று, சமகாலத்தில் ஏற்பட்ட அந்த இரு அதிர்ச்சிகளையும் அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

"குமார் அவளை வீட்டுக்கு அழைத்து வரும்போது, அவள் அரை நினைவுடன்தான் இருந்தாள். இரவோடு இரவாகக் கடும் ஜுரம் அடிக்கத் தொடங்கிவிட்டது. ஜன்னி கண்டவள் போல் பிதற்ற ஆரம்பித்தாள். அடிக்கடி நினைவு தப்பிப் போய்விடும். ஒரு நாளாயிற்று, இரண்டு நாளாயிற்று, ஏன் வாரக்கணக்கில்கூட அவள் படுக்கையிலேயே இருந்தாள். வைத்தியர்களின் சமர்த்தியத்தையெல்லாம் அவள் வியாதி தோற்கடித்துக் கொண்டிருந்தது.

எங்கள் வீட்டில் தனியாக ஓடியாடித் திரிந்துகொண்டிருந்த என் அருமைத் தங்கை, இரவும் பகலும் இருளிலேயே இருந்தாள். அவள் முகத்தில் ஏதோ ஒரு சமயம் இலேசாக ஒளிவரும்; அதுதான் குமார் வரும் சந்தர்ப்பம். எங்களோடுநின்று குமார் எதாவது பேசிக்கொண்டிருக்கும்போது, அவனுடைய குரலைக் கேட்டு லேசாகக் கண் திறந்து பார்ப்பாள். முகத்தை அசைக்க முயலுவாள். ஆனால், எதைப் பார்த்தாலும் பார்க்காவிட்டாலும், அவளால் வெளிச்சத்தை மட்டும் பார்கவே முடியாது. சிலசமயம் அதைப் பார்த்துவிட்டால், வீறிட்டு அலறுவாள்.

" டாக்டர் என்னிடம் அவளுடைய நோயின் நிலைமையைப்பற்றிக் கூறினார்: 'அவள் மனத்தில் ஏதோ ஒரு ஆசை எற்பட்டு, அது நிறைவேறாமல் இருக்கக்கூடும். அந்த ஆசை நிறைவேறினால்தான், அவள் உடல் தேறும்...' என்றார். எனக்கு முதலில் எதுவுமே விளங்கவில்லை. சில நாட்களுக்குப் பிறகுதான், குமாரின் வரவுக்கும் பவானியின் எதிரொலிப்புக்கும் உள்ள சம்பந்தம் எனக்கு லேசாகப் புரிந்தது. குமார் மறுமுறை வரும்போது, அவனுடன் கலந்து பேசவேண்டும் என்று நினைத்திருந்தேன்.

"ஆனால், குமாரின் வருகை திடீரென்று நின்றுவிட்டது. பவானி படுக்கையில் விழுந்த சில காலம்வரை வந்து கொண்டிருந்த குமார், வராமலேயே இருந்துவிட்டான். எனவே, நான் அவனைத் தேடிச் சென்றேன். நான் அவன் வீட்டுக்குச் சென்றபோது, வீட்டில் பெரியவர்கள் யாருமில்லை.ஏதோ ஒரு கல்யாணத்திற்குச் சென்றிருந்தார்கள். குமார் மட்டும் மாடியில் இருப்பதாக வேலையாள் சொன்னான். மாடிக்குச் சென்றேன். மாடியில் குமார் தனியாக இல்லை, ஒரு பெண்ணுடன் விளையாடிக்கொண்டிருந்தான்.

"என்னைக் கண்டதும் அவன் திடுக்கிடவில்லை. தயங்கவில்லை. "ஹலோ ஸ்ரீதர் ..... மீட் மிஸ் சுந்தரி ...... என் வருங்கால மனவி" என்று அப்பெண்ணை எனக்கு அறிமுகப்படுத்தினான்.

"நான் மனத்தை அடக்கிக்கொண்டு அவனிடம் சிறுதுநேரம் தனியாகப் பேச விரும்புவதாகச் சொன்னேன். அப்பெண் விடைபெற்று சென்றுவிட்டாள். அவள் சென்றதும், குமாரிடம் நான் பவானியைப் பற்றிப் பேச்செடுத்தேன். அவன் கொஞ்சம் கூடத் தயங்காமல் என்னிடம், 'ஆமாம், மிஸ்டர் ஸ்ரீதர், உங்கள் சகோதரியை விரும்பினேன் நான். கல்யாணம் செய்துகொள்ளக்கூட இருந்தேன். அப்போது காலேஜிலேயே சிறந்த அழகியாயிற்றே உங்கள் தங்கை.... ஆனால், இப்போது...? மிஸ்டர் ஸ்ரீதர், நீங்கள் என்னைப் புரிந்துகொள்வீர்கள் என்று நினைக்கிறேன். உங்கள் தங்கையின் அழகு மங்கிவிட்டது.அவள் நோயாளி. ஒரு நோயாளியைக் கல்யாணம் செய்துகொண்டு, நான் வாழ்நாள் முழுவதும் கஷ்டப்பட முடியுமா? அப்படி நான் செய்யவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்த்தால், அது என் சக்திக்கு மீறிய தியாகம். ஐ கான்ட் அப்போர்ட் டு டு இட்.... அதை என்னால் செய்யமுடியாது. யூ ஸீ .... சுந்தரியும் என் கல்லூரித் தோழிதான், என்னுடன் படிக்கிறாள். அவளைத் திருமணம் செய்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். கடவுள் உங்கள் தங்கைக்கு நல்வாழ்க்கையை அருளப் பிரார்த்திக்கிறேன்....." என்றான்.

"பார்த்தாயா, சுதா? நாகரிகமும் கூட்டுக்கல்வியும் சில மாணவர்களுக்கு எதைக் கற்றுக் கொடுத்திருக்கிறதென்று பார்த்தா? அந்தப்பாவி இனிப்பான வார்த்தைகளால் என்னைச் சுட்டெரித்து விட்டான். எவனால் என் தங்கை நோயாளி ஆனாளோ, அவனே அவளை நோயாளி என்று ஒதுக்கித் தள்ளினான். நான் அவனிடம் குமார் நீ அவளை திருமணம் செய்துகொள், உன்னை மணந்துகொண்டாலே அவள் உடல் குணமாகிவிடலாம். அப்படி ஆகாவிட்டால் எத்தனை லட்சமானாலும் செலவு செய்து அவளை குணமாக்கி, உன் வீட்டுக்கு அனுப்பிவைக்கிறேன்..... ' என்று கெஞ்சினேன். அவன் அலட்சியமாக, 'மிஸ்டர் ஸ்ரீதர், நீங்கள் கடவுள் அல்ல, உங்கள் சக்தியையும் மீறி அவள் நோய்

குணமாகாவிட்டால்......" என்று எதிர் கேள்வி போட்டான். என் மனம் கசந்து குமுறியது. ஆத்திரத்துடன் அவனைத் திட்டிவிட்டு வீடு திரும்பினேன்.

"அதற்குப் பிறகு நான் அவனைப் பார்க்கவே இல்லை. ஒரு வருடம் ஆயிற்று. என் தங்கையின் நோய் குணமாகவில்லை. ஜுரத்திலும், அதிர்ச்சியிலும் படுத்தவள், 'ஹிஸ்டீரியா பேஷண்ட்'டாக மாறி, வியாதியோடு படுக்கையே கதியானாள். ஆனால், வெளி உலகத்தில் எங்கள் குடும்பத்தில் எவ்வளவோ மாற்றங்கள் உண்டாகி விட்டன. செல்லமகளின் நிலையைத் தாங்க முடியாத என் பெற்றோர், ஒருவர் பின் ஒருவராகப் போய்விட்டனர். கம்பெனி உடைந்தது. குமாரின் தந்தை 'பார்ட்னர்ஷிப்'பை முறித்துக்கொண்டுவிட்டார். நானும் என் தங்கையும் தனியர்களானோம்........" நீண்ட கதையை சொல்லி முடித்தான் ஸ்ரீதர்.

மலைபோல் உறுதிகொண்ட அந்த ஆண்மகன் ஸ்ரீதர், கண்கலங்கி நின்றான். சுதாவின் கண்களிலிருந்தும் அடக்க முடியாமல் கண்ணீர் பொங்கியது.

"சுதா, இரவு பகல் எந்நேரமும் பியானோவின் இன்னிசை ஒலித்துக் கொண்டிருக்கும் என் அருமைத் தங்கையின் அறையிலிருந்து, இப்போது திடீர் திடீரென்று அலறல் ஒலி கேட்கிறது. அவளுக்கு திருமணம் நடந்து, இல்லற வாழ்க்கையை மேற்கொண்டால் ஒழிய, அவள் வியாதி குணமாகாது என்று டாக்டர்கள் அபிப்ராயப்படுகின்றனர். இந்த வீட்டு ஒளிவிளக்கு அலைந்து அலைந்து ஆடிக்கொண்டிருக்கும் நேரத்தில், நான் எப்படி சுதா, காதலை பற்றியும், கல்யாணத்தைப் பற்றியும் நினைக்கமுடியும்? என் தங்கை பவானிக்குத் திருமணம் செய்து, அவள் வாழ்கையில் ஒளியேற்றும் வரையில் எனக்குத் தீபம் இல்லை. இப்போது புரிகிறதா சுதா, நான் ஏன் உன் அன்பைப் புறக்கணிக்கிறேன் என்று. இதனால்தான்.நான் எல்லாப் பெண்களிடமும் பரிவுடன் பழகுகிறேன், சுதா. நீ வாழ வேண்டியவள். நான் என் வாழ்க்கையின் மீது நம்பிக்கை இல்லாதவன். தயவுசெய்து, நீ என் பாதையிலிருந்து விலகிப் போய்விடு....." என்றான் ஸ்ரீதர்.

அதுவரை தலை குனிந்திருந்த சுதா, திடீரென்று எழுந்து, "ஸ்ரீதர் என்னால் உங்கள் பாதையிலிருந்து விலகிப் போக முடியாது. ஒன்றாக இணைந்த சிலர், முதலில் இன்பத்தில் பங்கெடுத்துக்கொண்டு, பிறகு துன்பத்தைப் பங்கிட்டுக் கொள்வார்கள். நான் முதலில் துன்பத்தில் பங்கு பெற்றுவிட்டு, பின் இன்பத்திற்காகக் காத்திருப்பேன்" என்றாள்.

"என்ன சுதா சொல்கிறாய்?" என்று திகைப்புடன் கேட்டான் ஸ்ரீதர்.

"இனி பவானி வாழ்வில் ஒளியேற்றுவதே எனக்கும் லட்சியம். விரைவில் அதை நிறைவேற்றுவேன்....." என்றாள் சுதா, என்றுமில்லாத தீவிரத்துடன்.

## 16

பெண் ணென்று பூமிதனில் பிறந்துவிட்டால் - மிகப்
பீழையிருக்குதடி தங்கமே தங்கம்

– பாரதியார்

"வனஜா இன்னும் ஆபீசிலிருந்து வரவில்லையா?" என்று கேட்டுக்கொண்டே எதிர்வீட்டு அம்புஜம் வீட்டுக்குள் நுழையும்போதே, வனஜாவின் தாயார் விசாலத்திற்குத் 'திக்'கென்றது. சாதாரண நாட்களிலேயே அம்புஜம் என்றால் விசாலத்திற்கு அலர்ஜி. அதிலும் கணவன் வீட்டைவிட்டுப் பிறந்த வீட்டோடு வனஜா வந்த நாளிலிருந்து, கொஞ்சம் அதிக அலர்ஜி.

அம்புஜம் சும்மாவும் வரமாட்டாள். சும்மாவும் போக மாட்டாள். எந்த வீட்டுக்குள் நுழைந்து வெளியேறினாலும் அந்த வீட்டுக்குள் ஒரு புரளி கிளம்பிவிடும். தபால் இலாகாவுக்கும் அவளுக்கும் அதிக வித்தியாசம் கிடையாது. தபால் இலாகாவாவது தன்னிடம் வரும் கடிதங்களை உரியவரிடம்தான் சேர்க்கும். அம்புஜமோ, தன்காதில் விழும் செய்திகளைத் தன் கண்ணில் படும் அத்தனை பேரிடமும் தெரிவித்துவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பாள். செய்திகளை சாதாரண செய்திகள்ளக வெளியிடும் கிளிப் பிள்ளைத்தனம் அவளிடம் கிடையாது. ஒவொன்றையும் கற்பனையுடன் கலந்து, ஒவொரு குட்டிக் கதையாக்கி விநியோகிப்பதில் வல்லமை பெற்றவள் அவள்.

மகள் வனஜா, பிறந்த வீடு திரும்பிய நாள் முதலாக, விசாலம் நாலு பேர் கூடும் இடங்களுக்குப் போவதைக் கூட விட்டுவிட்டாள். எந்த சந்தர்ப்பத்திலும், எந்த விழாவிலும் விசாலத்தின் தலையைக் கண்டவுடன் வனஜாவைப் பற்றிதான் பேச்செடுப்பாள். விசாலத்திடம் பேசுவதற்குரிய ஒரே விஷயம், வனஜா விவகாரந்தான் என்று எல்லோருமே ஒன்று கூடி முடிவெடுத்துவிட்டது போல் தோன்றியது. இரண்டு நிமிஷம் பேசினாலும் 'வனஜாவுக்கு இப்படி ஆகிவிட்டதே' என்று அனுதாபமாகவோ, 'என்ன இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு இவ்வளவு திமிர் ஆகாது, பெற்றவர்கள்தான் ஒரு வார்த்தை கண்டிப்பாகச் சொல்லவேண்டும்..... என்ற கண்டனதுடனோ தன் பேச்சை முடிப்பார்கள்.

இதை வனஜாவிடம் சொல்லி ஆறுதலாவது அடைய முடியுமா? வாய் திறந்தாலே 'என்னைப்பற்றி எனக்கில்லாத அக்கறை ஊருக்கு எதற்கு? என்று அலட்சியமாக வார்த்தைகளை வீசுவாள் அவள். ஊரை இவள் ஒதுக்கி விடலாம். ஆனால், ஊர் இவளை ஒதுக்கிவிடவில்லையே. மனத்துக்குள்ளேயே புழுங்கித் தவித்தாள் விசாலம்.

இந்த வேதனையை விலைக்கு வாங்க விரும்பாமலேயே விசாலம் அதிகமாக வெளியே செல்வதில்லை. ஆனாலும் வெளியார் வந்து துக்கம் விசாரிப்பதுபோல் பேசிக்கொண்டிருந்ததை தவிர்க்க முடியவில்லை அவளால்.

வருபவர்களும் அம்புஜம்மாள் போல் கதையளக்கக் கூடியவர்களாகத்தான் வருகிறார்கள். விசாலத்தின் கையால் டிபன் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு, போகும்போது விசாலத்தின் வயிற்றில் புளியைக் கரைத்துவிட்டுச் செல்வார்கள். சிலர் வந்து, வனஜாவின் எதிர்காலம் சூன்யமாகிவிட்டதை விசாரித்து துக்கம் தெரிவிப்பார்கள். சிலர் 'காலுக்கு உதவாத செருப்பை கழட்டி ஏறிய வேண்டியதுதான்! நம்ம பெண் சம்பாதிக்கத் தெரியாதவளா? கிடக்கிறான் கணவன் ......' என்று வீர வசனம் பேசிவிட்டுப் போவார்கள். வேறு சிலர், சாமர்த்தியமாக "என்னமோம்மா, இந்த உலகத்திலே என் ஆயிளுக்குள்ளே எவ்வளவோ பார்த்துவிட்டேன். எத்தனையோ பெண்கள் இப்படி வாழாவெட்டியா வந்துட்டு, கடைசியிலே 'வழுக்கித்தான்' விழறதுகள். ஆபீஸ் கீபீஸ்னு நாலு இடத்துலே பழக்கம் இருக்கிறது சௌகரியமா போயிடறது. நான் நம்ம வனஜாவை சொல்லல்லே.... உலக நடப்பைச் சொல்றேன், அவ்வளவுதான் ..." என்று, வனஜாவைக் குறிப்பிட்டே ஜாடைமாடையாகச் சொல்லிவிட்டுப் போவார்கள். வெந்து வென்நீராவாள் பெற்றவள். பாவம், அவளால் வேறு என்னதான் செய்ய முடியும்?

அன்று அம்புஜம் வரும்போதே, 'என்ன, இன்னும் வனஜா வரவில்லையா' என்று, வனஜாவைப்பற்றிப் பேச்செடுத்துவிட்டாள். 'இனி ஒரு மணிநேரம் இந்த இராமாயணந்தான்' என்று புரிந்துகொண்டாள் விசாலம். அதைத் தவிர்க்க "டவுனுக்குப் போய் கொஞ்சம் சாமான்கள் வாங்கிவரச் சொல்லிருந்தேன். கொஞ்சம் லேட்டாத்தான் வருவாள்....." என்று கூறி, அம்புஜம்மாளின் வாயை அடக்க முயன்றாள்.

அம்புஜத்தின் கண்ணோட்டம் அலாதியானது. எந்தக் கோணத்திலிருந்தும் தாக்கும் திறன் பெற்றவள் அவள். விசாலத்தின் வார்த்தைகளைப் பிடித்துக்கொண்டாள்.

"விசாலம், நீங்க வனஜாவைக் கடைத் தெருவுக்கெல்லாம் அனுப்புறது நல்லதிலே. ஆபீஸ் வீடுன்னு அடக்கி வச்சுக்கோங்க..... அதுதான் நல்லது....." என்றாள்.

"ஏன்?" என்று கேட்டுவிட்டாள் விசாலம்.

"ஊருக்குள் பேச்சு பலவிதமா இருக்கு. ஒரு நாளைப்போல் இருக்காது. பெண்களிடம் தப்பு எந்த நிமிஷம் நடக்கும்னு யாராலேயும் சொல்ல முடியாது" என்றாள்.

விசாலத்திற்கு ஆத்திரம் பொங்கியது. ஆனால், பெற்றபெண் அடங்கி நடக்காத போது, பிறரைக் கோபித்து என்ன பிரயோஜனம்!

"அம்புஜம், ஊருக்கென்ன, கண்டதே காட்சி, கொண்டதே கோலம்னு எதாவது பேசும். எல்லாவற்றையும் நாம் கேட்டுக் கொண்டிருக்க முடியுமா? நம்ம வரைக்கும் நியாயமா நடந்து கொண்டு போகவேண்டியதுதான்" என்று பேச்சை அடக்கப் பார்த்தாள்.

"என்னமோம்மா, நெருப்பில்லாம புகையாது. ஊர்ப்பேச்சை நாம் ஒரேயடியாகத் தள்ளிவிடவும் முடியாது" என்று பீடிகைப் போட்டாள்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று சற்று கோபத்துடன் கேட்டாள் விசாலம்.

"விசாலம், நீங்க கோபப்படறது எனக்குத் தெரிகிறது, உங்களுக்கு மட்டுமென்ன, அந்தப் பேச்சைக் கேட்டதும், எனக்குக் கூடக் கோபமாகத்தான் இருந்தது. இருந்தாலும், ஒவ்வொருத்தர் ரொம்ப ஆதாரத்தோடு பேசறபோது, நாம கோபப்படமுடியல்லியே!" என்றாள்.

"என்ன பேசறா?" என்று கேட்டாள் விசாலம்.

"சுந்தரம்னு யாரோ ஒரு பையன், வனஜாவோட வேலை பார்கிரானாமே" ...... என்று அம்புஜம் ஆரம்பித்ததுமே, விசாலாத்திற்கு 'திக்'கென்றது. சுந்தரத்திற்கும் வனஜாவுக்கும் உள்ள தொடர்பு அவளுக்குத் தெரியாதா? அந்தத் தொடர்பு தப்பானதாக இல்லை என்று வனஜா சொல்வதை, மகளின் மேல் நம்பிக்கைவைத்து பெற்றவள் நம்பலாம்! ஆனால், மற்றவர்களும் நம்பவேண்டும் என்று எப்படி நிர்பந்தப்படுத்த முடியும்? எனவே, சுந்தரம் விவகாரத்தை மூடி மறைக்க விரும்பினாள் விசாலம்.

"சுந்தரமா?" என்று ஒன்றுமே தெரியாதவள்போல் கேட்டாள்.

"அடடே, அந்த விவகாரமே உங்களுக்குத் தெரியாதா? நல்லவேளை, என் காதில் விழுந்ததை உங்ககிட்ட சொல்லிடறேன். நீங்க அனுசரிச்சு நடந்துக்கோங்கோ....." என்று கதையளக்க ஆரம்பித்துவிட்டாள் அம்புஜம்.

"சுந்தரத்திற்கும் வனஜாவிற்கும் கல்யாணத்திற்கு முன்னமேயே பழ்க்கமுண்டாம். அது ரொம்ப ரொம்ப நெருங்கிய பழக்கமாம். ஒருத்தரை ஒருத்தர் கல்யாணம் பண்ணிக்கிறதாக முடிவு பண்ணி வச்சிருந்தாங்களாம். இடையிலே விஷயம் மாறிப்போகவே, அந்தப் பையன் அவளை நினைச்சு புலம்பிக்கொண்டு படுத்த படுக்கையா கிடக்கிறானாம்... வனஜா கல்யாணமாகி புருஷன் வீட்டுக்குப் போனப்புறம்கூட அவன் வீட்டுக்குப் போக்குவரத்தா இருந்தாளாம்....."

இதையெல்லாம் சொல்லிவிட்டு, "விசாலம் .... உங்க வயதிலே பிறந்த பெண் இப்படியெல்லாம், நடக்கிறதை நெனச்சா..... அப்புறம் கேளுங்க, இந்தப் பையனோட சிநேகிதத்தை மனசிலே வச்சுக்கிட்டுத்தான் ஜெயராமன்கிட்டே சண்டை போட்டுக்கொண்டு திரும்பி வந்துட்டாளாம். இப்ப அந்தப் பையன் சுந்தரத்திற்கு ஜுரம் தெளிந்து, பழைய ஆளாமாறி, இரண்டு பேரும் ஆபீசுக்குள்ளேயும், வெளியிலேயும் ....." என்று சொல்லாமல் பல விஷயங்களைச் சொன்னாள் அம்புஜம்.

அம்புஜம் பேசப்பேச விசாலம் எரிமலையாகக் கொதித்தாள். அந்த அக்கினிக் குழம்புகள் மறைமுகமாக மகள்மீது தான் பாய்ந்தன. 'அடிப்பாவி, உண்மை, உண்மைன்னு உயிரை விடுவியே, அந்த உண்மைக்கு உலகம் கொடுக்கிற மரியாதையைப் பாரடி' என்று குமுறினாள். மனத்திற்குள் அப்படிப் புழுங்கியபோதும், அம்புஜத்திடம் "வாய் புளிச்சுதோ, மாங்காய் புளிச்சுதோன்னு பேசாதீங்கோ. சுந்தரமாவது, மந்தரமாவது...... பெத்தவளுக்குத் தெரியாததா மற்றவர் களுக்குத் தெரியும்? அப்படி எதுவும் இல்லே.... வேற விஷயம் இருந்தாப் பேசுங்கோ..." என்று கண்டிப்புடன் கூறினாள்.

அந்த சமயந்தான் வனஜா வீட்டிற்குள் நுழைந்தாள். அவளைக் கண்டதும் விசாலாத்திற்குப் பகீரென்றது. இந்த அம்புஜத்திற்கு முன்னால் எதையாவது இசைகேடாக இந்தப்பெண் உளறி விடக்கூடாதே என்று அஞ்சினாள். அந்த அச்சத்தில் "என்ன வனஜா, டவுன் காரியமெல்லாம் முடிஞ்சுதா?...... சரி சரி, களைச்சு வந்திருக்கே ..... போய் முகத்தை அலம்பிக்கொண்டு வா, காப்பி கலந்து தரேன்" என்று பரபரப்பாகக் கூறி, நிலைமையைச சமாளிக்க முயன்றாள். தாயின் பரபரப்பைப் புரிந்துகொள்ளாத வனஜா, "என்னம்மா சொல்றே, டவுன் காரியமா? அப்படி ஒன்றும் இல்லையே ...." என்றாள்.

"ஓ ...." என்று அசடு வழியக் கூறிய விசாலம், " மறந்து போயிட்டியா? சரி சரி , அப்புறம் பேசிக்கிலாம் ..... நீ போ ...." என்றாள்.

வனஜா நகரவில்லை. "நான் எதை மறந்துட்டேன்? நீ ஒண்ணுமே எங்கிட்டே சொல்லலியே! நான் காலையில் உங்கிட்டே சொல்லிண்டிருக்கலே, சுந்தரத்தோட அம்மாவுக்கு உடம்பு சரியாயில்லேன்னு . அவர் வீட்டுக்குப் போய், அவர் அம்மாவைப் பார்த்துட்டுத்தான் வரேன்...... பாவம், வயசாயிட்டதனாலே .... ரொம்ப சிரமப்படறார்... அங்கே கொஞ்சம் நேரமாயிட்டதாலே, நானும் சுந்தரமும் ஓட்டலுக்குப் போய் காப்பி சாப்பிட்டுட்டோம்..... அதனால் எனக்குக் காப்பி வேண்டாம்..... " என்றாள்.

விசாலம் தலைகுனிந்து நின்றாள். அம்புஜம் விஷமச்சிரிப்புடன் வாசற்புறம் நகர்ந்தாள். வாசலைக் கடக்கும் போது, "சரிதான்.... எல்லாம் அம்மாவும் பெண்ணும் சேர்ந்து நடத்தற நாடகம் போல இருக்கு. .. கலிமுத்திப் போயிடுச்சுடி அம்மா ...." என்று வார்த்தைகளை கொட்டிவிட்டுப் போனாள்.

விசாலத்திற்கு ஆத்திரம் கட்டு மீறியது. கோபவெறி தாளாமல் எதிரே, ஏதுமறியாதவளாக நின்றிருந்த வனஜாவின் கன்னத்தில், 'பளீர்' என்று ஓங்கி அறைந்துவிட்டாள்.

இந்த வயசில் தாய் தன்னைக் கைநீட்டி அடித்துவிட்டதைக் கண்டு, ஒருகணம் குழம்பிப் போனாள் வனஜா. தாய் அடித்ததைப் பற்றிக்கூட அவள் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. ஆனால், அம்மா அடிக்கும்படி நாம் என்ன செய்தோம் என்றுதான் அவளுக்குப் புரியவில்லை.

ஒரு விநாடி ஆவேசத்திற்கு இடம் கொடுத்துவிட்டாலும், மறுவிநாடி கண்கலங்கி நின்றாள் விசாலம். அடிபட்டவள் அழவில்லை. அடித்தவள் அழுதாள்.

"ஏம்மா என்ன அடிச்சே? என்று நிதானமாகக் கேட்டாள் வனஜா.

"நான் அடிச்சதுதான் உன் கண்ணிலே பட்டுத்தா? நீயே உன் வாழ்க்கையைப் பாழடிச்சுக்கிறையே, அது உன் கண்ணை உறுத்தலியா? என்று குமுறலுடன் கேட்டாள் தாய்.

"நான் என்னம்மா தப்பு செய்தேன்?" - நிதானமாகக் கேட்டாள் வனஜா.

"நீ தப்பு செயலேன்னு என்கிட்டே சொன்னா போதுமா? உலகம் நம்பணுமே.."

"கல்யாணம் செய்துகொண்ட புருஷனே நம்பல்லே... உலகம் நம்பாததிலே என்ன அதிசயம்...... ?" என்று விரக்தியாகச் சிரித்தாள் வனஜா.

"புருஷனே நம்பலேன்னு புரியறதே, அவர் ஏன் நம்பலேன்னு யோசிச்சிப் பார்த்தியா?"

"தன் மனைவியோட குணத்தைப் புரிந்து கொள்கிற அளவுக்குப் பெருந்தன்மை இல்லே அவருக்கு..."

"சீ, வாயை மூடு! அவருடைய பெருந்தன்மையைப் பற்றி பேசறதுக்கு உனக்கு வாயேது ...... உன் நடவடிக்கையைப் பார்த்தா எந்த மடையனும் சந்தேகப்படத்தான் செய்வான்.... " என்று சீறினாள் விசாலம்.

"மடையன் வேண்டுமானால் சந்தேகப்படட்டும். என் கணவர் புத்திசாலியாக இருக்கக் கூடாதா என்று நான் எதிர் பார்க்கிறேன் ... என்றாள் வனஜா.

"உன் புத்திசாலித்தனத்துக்கு அவன் புத்திசாலித்தனம் ஒன்றும் குறைச்சல் இல்லே. எவனுடைய பழக்கதாலோ புகுந்த வீட்டிலே அவமானப்பட்டுப் பிறந்த வீட்டிலே வந்து நிற்கிறியே அவனோடேயே மீண்டும் பழகுறியே, உனக்கு கொஞ்சமாவது பயம் இருக்கா?"

"நான் ஏன் பயப்படணும்?..... என்ன தப்பு செய்தேன்னு பயப்படணும்... ? உலகத்திலே தப்பு செய்துவிட்டு. அந்த தப்பை மறைக்கப் பொய் சொல்லி, இரண்டு குற்றங்கள் செய்யறவங்களே பயப்படல்லே.... ஆனால், நான் தப்பு செய்யாம, உண்மையையும் காப்பாற்றி வாழ்கிறேன் ... எனக்கென்ன பயம்?" உறுதியுடன் பேசினாள் வனஜா.

"இப்படி அங்கே வாழமுடியாம இங்கே வந்து நிற்கிறியே, நீயே பயப்படலேன்னா, உலகத்திலே பயம் எகிற வார்த்தைக்கே அர்த்தம் இல்லாம போயிடும்.... பெண்ணாகப்பிறந்தவ, உலகத்திலே தனக்கு எதிரா வர ஒவ்வொரு வார்த்தையையும் மதிச்சு வாழ்ந்தாத்தான் மரியாதையைக் காப்பாற்ற முடியும்...."

" அம்மா, உண்மையைத் தவிர என்னாலே வேற எதையும் மதிக்க முடியாது..."

" உன்னாலே தினம்தினம் ஊர் வாயிலே விழுந்து எழறோமே, இந்தப் பெத்தவங்களோட அவமானத்தையாவது மதிக்கப்போறியா இல்லையா?

" என்னால் உங்களுக்கு என்ன அவமானம்?"

"கணவன் வீட்டைவிட்டு இங்கே வந்து உட்கார்ந்திருக்கிறியே, அந்த அவமானத்தை தவிர வேற என்ன வேணும்?" சீறினாள் விசாலம்.

"ஓ! நான் இந்த வீட்டிலே இருக்கிறது உங்களுக்கும் அவமானமாயிருக்கா?"

"பின்னே, கல்யாணம் செய்து கொடுத்தபபுறமும் ஒரு பெண் பிறந்த வீட்டிலே வந்து உட்கார்ந்திருக்கிறது அவமானமில்லையா?"

"அப்படின்னா நாளைக்கே நான் இந்த வீட்டைவிட்டுப் போயிடறேன்."

விசாலத்திற்கு திடீரென்று ஓர் அற்ப சந்தோஷம் ஏற்பட்டது! கணவன் வீட்டுக்குத்தான் மகள் போகிறேன் என்று சொல்கிறாளோ என்று

"அம்மா, ஒர்கிங் உமன்ஸ் ஹாஸ்டல்னு ஒண்ணு இருக்கு .... வேலை செய்யற பெண்கள் தங்கறதுக்குன்னே இருக்குற இடம். நான் அங்கே போய்த் தங்கிக்கிறேன். உங்களுக்கு அவமானம் போயிடும். என்னால் அவமானம் ஏற்பட்டுவிட்டதா, அந்த ஹாஸ்டல் ஒண்ணும் கவலைப்படாது.

விசாலம் எரிச்சலடைந்தாள். " அப்படி அடங்கமே போவேன்னா போய்த் தொலையேன்....." என்று கூறிவிட்டு சமையல் அறைக்குள் நுழைந்தாள்.

"ஓகே, நாளைக்கே போயிடறேன்" என்று கவலையற்றுக் கூறிவிட்டுத் தன் அறைக்குள் நுழைந்தாள் வனஜா.

இரவு, சாப்பாட்டு நேரம்.

வனஜா சமையல் அறைப்பக்கம் வரவில்லை. தந்தை குப்புசாமியும் வீட்டிற்கு வந்துவிட்டார். விசாலம் கணவரிடம் எல்லாவற்றையும் சொல்லி அழுதாள். குப்புசாமி மனைவியைக் கண்டித்தார்.

"வனஜா என்ன முட்டாளா? விஷயம் தெரிஞ்ச பெண்கிட்டே என்ன பேசறதுன்னே உனக்குப் புரியல்லே.... மேலுக்கு என்னமோ பேசறாளே தவிர, அவ மனசிலே வேதனை இல்லாமலா இருக்கும் ..... என்னமோ உனக்குத் தான் கவலை இருக்குன்னு அவளைக் கஷ்டப்படுத்திக்கொண்டே இருக்கியே ..."

" இன்னும் அவள் சாப்பிட வரலியே" என்று, அந்தக் கோபத்திலும் தவித்தாள் விசாலம்.

"வீட்டைவிட்டு வெளியே போன்னு சொல்லிட்டு, இப்ப வரல்லியேன்னா... அவள் என்ன துன்பப்பட்டு போராடிக்கொண்டிருக்கிறாளோ.... " என்றவர், மகளைச் சமாதானப்படுத்தத் தானே போகலாமா என்று யோசித்தார்.

அப்போது........

வனஜா சமையலறைக்குள் நுழைந்தாள்.

" அப்பா, ரொம்ப நேரமாயிடுத்தா? ஒரு அருமையான புத்தகம் படித்துக்கொண்டிருந்தேன். நேரம் போனதே தெரியல்லே..." என்றவள், தாயைப் பார்த்து, "அம்மா, சாதம் போடறியா? நாளைக்குத்தான் ஒர்க்கிங் உமன்ஸ் ஹாஸ்டலுக்குப் போறதா நமக்குளே அக்ரிமெண்ட்...." என்று கூறி, தட்டை எடுத்து வைத்துக்கொண்டு, தந்தையின் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள்.

தாய் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்டு, சுட்ட அப்பளத்தை அவர்கள் தட்டில் போட்டாள்.

குப்புசாமி மகளைப் பார்த்துக் கனிவுடன், "அவ கிடக்கிறாம்மா! இந்த வீட்டைவிட்டு நீ ஏன் போகணும்? இது உன் வீடு. எங்க காலம் முடிஞ்சப்புறம் நீ இங்கே விட்டுப் போகலாம்..." என்றார்.

வனஜா பதில் சொல்லவில்லை. உணர்ச்சிவசப்பட்டிருந்தாள் என்று அவள் முகத்திலிருந்து தெரிந்தது. அதன் பிறகு சாப்பாடு முடியும்வரை, அங்கே மௌனம் நிலவியது. சாப்பாட்டிலிருந்து எழுந்திருக்கும்போது குப்புசாமி மெதுவாக " வனஜா, நான் சொல்றதை வித்தியாசமா எடுத்துக்கமாட்டேன்னு நினைக்கிறேன்..... " என்று ஆரம்பித்தார்.

"இல்லேப்பா, தாராளமாகச் சொல்லுங்க ....." என்றாள் வனஜா.

"உங்க அம்மா மாதிரி ஊரைப்பத்தியும் உலகத்தைப்பத்தியும் நான் கவலைப்படல்லே...... உன்னைப்பத்தித்தான் கவலைப்படறேன்...... "

வனஜா தலை குனிந்து சிந்திக்க ஆரம்பித்தாள். மகள் தன் வார்த்தையை ஏற்றுக்கொள்கிறாள் எனபது புரிந்ததும், குப்புசாமி தொடர்ந்து, ஜெயராமனை நீ அப்புறம் பார்கவே இல்லையா? என்று கேட்டார்.

"இல்லை ......" என்றாள் வனஜா.

" போன்லேயாவது பேசிப்பார்க்கக் கூடாதா? பிறத்தியார் நம்மைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையென்றால், நாம் கொஞ்சம் வளைந்து போய்ப் புரியவக்கிறதிலே தப்பு இல்லேம்மா....."

வனஜா தலை நிமிர்ந்து தந்தையைப் பார்த்தாள். பிறகு, " நான் அவருக்கு லெட்டரே எழுதினேனப்பா.... அவர் என்னைப் புரிந்துகொள்வதற்கு கொஞ்ச நாளாகுமோன்னு தோணுது..." என்றாள்.

இப்படியே விட்டுட்டா ....."

" நீங்க சொல்லறது புரியிறதப்பா..... நான் நாளைக்கே செல்லம்மா அக்காவைப் பார்க்கலாமா ..... என்று யோசித்துக் கொண்டிருக்கேன் ..... "

" சரிம்மா நல்ல யோசனை.... "

மகளின் இந்தப் பதில் ஓரளவு திருப்தியாக இருந்தது.

"அம்மா...... எனக்கு இன்னும் கொஞ்சம் மோர் விடு ...." என்று சற்று உரத்த குரலில் கேட்டாள் வனஜா.

விசாலம் சிரித்து விட்டாள்.

இரவு வெகு நேரம் வரையில் வனஜா தூங்கவில்லை. மதுரைமணி அய்யரின் குரலினிமையில் சற்றே தன்னை மறந்தாள்.

" **கா**..... கா....." என்று காகம் கரைந்தது. நல்ல பகல்வேளை. சமையல் அறையை ஒட்டிய முற்றத்தில், வடாம் காயப் போட்டிருந்தாள் செல்லம்மாள். காக்கா கொத்திவிடாமல் காவல் காத்துக்கொண்டிருந்தாள்.

அப்போது......

வீட்டின் 'கால்பெல்' ஒலித்தது.

'இந்த வேளையில் யாராக இருக்கும்?" என்று புரியாமல் கதவைத்திறந்தாள். வாசலில் நின்றிருந்த வனஜாவைக் கண்டதும், செல்லம்மாளின் முகம் மலர்ந்தது.

"வா ..... வா ...." என்று பரக்கப் பரக்க அழைத்தாள்.

ஜெயராமனும் சுதாவும் வீட்டில்இல்லாதநேரத்தில் போக வேண்டும் என்றுதான் வனஜா, அந்த பட்டப்பகல் வேளையைத் தேர்ந்தெடுத்தாள். இருவரும் சிறிது நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு, செல்லம்மாள், வனஜாவையே உற்றுப் பார்த்துவிட்டுப் பேசினாள்:

" வனஜா, என் வாழ்கையைக் கடவுளாகப்பார்த்து மூளியாக்கிவிட்டார். அதை மாற்ற முடியாது. ஆனால், உங்கள் வாழ்க்கையை நீங்களே கெடுத்துக்கொண்டுவிட்டீர்களே ...." என்றாள்.

. "என்னக்கா இப்படிச் சொல்கிறீர்கள்? என்னைப் பிரிந்திருந்தால்தான் நிம்மதியாக இருக்கமுடியும் என்று அவர் நினைக்கிறார். அவரை நிம்மதியாக இருக்கவைப்பதுதானே என்கடமை" என்றாள்.

நல்ல கடமை போ! அந்த மாதிரி உன்னை நன்றாக வாழ வைப்பதும் அவன்கடமை இல்லையா? அந்தக்கடமையை அவனைச் செய்யவிடாமல் தடுத்து வைத்திருக்கிறாய் என்றுதான் நான் சொல்கிறேன் ......" என்றாள்.

"ஏன் அக்கா அப்படிச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள் வனஜா.

" அவன் மனசிலே ஏதோ குழப்பம் இருக்கு. அதை நீ போக்கணுமா, இல்லையா?"

" நான் முயற்சி பண்ணினேன் அக்கா..... அவருக்குத் தெளிவா கடிதம்கூட எழுதினேன். ஆனால், அவர் அதற்குப் பதில் எழுதியிருக்கார். நீங்களே படித்துப்பாருங்கள்...." என்று, தன் கைப்பையிலிருந்த ஒரு கடிதத்தை எடுத்துக் காட்டினாள்.

செல்லம்மாள் அதை வாசித்துப் பார்த்தாள்.

" நீ எந்த நிமிஷம் மறுபடியும் என் வீட்டுக்குள் நுழையறியோ, அந்த நிமிஷமே நான் வெளியேறி விடுவேன்' என்று அவர் எழுதியிருக்கார் பார்த்தீங்களா? அவர் அப்படி எழுதியிருக்கிறபோது, நான் என்னக்கா செய்யமுடியும்? இனி அவராக என்னைப் புரிந்துகொண்டு 'வா' என்று கூப்பிடும்வரை, நான் எப்படி அக்கா அவர் முன்னால் போய் நிற்பது.....? என்று கேட்டாள் வனஜா.

செல்லம்மாள் சிறிது நேரம் பேசத் தயங்குவதுபோல் மௌனமாக இருந்தாள். பிறகு, "வனஜா, நீயும் அவன் மனசை அறிஞ்சு கொஞ்சம் பக்குவமா நடந்துக்கணும்" என்றாள்..

"என்ன சொல்றீங்க .... அக்கா?" என்று கேட்டாள் வனஜா.

"அந்தச் சுந்தரம் என்கிற பையனோடு இன்னும் சுதந்திரமா பழகுகிறதா உன் ஆபீசுல வேலை செய்யற 'சாரி' ங்கற ஆள்வந்து சொல்லிக்கொண்டிருந்தான். அதை நீயே கொஞ்சம் யோசிச்சு நடக்கப்படாதா?"

மற்றவர்களிடம் அதைப்பற்றி எடுத்தெறிந்து பேசக் கூடிய வனஜாவால் செல்லம்மாளிடம் அப்படிப் பேசமுடியவில்லை.

" அக்கா சுந்தரத்துடன் நான் இப்பவும் சகஜமாகப் பழகுவது உண்மைதான் . இவருக்கு அது பிடிக்கவில்லை என்றால் அதைப் பற்றி நான் யோசிக்கக் கடமைப்பட்டவள்தான். ஆனால் அதை, அவர் சொல்கிற முறைதான் எனக்கு வேதனையா இருக்கு.... "

" என்னது அது?"

"சுந்தரத்துடன் நீ நட்புஎன்கிற முறையில்கூடப் பழகக்கூடாது என்று சொன்னால்கூடப் பரவாயில்லை.ஆனால், அவர் எனக்கும் சுந்தரத்திற்கும் உள்ள நட்பைச் சந்தேகமாகக் கூறுகிறார். நான் தப்பு செயவில்லை என்பதை ஒப்புக்கொள்ள மாட்டேன் என்கிறார். 'இனிமேல் தப்பு செய்யாதே' என்று சொல்கிற மாதிரி, இனிமே சுந்தரத்துடன் பழகாதே என்று சொன்னால், நான் இதுவரை தப்பா பழகினேன் என்று குற்றம் சாட்டுகிற மாதிரி இல்லையா? அதை நான் ஏற்றுக் கொள்கிறமாதிரியும் இல்லே ஆகிறது, 'உங்க நட்பை நான் சந்தேகப்படலே, நான் விரும்பாத நபரிடம் நீ நட்பு பாராட்டறதுகூடத் தப்பு' என்று அவர் சொல்லட்டும், அதை நான் மதிக்கிறேன்" என்ற வனஜா, சிறிது நேரம் அமைதியாக இருந்துவிட்டு, " அக்கா, நான் உங்க தம்பிக்கு மட்டுமல்லாமல், சத்தியத்திற்கும் சேர்ந்து வாழ்க்கைப் பட்டுவிட்டேன். இரண்டுக்கும் துரோகம் பண்ண விரும்பல்லே. அதனால் ஏற்படுகிற தொல்லைதான் இதெல்லாம்.... " என்று கூறி வேதனையுடன் சிரித்தாள்.

செல்லம்மாளுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. வனஜாவை 'உலகம் தெரியாத பயித்தியக்காரப்பெண்' என்றுதான் அவளால் மதிப்பிட முடிந்ததே தவிர, அவள் மீது குற்றம் கூற முடியவில்லை.

சிறிது நேரம் யோசித்துக்கொண்டிருந்துவிட்டு, "வனஜா, நான் ஒரு முடிவுக்கு வந்துட்டேம்மா....." என்றாள் செல்லம்மாள்.

" என்னக்கா?" என்று கேட்டாள் வனஜா.

"ஜெயராமன் வெளிப்படையா என்ன பேசினாலும், அவனுக்கு உன்மேல் இருக்கிற அன்பு எனக்குத் தெரியும். அவன் உன்னை வெறுக்கவில்லை. உன் பேச்சையும் நடவடிக்கயையுந்தான் அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அது சும்மா மேலாக இருக்கிற திரை. ஒருத்தருக்கொருத்தர் கொஞ்சம் விட்டுக்கொடுத்துவிட்டால், சரியாகப் போய்விடும்...... அந்தத் திரையை நான் ஓர் அதிர்ச்சி வைத்தியம் செய்து கிழித்துவிடப் போகிறேன்.... என்றாள்.

. "அதிர்ச்சி வைத்தியமா?" என்று புதிருடன் கேட்டாள் வனஜா.

"ஆமாம், - அது என்னன்னு நான் இப்போ உனக்குச் சொல்லப் போறதில்லே. பின்னால் தெரியும் .... " என்று சிரித்தாள் செல்லம்மாள்.

ஏதும் புரியாமல் செல்லம்மாளையே பார்த்தாள் வனஜா.

## 17

அந்நியமாக நம்முன் எண்ணுவதில்லை - இரண்
டாவியுமொன் றாகுமெனக் கொண்டதில்லையோ?

– பாரதியார்

மேஜைமீதிருந்த அந்தக் கடிதத்தைக் கண்டதும் ஸ்ரீதரின் முகம் சுருங்கியது. ஒருமுறைக்கு இருமுறை அதை படித்த பிறகு, பஸ்ஸரை' ஒலிக்கச் செய்து, பியூனை வரவழைத்து "ஸ்டெனோ சுதாவை வரச்சொல்" என்றான்.

அடுத்த நிமிஷம், அடக்கமே உருவாக அவன் முன்னால் நின்றாள் சுதா.

"வாட் ஈஸ் திஸ்......" என்று கேட்டு, தான் பார்த்த அந்தக் கடிதத்தை அவளிடம் நீட்டினான்.

"இது என்ன கேள்வி? அதில்தான் எழுதியிருக்கிறேனே ..." என்றாள் சுதா.

" அதுதான் தெரிகிறதே! லீவ் லெட்டர்! எதற்குத் திடீரென்று லீவ் என்று தான் கேட்கிறேன்...." - அவன் குரலில் முன்பிருந்த கடுமை இல்லை. சுதாவிடம் ஒரு தனிப்பட்ட ஒட்டுதலும் நெகிழ்ச்சியும் இயல்பாகவே ஏற்பட்டிருந்தது.

அதற்குக் காரணம், அவர்கள் இருவரிடையே ஏற்படிருந்த கருத்துப் பரிமாற்றந்தான். தன் அந்தரங்கங்களை முழுமையாகத் தெரிந்து, தன் உணர்ச்சிகளைப் பகிர்ந்து கொண்டவளாகச் சுதா இருப்பதால், அவனால் அவளிடம் எந்தப் போலியான உணர்சிகளையும் காட்டமுடியவில்லை. எந்த வித அர்த்தமற்ற திரையையும், போட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. சுதா தன் வீட்டிற்கு வந்து, தன்னோடு மனம் விட்டுப் பேசிக்கொண்டிருந்து விட்டுத் திரும்பிய விநாடியிலிருந்து அவனுக்கு இந்த நிலைதான் ஏற்பட்டிருந்தது.

வீட்டில் நடந்த சந்திப்புக்குப் பின் அவர்கள் முதன் முறையாக அப்போதுதான் அலுவலகத்தில் சந்தித்துக் கொள்கிறார்கள். சுதா, முதன் முதலிலேயே 'லீவ்' லெட்டருடன் சந்திக்கிறாள்.

ஸ்ரீதர் காரணம் கேட்டதற்கு சிறிது நேரம் பதில் சொல்லாமல் இருந்தாள் சுதா. தன்னுடைய அந்தரங்கத்தைத் தெரிந்து கொண்ட சுதாவின் தனிப்பட்ட தேவைகளையும் தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்று துடித்தான் ஸ்ரீதர்.

"சொல் சுதா, நீ எதற்காக லீவ் கேட்கிறாய் என்று நான் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்றான்.

" அதான் நான் லெட்டரில் எழுதியிருக்கிறேனே, சார்.... சொந்தக் குடும்ப வேலையே முன்னிட்டுத்தான் ...." சுதா நிதானமாகப் பதில் சொன்னாள்.

"அது ஜெனரல் மானேஜருக்கு ஆபீஸ் முறையில் சொல்லும் பதில். ஸ்ரீதர் என்ற நண்பனுக்கு இன்னும் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லவேண்டாமா?"

"நண்பர் ஸ்ரீதரிடம் விளக்கமாகச் சொன்னால், அவருக்கு லீவ் கொடுக்க பிரியம் இருக்காது. உடனே ஜெனரல் மானேஜர் என்ற பதவியைக்கொண்டு, என் லீவை 'சாங்க்ஷன்' செய்ய மறுக்கலாம்.... "

"சரி, இப்போதே என் லீவை சாங்க்ஷன் செய்ய மறுத்தால் ......"

"மானேஜிங் டைரக்டருக்கு அப்பீல் செய்வேன். இத்தனை வருஷமும் லீவே எடுக்காத ஒரு பெண்ணுக்கு, கேவலம், ஒரு மாதம் குடும்ப விஷயமாக லீவ் தரக்கூடாதா என்று சண்டை போடுவேன்...." என்று கூறிச் சிரித்தாள்.

"என்னால் நீ சண்டைக்காரியாக மாற வேண்டாம். லீவ் தந்து விட்டேன். இனிமேலாவது காரணம் சொல்....."

"ஆர்டர் கையில் வரட்டும்".

"அப்படியா? நீ சொல்லாவிட்டாலும் நான் ஊகித்துவிடுவேன். ஒரு பெண்ணுக்குச் சொந்தக் குடும்ப விஷயம் என்றால் ...... அதற்காக ஒரு மாதம் லீவ் வேண்டுமென்றால் .... என்ன ...... கல்யாணமா? என்று கேலியாகக் கேட்டான் ஸ்ரீதர்.

"ஏன்?" செய்து கொள்ளக்கூடாதா? அப்படிதான் வைத்துக் கொள்ளுங்களேன் ....." என்று புன்முறுவலுடன் கூறிவிட்டு, அந்த அறையைவிட்டு வெளியேறினாள் சுதா.

அன்று மாலையில் அவள் லீவ் சாங்க்ஷன் ஆகிவிட்டது.

மறுநாள் காலை ஸ்ரீதர் வீட்டு வாசலில் நின்றால் சுதா.

"கமான் சுதா.... நான்தான் நேற்றே லீவ் தந்துவிட்டேனே..." என்று கூறி அவளை வரவேற்றான் ஸ்ரீதர்.

"நானும் நேற்றே உத்தரவை வாங்கிவிட்டேன். இப்போது, லீவ் லெட்டரில் சொல்லியுள்ளதுபோல், சொந்தக் குடும்ப விஷயங்களைக் கவனிக்க வந்திருக்கிறேன்..... " என்றால் சுதா.

"என்ன....?" என்று திகைப்புடன் கேட்டான் ஸ்ரீதர்.

"ஆமாம்! நான் இப்படி உரிமை கொண்டாடுவது தப்பு என்றால் மன்னித்துகொள்ளுங்கள்.... ஆனால், தப்போ, சரியோ என்னால் உரிமை கொண்டாடாமல் இருக்க முடியாது. என்னைப் பொறுத்த அளவில் உங்கள் குடும்பத்தை என் சொந்தக் குடும்பமாக என்றோ ஏற்றுக்கொண்டுவிட்டேன். இந்தக் குடும்பத்தில் யார் கஷ்டப்பட்டாலும், நானும் கஷ்டப்படுவேன்..."

ஸ்ரீதர் பதில் சொல்ல முடியாமல் திகைத்து நின்றான்.

சுதா தொடர்ந்தாள்: " நீங்கள் நம் பவானியை அநாதை போல் வேலைக்காரர்கள் பொறுப்பில் விட்டுவிட்டு ஆபீசுக்கு வந்து விடுகிறீர்கள். அவள் இங்கே தனியே இருக்கிறாள். இந்த வீட்டில் ஒரு பெண் இருந்த்தால், பவானியை இப்படி அனாதையாக விட்டு விட்டுப் போவாளா? என்னதான் இருந்தாலும் நீங்கள் ஆண்தானே ...... ஒரு பெண்ணின் எல்லாத் தேவைகளையும் புரிந்துகொண்டு பணிவிடை செய்வது அவ்வளவு எளிதல்லவே...." என்றாள்.

"நான் என்ன செய்வேன் சுதா, பவானிக்காக அலுவலக வேலையையே விட்டுவிட முடியுமா? என்று வேதனையுடன் கேட்டான் ஸ்ரீதர்.

" உங்களை யார் அதெல்லாம் செய்யச் சொன்னது? ஆபீஸ் வேலையை நீங்கள் பாருங்கள். வீட்டு வேலையை நான் பார்கிறேன். இனி ஒருமாத காலம் நீங்கள் ஆபிஸிலிருந்து திரும்பும்வரை பவானியை நான் கவனித்துக் கொள்ளப் போகிறேன். அதற்காகத்தான் லீவ் போட்டேன். பவானி பழையபடி எழுந்து நடமாடும்வரை நான் லீவ்தான். லீவெல்லாம் தீர்ந்து போனாலும், சம்பளமில்லாத லீவாவது வாங்கிக் கொள்வேன்....."

சுதாவிடமிருந்து அவ்வளவு பெரிய உதவியை - அது தியாகமாகவே பட்டது அவனுக்கு. - பெறத் தயக்கமாகவே இருந்தது ஸ்ரீதருக்கு. ' இவளுக்கு நாம் அப்படி என்ன செய்துவிட்டோம்..... ' என்று யோசித்தான்

" சுதா, நான் சொல்வதைக் கேள்" என்று ஆரம்பித்தான்.

" நோ.... கேட்க்க மாட்டேன். என் சொந்த வீட்டுக்காரியத்தைக் கவனிக்கவிடாமல் நீங்கள் என்ன உபதேசம் செய்வது, நான் என்ன கேட்பது? நான் என் வேலையைக் கவனிக்கப்போகிறேன், நீங்கள் காலாகாலத்தில் உங்கள் வேலையைக் கவனியுங்கள்" என்று கூறிவிட்டு, அவன் பதிலுக்குக் காத்திராமல், பவானியின் அறைக்கு ஓடினாள் சுதா.

அன்று முதல் ஒரு புதிய சுதாவையே கண்டான் ஸ்ரீதர்.

காரியாலயத்தில் அவன் மேஜைமுன் தவம் கிடந்து, அவனுடைய பேச்சுக்கும், சிரிப்புக்கும் காத்திருந்த சுதாவைக் காணவில்லை. அந்தப் பழைய சுதா, அவன் கண்முன்னிருந்து மறைந்து விட்டாள். அவள் பழைய சுதாவாக இருந்திருந்தால், பவானியைப் பார்க்க வரும்போதும், அங்கு வருவதற்குக் கிடைக்கும் வாய்ப்பையுமெல்லாம் பயன்படுத்தி, ஸ்ரீதரிடமே பேசிக்கொண்டிருக்கலாமே.

ஆனால், சுதாவோ?

ஸ்ரீதர் என்று ஒருவன் அந்த வீட்டில் இருப்பதையே மறந்துவிட்டவள் போல் காணப்பட்டாள். காலை ஒன்பது மணியளவில் வருவாள். ஹாலில் நிற்கும் வேலைக்காரியிடமோ, வேலைக்காரனிடமோ " நேற்று நான்போன பிறகு பவானி எப்படி இருந்தாள்? தூங்கும்போது எப்போதாவது பயந்து அலறினாளா?" என்று கேட்டுத் தெரிந்துகொள்வாள். பின் நேராக பவானியின் அறைநோக்கி விரைவாள். அவள் போகும் வழியில் தான் ஸ்ரீதரின் அறையும் இருக்கிறது. அவன் அறைப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கமாட்டாள்.

ஒன்பதே முக்கால் மணிக்கு ஸ்ரீதர் ஆபீசுக்குப் புறப்படுவான். அதுவரை வீட்டில் தான் இருப்பான். சுதா வருவதையும், பவானியின் அறைக்குப் போவதையும் பார்த்துக் கொண்டுதான் இருப்பான். சிலசமயம் அவள் எதிரில் அவன் வந்தால் கூட, "என்ன, நேற்று பவானி நிம்மதியாகத் தூங்கினாளா?" என்று பவானியைப் பற்றிதான் விசாரிப்பாளே தவிர, வேறு எந்தப் பிரச்சனையைப்பற்றியும் பேசமாட்டாள்.

நாளுக்குநாள் சுதா தன்னை அந்தவீட்டின் சுக துக்கங்களில் ஐக்கியப்படுத்திக்கொண்டு வாழ்வதைக் கண்கூடாகக் கண்டான் ஸ்ரீதர்.

இதனால்........

ஸ்ரீதருக்கு பவானியைப் பற்றி கவலையைவிட, சுதாவைப் பற்றிய கவலையே அதிகரித்துவிட்டது. காலை ஒன்பது மணிக்கு வரும் சுதா, மாலை ஆறு மணிக்குதான் வீடு திரும்புகிறாள். சில நாள் ஏழு, எட்டுகூட ஆகிவிடுகிறது. அதுவரை அவள் ஒழுங்காகச் சப்பிடுகிராளா என்று கூட அவனுக்குச் சந்தேகமாக இருந்தது.

பவானிக்கு வேளாவேளைக்கு மருந்து கொடுப்பதிலும், ஹார்லிக்ஸ் கரைத்துக் கொடுபதிலுமே அவள் கவனமாக இருந்தாளே தவிர, தான் வேளாவேளைக்குச் சாப்பிடுவதில் அக்கறை காட்டவில்லை.

ஒருநாள் ஸ்ரீதர் அவளைக் கண்டித்தான்.

"என்ன சுதா, நீ இப்போது செய்வதே பெரிய காரியம், பட்டினி வேறு கிடந்து என்னைக் கடனாளியாக்காதே" என்றான்.

" ஏன், எனக்குந்தான் கொஞ்சம் கடன் பாடுங்களேன்"...... என்று விளையாட்டாகக் கூறி மழுப்பிவிட்டு, பிறகு, வேதனையுடன் " நான் ஏதோ ஒருநாள் சாப்பிடாமல் இருந்ததைப் பெரிதாகச் சொல்கிறீர்களே பவானி எத்தனை நாள் சாப்பிடாமல் இருக்கிறாள். அவள் நிலைமையை நினைத்துவிட்டால், எனக்குப் பச்சைத் தண்ணீர்கூட இறங்க மாட்டேன்கிறது....." என்றாள்.

பேச வாயெழாமல் அப்படியே நின்று விட்டன ஸ்ரீதர்.

'கடவுளே, எனக்காகத்தான் நீ இறங்கவில்லை. இந்த அப்பாவிப்பெண் படும் வேதனைக்கு இறங்கியாவது, பவானியைக் குணப்படுத்தக் கூடாதா' என்று மனத்துக்குள் வேண்டிக்கொண்டான் ஸ்ரீதர்.

கொஞ்சங்கொஞ்சமாக, பவானியின் பொறுப்பு முழுவதையும் சுதா ஏற்றுக்கொண்டுவிட்டாள். அவள் பொறுப்பேற்ற பின், தன்னைவிடப் பல மடங்கு சிறப்பாக அந்தக் காரியங்களைச் சுதா நிறைவேற்றுவதைக் கவனித்தான் ஸ்ரீதர்.

முன்பெல்லாம் அவன் ஆபீசுக்குப் புறப்படுமுன், பவானிக்கு மருந்து கொடுத்துவிட்டு, படுக்கயையெல்லாம் சரிசெய்துவிட்டுப் போயிருப்பான். இருந்தாலும், மாலையில் வந்து பார்த்தால், படுக்கை ஒதுங்கிப்போய் கிடக்கும். தலையணைகள் தாறுமாறாகச் சிதறிக் கிடக்கும். "வேளா வேளைக்குச சரியா மணி பார்த்து நானே மருந்து கொடுத்தேன்" என்று சத்தியம் செய்வாள் வேலைக்காரி. ஆனால், மருந்துப் புட்டியில் மருந்து குறைந்திருக்காது.

ஆனால், இப்போது.......?

சுதா பவானியின் நோய்க்கு எதிராகப் போர்க்கொடியே தூக்கியிருந்தாள். எப்போது பார்த்தாலும் பவனியின் படுக்கை பளிச்சென்றிருக்கும். 'ம்ம்' என்றுகூடப் பவானியை அரற்றவிட மாட்டாள். லேசாக முனக ஆரம்பித்தால், அவளே அருகில் நின்று, அவளை இதமாக அணைத்தவாறு அமர்ந்துகொண்டு அவளைத் தேற்றுவாள். பவானி அலறுவது மனநோயினால்தானே! அதற்கு சரியான மருந்து இதமான பணிவிடைதான் எனபது சுதாவின் முடிவு.

டாக்டரையும் சுதா லேசில் விடுவதில்லை. முன்பெல்லாம் டாக்டர், பவானியின் அப்போதய நிலையைப் பார்த்து ஏதோ ஊசி போட்டுவிட்டுப் போய்விடுவார். பவானியின் கேஸ், டாக்டருக்கு அலுத்துப்போன விஷயம். ஆரம்பத்தில் எத்தனையோ மாதம் டிஸ்பென்சரியில் நற்சே துணையுடன் பராமரித்துப் பார்த்து, அலுத்து, 'இட மாற்றம் தேவை' என்ற சாக்கில் வீட்டுக்கு அனுப்பிவிட்டார். ஸ்ரீதரிடம் பண வசதி இருப்பதால், டாக்டர் தினமும் வந்து போய்க்கொண்டிருந்தார். பிரத்யோகமாக சில நர்ஸுகள் வைத்துப் பார்த்தும், அவர்களால் பவானியைச் சரியாக கவனித்துக்கொள்ள முடியாமல் போய்விட்டது. .

இப்படி மற்றவர்கள் ஒதுங்கிய இடத்தில சுதா வந்து, தன்னை பிணைத்துக்கொண்டாள். டாக்டரையே திணற அடித்துக் கொண்டிருந்தாள், ஒவ்வொரு விநாடியும் பவனியின் உடலில் தோன்றும் கோளாறுகளைக் கவனித்துக் குறித்து வைத்துக்கொண்டு, டாக்டரைக் கேள்வி மேல் கேள்வி கேட்டுக் கொண்டிருந்தாள். எல்லாவிதமான மருந்துகளையும் கொடுக்கச் செய்தாள். 'மனோவியாதிக்கும் மருந்து உண்டே' அதைச் சொல்லுங்களேன் என்று மன்றாடினாள்.

பவானியின் கதை பூராவும் சுதாவுக்குத் தெரியும்.

அவளுக்கு ஏற்பட்டிருப்பது மனோவியாதி. அதிர்ச்சியின் விளைவால் ஏற்பட்ட விபத்து.

இதற்கு என்ன மருந்து......? பல மனோதத்துவப் புத்தகங்களைப் படித்துக் கடைசியில் தானே ஒரு வைத்தியம் செய்து பார்க்க முடிவு செய்தாள் சுதா.

மறுநாள்

மாலை ஐந்தரை மணியளவில் வீட்டுக்குள் நுழைந்ததும், திடுக்கிட்டான் ஸ்ரீதர்.

மாடியிலிருந்து வந்த ஓர் இனிமையான வாத்திய இசை, வீட்டையே நிறைத்திருந்தது. அது பியானோவின் ஒலி, பவானிக்குப் பிடித்த சில 'மெட்'டுகள் அப்போது வாசிக்கப்பட்டன.

இந்த வீட்டில் பியானோ வாசிப்பது யார்?

பரபரப்புடன் மாடியேறிச் சென்றான் ஸ்ரீதர்.

அங்கே ...

சுதா, பவானியின் கட்டிலருகே நின்றிருந்தாள்.

சற்று தள்ளி, ஒரு பியானோ காணப்பட்டது. ஓர் ஆங்கிலோ இந்தியப்பெண் அந்தப் பியானோவை இசைத்துக்கொண்டிருந்தாள்.

அந்த இசையைக் கேட்டு -

பல மாதங்களாக நடக்காத ஓர் அதிசயம் அங்கே நிகழ்ந்துகொண்டிருந்தது.

பவானியின் கண்கள் லேசாகத் திறந்திருந்தன. சமீப காலமாக எந்த இடத்திலும் பதிந்திராத பவனியின் கண்கள், பியானோ வாசித்துக் கொண்டிருந்த ஆங்கிலோ இந்தியப்பெண்மீது பதிந்திருந்தது. அலறல் தவிர, இதயம் நெகிழ்ந்து அழுது அறியாத பவானியின் கண்களிலிருந்து, அருவிபோல் கண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது.

உணர்ச்சிக் கொந்தளிப்புடன் அந்தக் காட்சியைப் பார்த்து, ஆடாமல் அசையாமல் நின்றுவிட்டான் ஸ்ரீதர்.

மாலை மணி ஆறு.

ஜெயராமன் களைத்துப் போய்வீடு திரும்பினான். அன்று ஆபீசில் அவனுக்குச் சரியான வேலை. வாயிற்கதவு திறந்து கிடந்தது. உள்ளே நுழைந்தான். ஹாலில் எவரையும் காணவில்லை. சுதாகூட வீடு திரும்பியிருக்க வில்லை.

"அக்கா" என்று அழைத்துக்கொண்டே சமையல் அறைப்பக்கம் சென்றான். அங்கும் செல்லம்மாளைக் காணவில்லை.

"எங்கே போய்விட்டாள் இந்த அக்கா .....?

அவன் யோசித்துக் கொண்டிருக்கும்போது, வேறொரு அறையிலிருந்து ஏதோ உடம்பு சரியில்லாதவள்போல் வெளியே வந்தால் செல்லம்மாள்.

"ஜெயராமா, வந்து நேரமாச்சா?" - முக்கிமுனகிக் கேட்டுக்கொண்டே ஜெயராமனை நெருங்கினால் அவள்.

"என்னக்கா, உடம்புக்கு என்ன?" என்று பரிவுடன் விசாரித்தான் ஜெயராமன்.

"உடம்பு சரியில்லேப்பா...."

டாக்டர் வீட்டுக்குப்போகலாமா.....? என்று எழுந்தான் ஜெயராமன்.

"வேண்டாம்பா ...... உடம்புக்கு மட்டும்னா டாக்டரைப் பார்க்கலாம்...." என்றால் செல்லம்மாள்.

ஜெயராமனுக்குப் புரிந்தது.

"என்னால் உனக்கு ரொம்பக் கஷ்டம், அக்கா ...." என்றான் பரிவுடன்.

"வாயாலே சொல்றியே தவிர, மனசாலே உணர்ந்ததாகத் தெரியல்லியே..."

"என்ன சொல்ற அக்கா..... ?" புரியாமல் கேட்டான் ஜெயராமன்.

"களைச்சு வந்திருக்கே.... கொஞ்சம் இரு. போய் காப்பிபோட்டுக் கொண்டுவரேன்... " என்று சமையல் அறைப்பக்கம் நகர்ந்தாள். ஜெயராமன் அக்காவைப் பின்தொடர்ந்தான்.

"வேறே ஒண்ணுமில்லேடா. வீடே களையிழந்த மாதிரி இருக்கு. சுதாவோ, வீடுன்னு ஒண்ணு இருக்கிற நினைப்பில்லாமல் அலையறா. அந்த ஸ்ரீதர் வீட்டிலே வாழமுடியாம ஒரு பெண் இருக்காமே, அதை வாழ வைக்கப்போறேன்னு ஏதேதோ சொல்றா... நீயோ, இந்த வீட்டிலே வாழவேண்டிய பெண்ணைப்பற்றிக் கவலைப்படாமல் தனி மரமா அலையற......"

"அக்கா, நீ வனஜா பேச்சை எடுக்காதே...." என்று ஆத்திரத்துடன் குறுக்கிட்டான் ஜெயராமன்.

"அவளைப்பற்றி நான் பேசல்லே.... நான் உன்னைப்பற்றிதான் பேசறேன்...."

"என் நிலை என்ன? இனிமே இதுதான்....."

"என்ன இதுதான்..... என்னமோ வாழ்ந்து அலுதுவிட்டவன் மாதிரி பேசறியே..... நான் ஒருத்தி எத்தனை நாள் இந்த வீட்டைக் காத்துக்கொண்டு கிடக்க முடியும்..... நாளைக்கு சுதாவுக்கும் கல்யாணம் ஆகிவிட்டா.... உன்னைப் பார்த்துக்க யார்.....?"

"அந்தப் பாவிதான் போயிட்டாளே...." எரிச்சலுடன் கூறினான் ஜெயராமன்.

"அழைத்தால் வரமாட்டாளா?"

"நான் அழைக்கிற மாதிரியா அவ நடக்கிறா..."

"அவளை அழைக்கப் பிரியமில்லேன்னா.... " என்று கூறி, ஒருகணம் தயங்கினாள் செல்லம்மாள்.

தான் திட்டமிட்டிருந்தபடி சரியான தருணம் வந்துவிட்டது என்ற நம்பிக்கை ஏற்பட்டது அவளுக்கு. பேச்சைத் தொடர்ந்தாள்: அவளை அழைக்க விரும்பல்லேன்னா, அவளை ரத்து பண்ணிவிட்டு, வேறொருத்தியையாவது கல்யாணம் பண்ணிக்கோ ...... இந்தக் காலத்திலேதான் இப்படி எவ்வளவோ நடக்கிறதே......." என்றாள்.

செல்லம்மாள் திட்டமிட்டிருந்த அதிர்ச்சி வைத்தியம் இதுதான். வனஜாவை நிரந்தரமாகப் பிரிய வேண்டிய சூழ்நிலையை ஜெயராமன் மனத்தில் தோற்றுவித்தால், அவன் மனம் வனஜாமீது அதிகமாகப் பற்றுக்கொண்டு, அவளுடைய அற்ப குறைகளை மன்னிக்கத் துணிந்துவிடும் எனபது அவளுடையத் திட்டம். அவள் வார்த்தைகள் ஜெயராமனிடம் சரியான பிரதிபலிப்பையே ஏற்படுத்தின.

"என்னக்கா, நீயா இப்படிச் சொல்கிறாய்?"

"பின்னே என்னப்பா பண்ணச்சொல்றே.......? புண்ணை மூடிமூடி வச்சா என்ன பிரயோஜனம்? ஏதாவது ஒரு ‘வைத்தியம்' செய்துதானே ஆகணும்?" என்றாள்.

ஜெயராமனால் உடனடியாகப் பதில் சொல்லமுடியவில்லை. சிந்தனை தேங்கிய முகத்துடன் தன் அறைக்குச் சென்றான். அதைக் கவனித செல்லம்மாள், தன் 'வைத்தியம்' பலன் தர ஆரம்பித்துவிட்டது என்று நம்பினாள். உடை மாற்றிக்கொண்டே மீண்டும் சமையல் அறைக்குள் நுழைந்தான் ஜெயராமன். அவன் முகத்தில் ஒரு தெளிவு இருந்தது.

"அக்கா, நீ சொன்னதை நன்றாக யோசித்தேன். நீ சொல்வதுதான் சரியென்று எனக்கும் தோன்றுகிறது. எப்போ மனத்துக்கு ஒத்துக்கொள்ளவில்லையோ, அதற்கு மேலே என்ன உறவு? நாளைக்கே, வனஜாவை விவாகரத்து செய்யற விஷயமா வக்கீலைப் பார்க்கிறேன்... ." என்றான்.

இதைக்கேட்டு செல்லம்மாள் திடுக்கிட்டாள்.

மருந்தே விஷமாகிவிட்ட கொடுமையைக் கண்டு பேச வாயெழாமல் பிரமித்து நின்றாள் அவள்.

## 18

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்

– பாரதியார்

"வனஜாம்மா......... உங்களுக்குச் சொந்தத் தபால் வந்திருக்கிறது" என்று கூறி, இரண்டு கடிதங்களை மேஜைமீது வைத்துவிட்டுச் சென்றான் பியூன்.

'எனக்கா! இரண்டு கடிதங்களா?' என்று தனக்குள் கூறிக்கொண்டு, அதைஎடுத்துப் பார்த்தாள் வனஜா. உரையின் மேல் இருந்த கையெழுத்தைப் பார்த்தே, அவற்றை எழுதியவர்கள் யார் என்பதை அவளால் புரிந்துகொள்ள முடிந்தது.

'இப்போது படிக்க வேண்டாம், சாயங்காலம் வீட்டிக்குப் போய்ப் படித்துக்கொள்ளலாம்' என்ற முடிவுடன், அவற்றைத் தன் கைப்பைக்குள் எடுத்து வைத்துக்கொண்டாள். மாலை வீடு திரும்பியதும், தனிமையில் அமர்ந்துகொண்டு அவற்றைப் பிரித்துப் படித்தாள். முதற்கடிதம் அவள் கணவன் ஜெயராமன் எழுதியது.

அன்புக்குரிய வனஜா,

நான் உன்னை 'அன்புக்குரிய வனஜா' என்று கடிதத்தில் அழைத்திருப்பதைப் பார்த்து, நீ ஆச்சரியப்படலாம். ஆனால், இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. நீ அன்புக்குரியவளாக இருப்பது, என்றுமே பிரச்சனைக்குரிய விஷயமல்ல. ஆனால், நீ என் வாழ்க்கைக்குரிய துணைவியாக இருந்திருக்கிறாயா என்பதுதான் எப்போதுமே பிரச்சனைக்குரியதாக இருந்து வந்திருக்கிறது.

'கணவன்' என்ற வார்த்தைக்கு நீ கண்டுபிடித்திருக்கும் பொருளுக்கும், நான் அறிந்து வைத்திருக்கும் பொருளுக்கும் ஆரம்பத்திலேயே முரண்பாடு தோன்றிவிட்டது.

என்னைப் பொறுத்த அளவில், ஒரு கணவன் தன் மனைவியிடம் முக்கியமான சில விஷயங்களை எதிர்பார்க்கிறான். அவள் அழகில் ஏறக்குறைய இருந்துவிடலாம். அறிவில் போதிய தரத்தை எட்டாதவளாக இருந்து விடலாம். பழக்க வழக்கங்களில், நாகரிக உணர்வுகளில் வேண்டிய அளவு சாமர்த்தியம் இல்லாதவளாக இருந்த விடலாம், இவை எதுவும் பெரிய விஷயங்கள் அல்ல. இந்த ஏற்றத்தாழ்வுகளை ஒரு கணவனால் சரிகட்டிக் கொள்ள முடியும். இந்த நாட்டில் வாழையடி வாழையாக வந்த குடும்பங்களிலுள்ள பெண்களில் பலருக்கு இந்தக் குறை இருந்து வந்திருக்கிறது. அதை அவர்களுடைய கணவன்மார்கள் பொருட்படுத்தாமல், இல்வாழ்கை நடத்திவந்தது, 'திருமண வாழ்கையின் ஒற்றுமைக்கும் சிறப்புக்கும் பாரத நாடு தனிச் சிறப்பு பெற்றது' என்ற பெருமையை இந்த நாட்டுக்குத் தேடித் தந்திருக்கிறார்கள்.

ஆனால், இந்தச் சிறப்புமிக்க நாட்டில் எந்தக் கணவனும் பிற ஆடவனைப் போற்றிப் புகழ்ந்து கணவனிடம் சொல்லும் பெண்ணையோ, 'ஒருவேளை என் நண்பனைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் சந்தோஷமாக இருந்திருப்பேன்' என்று சொல்லக்கூடியப் பெண்ணையோ, மனைவியாக ஏற்றுக்கொண்டு, மனக்குறைச்சல் இல்லாமல் வாழ்ந்ததாக நான் கேள்விப்படவில்லை. அது ஆண்களின் குறையாக இருக்கலாம்; அவர்களுடைய பலவீனமாக இருக்கலாம். எனக்குத் தெரியாது. அது அப்படியே ஒரு குறையாக இருந்தாலும் சரி, நான் அதை மறுக்கவில்லை. ஆனால், அந்தக் குறை, அந்தப் பலவீனம் இந்த நாட்டில் உள்ள லட்சக் கணக்கான ஆண்களிடம் இருப்பதுபோல் என்னிடமும் இருக்கிறது.

கல்யாணத்திற்கு முன்பும், பின்பும் என் மனைவிக்கு ஓர் ஆணின் பழக்கம் இருக்கக் கூடாது என்று விரும்புகிற, சராசரி ஆண் வர்க்கத்தைச் சேர்ந்தவன் நான் 'இதெல்லாம் தப்பில்லை, சமூகம் முன்னேறிவரும்போது இதெல்லாம் சகஜந்தான்' என்று சொல்லும் முற்போக்குவாதியாக என்னால் இருக்க முடியவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன், என்ன செய்வது? நீ அடிக்கடி சொல்வாயே, 'உண்மை சொல்ல வேண்டும்' என்று, அதன்படி நான் உண்மையைச் சொல்கிறேன். 'நான் ஒரு முற்போக்குவாதி' என்று உலகத்திற்கு நிரூபிப்பதற்காக நான் கல்யாணம் செய்துகொண்டவனல்ல; கேவலம், நான்கு பேரைப்போல் மனத் திருப்தியோடு, அமைதியாக ஒரு பெண்ணுடன் வாழவேண்டும் என்ற ஆசையில்தான் நான் கல்யாணம் செய்துகொண்டேன்.

என் லட்சியமும் ஆசையும் இப்படிச் சாதாரணமாக இருப்பதால்தான் உன் தீவிர சிந்தனைக்கும், பேச்சுக்கும், நடவடிக்கைக்கும் என்னால் ஈடுகொடுக்க முடியவில்லை.

உன்மேல் எனக்கு இப்போதும் அன்பு உண்டு, ஆசை உண்டு. உன்னோடு வாழவேண்டும் என்ற துடிப்பும் உண்டு. ஆனால், நமக்கிடையே வேலி கட்டியதுபோல் அமைந்துவிட்ட உன் புதுமைப் போக்குகளைத் தாண்டி வந்து, உன்னோடு வாழ முடியாதவனாக இருக்கிறேன்; என்ன செய்வது?

இந்தத் தற்காலிகப் பிரிவைத் தகர்த்து நாம் மீண்டும் இணைந்தால்கூடச் சுந்தரத்திற்கும் உனக்கும் உள்ள நட்பை நீ பாராட்டாமல் இருக்கமாட்டாய். மீண்டும் அவனோடு 'நட்பு' கொள்ளாமல் இருக்க மாட்டாய். நம் பிரிவுக்குக் காரணமாயிருக்கும் சுந்தரத்தோடு நீ இப்போதும் நட்புடன் பழகுவதே இதற்குச் சான்று, இல்லையா? அவனுடன் பழக மாட்டேன் என்று உன்னாலும் சொல்ல முடியாது; உங்கள் பழக்கத்தைப் பொருட்படுத்த மாட்டேன் என்று என்னாலும் சொல்லமுடியாது.

எனவே, நமக்குள் எந்த வழியிலும் மன ஒற்றுமையுடன் இணைந்த வாழ்க்கை அமையும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. பழைய காலத்தில் இப்படி யாருக்காவது பிரச்சினை எழுமானால், ஒவ்வொருவரும் அவரவர்கள்

தரத்திற்கு ஏற்றார்போல் அதைத் தீர்த்துக்கொள்வார்கள். கொஞ்சம் சாதுவானவர்கள் மனைவியைத் தள்ளி வைப்பார்கள். உணர்ச்சியை அடக்க முடியாத முரட்டுச் சுபாவம் உள்ளவர்கள் அடித்து உதைத்து துன்புறுத்துவார்கள்.

ஆனால், நாம் நாகரிகமானவர்கள் அல்லவா? அதனால் நம் பிரச்சினையை சட்டத்தின் துணைகொண்டு நாகரிகமாகத் தீர்த்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

அதுதான் விவாகரத்து!

ஒரு வக்கீலுடன் அதைப் பற்றிக் கலந்தாலோசனை செய்திருக்கிறேன். மேற்கொண்டு நடவடிக்கை எடுக்குமுன், உன்னிடம் மனம்விட்டு என் நிலையைத் தெரிவித்து விடவேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டதால் இவற்றை எழுதினேன். வக்கீல் மூலம் பேசும்போது, இதயங்கள் பேசமுடியாது. உணர்ச்சியுடன் மனம்விட்டுச் சொல்ல வேண்டியதைச் சொல்ல முடியாது. சட்டம் தான் பேசும், இதயம் பேசாது. உன்னிடம் கடைசியாக ஒருமுறை - இதுநான் கடைசியாக என் கைப்பட எழுதும் கடிதமாக இருக்கக் கூடும் - மனம்விட்டு எல்லாவற்றையும் சொல்லவேண்டும் என்ற ஆர்வம் காரணமாகவே இதை எழுதினேன். எனக்கு இப்போது மன நிறைவு ஏற்பட்டுவிட்டது. விரைவில் சட்டத்தின் துணையுடன் பேசிக்கொள்வோம்.

உன் கணவன்,

ஒருமுறைக்கு இருமுறை இந்தக் கடிதத்தைப் படித்து முடித்தாள் வனஜா. பிறகு, அதை மடித்துவைத்துவிட்டு, அடுத்தக் கடிதத்தைப் பிரித்தாள். அது சுந்தரம் அவளுக்கு எழுதியிருந்த கடிதம்,:

அன்பு மிக்க வனஜாவுக்கு,

நான் உங்களுக்குக் கடிதம் எழுத அவசியமில்லாதவன். நாம் நேரிலேயே நிறையப் பேசுகிறோம். அதுவும் மற்றவர்களின் கண்களை உறுத்துகிறார்போல், சகஜமாகப் பேசுவதில் பெயரெடுத்துக் கொண்டிருக்கிறோம்.

நமக்குக் கடிதங்கள் தேவையில்லைதான். இருந்தாலும், இந்தக் கடிதம் தேவை என்று எனக்குப்பட்டது. உங்களிடம் ஓர் அனுமதியைப் பெறவே, இதை எழுதுகிறேன். நேரில் பேசினால், தெளிவாகச் சொல்லமுடியாதோ என்ற அச்சந்தான் இந்த எழுத்திற்குக் காரணம்.

நாம் எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசி இருக்கிறோம். கதைகளில், நாடகங்களில் வரும் பல்வேறு பாத்திரங்களைப் பற்றியும், உறவுகளைப் பற்றியும் மணிக்கணக்காக விவாதித்திருக்கிறோம். ஆனால், நாம் சர்ச்சைகோ விவாதத்திற்கோ உட்படுத்தாத விஷயம் ஒன்று உண்டென்றால், அது நம் இருவருக்கும் உள்ள நேரடி உறவும், அதை இந்த உலகம் எப்படிப் பார்க்கிறது என்ற உண்மையுந்தான்!

இந்த விஷயம் பற்றிப் பேசாமல் நாம் இருவரும் சாமர்த்தியமாகத் தப்பித்து வந்திருக்கிறோம். நான் பேசுவதற்குத் தயங்கி, பல சந்தர்ப்பங்களைத் தள்ளிப் போட்டுவந்திருக்கிறேன். ஆனால், அதைப் பற்றி நாம் இப்போது பேசவேண்டிய சந்தர்ப்பம் ஏறபட்டுவிட்டதாக நான் உணர்கிறேன்.

இதுவரை நான் உங்களிடம் பழகிய முறையும், நீங்கள் என்னிடம் பழகிய கண்ணோட்டமும் நாம் நேரிடையாகப் பேசிக்கொள்ளாமலேயே ஒருவரையொருவா, புரிந்துகொண்டதால், தானாக ஒரு முடிவுக்கு வந்து விட்டது. உங்கள் மீது எனக்கு நட்புக்கும் சற்று அதிகப்படியான அன்பு - காதல் ஏற்பட்டு, அதை நான் மறந்து, நம் உன்னதமான நட்பில் ஒரு மகிழ்ச்சியை அனுபவித்துக்கொண்டிருக்கிறேன். நீங்கள் ஆரம்பம் முதல் அந்த ஊமை நட்பில் மட்டும் உங்களை வைத்து மகிழ்ந்து வந்திருக்கிறீர்கள். உங்கள் நட்பின் போக்கை நான் புரிந்துகொள்ளவே பல நாட்கள் ஆயிற்றென்றால், இந்த உலகம் அதைச் சரியாக புரிந்துகொள்ளாததில் ஆச்சரியம் எதுவும் இல்லை. உலகம் சரியாகப் புரிந்துகொண்டாலும் சரி, புரிந்துகொள்ளாவிட்டாலும் சரி, அதனால் நாம் நேரிடையாகப் பாதிக்கப்படுவதில்லை. அதைப் பற்றி நாம் கவலைப் படவும் வேண்டாம். ஆனால், அதை உங்கள் கணவர் சரியாகப் புரிந்துகொள்ளாததனால் ஏற்படும் விளைவுகளைப்பற்றி நாம் கவலைப் படாமல் இருக்க முடியுமா?

உங்கள் கணவர் நம் நட்பைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையென்று தெரிந்துகொண்ட அன்றே, நம் நட்பை விலக்கிக்கொள்ளலாமா என்று நான் நினைத்தேன். ஆனால், அப்படிச் செய்தால் இதுவரை நாம் கொண்டிருந்த நட்பு களங்கமுள்ளதுதான் என்று உலகத்துக்கு ஊர்ஜிதப்படுத்துவதுபோல் ஆகுமோ என்று யோசித்தேன். தங்களுடைய

களங்கமற்ற அந்த நட்பும் என் எண்ணத்தைக் கேலி செய்வதுபோல் இருந்தது. இதனை சத்தியவேகம் உள்ள பெண்ணுக்கு எந்த அற்ப சந்தேகங்களாலும் கெடுதல் வராது என்று தோன்றவே, மனக் குழப்பமில்லாமல் தொடர்ந்து உங்களுடன் நட்புக்கொண்டு பழகினேன் நான்.

உங்கள் உண்மை உங்களைக் காக்கவில்லை.

சத்தியம் உங்களை வாழவிடவில்லை.

தெய்வமும், சத்தியமும் ஒரு வேளை காலம் தாழ்த்தியே பலன் தரக்கூடும். ஆனால், வாழ்க்கை, அதிலும் ஒரு பெண்ணின் வாழ்க்கை, கால தாமதத்தைத் தாங்கி விடிவுக்காகக் காத்திருக்க முடியாது.

உண்மையை மற்றவர்கள் தானாகக் கண்டு புரிந்துகொள்வார்கள் என்று அர்த்தமில்லாமல் நம்பிக்கொண்டிருப்பதைவிட, உண்மையை மற்றவர்களுக்கு உணரவைப்பதில் தவறில்லை.

எனவே, நானே ஜெயராமனைச் சந்திக்க முடிவு செய்திருக்கிறேன். அவரைச் சந்தித்து, நம்மைப் பற்றி சொல்லப் போகிறேன். என் பேச்சுத் திறமையில் எனக்கு இருக்கும் நம்பிக்கையைவிட, நான் வணங்கி வழிபடும் சத்தியத்தின் துணை என்னைக் காக்கும் என்பதிலும், உங்களுக்கு வழி பிறக்கச் செய்யும் என்பதிலும் எனக்கு அசைக்கமுடியாத நம்பிக்கையிருக்கிறது. எனவே, இதைச் செய்ய எனக்கு அனுமதி வேண்டும்.

இந்தக் குழப்பங்களுக்கு நான் ஓரளவு காரணமானவன் என்ற முறையில் மட்டுமல்லாது, உங்கள் நண்பன் என்ற முறையிலும் இதைச் செய்வதற்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே இடுக்கண் களைவதுதானே நட்பு? அந்த இடுக்கண்ணே என்னால் ஏற்பட்டிருக்கும்போது, என் கடமையின் சுமையை நான் உணர்கிறேன்.

இதை உங்களிடம் நேரிடையாகத் தெரிவித்தால், எனக்கு அனுமதி அளிப்பீர்களோ, மாட்டீர்களோ என்ற சந்தேகம் இருந்தது. அதனால்தான் கடிதம் மூலம் என் எண்ணத்தைத் தெரிவிக்கிறேன். நேரில் சொன்னால், யோசிக்காமல் என் எண்ணத்தைப் புறக்கணித்து விடுவீர்கள். நன்கு யோசித்துப் பதில் கொடுங்கள்.

தங்கள் சம்மதம் பெறாமல் தங்கள் சமந்தப்பட்ட இந்த விஷத்தைப் பற்றிப் பேசுவது முறையல்ல என்பதால், அனுமதி கேட்கிறேன்.

அன்பு நண்பன்

சுந்தரம்

கடிதத்தைப் படித்துவிட்டு வனஜா வெகுநேரம் வெறுமையைப் பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தாள். கணவன் கடிதத்திற்கு முன் சுந்தரத்தின் கடிதத்திற்குப் பதில் எழுதவேண்டியது அவசரமாகவும், அவசியமாகவும் அவளுக்குத் தோன்றியது. அப்போதே அமர்ந்து, சுந்தரத்திற்கு ஒரு கடிதம் எழுதினாள்.

அன்பு நண்பர் சுந்தரத்திற்கு,

தர்மசங்கடமான ஒரு பிரச்சனையை நேர்மையோடும் துணிவோடும் பார்க்கத் துணிந்த தங்களை நண்பராகப் பெற்றதற்கு நான் பெருமைப்படுகிறேன்.

ஆனால், தாங்கள் செய்ய முனைந்திருக்கும் காரியம், தங்களுடைய நேர்மையையும், பெருந்தன்மையையும் வெளிப்படுத்த உதவுமே தவிர, என் பிரச்சனைக்குக் கொஞ்சமும் உதவாது. உண்மை புரியாதவர்களுக்கு வேண்டு மானால் விளக்கம் சொல்லலாம். பொறுத்துக்கொள்ள முடியாத ஒருவருக்கு என்ன செய்யமுடியும்? சகிப்புத் தன்மையை அவராகத் தன் மனத்தில் வளர்த்துக்கொள்ள வேண்டுமே தவிர, இன்னொருவரால் அதை ஏற்படுத்த முடியாது.

ஒருவேளை, உங்களால் ஏற்படுத்தமுடியும் என்றால்கூட, அதை நீங்கள் செய்வதை நான் விரும்பவில்லை. இதை இவ்வளவு கண்டிப்புடன் நான் கூறுவதற்காக என்னை மன்னிக்கவேண்டும். ஆனால், நான் இவ்வளவு கண்டிப்புடன் நடக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

என் மணவாழ்க்கை, எனக்கும் என் கணவருக்கும் இடையே உள்ள அந்தரங்க உலகம். அதோடு அது ஒரு தனி உலகம். அதில் அந்நியரின் தலையீடு இருப்பதை நான்விரும்பவில்லை. நம் நட்பு என்ற வெளிப்படையான உலகத்துக்குள்ளேயே, என் கணவரின் தலையீட்டை எதிர்த்துப் போராடிக்கொண்டிருக்கிறேன். அப்படியிருக்க என் தாம்பத்திய உலகுக்குள் மூன்றாவது மனிதரின் தலையீட்டை என்னால் எப்படி அனுமதிக்க முடியும்?

ஆமாம், என் மணவாழ்க்கையைப் பொறுத்த அளவில், நீங்கள் மூன்றாவது மனிதர்தான்.

ஒரு விஷயத்தை உங்களுக்கு நினவுபடுத்துகிறேன். உங்களால் என் வாழ்வு பாதிக்கப்பட்டதாக நினைத்து நீங்கள் அவஸ்த்தைப்படுகிறீர்கள். அப்படி நானும் நினைக்க வழியுண்டு. என்னால் உங்கள் வாழ்க்கை பாழாக வில்லையா? நீங்கள் ஆரம்பத்தில் என மீது பிரியங்கொண்டு, அந்தப் பிரியத்தின் காரணமாக நீங்கள் இன்றளவும் பிரம்மசாரியாக இருக்கிறீர்களே; நீங்கள் இப்படித் தனி மரமாக இருப்பதற்கு நான்தானே காரணம்? அப்படியிருந்தும் எனக்கு எந்தவிதக் குற்ற உணர்வும் ஏற்படவில்லை. ஏன் தெரியுமா? நீங்கள் உங்கள் மனத்தில் செய்துகொண்ட முடிவுக்கு நான் பொறுப்பாளி அல்ல. அவரவர்கள் செய்த முடிவுக்கு அவரவர்கள்தான் பொறுப்பு!

அதனால்தான் நான் சாதாரணமாகக் கூட 'நீங்கள் ஒரு நல்ல பெண்ணாகப் பார்த்துத் திருமணம் செய்து கொள்ளுங்களேன்' என்று யோசனை சொல்லவில்லை. நீங்கள் திருமணம் செய்து கொள்வதும், செய்துகொள்ளாமல் இருப்பதும் உங்கள் சொந்த விஷயமல்லவா? அதில் தலையிட்டு யோசனை சொல்ல நான் யார்?

உங்கள் நலன் மீது எனக்கு அக்கறை இருக்கலாம். அதற்காக உங்கள் நடவடிக்கைகளில் குறுக்கிட எனக்கு அதிகாரம் இல்லை. 'அது என் நட்புக்கு அப்பாற்பட்ட விஷயம். அந்த விஷயத்தில் ஜாக்கிரதையாக ஒதுங்கி இருந்தால்தான் நல்ல நட்பைக் காப்பாற்ற முடியும். அதேபோல், நான் சுகமான குடும்ப வாழ்வைப்பெற வேண்டும் என்று நீங்கள் விரும்புவதை நான் ஆட்சேபிக்கவில்லை ஆனால், அதை எனக்குப் பெற்றுத்தர வேண்டும் என்று நீங்கள் நடவடிக்கை எடுப்பதை என்னால் அனுமதிக்க முடியாது.

என் தனிப்பட்ட லாப நஷ்டங்களை நானே தனிப்பட்ட முறையில் பெற்றுக் கொள்ளவேண்டும். 'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு' என்று சொல்வது உண்மை. ஆனால், யார் எந்தவித இடுக்கண்களைக் களைவது என்பதில் வரைமுறை இருக்கிறது. கணவன் - மனவி இவருக்குள்ளே இருக்கும் இடுக்கண்களை அவர்களேதான் தீர்த்துக்கொள்ள வேண்டும். தாம்பத்ய உறவு எனபது, கணவன் மனவி இருவரும் அன்பினால் ஒருவரிடமிருந்து ஒருவர் சம்பாதித்துக்கொள்ளும் செல்வமே தவிர, மூன்றாவது மனிதர் ஒருவர் போடும் பிச்சையால் பெறுவதல்ல.

எனவே, அன்புகூர்ந்து என் சொந்த விஷயத்தில் தலையிட வேண்டாம்.

நான் அடுத்தமுறை நேரில் சந்திக்கும்போது, இந்தவிஷயத்தை விட்டுவிட்டு, நம் இருவர் மட்டுமே சம்மந்தப்பட்ட விஷயங்களைப் பேசுவோம்.

அன்பு சிநேகதி,

வனஜா

**ஜெ**யராமன் கடிதத்தைப் பற்றி இரண்டு மூன்று நாட்களுக்குத் தீவிரமாகச் சிந்தித்தால் வனஜா. அதுபற்றிச் சில நடவடிக்கைகளையும் எடுத்துக்கொண்டாள். பின்னர், கணவருக்கு ஒரு விளக்கமான கடிதம் எழுதினாள் :

என் காதல் கணவருக்கு,

'காதல் கணவருக்கு' என்று நான் எழுதியிருப்பதைப் பற்றி நீங்களும் ஆச்சரியப்படமாட்டீர்கள் என்று நினைக்கிறேன். ஏனென்றால், தாங்கள் என்னுடைய காதலுக்குரிய கணவராக இருப்பது என்றுமே நம்மிடையே பிரச்சனைக்குரியதாக இருந்ததில்லை. ஒரு மனவி தர வேண்டிய நிம்மதியைத் தருகிறேனா என்பதுதான் பிரச்சனை; உங்களைப் பொருத்தவரை.

'உண்மை சொல்ல வேண்டும்' என்ற என் ஆர்வத்தை நீங்கள் ஒப்புக்கொண்டு, நீங்கள் உங்கள் மன நிலையைப் பற்றிய உண்மைகளையெல்லாம் என்னிடம் சொல்லியிருப்பதற்கு என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

. என் மன நிலையைப் பற்றிய உண்மையை நான் ஏற்கெனவே உங்களுக்குத் தெரிவித்துவிட்டேன். புதிதாகச் சொல்வதற்கு எந்தவித மாற்றமும் இல்லை. மாற்றிக்கொள்ள அவசியமில்லாமல், நான் ஏற்கெனவே ஒழுங்காக, உண்மையாக நடந்துகொள்வதாகத்தான் எனக்கு ஒரு நம்பிக்கை.

மனவி என்ற முறையில் நான் தங்களிடம் சத்தியமாகத்தான் நடந்து வந்திருக்கிறேன். தங்களை உண்மைக் காதலுடன் நேசிக்கிறேன். உண்மையைத் தவிர வேறெதையும் நான் தங்களிடம் பேசியதில்லை. உண்மையான மனைவியின் கடமையிலிருந்து நான் இம்மியும் பிசகியதில்லை.

தங்களுக்கு மனைவியாக வரவேண்டியவள், வேறோர் ஆணிடம் நட்பு என்ற முறையில்கூடப் பழகாதவளாகவும், அப்படியே ஒருவேளை முன்பு பழகியிருந்தால், அதைப்பற்றி நாசூக்காக மறைத்தும், மறந்தும் வாழ்பவளாக இருக்கவேண்டும் என்றும் தாங்கள் விரும்பியிருக்கிறீர்கள்..அந்தத் தகுதி இல்லாதவளாக நான் இருப்பதால், நான் உங்களிடம் தோற்றுவிட்டேன். அது என் சக்திக்கு அப்பாற்பட்டு, நான் உங்களுக்குத் தந்த தோல்வி. ஆமாம், நான் சுந்தரம் என்ற வேறொரு ஆணிடம் நட்புகொள்ள வேண்டிய சூழ்நிலை, தற்கால சமூக வாழ்கையின் நிர்பந்தத்தால், என்னால் தவிர்க்க முடியாமல் ஏற்பட்டுவிட்ட விஷயம் - அதே போல், அந்த நட்பை மறைக்க முடியாததும், என் இயல்பு காரணமாக என்னால் முடியாமல் போய்விட்ட விஷயம்.

இப்போதும், நீங்கள் குறைகளாக நினைக்கும் அந்த விஷயங்கள் என்னிடம் இல்லை என்று நான் சொல்லமுடியவில்லை. ஏனென்றால், நான் உங்களிடம் பொய் சொல்ல விரும்பவில்லை. இன்றும் நானும் சுந்தரமும் நண்பர்களாகவே பழகி வருகிறோம்.

அதை நீங்கள் கேலியுடன் குறிப்பிட்டிருப்பது போல், ஒரு முற்போக்குக் கொள்கையாக நான் கருதவில்லை. சத்தியத்தை வழிபடுகிற ஓர் அப்பாவிப் பெண்ணின் சாதாரண நடவடிக்கையாகவே கருதுகிறேன்.

ஆனால், நான் பேசும் இந்த உண்மை உங்களுக்குப் பிடிக்கவில்லை. பிடிக்காதது மட்டுமல்ல; உங்களுக்கு புது மன என்னால் முடியாமல் போய்விட்ட விஷயம்.

அமைதியைத் தரவில்லை என்பதையும் புரிந்துகொண்ட பிறகு, ஓர் உண்மையான மனவி எப்படி நடந்துகொள்ள வேண்டுமோ, அப்படி நடந்து கொண்டுவிட்டேன். ஆமாம், தங்களை விட்டுப் பிரிந்து வாழ்வதைத்தான் குறிப்பிடுகிறேன்.

என் பிரிவில் உங்களுக்கு நிம்மதி எற்பட்டஹோ, இல்லையோ, புதிய பிரச்சனை எதுவும் ஏற்படவில்லை. தங்களைப் பிரிந்து வாழ்வதால் நான் படும் வேதனையை என்னைப் போன்ற ஒரு பெண்ணால்தான் புரிந்துகொள்ள முடியும். என் வேதனையை மனத்தில் அடக்கிக்கொண்டு, என்றாவது ஒருநாள் விடிவு வரும் என்ற நம்பிக்கையில் வாழ்ந்து வருகிறேன்.

ஆனால், அதற்கிடையில் என் நிரந்தரப் பிரிவினால்தான் உங்களுக்கு மன நிம்மதி ஏற்படும் என்று நீங்கள் உணரத்தலைப்படிருக்கிறீர்கள். தங்களுக்கு மன நிம்மதியைத் தருவதற்காக நான் தங்களிடமிருந்து பிரிந்துதான் ஆக வேண்டுமானால், அந்த முடிவுக்கு நான் கட்டுப்படுவதைத் தவிர, வேறு வழி இல்லை. ஏன் என்றால், என் சுகத்தைவிட, உங்களுடைய நிம்மதியை நான் உயர்வாக மதிக்கிறேன். உங்களுக்கு ஒளி தருவதற்காக நான் மெழுகுவர்த்தியாக எரிந்து அழிந்து போகத் தயார்.

விவாகரத்து மூலம்தான் இந்தப் பிரச்சினைக்கு விடிவு இருக்கிறது என்று தாங்கள் நம்பியதும், நானும் அதைப்பற்றி பரிசீலிக்கத் தொடங்கிவிட்டேன். அது விஷயமாக ஒரு வக்கீலைக் கலந்து ஆலோசித்தேன்.

ஆனால், வக்கீல் சொல்லும் விஷயங்கள் உங்களுக்கு அனுகூலமாகத் தோன்றவில்லை. சட்டப்படி தாங்கள் என்னை இப்போது விவாகரத்து செய்ய முடியாதாம். அதற்குரிய காரணங்களும், கால அளவும் பொருந்தி வரவில்லையாம். நானாகச் சம்மதித்து, உங்களுக்கு 'விடுதலைப் பத்திரம் ' கொடுத்தால்தான், நாம் பிரிய முடியுமாம். மன நிம்மதியைப் பெறுவதற்காக நீங்கள் நாடும் சட்டத்தின் துணை, உங்களுக்குப் பயனில்லாமல் இருப்பது எனக்கு வேதனையைத் தருகிறது.

சட்டம் தங்களுக்குத் தர முடியாததை, நான் தரத் தயாராக இருக்கிறேன். ஆனால், ஒரு சின்ன நிபந்தனை: என்னிடம் தங்களுக்கு ஏற்பட்ட அதிருப்தியே மீண்டும் இன்னொரு பெண்மூலம் உங்களுக்கு வரக்கூடாது. தாங்கள் எந்தக் குறைக்காக என்னை விவாகரத்து செய்ய விரும்புகிறீர்களோ, அதே குறையுள்ள ஒரு பெண்ணை மீண்டும் திருமணம் செய்துகொண்டு துன்பப்படும் நிலை தங்களுக்கு வரக்கூடாது.

எனவே, தாங்கள் விரும்பியபடி - தங்களைத் தவிர வேறு எந்த ஆணிடமும், திருமணத்திற்கு முன்பு நட்பு என்ற முறையிலும் பழகாத, ஆண்களையே ஏறிட்டுப் பார்த்திராத ஒரு பெண்ணைக் கண்டுபிடித்து, எனக்குச் சொல்லி அனுப்புங்கள். நான் உடனடியாக என் விவாகப் பிரிவுக்கான சம்மதக் கடிதத்தை தங்களுக்கு அனுப்பிவைக்கிறேன். அதைக் கொண்டு நீங்கள் நிம்மதி பெறலாம்.

அன்னை ஜானகியே, தெய்வ அவதாரமான ராமனால் சந்தேகிக்கப்பட்டவள். நான் சாதாரணமானவள். அதற்காக நீங்களும் என்னை வெல்லமுடியாத முயற்சியில் இறங்கிச் சங்கடப்படவேண்டாம். என்னால் அப்படி ஒரு தோல்வியை நீங்கள் சந்திக்க வேண்டாம்.

இப்படிக்கு,
உங்கள் அன்பு மனைவி,
வனஜா

## 19

தெய்வம் யாவும் உணர்ந்திடும் தெய்வம்
தீமை காட்டி விலக்கிடுந் தெய்வம்

- பாரதியார்

பியானோவின் இசையால் அந்த அறை நிரம்பி வழிந்தது. அழகிய அந்த ஆங்கிலோ இந்தியப் பெண்மணியின் விரல்கள் எழுப்பும் இசைக்கு, கேட்போரையெல்லாம் மெய்சிலிர்க்க வைக்கும் வல்லமை இருந்தது. ஆனால், அப்போது அதன் சக்தி சுதாவிடம் தோற்றுப்போயிருந்தது. சுதா இசையின் நெகிழ்ச்சியில் தன்னைப் பரிகொடுப்பவள்தான். ஆனால், அப்போது அந்த இசையை ரசிக்கும் மனோநிலையில் அவள் இல்லை. அதற்குக் காரணம், பவானிதான்.

அந்த ஆங்கிலோ இந்தியப் பெண்மணியின் விரலசைவில் ஈடுபடாத சுதா, குழந்தைத்தனமாகத் துடித்து விழித்துக்கொண்டிருந்த பவானியின் கண்களின் அசைவில், இமைகளின் துடிப்பில் லயித்துப்போயிருந்தாள்.

பவானிக்கு இன்னும் முழுமையாகச் சுயஉணர்வு வரவில்லை. இருப்பினும், அவள் அந்த வீட்டில் ஓடியாடும்நாள் தொலைவில் இல்லை என்ற நம்பிக்கை எல்லோருடைய மனத்திலும் உதித்துவிட்டது. எப்போதும் படுக்கையில் படுத்திருக்கும் பவானி, இபோது தூக்கம் வரும் போதும், அசதி ஏற்படும்போதும் மட்டுமே படுக்கிறாள். சுற்றி நடமாடும் மனிதர்களைப் பார்க்கிறாள். கொடுக்கும் பானங்களை வாங்கிச் சாப்பிடுகிறாள். நினைவின் ஆதிக்கம் முழுமையாக ஏற்படவில்லை என்ற குறை தவிர, மற்றபடி அவளை நோயாளி என்றே கூறமுடியாது.

பியானோவின் இசை ஒலிக்கும்போது, திடீரென்று பூரிப்பு மலரும் - அந்த மலர்ச்சியே அவளுடைய மனோவியாதியிலிருந்து அவளைச் சிறிது சிறிதாகக் குணமாக்கிக்கொண்டிருந்தது. அதே உணர்ந்த சுதா, பகல் பொழுதெல்லாம் பெரும்பான்மையான நேரம்வரை வீட்டில் பியானோ இசைக்க ஏற்பாடு செய்திருந்தாள்.

அவ்வப்போது பவானியின் அருகில் அமர்ந்து அவளுக்கு ஹார்லிக்ஸ் கொடுத்துக்கொண்டிருந்தாள் சுதா. முன்பெல்லாம் பவானி படுத்திருக்கும்போதே கொடுக்கவேண்டியிருக்கும். இப்போது அப்படியல்ல. சுதா தம்ளரைப் பிடித்திருந்தாள்; பவானியே அதை ஏந்தி அருந்திக்கொண்டிருந்தாள்.

அதைக் குடித்து முடித்ததும், சுதாவை ஒரு மாதிரியாக ஏறிட்டுப் பார்த்தாள் பவானி. அவள் பார்வையில் ஒரு விதத்தெளிவு இருந்தது. சிறிதுகாலமாகவே அறிமுக உணர்வுடன்தான் சுதாவைப் பார்க்கிறாள் பவானி. சில சமயங்களில் புன்னகையும் மலர்வதுண்டு. அப்போதும் ஒரு புன்னகை மலர்ந்தது. அது, அவள் ஏதோ சொல்லத் துடிப்பதுபோல் தோன்றியது. எனவே அவளை நெருங்கி, "என்னம்மா....." என்று ஆதுரத்துடன் அனைத்துக்கொண்டுக் கேட்டாள் சுதா.

பவானியால் பதில் சொல்ல முடியவில்லை. ஆனால், பலவிதமான பதில்களை உள்ளடக்கிய சிரிப்பு ஒன்று அவளிடம் தோன்றிமறைந்தது.

அவள் கன்னத்தில் அன்புடன் தட்டிக் கொடுத்துவிட்டு, தலையனையை அண்டக்கொடுத்து, அவள் சாய்ந்து உட்கார வசதி செய்தாள் சுதா.

படுக்கையில் சாய்ந்துகொண்டு, பியானோ வாசிப்பையும், சுதாவையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தாள் பவானி. அவளருகில் உட்கார்ந்து, அவள் கரத்தைதத் தன் மடிமீது வைத்துக்கொண்டிருந்தாள் சுதா. இந்த அன்புப் பிணைப்பான காட்சியைப் பவானியின் அறைவாசலில் நின்று பார்த்து மகிழ்ந்துகொண்டிருந்தான் ஸ்ரீதர்.

ஸ்ரீதர் ஆபீசிலிருந்து திரும்பி வந்து பத்து நிமிஷங்களாகிவிட்டன. வந்தவன், பவானியின் உடல் நிலையைப்பற்றிக்கூட விசாரிக்காமல் அப்படியே நின்றுகொண்டிருந்தான். விசாரிப்பதற்கு என்ன இருக்கிறது? சுதாவின் பராமரிப்பில், முன்னேற்றத்தை அவனே கண்கூடாகப் பார்துக்கொண்டிருக்கிறானே! தற்செயலாக வாயிறபுறம் பார்த்த சுதா, அங்கே ஸ்ரீதர் நிற்பதைக் கண்டுவிட்டாள்.

"என்ன, வாசலிலேயே நின்றுவிட்டீர்கள்? உள்ளே வாருங்கள்" என்று அழைத்தாள், ஏதோ விருந்தாளியைத் தன் வீட்டிற்குள் அழைக்கும் பாவத்தில்.

அதை உணர்ந்து, புன்முறுவலுடன் அதை ரசித்துக்கொண்டு பவானியருகே வந்தான் ஸ்ரீதர்.

உடனே சுதா, பவானியின் கன்னத்தை லேசாகத் தொட்டு, "இதோ பார் பவானி, உங்க அண்ணன் ...... " என்றாள்.

"பேஷ், என்னை அவளுக்கு அறிமுகப் படுத்துகிறாயா?" என்று வேடிக்கையாகக் கேட்டான் ஸ்ரீதர். அப்படி வேடிக்கையாகக் கேட்கும்போதும், அவன் க்களில் லேசாகக் கண்ணீர் துளிர்த்தது. அதைப் புரிந்து கொண்ட சுதா, அந்தப் பேச்சின் போக்கைமாற்ற எண்ணி, "இதென்னப் பிரமாதம்! இப்போது உங்களைப் பார்க்கச் சொல்கிறேன். இன்னும் கொஞ்ச நாள் போனால், ' இந்தா பவானி, உங்கண்ணாவைப் பார்க்காதே, டூ விட்டுவிடு....' என்று அதிகாரம் பண்ணுவேன். அவளும் 'ஆகட்டும்' என்று 'டூ' விட்டுவிடுவாள். அப்படி அவளைத் தயார்செய்து விடுவேனாக்கும்...." என்றாள்.

"ஓ! அப்படியா? அது இயற்கைக்கு விரோதமாயிற்றே .....' என்றான் ஸ்ரீதர். அப்படிச் சொன்ன மறுகணமே, 'அப்படி அவசரப்பட்டுச் சொல்லி இருக்கலாமா?' என்றும் யோசித்தான்.

அவன் சொன்னதன் உட்பொருளைப் பரிந்துகொண்ட சுதா, சிரித்தாள். அதற்குள், " இயற்கைக்கு விரோதம் என்று நான் எதைச் சொல்கிறேன் என்றால்...." என்று விளக்கம் சொல்ல ஆரம்பித்தான் ஸ்ரீதர்.

" எனக்குத் தெரியும். நீங்க சமாளிக்க வேண்டாம் ......" என்றாள் சுதா சட்டென்று.

ஸ்ரீதரின் சமீப கால மன ஓட்டத்தைச் சுதா ஓரளவு புரிந்துகொண்டிருந்தாள். அவன் மனம் சிறிது சிறிதாகச் சுதா பக்கம் நெருங்கிக்கொண்டே வந்து, இப்போது வெகு அருகாமைக்கு வந்துவிட்டது. மானசீகமாக சுதாவைத் தன் துணைவியாக ஏற்றுக்கொள்ளும் பக்குவம் அவன் மனத்தில் அநேகமாகப் படிந்துவிட்டது. அதனால்தான் சுதாவும், பவானியும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டோம் என்றதும், நாத்தனாரும் மன்னியும் சேர்ந்துகொள்வது இயற்கைக்கு முரணானது என்ற கருத்தில், சுதாவை 'மன்னி' ஸ்தானத்தில் வைத்தே பேசி விட்டான். அதைச் சுதாவும் புரிந்து கொண்டுவிட்டாள்.

தன் அந்தரங்க அன்பு, இப்படித் தற்செயலாக வெளிப்பட்டதும், ஸ்ரீதருக்கு கொஞ்சம் வெட்கமாக இருந்தது. அதற்காக அவன் வருத்தப்படவில்லை.

ஆனால், சுதா இதை ஏற்றுக்கொண்ட முறைதான் அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. முன்பாக இருந்தால், இப்படி அவன் மனக்கதவு திறந்துகொண்டதற்காக எப்படித் துள்ளிக்குதித்து மகிழ்ந்திருப்பாள்?

ஆனால், இப்போது?

ஏதோ தனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியது கிடைத்துவிட்டது போல், ' எப்படியும் நீங்கள் என் பக்கம் வந்துவிடுவீர்கள் என்று தெரியும், வந்துதானே ஆகவேண்டும் எனபது போல், பெருமிதம் பொங்கப் புன்னகைத்தாள்.

"பவானி ஏதாவது சாப்பிட்டாளா?" என்று கேட்டு, பேச்சின் போக்கை மாற்றினான் ஸ்ரீதர்.

"ம் ...... கொஞ்சம் சாப்பிட்டுப் பார்த்தாள்" என்றாள் சுதா. உண்மையில் ஒரு கப் ஹார்லிக்ஸை முழுக்கக் குடித்திருந்தாள் பவானி. இருப்பினும், அதைச் சொல்லவில்லை சுதா. 'பிறர் கண் பட்டுவிடக் கூடாதே' என்று ஒரு தாய், மறைத்துப் பேசுவதுபோல், மறைத்துச் சொன்னாள் சுதா. அது ஸ்ரீதருக்கு மிகவும் பிடித்திருந்தது.

' சரி, நீ சாப்பிட்டாயா?"

" இல்லையே, நீங்கள் வந்து தரவேண்டும் என்றல்லவா காத்திருக்கிறேன் ...." என்றாள் சுதா, சிரித்துக்கொண்டே.

"அப்படியா? வா, ஏன் அறைக்கு. நான் தருகிறேன் ...." என்றான்.

"பேஷ் ..... பேஷ்.... வேடிக்கைக்குச் சொனனால் ..... அதற்கு இப்போது ஒரு அவசரமும் இல்லை. முதலில் ஆகவேண்டியதெல்லாம் ஆகட்டும் ...." என்று கூறி, நாணத்துடன் தலை குனிந்தாள்.

" அது சரி, அதைப் பற்றிப் பிறகு பேசுவோம். இப்போது வேறொரு விஷயம் பேசவேண்டும். அதற்காக என் அறைக்கு வா....." என்றான்.

"பவானி?" என்றாள் சுதா.

" இரண்டே நிமிஷத்தில் வந்துவிடலாம் ......" என்று தன் அறைக்குச் சென்றான் ஸ்ரீதர். சுதா அவனைப் பின் தொடர்ந்தாள்.

தன் அறைக்குள் நுழைந்ததும், " சுதா இன்னிக்கு என்னகிழமை?" என்றான்.

" வெள்ளிக்கிழமை ..... " என்றாள் சுதா. எதற்காக அப்படிக் கேட்க்கிறார் என்று புரியாமல்.

" உன் தலையில் பூ எங்கே?"

" ஓ, அதுவா? பவானி இப்படி இருக்கும்போது, அலங்காரம் என்ன வேண்டியிருக்கு?"

" கன்னிப்பெண்கள் வெள்ளிக்கிழமைகளில் பூ வைத்துக் கொள்வது வெறும் அலங்காரத்திற்காக மட்டுமல்ல. ஒரு மங்கலச் சின்னமும் கூட. "

"ஏதேது? இந்தப் பாடங்களெல்லாம் எப்போது கற்றீர்கள்? - வெண்பற்கள் தெரியச் சிரித்தாள் சுதா.

" அததை அவ்வப்போது கற்றுக்கொள்ளவேண்டியதுதானே? சுதா, நீ பவானியை நோயிலிருந்து காக்க வந்தவளே தவிர, நீயே ஒரு நோயாளி அல்ல. நோயாளி சிலதெல்லாம் செய்யக்கூடாது என்று வைத்திருக்கிறார்கள். அதற்காக அதையெல்லாம் நீயும் ஒதுக்கவேண்டிய அவசியமில்லையே."

" நானும் நோயாளி இல்லை என்று யார் சொன்னது? என் நோய் ஒன்றுக்குப் பரிகாரம் தேட வந்த இடத்தில்தானே, பவானி என்ற வேறொரு நோயாளியை நான் சந்திக்க நேர்ந்தது. ஒரு விதத்தில் நாங்கள் இரண்டுபேரும் நோயாளிகள்தான்..... "

" ஆனால், உன் நோய்க்கு 'மலர்ப்பத்தியம்' கிடையாதே! மலர் மணத்தைத் தேடித்தானே உன் நோய் ...... " என்று சிரித்தான் ஸ்ரீதர்.

ஒருவர் பேசுவதை மற்றவர் நன்றாகப் புரிந்துகொண்ட சிரித்தார்கள்.

"மலர் மணத்தைத் தேடித்தான் என் நோய் என்று தெரிந்தவர், அதை இப்போது தரப்போகிறாரோ?" என்றாள் சுதா.

"மணத்தை எப்போது தருவாரோ எனக்குத் தெரியாது. ஆனால், மலரை இப்போது தரத் தயார்....." என்று கூறி, தன் கோட் பையிலிருந்து ஒரு மல்லிகை மலர்ப் பொட்டலத்தை எடுத்து, அவளிடம் நீட்டினான் ஸ்ரீதர்.

கோயிலில் பிரசாதத்தை வாங்கிக்கொள்வதுபோல், அதைப் பயபக்தியுடன் பெற்றுக்கொண்ட சுதா, " இந்த மலரிலேயே மணமும், என் மனமும் சேர்ந்தே இருக்கிறதே, அதை நீங்கள் கொடுத்து நான் பெற்றுக்கொண்டதைவிட வேறு என்ன வேண்டும் எனக்கு?" என்றாள்.

சுதா பொட்டலத்தைப் பிரித்தாள். அதிலிருந்த மல்லிகைச் சரத்தில் ஒருபகுதியைத் துண்டாக்கி, தான் வைத்துக் கொண்டாள். இன்னொரு பகுதியை பொட்டலத்திலேயே வைத்துக்கொண்டாள்.

" அந்தப் பூ யாருக்கு? சுவாமி படத்துக்கா?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

" நாம் வைத்துக்கொண்ட பிறகு சுவாமி படத்துக்குப் போடுவார்களா? இது பவானிக்கு, அவள் கன்னிப்பெண். அவளுக்கும் இன்னிக்கு வெள்ளிக்கிழமைதானே ...... " என்றாள்.

" அது சரி, நான் உனக்குக் கொடுப்பதிலிருந்து எடுத்து, அவளுக்கு நீ கொடுத்தால், என்ன அர்த்தம்?" என்று வேடிக்கையாகக் கேட்டான்.

" நீங்கள் எனக்கு வாழ்க்கையைத் தரவேண்டும். நான் அவளுக்குக் கொடுக்கவேண்டும் என்று அர்த்தம்....." என்றாள் சுதா.

எவ்வளவு புத்திசாலித்தனமாகப் பேசக் கற்றுக்கொண்டு விட்டாள் சுதா என்று வியந்தான் ஸ்ரீதர்.

அதே சமயத்தில், பவானியின் வாழ்க்கையைப் பற்றி அவள் பேசியதும் அவன் மனம் நெகிழ்ந்தது. 'அவள் அப்படி இருக்கும்போது நாம் மகிழ்ச்சியை நாடுகிறோமே' என்று எண்ணி வருந்தினான்.

" சுதா, நீ உன் ஆர்வத்தின் காரணமாகப் பவானியின் வாழ்க்கையைப் பற்றி நம்பிக்கை தெரிவிக்கிறாய். ஆனால், நீ நினைப்பதுபோல், அவளுக்கு வாழ்க்கை அமைத்துக் கொடுப்பது அவ்வளவு சுலபமல்ல.. " என்றான் சிறிது சலிப்புடன்.

"இப்படித்தான் முதலில் அவளுடைய வியாதியைப் பற்றிச் சலிப்படைந்தீர்கள். இப்போது என்ன நடக்கிறது? அது குணமாகிறதா இல்லையா? எல்லாம் அதைப் போலவே நடக்கும்.... " என்றாள்.

"எப்படியோ, உன் புத்திசாலித்தனத்தால்தான் பவானியின் வியாதி குணமாகிறது."

"ஆமாம்! பெரிய புத்திசாலித்தனம் .... நீங்கள் ஒரு கோடிகாட்டினீர்கள். 'பவானிக்குப் பியானோ என்றால் உயிர், சுதா பியானோவின் அருகில் அமர்ந்திருப்பாள்' என்று சொன்னீர்கள். அதை வைத்து யோசித்துப்பார்த்தேன். அந்த பியானோவின் இசை அவள் மனத்தில் ஆழத்தில் பதிந்து, அவள் மனத்தை சிலிர்க்க வைக்காதா யெற்று யோசித்தேன். இசைக்கு பயிர்களே அசையும்போது, மனம் சிலிர்க்காதா? அந்த முறையில் முயன்றேன். ஏன் முயற்சிக்குப் பலன் கிடைத்தது. எல்லாம் கடவுள் அருள். ... நான் ஒன்றும் செய்யவில்லை..... " என்றாள் சுதா.

"அதே மாதிரி அவள் வாழ்க்கைக்கும் ஒரு வழி பிறக்குமா? என்னவோ, உன் பேச்சையும், உன் உதவியையும் நினைக்கும் போது, எனக்குக் கொஞ்சம் நம்பிக்கைப் பிறக்கிறது. ஆனால், அது நடக்குமா என்று நினைக்கும் போதுதான் ...... அதிலுள்ள கஷ்டத்தை எண்ணும்போதுதான் ..."

"ஒரு கஷ்டமும் இல்லை. நான் ஒரு மனோதத்துவ டாக்டரைப் பார்த்துப் பேசவேண்டும் என்று நினைக்கிறேன். உங்களுக்குத் தெரிந்த கெட்டிக்கார டாக்டர் யாராவது இருக்கிறார்களா, சொல்லுங்கள் ...." என்றாள்.

ஸ்ரீதரின் முகம் மலர்ந்தது.

" நல்ல யோசனை, சுதா. என் நண்பர் ஒருவர் சமீபத்தில் மேல்நாடு போய் வந்திருக்கிறார். நாம் போய் அவரைச் சந்திப்போம்....." என்றான் உற்சாகத்துடன்.

பவானியின் கதை முழுவதையும் கேட்டார் டாக்டர் நாத். பிறகு, நம்பிக்கையான குரலில், " இது ஒன்றும் மோசமான கேஸ் இல்லை, மிஸ்டர் ஸ்ரீதர். உங்கள் தங்கையின் நோய் குணமடைய வழி இருக்கிறது" என்றார்.

"இருக்கிறதா? என்ன வழி? சொல்லுங்களேன்" துடிதுடிப்புடன் கேட்டான் ஸ்ரீதர்.

"அவள் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் ..... " என்றார் டாக்டர்.

'எதைக்கொண்டு அப்படிச் சொல்கிறீர்கள், டாக்டர்? அவள் நோய்க்குக் காரணம், காதல் என்பதாலா? என்று கேட்டாள் சுதா.

" நோ! அவளுடைய நோய்க்குக் காரணம், காதல் அல்ல. சாதாரண உடற்கவர்ச்சி தான். ஐயாம் வெரி ஸாரி டு ஸே திஸ்! காதலினால் ஏற்பட்ட அதிர்ச்சி என்றால், காதலில் ஏற்பட்ட தோல்வியோ, காதலித்துக் கிடைக்காது என்ற அவநம்பிக்கையோதான் அதற்குக் காரணமாக இருந்திருக்கும். பவானி விஷயத்தில் அப்படி இல்லை. காதலில் வெற்றி தோல்வி எதுவுமே அவளுக்குப் பிரச்சனையாக இருந்ததில்லை. கொள்ளிவாய்ப்பிசாசு போன்ற ஒரு வெளிச்சத்தில், இருண்ட சூழ்நிலையில், ஓர் ஆடவனின் ஸ்பரிசம், அதனால் ஏற்பட்ட உடல்கிளர்ச்சி - இவை அவள் மனத்தில் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்திவிட்டன. அந்தக் கொந்தளிப்பு அவள் நினைவைப் பறித்துக்கொண்டுவிட்டது. பவானியின் மென்மையான மனமே அதற்குக் காரணம். இசை மூலம், அவள் சுயநினைவை மீட்டிருப்பதாகச் சொல்கிறீர்களே, அது நல்ல முயற்சி. குட் அட்டெம்ப்ட்.... ஆனால், அவள் பரிபூரண குணமடைய, எந்த உணர்வில் அவள் மெய் மறந்தாளோ, அந்த உணர்வு அவளுக்கு மீண்டும் கிடைக்க வேண்டும். நான் சொல்வது கொஞ்சம் பிடிக்காமல் இருக்கலாம். என்ன,

இவன் இப்படிப் பச்சையாகப் பேசுகிறானே என்று நினைக்கலாம். ஆனால், சைகாலஜிபடி அதுதான் அவளுக்கு மருந்து. ஆடவனின் அரவணைப்பு அவளுக்குத் தேவை. அதனால் தான் கல்யாணம் அவளுக்கு மருந்து என்று சொன்னேன்........ என்றார் டாக்டர் நாத்.

"அதாவது, அவளைக் காதலித்த குமாரைத் தேடக் கண்டுபிடித்து அவளுக்குத் திருமணம் செய்து வைக்கவேண்டும் என்கிறீர்களா?" என்று கவலையுடன் கேட்டான் ஸ்ரீதர்.

"ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?"

"அந்தப் பையன் இப்போது வேறு திருமணம் செய்துகொண்டுவிட்டான். எனவே, பவானிக்கு வேறு மாப்பிள்ளைதான் தேடியாக வேண்டும்.... " என்றான் ஸ்ரீதர்.

"தட் டஸண்ட் மேட்டர்.... பவானியின் வியாதியைப் பொறுத்த அளவில், 'இந்த உணர்வு' தான் முக்கியமே தவிர, காதல் பிரச்சனை அல்ல. அதைத்தான் முன்னாலேயே சொல்லிவிட்டேனே! நான் சொல்வது கொஞ்சம் அருவருப்பாகத் தோன்றலாம். ஆனால், உண்மை அதுதான். சைகாலஜிகல் அடிப்படையே இதைதான் சொல்கிறது. நாம் சில உண்மைகளை நேருக்கு நேர் சந்திக்கப் பயப்படுகிறோம். அதன் விளைவுதான் இந்த அருவெருப்பெல்லாம். 'செக்ஸ்' பாவமா என்ன? ஏன் அதைக் கண்டு நாம் அஞ்ச வேண்டும்? லெட் அஸ் பேஸ் பாக்ட்ஸ்.... அவள் நோய், 'செக்ஸை' அடிப்படையாகக் கொண்டதுதான். அதாவது, திடீரென்று ஏற்பட்ட ஆடவனின் அரவணைப்பு, அவள் மனத்தில் ஒரு 'வேக'த்தை ஆழமாகப் பதிய வைத்துவிட்டது. அவள் அதுவரை அனுபவித்தறியாத உணர்வு அது! ஆனால், ஒரு பயங்கரச் சூழ்நிலையில் அது ஏற்பட்டதால், அவள் இந்த நிலைக்கு ஆளாகிவிட்டாள். ஆகவே, அவளுக்குத் திருமணம் செய்துவைக்க முயலுங்கள். அவள், பழைய நிலைமைக்கு வந்த பிறகு, ஒரு வேளை, தன் காதலைப் பற்றிக் கேட்கலாம். அப்போது அவள் மனமும் வலிமைப் பெற்றிருக்கும். நிலைமையைச் சமாளித்துக் கொள்ளலாம். அதனால் அவள் கொஞ்சம் வேதனைப் படலாம்; வியாதி திரும்பாது.... " என்றார் டாக்டர் நாத்.

அவரிடம் விடைபெற்றுத் திரும்பியபோது சுதா உற்சாகமாக இருந்தாள். ஸ்ரீதர் முகத்தில் உற்சாகமில்லை.

"ஏன் இப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் சுதா.

"பின் எப்படி இருப்பதாம்? கல்யாணம் என்ற மருந்தை டாக்டர் சுலபமாகச் சொன்னதைப்போல், நீயும் அதைச் சுலபமாக நினைக்கிறாய். இது எனக்கு ஓரளவு முன்பே தெரிந்ததுதான். அவளுக்கு எப்படியாவது கல்யாணம் செய்து வைத்துவிடலாம் என்று யோசித்து, முயன்று தோற்றிருக்கிறேன், சுதா, தோற்றிருக்கிறேன் ...... " என்றான்.

"நீங்கள் முயன்ற காலமே வேறு. படுக்கையில் பிரக்ஞையற்றுக் கிடக்கும் பெண்ணுக்குத் திருமணம் பேசினால் எந்த மாப்பிள்ளை சம்மதிப்பான்? இப்போது பவானியின் நிலைமை வேறு. அவளுக்கு நினைவு திரும்பிவிட்டது. இந்த நிலையில், அவளை மணக்கச் சம்மதிக்கக் கூடியநபர் கிடைப்பது அவ்வளவு சிரமமில்லை.." என்றாள் சுதா உறுதியுடன்.

"நீ நல்லெண்ணத்துடன் கற்பனையில் வாழ்கிறாய். பவானியின் நிலைமையில் இருக்கும் ஒரு பெண்ணை மணக்கக் கூடிய தியாக உள்ளம் படைத்த ஒருவனைக் கண்டுபிடிப்பது சுலபமல்ல.... " என்றான் பெருமூச்சுடன்.

"அப்படி ஒருவரைத் தேடிவிடமுடியும் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நிச்சயமாகத் தேடிக்கண்டுபிடிப்பேன். பார்த்துக்கொண்டே இருங்களேன்.... " என்று திடமான குரலில் சொன்னாள் சுதா.

அவள் முகத்தில் தோன்றிய உறுதியைக் கண்டதும், ஏதோ நம்பிக்கையின் உதயத்தைக் கண்டவன் போல், புதிர் நிறைந்த பார்வையுடன் அவளைப் பார்த்தான் ஸ்ரீதர்.

**ஜெ**யராமனுக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்ய முற்பட்ட செல்லம்மாளால், தனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. நாலைந்து நாட்களாக அவள் தவித்துக் கொண்டிருந்தாள். தான் ஏதோ சொல்லப்போக, அதிலிருந்து இப்படி ஒரு பயங்கரம் உருவாகும் என்று நினைக்கவில்லை.

விவாகரத்து என்று சொல்லிப் பார்த்தால், அதைத் தாங்கிக் கொள்ள முடியாமல் வனஜாவை மீண்டும் அழைத்துக்கொண்டு விடுவான் ஜெயராமன் என்று நினைத்தால், தன் சொல்லை ஏதோ வேதம்போல் எடுத்துக்கொண்டு வக்கீலைப் பார்ப்பதிலும், அதிலுமாக ஜெயராமன் அலைவதைக் கண்டதும், அவள் மனம் கொதித்தது. அதிலும், ஒவ்வொருமுறை வெளியே போய்விட்டு வரும்போதும், 'அக்கா, நீ சொன்னபடி வக்கீலைப் பார்த்தேன்', 'நீ சொன்னபடி

கேஸ் போட்டிருக்கிறேன்' என்று ஓரோர் வார்த்தையை அவள் காதில் போடும்போதும், செல்லம்மாளின் நெஞ்சம் துடித்தது. தன்னால் இப்படி ஒரு விபரீதம் விளைந்து விட்டதே என்று எண்ணித் தவித்தாள்.

அன்றைக்குக் காரியாலயத்தில் இருந்து வந்ததும் வராததுமாக, தன் 'விவாகரத்து' பெருமையை விளக்க ஆரம்பித்தான் ஜெயராமன்.

"அக்கா, இப்போது என் மனம் சமாதானமாகி விட்டது" என்றான்.

"என்ன சமாதானம்? நீயும் வனஜாவும் ஒத்துப் போய்விட்டீர்களா?" என்று ஆவலுடன் கேட்டாள் செல்லம்மாள்.

"நானும் வனஜாவும் மனஸ்தாபம் இல்லாமல், சமாதானமான முறையில் விவாகரத்து செய்து கொள்ளப்போகிறோம்...." என்றான்.

"மனஸ்தாபமில்லாமல் விவாகரத்து செய்துகொள்வதாவது .... என்ன சொல்கிறாய், ஜெயராமா நீ? என்று வேதனையுடன் கேட்டாள் செல்லம்மாள்.

"ஆமாம், அக்கா. வனஜாவே விவாகரதுக்குச் சம்மதித்துவிட்டாள்...."

"வனஜாவே சம்மதித்துவிட்டாளா? இருக்காதே. நீ எதையோ சொல்லி அவளைக் கட்டாயப்படுத்தி இருக்கிறாய்....."

"ஏன் அக்கா கோபப்படுகிறாய்? இது நீ சொன்ன யோசனைதானே...."

"ஏதோ உன் மனம் வனஜாவின் மேல் திரும்ப வேண்டும் என்பதற்காகப் பெரிய அதிர்ச்சி வைத்தியம் செய்வதாக நினைத்துக்கொண்டு சொல்லி வைத்தேன். அதையே நீ இப்படிப் பிடித்துக்கொள்வாய் என்றா கண்டேன். என் புத்தியைச் செருப்பால் அடிக்க வேண்டும் .... " என்று தன்னை நொந்து கொண்டாள் செல்லம்மாள்.

"அக்கா, நீ ஏன் வேதனைப்படுகிறாய்? நீ சொல்லி இந்த விஷயம் நடக்கவில்லை. கொஞ்சம் பின்னால் நடக்கவேண்டியது, கொஞ்சம் முன்னால் நடந்துவிட்டது, அவ்வளவுதான் ..... " என்றான்.

"அது எப்படிடா நடக்கும்? அக்கினி சாட்சியாக ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதும், பிறகு, அடுக்காத காரணத்தையெல்லாம் சொல்லி அவளைத் தள்ளி வைக்கிறதும் .... ரத்து பண்ணறதும், என்னடா வேலை இது? இதோ பார் ஜெயராமா, நானும் வாழ்க்கையை இழந்தவள்தான். ஆனால், என் நிலைமை வேறு. என் வாழ்க்கையை இப்படிச் செய்தவன் ஆண்டவன். தெய்வ சம்மதமாக நடந்துபோன அந்த இழப்பை ஏற்றுக்கொள்வதில் நியாயம் இருக்கிறது. நமக்குக் கடவுள் கொடுத்த வாழ்வு அவ்வளவுதான் என்று தேற்றிக்கொள்ளலாம். ஆனால், மனுஷன் வேண்டுமென்றே ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழடிக்கிறது மகா பாவம்டா. நீ இப்போது அதைத்தான் செய்யத் துணிந்திருக்கிறாய்... " என்று சீறினாள்.

"அக்கா, நீ கோபப்படுவதில் அர்த்தமே இல்லை. இதோ, வனஜா எழுதியிருக்கிற கடிததைப்பார். இதோ, வனஜா எழுதியிருக்கிற கடிதத்தைப் பார். அதில் அவள் அகம்பாவம் கொஞ்சமாவது குறைந்திருக்கிறதா என்று பார். இப்படித் தூக்கி ஏறிஞ்சாப்போலே, என் உணர்ச்சியை மதிக்காமல் அவளே எழுதின பிறகு, நான் அவளை டைவர்ஸ் செய்வதிலே என்ன தப்பு?" என்றான்.

செல்லம்மாள் அவன் கையிலிருந்த வனஜாவின் கடிதத்தை வாங்கிப் படித்தாள். பிறகு, "இதை வைத்துக் கொண்டுதான் இப்படிக் குதிக்கிறாயா? இதில் அவள் என்ன தப்பாக எழுதி இருக்கிறாள்" என்று கேட்டாள்.

" இன்னும் என்ன எழுதவேண்டும்? சுந்தரத்தோடு அவளுக்கிருக்கிற நட்பைக் கைவிடமுடியும் என்று அவளால் உறுதி தரமுடியாதாம். என் மனைவி, இன்னொருவனுடன் நிரந்தரமான நட்பாக இருப்பாளாம், நட்பு ... பெரிய நட்பு" என்று ஆவேசமாகக் கூறினான் ஜெயராமன்.

"அவள் சத்தியத்தை எழுதியிருக்காடா.... கணவனுக்குப் பயந்து, ஊருக்குப் பயந்து பொய் சொல்லலே.... 'நட்பு' என்று அவள் சொல்கிற உறவு தப்பானது என்று உன்னால் நிரூபிக்க முடியுமா? அப்படி முடியாத போது, அவள் சொல்கிற உண்மையை உன்னால் ஏன் ஏற்றுக்கொள்ள முடியல்லே? இந்தக் காலத்திலே எல்லோருந்தான் ஆபிசிலே கலந்து வேலை பார்க்கிறா. ஏன், நீயும் ஒரு ஆபீசிலே வேலை பார்க்கிறே. அங்கே வேலை பார்க்கிற பெண்களோட நீ பழகாம இருப்பியா? இன்னொரு பெண்ணோட நீ களங்கமில்லாம பழகறமாதிரி, உன் மனைவியும் இன்னொரு ஆணோட சிநேக பாவத்திலே பழகறா. ஒரு ஆண்கூட, 'என் ஆபீஸ்லே உள்ள பெண்ணோட சிநேகமாப் பழகறேன்'னு

தைரியமா தன் மனைவிகிட்டே சொல்லப் பயப்படுகிற இந்தக் காலத்திலே, ஒரு பெண், தைரியமா, மனசிலே கல்மிஷமில்லாம சொல்றான்னா, அவள் மனசிலே சத்தியம் எவ்வளவு பலமா ஊறியிருக்கும்? அதை மதிக்க உனக்குத் துப்பில்லையேடா? இதோ பாருடா, இது காந்திஜியோட நூற்றாண்டுன்னு கதர் கட்டறதும், பிரசங்கம் கேட்கப் போறதுமா அலையறையே, அந்தக் காந்திஜி நூற்ற்றாண்டிலேதான், காந்திஜியோட தத்துவப்படி உண்மை பேசற ஒரு பெண்ணை மனவியா அடைஞ்சதுக்கு நீ பெருமைப்படணும். உன்னாலே அவளை மதிக்க முடியல்லேன்னா, நீ போடற காந்தி வேஷம் எல்லாம் போலின்னுதான் அர்த்தம். ... " என்று பொரிந்து தள்ளினாள் செல்லம்மாள்.

ஆனாலும் ஜெயராமனின் மனம் அசையவில்லை.

"அக்கா, காந்திஜி, மனசுக்கு ஒவ்வாத மனைவியோட வாழுன்னு யாருக்கும் போதிக்கல்ல.வனஜாவோட நட்பை என்னால ஒப்புக்கொள்ள முடியல்லே..... அதனால், அவளோட வாழறது முடியாத காரியம்..... "

"இதுதான் உன் முடிவா?"

"ஆமாம் ......."

"அப்படின்னா சத்தியத்தையே அவமதிக்கிற உன் வீட்டில் நான் இருககிறதுகூடத் தவறு. நான் ஊருக்குப் போறேன்... " என்றாள்.

ஜெயராமன் சிறிது தயங்கினான். பிறகு, மனத்தையும் குரலையும் திடப்படுத்திக்கொண்டு, " அக்கா, குழப்பமான ஒரு நேரத்திலே நீ எனக்குத் துணையா இருக்கிறது எனக்கு எவ்வளவோ நிம்மதியா இருக்கும்னு நினைச்சேன். ஆனால், நீ வனஜாவைப் புரிந்துகொண்ட அளவு என்னைப் புரிந்து கொள்ளவில்லை. என் மனநிலையைப் புரிந்துகொள்ளாமல், நீ என்னை ஒதுக்கிவிட்டு ஊருக்குப் போவதென்று முடிவு செய்துவிட்டாய், நான் என்ன சொல்ல முடியும்? உன் இஷ்டம். ஆனால், நான் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யத்தான் போகிறேன்" என்றான்.

## 20

ஆணு பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கிஇவ் வையம் தழைக்குமாம்.

பாரதியார்

இரண்டு நாட்களாக வனஜாவின் நடவடிக்கைகள் எல்லாம் புதிராக இருந்தன. அவற்றை ஜாடைமாடையாக அவள் பெற்றோர் கவனித்துக் கொண்டுதான் இருந்தனர். அக்கம் பக்கத்தாரிடம் படிக்கக் கொடுத்திருந்த புத்தகங்களை யெல்லாம் அவசர அவசரமாகச் சேகரித்தா. லாண்டரி புத்தகத்தைப் புரட்டிப் புரட்டி ஏதோ குறிப்பெடுத்தாள். டிரை வாஷிங் கம்பெனிக்குப்போய், அவசர அவசரமாகச் சலவைக்காகத் துணிகளைப் போட்டுவிட்டு வந்தாள்.

அன்று மாலை, நேரமாகியும் வனஜா ஆபீசிலிருந்து திரும்பிவரவில்லை. குப்புசாமி முன்னதாகவே வீட்டுக்குத் திரும்பி இருந்தார்.

" என்ன விசாலம், வனஜா உங்கிட்ட ஏதாவது சொன்னாளா?" என்று மனைவியிடம் விசாரித்தார்.

"இல்லையே! ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?" என்றாள் விசாலம்.

" அவள் ஏதோ ஒரு திட்டத்தில் காரியங்கள் செய்துவருகிறாள்." நாலாம் வீட்டுப்பெண் பத்மாவிடம் 'இனிமேல் உங்களையெல்லாம் அடிக்கடி பார்க்கமுடியுமோ என்னவோ' என்று சொன்னாளாம். திடீரென்று துணிகளையெல்லாம் லாண்டரியில் அர்ஜண்ட் வாஷ் போட்டுவிட்டு வந்திருக்கிறாள். ஒன்றுமே புரியவில்லை....." என்று யோசனையுடன் கூறியவாறு உள்ளே சென்றார்.

அங்கே, வனஜாவின் பெட்டி தற்செயலாக அவர் கண்ணில் பட்டது. அதன்மீது அவள் விட்டுச் சென்ற கார்டு ஒன்று தென்பட்டது. ஜெயராமனுக்குதான் ஏதாவது எழுதி வைத்திருப்பாளோ என்று அறிந்து கொள்ளும் ஆவலுடன், கார்டைப் புரட்டிப் பார்த்தார். அது, வனஜாவின் சிநேகதி ஒருத்திக்கு எழுதி வைத்திருந்த கடிதம். அதில் விசேஷமாக ஒன்றும் எழுதி வைத்திருக்கவில்லை. பளிச்சென்று புது விலாசம் ஒன்று கண்ணில் படவே, அந்தக் கடிதத்தை முழுமையாகப் பார்த்தார் குப்புசாமி. அதில், "நான் விரைவிலேயே கீழ்கண்ட விலாசத்திற்கு மாறப்போகிறேன் . உன்

பதிலை அந்த விலாசத்த்திற்கு எழுதவும்' என்று குறிப்பிட்டு, ஒரு புது முகவரியை எழுதியிருந்தாள் வனஜா. அது, எழும்பூரிலுள்ள ஒர்க்கிங் உமன்ஸ் ஹாஸ்டலின் விலாசம்.

குப்புசாமிக்கு அதிர்ச்சி தாங்கவில்லை.

"விசாலம், நீ ஏதாவது வனஜாவைக் கண்டித்தாயா?" என்று கேட்டார்.

"இல்லையே!" என்றால் விசாலம்.

"பின் ஏன் அவள் ஹாஸ்டலுக்குப் போகப்போகிறாள்? என்று பதட்டத்துடன் கேட்டார்.

"ஹாஸ்ட்டலுக்கா, எனக்குத் தெரியாதே" என்று குமைந்தாள் விசாலம்.

அப்போது......

"உங்களுக்கு மட்டும் எப்படித் தெரிந்தது?" நான் யாருக்கும் சொல்லவில்லையே.... " என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள் வனஜா.

மகளை உற்றுப் பார்த்தார் குப்புசாமி. பிறகு, சற்றுக் கடுமையான குரலில், "இந்தச் செய்தியைக் கடைசியாகத் தெரிந்துகொள்கிற பாக்கியம் பெற்றிருக்கிறோமே ....." என்றார்.

"அப்பா, நான் உண்மையை மட்டும் சொல்கிற அசடு என்று உங்களுக்குத் தெரியாதா? இதுவரை இந்த விஷயத்தை நான் யாரிடமும் சொல்லவில்லை."

"அப்படியா? இந்தக் கடிதம்?" என்ற, கார்டை அவள் முன்னால் காட்டினார் குப்புசாமி.

"அந்தக் கடிதத்தை இன்றுதான் எழுதினேன். இன்றைக்குப் போஸ்ட் செய்திருந்தாலும், நாளைக்குதான் போய்ச்சேரும். நான் இன்று இரவே என் முடிவை உங்களிடம் சொல்வதாக இருந்தேன் ...." என்று சிறு குழந்தைபோல், வேடிக்கையாகப் பேசிச் சிரித்தாள் வனஜா.

குப்புசாமியின் முகம் கடுமையாகியது." உன் முடிவை எங்களிடம் சொல்வதாக இருந்தாய் என்றால் என்ன அர்த்தம், இதை எங்களிடம் ஒரு முடிவாகத்தான் சொல்வதாக இருந்தாயா? எங்களுடன் கலந்து முடிவுசெய்வதாக இல்லையா? என்று கேட்டார்.

"இல்லை அப்பா! சில முடிவுகளை நான் யாருடைய யோசனையையும் பெறாமலேயே எடுத்துக்கொள்ள வேண்டிய நிலையிலிருப்பவள். அதன்படி நான் இந்த முடிவைச் செய்துவிட்டேன். நான் இன்னும் ஓரிருநாட்களில் உமன்ஸ் ஹாஸ்டலுக்குப் போகப்போகிறேன்...." என்றாள்.

"ஓகோ! உன் முடிவைத் தெரிந்துகொண்ட மட்டில் நான் பாக்கியசாலிதான். அந்த முடிவுக்கான காரணத்தையும் தெரிந்துகொள்ளலாமா?" என்று, கோபமும், கேலியுமாகக் கேட்டார் குப்புசாமி.

வனஜாவின் முகம் சுருங்கியது. தந்தை ஒருநாளும் இப்படிப் பேசக்கூடியவர் அல்ல. அவர் ஏன் இப்படி நிதானத்தை இழக்கிறார் என்று அவளுக்குப் புரியவில்லை.

" அப்பா, ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? உங்கள் மகள் அவசரப்பட்டுத் தப்பான காரியங்கள் செய்துவிடுவாள் என்று நினைக்கிறீர்களா?" என்று உணர்ச்சி பொங்கக் கேட்டாள்.

குப்புசாமியின் முகத்தில் அமைதி பிறக்காவிட்டாலும், கொஞ்சம் சாந்தமடைந்தார். "பின்னே என்ன? நீ எங்களைக் கலந்துகொள்ளாமல் திடீரென்று இந்த முடிவுக்கு வரவேண்டிய அவசியம் என்ன? இதற்கு முன் எத்தனையோ பேர் எத்தனையோ விதமாகப் பேசினாலும், எதையும் பொருட்படுத்தாமல் உன் நிம்மதிக்காக எங்கள் வேதனையை அடக்கிக்கொண்டு வாழ்ந்துவருகிறோம். என்றைக்காவது உனக்கு விடிவுவரும், அதுவரை உன் போக்குப்படியே விட்டுப்பிடிக்கலாம் என்று இருக்கிறோம். இந்த நிலையில் நீ ஏறுமாறாக இப்படி ஒரு முடிவு செய்தால் என்ன அர்த்தம்?"

"இது ஏறுமாறான முடிவு ஒன்றுமில்லையப்பா. மிக அவசியமாக நான் ஏற்றுக்கொள்ள வேண்டிய முடிவு ......"

" எங்களைப் பிரிந்து போவது அவசியமா?"

" இல்லையப்பா! இதுவரை என்னால் உங்களுக்கு நிறைய குழப்பங்கள் வந்துவிட்டன. இனிமேலும் உங்களை நெருங்க இருக்கும் சில மனக்கலவரங்கள் உங்களை நெருங்கவிடாமல் பார்த்துக்கொள்ள நான் செய்திருக்கும் முடிவு இது ......" என்றாள் வனஜா.

பெற்றோர் புதிருடன் மகளைப் பார்த்தனர்.

"மனக்கலவரமா? என்ன சொல்கிறாய், வனஜா" என்று குழப்பத்துடன் கேட்டார் குப்புசாமி.

வனஜா அமைதியாக தன் கைப்பையைத் திறந்து, ஜெயராமன் அவளுக்கு எழுதிய கடிதத்தை அவரிடம் நீட்டினாள்.

அதை வாங்கிப் படித்துப் பார்த்தார் குப்புசாமி.

அவர் முகம் 'குப்'பென்று சிவந்தது. அமைதியே உருவான குப்புசாமி, சற்றுமுன், மகள் வீட்டைவிட்டுப் போகத் தீர்மானித்திருக்கிறாள் என்பதை அறிந்தபோது அடைந்த கோபம் ஒரு மாதிரியானது. இப்போது ஜெயராமனின் கடிதத்தைக் கண்டதும் ஏற்பட்ட கோபம், ஆவேசமாக மாறியது.

" இந்தக் கடிதத்தில் ஜெயராமன் என்ன எழுதியிருக்கிறான் பார்த்தாயா?" என்றார் கோபாவேசத்துடன்.

அவருடைய கோபத்தை எதிர்பார்த்தே இருந்தவள் போல் வனஜா, அமைதியுடன், " நான் படித்த பிறகுதானே அப்பா, உங்களிடம் காட்டுகிறேன்" என்றாள்.

" மாப்பிள்ளை என்ன எழுதியிருக்கிறார்......" என்று பரபரப்புடன் கேட்டாள் விசாலம்.

" உன் மகளையே கேள் ... "

" என்னம்மா வனஜா?"

" என்னை அவர் விவாகரத்து செய்யப் போகிறாராம் ....." என்று விளக்கினாள் வனஜா.

" என்னது?" என்று பதறினாள் தாய், அந்த வார்த்தைகளைக் கேட்டதும் இடி விழுந்ததுபோல் நொறுங்கினாள் .

" ஏம்மா துடிக்கிறே? ...அவருக்குத்தோன்றிய ஒரு முடிவைச் செய்யப்போறேன்னு எழுதியிருக்கார்..." என்றாள் வனஜா.

" உன்னைப் போல் திமிர் பிடித்த பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்ட எந்த மானமுள்ள ஆண்பிள்ளையும் இந்த முடிவைத்தான் செய்வான் .... " என்று ஆவேசத்துடன் கத்தினார் குப்புசாமி.

" அவர் எவ்வளவு மானமுள்ளவர் எனபது உண்மையோ. அதில் பாதியாவது நானும் தன்மானமுள்ளவள் எனபது உண்மை இல்லையா, அபபா... " என்று கேட்டாள் வனஜா.

"தன்னடக்கத்திலும், கணவனுக்கு அடங்கிப் போவதிலுந்தான் ஒரு பெண்ணுடைய தன்மானமே இருக்கிறது எனபது உனக்குத் தெரியுமா? ஆணவமும் திமிரும் உன் புத்தியை மறைக்கும்போது உனக்கு அதெல்லாம் எப்படித் தெரியும் ...." என்று சீறினார் குப்புசாமி.

" அபபா, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" - சற்றே கலவரத்துடன் கேட்டாள் வனஜா.

" உன் கர்வத்தை அடக்கி, உனக்குத் தாலி கட்டினவனை மதித்து, அவன் காலாடியில் விழுந்திருந்தால்தான் உன் மானத்தையும், மரியாதையையும் காப்பாற்றிக்கொள்ள்வாய். அந்தப் பிள்ளை என்ன தப்பு செய்துவிட்டான்? 'எனக்கு அடங்கி வாழு' என்று தானே கேட்கிறான்! அதைவிட, எவனோ ஒருவனுடைய சிநேகிதம் பெரிதா உனக்கு?"- குப்புசாமி

" யாரோ ஒருவனுடன் சினேகிதமா இருக்கிறது பெரிதில்லையப்பா எனக்கு; அந்தச் சாதாரண சிநேகிதத்தை, என் கணவர் பெரிதுபடுத்துவதுதான் எனக்குப் பெரிதாக இருக்கிறது. இந்தச் சின்ன விஷயத்தில் மனைவியை அவர் நம்பவில்லையானால், அப்புறம் என்ன இருக்கிறது?" என்றாள் வனஜா.

" எப்படிப் பெரிதுபடுத்தாமல் இருப்பான்? நீ இஷ்டம்போல் எவனோடும் பழகுவாய், புருஷன் என்பவன் அதைப் பொறுத்துக்கொண்டிருக்க வேண்டுமா?"

" என் மனதில் இருக்கிற சத்தியத்தை அவர் புரிந்துகொண்டால் போதும்..."

" பெரிய சத்தியம். ஒரு மனைவிக்குப் புருஷனோட வார்த்தயைவிடப் பெரிய சத்தியவாக்கு இருக்கிறதாக எனக்குத் தெரியவில்லை ..."

" சத்தியத்தைக் கொண்டுவந்து கணவன்-மனைவி என்ற குறுகின எல்லைக்குள் அடைக்காதீர்கள் ..... அது பெரிய விஷயம். சதியதிர்காகக் கணவன்-மனைவி உறவைத் தியாகம் செய்ய வேண்டிவந்தாலும், அதைத் தாங்கி நின்று, சத்தியத்தைப் பெருமைப்படுத்த வேண்டும். அரிச்சந்திரனும் சந்திரமதியும் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டதாலே எவ்வளவோ கஷ்ட்டப்பட்டார்கள்..... அதைவிடவா நான் கஷ்டப்படப்போகிறேன்?..... " என்றாள் வனஜா.

"அரிச்சந்திரன் கதையைப் பற்றி நீ பேசாதே.... கணவன் வாக்குக்குக் கட்டுப்பட்டு, வேலைக்காரியாக மாறி, வயிறு பிழைத்தவள் அந்த உத்தம மனைவி சந்திரமதி. உன்னை மாதிரி வேதாந்தம் பேசவில்லை..... "

இதைக்கேட்டு விரக்தியாகச் சிரித்தாள் வனஜா. பிறகு, "உங்கள் மகளை நீங்கள் இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அப்பா... அவர் வாக்குக்கு கட்டுப்பட்டு, காலுக்குச் செருப்பாகக் கிடப்பதற்கு நான் தயார். அவர் என்னைப் புழுவாக மதித்தாலும் பரவாயில்லை.... ஆனாலும், என் மனத்திலே உண்மைக்கு இருக்கிற பற்றை அவர் மதித்தால் போதும்....." என்றாள்.

" பயித்தியக்காரி மாதிரி திரும்பத் திரும்ப உளறாதே! ஒரு பெண்ணுக்குப் புருஷனைவிடச் சத்தியம், உண்மை வேறு எதுவும் இல்லே. இப்போதாவது உன் தப்பை உணர்ந்து, உன் கணவன் காலடியில் போய் விழு. நானும் உன்னைப் பெற்ற பாவத்துக்காக உன்கூட வந்து, அவனைக் கெஞ்சுகிறேன். அநாவசியமா நீ உன் வாழ்க்கையைப் பாழடித்துக்கொள்ளாதே" என்றார் குப்புசாமி வேதனையுடன்.

வனஜாவின் அழுத்தம் குறையவில்லை.

"அப்பா, உங்க மகள் எப்படியும் வாழவேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். அதனால்தான் பதட்டப் படுகிறீர்கள். ஆனால், நான்? கணவன் மனத்திலே கொஞ்சம் கௌரவமான இடத்தைப்பெற்று வாழ வேண்டும் என்று நினைக்கிறேன். நான் வழிபடுகிற சத்தியத்தை அவர் என்று புரிந்துகொள்வாரோ, அன்றைக்குத்தான் இந்தப் பிரச்சனைக்கு விடிவு வரும்.... "

" இனிமேல் என்ன விடிவு? அவன்தான் விவாகரத்துக்கு முடிவு முடிவு பண்ணிவிட்டானே...."

" சில சமயங்களில் ஒருவருடைய முடிவிலிருந்துதான், பிரச்சினையே ஆரம்பமாகும். என் விஷயமும் அப்படித்தான். அந்தப் பிரச்சனையில் நான் கடுமையாகப் போராட வேண்டியிருக்கிறது. அதில் எவ்வளவோ நெருக்கடிகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். இந்தப் போராட்டத்தை நானே, லட்சியத்தின் மேல்கொண்ட பற்றினால் வரவழைத்துக் கொண்டிருக்கிறேன்.இதனால் ஏற்படுகிற மனச்சோர்வுகளையும், சஞ்சலங்களையும் நான் ஒருத்தியே தாங்கி அனுபவிக்க வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறேன். அதனால்தான் நான் உங்களை விட்டுத் தனியே போவதென்று முடிவு செய்திருக்கிறேன்."

"தனியாகப் போய் என்ன செய்யப்போகிறாய்?"

" அவர் விவாகரத்து வழக்குத் தொடரப்போகிறார்ரே, அதை எதிர்க்க வேண்டாமா?"

" கணவனை எதிர்த்தா? - கலவரத்துடன் கேட்டார் குப்புசாமி.

"இல்லையப்பா, அவருடைய சந்தேகத்தை எதிர்த்து, நியாயத்துக்காகவும், உண்மைக்காகவும் போராடி, என் உரிமையைப் பெறப்போகிறேன்!"

" சொத்து சுகங்களை வழக்காடிப் பெறலாம். ஆனால், வாழ்க்கையை வழக்காடிப் பெறமுடியாது. அதை அன்பினால்தான் பெறவேண்டும் ..." என்றார் குப்புசாமி.

"அவருடைய அன்பு எப்போதும் என்னிடம் இருக்கிறது. அவர் அன்புக்கும் ஆசைக்கும் இடையே இருக்கும் திரையைக் கிழிக்கப் போராடப் போகிறேன்.... "

"இல்லை, அவனுடைய அன்பையெல்லாம் விஷமாக்கப் போகிறாய்..."

"அன்பை யாராலும் விஷமாக்க முடியாதப்பா. அன்புதான் விஷத்தையும் அமுதமாக்கும் ....."

"வனஜா, நான் சொல்வதைக் கேள். வாழக்கையைப் புரிந்துகொள்ளாமல், வெறும் வறட்டுத் தத்துவங்களை மனத்தில் வைத்துக்கொண்டு வாழ்கையைச் சுட்டெரித்துக் கொள்ளத் துணிந்துவிட்டாய். இப்படி அசடாக உலகத்தில் எந்தப் பெண்ணும் இருக்கமாட்டாள்...."

"நான் ஒருத்தி இருக்கிறேனே, அப்பா. என்ன செய்வது? என் வழியில் என்னை விட்டுவிடுங்கள். உலகத்திலே கணவன் கைவிட நினைக்கலாம். ஏன், நீங்கள்கூட என் மேல் இருக்கிற கோபத்தால் என்னைக் கைவிட நினைக்கலாம். ஆனால், சத்தியம் என்னைக் கைவிடாது. அதை நான் உறுதியாக நம்புகிறேன். அதற்காகத் தனியாக இருந்து போராடிவிட்டு, என் கணவரோடு வந்து உங்கள் ஆசீர்வாதத்தைப் பெற்று, புது வாழ்க்கை தொடங்கப் போகிறேன். நிச்சயமாக நான் வெற்றி பெறுவேன். சத்தியம் தோற்றதாகச் சரித்திரமே கிடையாது. அதுவரை நான்

தனியாக இருப்பது நல்லது, உங்களுக்கும் நல்லது. அதற்காகத்தான் ஹாஸ்டலுக்குப் போகிறேன் ..." என்று ஆணித்தரமாகக் கூறிவிட்டு, உள்ளே சென்றாள் வனஜா.

தந்தைக்கும் மகளுக்குமிடையே நடந்த உக்கிரமான மோதலைப் பார்த்து, அதிர்ச்சியடைந்திருந்த விசாலம், "வனஜா, வனஜா" என்று அழைத்தவாறு மகளைப் பின்தொடர்ந்தாள்.

குப்புசாமி மலைத்துப் போய் நின்றார்.

"**அ**ண்ணா, அவர் பழைய ஸ்ரீதர் இல்லை. நீயே வந்து மனம்விட்டுப் பேசிப் பார்த்தால் புரிந்துகொள்வாய்" என்று ஆசையும், நாணமுமாகக் கூறிய சுதாவைப் பார்க்கப் பார்க்க பிரமிப்பாக இருந்தது ஜெயராமனுக்கு.

இப்போது, வாழ்க்கையில் அவனுக்கு உற்ச்சாகப்படுத்தக் கூடிய விஷயம் ஒன்று உண்டென்றால், அது சுதாவைப் பற்றிய விஷயந்தான்.

அவன் வாழ்க்கையே பாழாகிவிட்டது. சொந்த இன்பம் பறிபோய்விட்டது. இனி மற்றவர்கள் மகிழ்ச்சியில் பங்கு கொண்டால்தான் வாழ்க்கை சிறிதாவது ரசிக்கும் என்று அவனுக்குத் தோன்றியது. எனவேதான், சுதா விஷயத்தில் அவன் அதிக அக்கறை காட்டினான். 'அவளுக்காவது ஒரு மனநிறைவான வாழ்க்கையை அமைத்துக் கொடுத்து, அவள் மகிழ்வைப் பார்த்து நாம் மகிழலாம் ....' என்ற ஆர்வம் அவனுக்கு ஏற்பட்டது.

சுதாவின் மகிழ்ச்சிக்கு ஒரே ஆதாரம் ஸ்ரீதர்தான் என்பது அவனுக்குத் தெளிவாகவிட்டது. அதை மாற்ற நினைத்தால், சுதாவுக்கும் தன்னைப்போல் மனக்குமைச்சலும், வேதனைக்கும் ஆளாவாள் என்பதை அவன் அறிந்திருந்தான்.

சுதா, ஸ்ரீதர் வீட்டுக்கு அடிக்கடி போவதையும், அங்கேயே தங்குவதையும் அவன் மனமார ஆமோதித்தான். ஸ்ரீதர் ஒழுக்கமானவன் என்பதை, ஒருமுறை அவனிடம் பழகியதிலிருந்து புரிந்துகொண்டிருந்தான். அவனும் சுதாவும் எப்படிப் பழகினாலும், தவறாக எதுவும் நடந்துவிடாது என்பதில் அவன் உறுதியாக இருந்தான். சுதா துடிதுடிப்பும், படபடப்பும் உள்ள பெண்ணாக இருந்த காலத்திலேயே தன்மூலந்தான் ஸ்ரீதரிடம் திருமணம் விஷயம் பேசினாள் என்பதில், ஜெயராமனுக்கு அவள்மீது தனி மதிப்பே ஏற்பட்டிருந்தது.

தான் அடிக்கடி ஸ்ரீதர் வீட்டுக்கு போய் வருவதைச் சுதா மறைக்கவில்லை. சில சமயம் பவானியின் உடல் நிலையைப் பற்றி அண்ணனிடங்கூடக் கூறியிருக்கிறாள். பவானி மீது தனக்கிருக்கும் அக்கரையைப் பல விதங்களில் கூறியிருக்கிறாள்.

சுதாவின் உற்சாகம் நாளுக்கு நாள் வளர்ந்து வருவதை ஜெயராமன் உணர்ந்தான். அதைப் பற்றிக் கேட்டால், "அண்ணா, பவானிக்கு உடல் நன்றாகத் தேறிவருகிறது. என் சந்தோஷத்திற்கு அதைவிட வேறு என்ன காரணம் வேண்டும் ....? என்பாள் சுதா. ஆனால், அவள் பதில் சொல்லும் தோரணையிலேயே அவள் வெளிப்படையாகச் சொல்லும் காரணத்துக்கும் அப்பால், இன்னொரு காரணம் இருப்பதைப் புரிந்துகொள்வான் ஜெயராமன்.

முதலில் பவானியைப் பற்றி மட்டுமே அண்ணனிடம் பேசிக் கொண்டிருந்த சுதா, வரவர ஸ்ரீதரைப்பற்றியும், அவன் ஒரு பெண் துணை இல்லாமல் பவானியைக் கவனிக்க முடியாமல் படும் சிரமங்களைப் பற்றியும் நாசூக்காகச் சொல்வாள்.

அன்று பேச்சுவாக்கில் கேட்டது போல், "ஆமாம், சுதா, ஸ்ரீதர் உன்னிடம் எப்படிப் பழகுகிறார்? என்று கேட்டு வைத்தான்.

அவ்வளவுதான்!

உற்சாகம் மேலிட "....... அவர் பழைய மாதிரி இல்லை, அண்ணா. வந்து மனம்விட்டுப் பேசிப் பார்" என்று அழைத்தாள்.

"வருகிறேன். இருந்தாலும் முதலில் உங்கள் உறவில் சிறிய 'ஷாக்' அடித்ததே என்றுதான் யோசிக்கிறேன்.... " என்று விளையாட்டாகக் கேட்டான்.

"அதெல்லாம் முந்தி. இப்போது அவர் என் விஷயத்தில் ரொம்பவும் மாறிப்போய்விட்டார், அண்ணா. நான் இல்லையென்றால் தவித்துப் போய்விடுகிறார்....." என்று படபடவென்று விஷயத்தைக் கொட்டினாள்.

" அப்படியென்றால் நான் இனிமேல் வந்து என்ன கேட்கவேண்டும்... நாள் பார்க்க வேண்டியதுதானே.... " என்று கேலியாகக் கேட்டான் ஜெயராமன்.

" அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அவர் மன நிலையைத்தான் சொன்னேன். உன் தங்கையைப் பற்றி அவரிடம் பேசவேண்டியதை நீதானே பேசவேண்டும். நானே பேசிக்கொள்ள முடியுமா ..... " என்று சாமர்த்தியமாகப் பேசினாள்.

**ம**றுநாளே ஸ்ரீதரைப் பார்க்கச் சுதாவுடன் கிளம்பினான் ஜெயராமன்.

ஸ்ரீதர் தன்னை வரவேற்ற ஆர்வத்தையும், தன்னுடன் பேசிப் பழகிய முறையையும் கண்டபோதே, ஜெயராமனுக்கு மனம் நிறைந்துவிட்டது. இரண்டு பேரும் வெகுநேரம் வரை பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோதே, தற்செயலாகச் சொள்ளநேர்ந்ததைப்போல், "சுதாவின் பொறுப்பு மட்டும் நீங்கிவிட்டால், என் பாரம் இறங்கியதுபோல் ஆகும்.... " என்றான் ஜெயராமன்.

"அவளால் உங்களுக்கு என்ன சுமை?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

" இல்லை, அவளுக்கு ஒரு கல்யாணம் ஆகிவிட்டால் ... " என்று ஸ்ரீதரை 'ஒரு மாதிரி'யாகப் பார்த்தவாறு சொன்னான் ஜெயராமன். தன பார்வையிலேயே ஸ்ரீதரிடம் கேட்ட்க வேண்டிய கேள்வியைக் கேட்டுவிட்டான் ஜெயராமன்.

ஸ்ரீதரும் சொல்ல வேண்டிய பதிலைச் சொல்லிவிட்டான்.

"அவள் கல்யாணத்துக்கு என்ன அவசரம்? நானும் சுதாவும் ஒரே பந்தலில் கல்யாணம் செய்துகொள்வதாக இருக்கிறோம் ..." என்று நாசூக்காகத் தன் நோக்கத்தைத் தெரிவித்தான் ஸ்ரீதர்.

" எப்போ?" என்று அவசரமாகக் கேட்டான் ஜெயராமன்.

"பவானியின் கல்யாணத்தோடு " என்றான் ஸ்ரீதர். இதைச் சொல்லும்போது, அவன் குரல் கரகரத்தது.

இருவரும் விஷயத்திற்கு வந்துவிட்டதால், மனம் விட்டுப் பேசினர்.

" மிஸ்டர் ஜெயராமன், பவானியை ஏற்றுக்கொள்ளக் கூடிய பெருந்தன்மை மிகிந்த ஆண்மகனுக்காகக் காத்திருக்கிறேன். அவள் திருமணம் முடிந்தவுடன், சுதாவின் அசையும் நிச்சயம் நிறைவேறும். ஆனால், பவானிக்கு மாப்பிள்ளை ...."

" மனம் தளராதீர்கள், மிஸ்டர் ஸ்ரீதர். எப்படியும் அவளுக்கேற்றபடி ஒரு சிறந்த வரனைத் தேடிவிடலாம். நானும் இனி அதற்காக முழுமூச்சுடன் பாடுபடுகிறேன். நிச்சயம் கைகூடும்" என்றான் ஜெயராமன், தன்னம்பிக்கைமிக்க குரலில்.

பேசிக்கொண்டே மூவரும் எழுந்து வாசலுக்கு வந்தார்கள். விடை பெற்றுக்கொள்ளும்போது, ஜெயராமன் மீண்டும் உபசாரமாக, "ஸ்ரீதர், கவலைப்படாதீர்கள். உங்களுக்கு உதவ நான் இருக்கிறேன்" என்றான்.

அவன் சாதாரணமாகச் சொன்ன அந்த வார்த்தை, சுதாவின் மனத்தில் பளிச்சென்று ஓர் ஒளியை உண்டாக்கிற்று. அந்த ஒளியில் அவள் மனத்தில் ஒரு திட்டம் உருவாகியது. அவள் உள்ளம் சிலிர்ப்பால் மலர்ந்தது.

## 21

தீர ஒருசொல்இன்று கேட்டுவந்திட்டால் - பின்பு
தெய்வ மிருக்குதடி தங்கமேதங்கம்.

பாரதியார்

**ஹா**ல்கடிகாரம் எட்டுமுறை ஒலித்து ஓய்ந்தது. ஈஸிசேரில் சாய்ந்து ஹிந்து படித்துக் கொண்டிருந்த ஜெயராமன், பேப்பரை மடித்து வைத்துவிட்டு நிமிர்ந்தான். அதேசமயம், தன் அறையிலிருந்து வெளிப்பட்ட சுதா, " எட்டாகி விட்டதே, அண்ணா, இப்போது வந்துவிடுவாரா அவர்?" என்று கேட்டுக்கொண்டே, அண்ணன் அருகில் வந்தாள்.

"வந்துவிடுவான் என்று நினைக்கிறேன். எனக்கென்னவோ அவனைப் பார்க்கவே பிடிக்கவில்லை. என் போக்குப்படி விட்டிருந்தால், அவனை இந்தத் தெருப் பக்கங்கூட வர விட்டிருக்கமாட்டேன். நீதான் 'எதையும் நன்றாகத்

தெரிந்துகொள்வது நல்லதண்ணா' என்று எதையோ கூறி, அவனை வரவழைத்துவிட்டாய் ..... " என்று சலிப்புடன் கூறியபடி, கை கால்களை நீட்டி ஒருமுறை சோம்பல் முறித்துக்கொண்டான் ஜெயராமன்.

அவன் எதிரில் இருந்த நாற்காலியில் அமர்ந்துகொண்ட சுதா, " வேண்டுமானால் பாரேன் : நான் சொன்ன இந்த ஐடியா, பிரமாதமான ரிஸல்டைத் தரப்போகிறது. எதையும் ஆராயாமல் ஒதுக்கித்தள்ளுவது சரியில்லை, அண்ணா. அவரே வந்து நம்மைப் பார்க்கிறேன் என்று எழுதிருந்தபோதே, அதில் ஏதோ விசேஷம் இருக்கத்தான் வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அவர் என்னதான் சொல்கிறார் என்று பார்ப்போமே! ... இந்த வனஜா எந்த அளவுக்குப் போவாள், எங்கெல்லாம் செல்வாள் என்பதை நாமும் புரிந்துகொள்ள வேண்டாமா? நானும் பல பெண்களைப் பார்த்திருக்கிறேன், பல பெண்களோடு பழகியிருக்கிறேன். ஆனால், இந்த வனஜாவைப்போல் யாரையுமே பார்த்ததில்லை. எவ்வளவு குண்டு தைரியம் இருந்தால், கொண்ட கணவனிடமே வந்து தன் காதலை பற்றிப் பேசுவாள் .... சே, சே! அவள் ஒரு பெண்ணா. ஐ ஹேட் ஹர்" என்று எரிச்சலுடன் சொன்னாள்.

ஜெயராமன் தங்கைக்குப் பதில் சொல்லவில்லை. வனஜாவின் பேச்சை எடுத்தாலே அவனுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. 'நல்ல மனைவி' நல்ல நண்பன், நல்ல ஊழியன் - இவர்களெல்லாம் கிடைப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்பார்கள். ஒருவேளை நாம் பூர்வ ஜென்மத்தில் ரொம்பவும் பாவம் செய்திருக்கிறோம் போலிருக்கிறது. அதுதான் இப்படி ஒரு மனைவி நமக்கு வாய்த்திருக்கிறாள் ' என்று எண்ணிக்குமைந்தான். அவன் மன வேதனையைப் புரிந்துகொள்ளாமல் வனஜாவின் தூஷணையில் முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்தாள் சுதா. ஏற்கெனவே அவளுக்கு வனஜாவைப் பிடிக்காது. இப்போது அவள் மனத்தில் ஒரு புதியத் திட்டம் வேறு உருவாகியிருந்தது. வனஜாவை ஜெயராமன் முழுமையாக வெறுத்து ஒதுக்கினால்தான் தன் திட்டம் நிறைவேறும் என்ற முடிவுடன், கொஞ்சமும் கருணையில்லாமல், வனஜாவைப் பற்றித் தாறுமாறாகப் பேசிக்கொண்டே போனாள் அவள்.

ஜெயராமன் பதில் சொல்லவில்லை. அவன் மனம் புண்ணாகியிருந்தது. சுதாவின் ஆத்திரப் பேச்சுக்கள் அவன் செவிகளில் விழத்தான் செய்தன. ஆனால், அவன் மனமோ, சற்றுப் பொறுத்து வரப்போகும் அந்த புதிய விருந்தாளியைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்தது.

ஆமாம்! அவன் அப்போது ஒரு விருந்தாளியை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

அவன் வேறு யாருமல்ல, சுந்தரம்தான்.

'உங்களிடம் சில முக்கியமான விஷயங்களைப் பற்றிப் பேசவேண்டும். என்னை உங்களுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும். தயவு செய்து மறுக்காமல் ஒரு அரைமணி நேரம் பேட்டி கொடுங்கள்' என்று சுந்தரத்திடமிருந்து ஒரு கடிதம் வந்தபோது, "நான்சென்ஸ், கண்டகண்டவர்களையெல்லாம் சந்திக்க நான் தயாராக இல்லை" என்றுதான் கத்தினான் ஜெயராமன். ஆனால், அந்த கடிதத்தைப் பார்த்துவிட்டு, சுதாதான், தன் திட்டம் நிறைவேற இந்த சந்திப்பும் பயன்படும் என்ற முடிவுடன், அண்ணனிடம் பேசி, அந்தச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்தாள்.

"அவர் என்னதான் சொல்கிறார் என்று தெரியவேண்டாமா, அண்ணா? ஒருவேளை 'டைவர்ஸ்' கேஸ் விஷயமாக உனக்கு உதவ வருகிறாரோ என்னவோ? உன்னிடம் போதிய ஆதாரம் இல்லை என்றுதானே கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறாய். அவரை வரவழைத்துப் பேசினால், சில உண்மைகள் தெரியவரலாம். அநாவசியமாகப் பதட்டப்பட்டு நல்ல சந்தர்ப்பத்தை இழக்காதே. வேண்டுமானால் நானும் உன்னுடன் இருக்கிறேன். நைஸாகப் பேசி, ஆளை மடக்கிவிடுவோம் ....." என்றாள்.

தங்கையின் பேச்சில் 'ஏதோ' இருப்பது புரிந்தது ஜெயராமனுக்கு. 'சரி' என்று சுந்தரத்தைச் சந்திக்க ஒப்புக்கொண்டான். 'ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணிக்கு வரலாம்' என்று எழுதிப்போட்டான்.

அப்போது, சுந்தரத்தை எதிர்பார்த்துக்கொண்டுதான் அவர்கள் காத்திருந்தார்கள். அந்தக் கடைசிநேரத்திலும், வனஜாவைப் பற்றி எவ்வளவு தூஷிக்க முடியுமோ, அவ்வளவு தூஷித்துக்கொண்டிருந்தாள் சுதா. எங்காவது தவறிப்போய் அண்ணன் மனத்தில் கனிவு பிறந்துவிடப்போகிறதே என்ற கவலை அவளுக்கு.

எட்டடித்து இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம், அந்த வீட்டு வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. அதனின்றும் இறங்கிய சுந்தரம், மீட்டருக்கான பணத்தைக் கொடுத்துவிட்டு, அவசர அவசரமாக உள்ளே நுழைந்து, "ஐயாம் ஸாரி, கொஞ்சம் தாமதமாகிவிட்டது...." என்று ஜெயராமனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்.

"ஓ, இட் ஈஸ் ஆல்ரைட் .... " என்றான் ஜெயராமன்.

'ஆமாம்! இதெல்லாம் ரொம்ப ஒழுங்குதான். எதில் ஒழுக்கம் தேவையோ, அதில் காணோம்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டே சுந்தரத்தை உன்னிப்பாகப் பார்த்தாள்.

அவன் தோற்றத்தில் ஒரு கண்ணியம் இருப்பதை அவள் கவனிக்கத் தவறவில்லை. சுதாவைப் போலவே, ஜெயராமனும் சுந்தரத்தை அளவெடுத்தான்.

கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக்கொண்டான் சுந்தரம். ஜெயராமனும், சுதாவும் தன்னை அளவெடுப்பது போல 'ஒரு மாதிரி'யாகப் பார்ப்பது அவனுக்குப் புரிந்தது. அவர்கள் அப்படிப் பார்ப்பதில் நியாயம் இருக்கிறது என்பதையும் அவன் உணர்ந்துகொண்டான். 'திடீரென்று வந்திருக்கிறானே, என்ன நோக்கத்துடன் வந்திருக்கிறானோ, என்னவோ? என்று அறிந்துகொள்ள முயல்வது நியாயந்தானே' என்ற முடிவுடன், அவர்கள் 'சோதனை' முடியட்டும் என்று சில கண நேரம் மௌனமாக இருந்தான். ஹாலில் இருந்த மின் விசிறியின் சத்தமும், அந்த விசிறிக் காற்றால் படபடத்த ஒரு காலண்டர் எழுப்பிய சலசலக்கும் ஓசையும் அந்த அறையில் சற்று பலமாகக் கேட்டது.

"யெஸ் ..... மிஸ்டர் சுந்தரம் .... நீங்கள் வந்த விஷயத்தைச் சொல்லுங்கள் ....." என்று நேரிடையாக விஷயத்திற்கு வந்து, மௌனத்தைக் கலைத்தான் ஜெயராமன்.

அண்ணனின் இந்தப் போக்கு, சுதாவுக்குப் பிடிக்கவில்லை. இப்படியெல்லாம் முரட்டுத்தனமாக எதையாவது பேசி, வந்தவனிடமிருந்து விஷயத்தைத் தெரிந்துகொள்ள முடியாமல் போய்விடுமோ என்று அஞ்சினாள். 'இன்று எப்படியாவது இந்தச் சுந்தரத்தைப் 'பேச' வைத்து, எல்லா உண்மைகளையும் வெளிக்கொண்டு வந்து விடவேண்டும். பிறகு, அவன் வார்த்தைகளைக்கொண்டே அவனை மடக்கி, நம் திட்டத்தை வெற்றிபெறச் செய்யவேண்டும்' என்ற முடிவுடன் இருந்தால் அவள்.

"அண்ணா, வந்தவுடன் இப்படிப் பேச்சை ஆரம்பித்தால் எப்படி? என்ன இருந்தாலும் அவர் நம் வீட்டுக்கு வந்துள்ள விருந்தாளி. கொஞ்ச நேரம் பொதுவாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, பிறகு பேசவேண்டியதைப் பேசலாம். அதற்க்கு முன்னால் நீ செய்யவேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது. என்னை நீ அறிமுகப்படுத்தவே இல்லையே! அது அவசியமில்லையா?" என்றாள்.

" யெஸ் .. யெஸ் .... மறந்தே போய்விட்டேன். மிஸ்டர் சுந்தரம், இவள்தான் என் ஒரே தங்கை மிஸ் சுதா ...." என்று அறிமுகப்படுத்தினான் ஜெயராமன்.

" 'ஓ' நீங்கள்தானா அது? உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். வனஜா அடிக்கடி சொல்லுவார் ....." என்றான் சுந்தரம்.

"ஐ ஸி..... " என்றான் ஜெயராமன் , அழுத்தமாக.

"ஆமாம்! உங்கள் மாணவி வனஜா உங்களைப் பற்றியும், உங்கள் தங்கையைப் பற்றியும் ...... " - சுந்தரம் வார்த்தையை முடிக்குமுன், ஜெயராமன் குறுக்கிட்டு, "வெறும் வனஜா என்று சொன்னால்போதும். அவள் என் மனைவி என்பதை நீங்கள் ஞாபகப்படுத்த வேண்டாம்" என்றான் கடுமையான குரலில்.

"ஐயாம் ஸாரி .... நீங்கள் எப்படி விரும்புகிறீர்களோ, அப்படியே சொல்கிறேன். மிஸஸ் வனஜா, மிஸ் சுதாவைப் பற்றி அடிக்கடி சொல்லியிருக்கிறார்" என்றான்.

"என்ன சொல்லுவாள் ..... சுத்த போர் என்றா?" எரிச்சலுடன் கேட்டாள் சுதா.

"நோ.... நோ .... அவர்கள் வாயிலிருந்து அப்படியெல்லாம் எதுவும் வராது. யாரைப் பற்றியும் குறைவாக அவர் பேசி நான் கேட்டதே கிடையாது. உங்களைப் பற்றி அவர் புகழ்ச்சியாகப் பேசுவதைக் கேட்கும்போது, ' நாத்தியைப் பற்றி ஒரு பெண் இப்படிக்கூடப் பேச முடியுமா? என்று நான் ஆச்சரியப்பட்டதுண்டு.... மிஸ்டர் ஜெயராமன், நம் விஷயத்திற்கு வந்துவிட்டோம். தெளிவாகச் சொல்கிறேன். வனஜா ஓர் அபூர்வப் பெண். அவரை சந்தேகப்படுவது மகாபாவம் .... இதை நேரில் சொல்லிப் போகத்தான் வந்தேன் .... " என்றான்.

"ஐ ஸி..... " அவள் ஓர் அபூர்வப் பெண், நீங்கள் ஓர் அபூர்வ மனிதர். ஆனால், நான் மிகவும் சாதாரணமானவனாயிற்றே....... எனக்கும் அவளுக்கும் ஒத்துவரவில்லையே ...." என்றான் ஜெயராமன் குத்தலாக.

"மிஸ்டர் ஜெயராமன், உங்கள் சொந்த விஷயத்தில் குறுக்கிடுவதற்காக என்னை மன்னியுங்கள். என்னால் உங்கள் தாம்பத்ய வாழ்வில் ஒரு குழப்பம் நெருகிரதே என்று நினைக்கும்போது, எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. அவரை நீங்கள் அநாவசியமாகச் சந்தேகப் படுகிறீர்கள். விஷயம், விவாகரத்துவரை சென்றுவிட்டதாகக் கேள்விப்பட்டேன். அது சரியில்லை என்று சொல்லிப்போகத்தான் வந்தேன். வனஜாவால் நீங்கள் நினைப்பதுபோல் எந்தத் தப்பும் செய்யமுடியாது..... ஷி ஈஸ் இன்கேபபிள் ஆஃப் டூயிங் மிஸ்டேக்ஸ் .... என்னை நம்புங்கள். அவரை எனக்கு நன்றாகத் தெரியும் ..... " என்றான் உணர்ச்சியுடன்.

"யெஸ் ..... அவளை உங்களுக்கு நன்றாகத் தெரியும். உங்களை அவளுக்கு நன்றாகத் தெரியும். அது எனக்கு நன்றாகத் தெரியும். இது போதாதா, நான் அவளை விட்டுப்பிரிய ... " என்றான் ஜெயராமன் ஆத்திரத்துடன்.

"நோ .... நோ ...! நான் நன்றாகத் தெரியும்.என்று சொல்வதை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்."

" நோ ..... நான் இதைப்பற்றி உங்களிடம் எதுவும் பேசத்தயாராக இல்லை, வேறு ஏதாவது விஷயம் உண்டா?" என்று கூறி 'டக்'கென்று பேச்சை முறித்தான் ஜெயராமன்.

பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த சுதாவுக்கு, இந்த அண்ணன் அடிக்கடி இப்படி முட்டுக்கட்டை போடுவது பிடிக்கவில்லை. 'அவன் வாயிலிருந்து சில உண்மைகளை வரவழைக்க முடியாமல் தடுக்கிறாரே இந்த அண்ணா' என்று சலித்துக் கொண்டாள். மெல்ல உள்ளே எழுந்துபோய், இரண்டு கோப்பைகளில் தேநீர் எடுத்துக்கொண்டு வந்தாள்.

சுந்தரம், வாயடைத்துப் போனான். ஜெயராமன் குரலில் இருந்த அந்தக் கண்டிப்பு, அவனை வியக்கச் செய்தது.

'ஏதேதோ சொல்லவேண்டும் என்று வந்தோம். இப்படி ஆரம்பத்திலேயே தடுத்துவிட்டாரே இவர்' என்று வருந்தினான் அவன்.

"மிஸ்டர் சுந்தரம் ..... நான் உங்களைச் சில கேள்விகள் கேட்கலாமா?" என்று மெள்ளப் பேச்சில் புகுந்தாள் சுதா.

"யெஸ் .... தாராளமாகக் கேளுங்கள். தயங்காமல் சொல்கிறேன் ...." என்றான்.

"நீங்கள் உண்மை பேச வேண்டும், என்ன ...?" என்றாள் சுதா.

"நான் வனஜாவின் நெருங்கிய நண்பன். அவரிடமிருந்து நான் கற்றுக்கொண்டதே அதுதான் .... கண்டிப்பாகப் பொய் சொல்லமாட்டேன்.... கேளுங்கள் .... " என்றான்.

"நீங்கள் வனஜாவைக் காதலித்திருக்கிறீர்கள், இல்லையா?"

"அவரை நான் விரும்பியது உண்மை."

" வார்த்தை ஜாலம் வேண்டாம், அவரைக் கல்யாணம் செய்துகொள்ள ஆசைப்பட்டீர்களா, இல்லையா?"

"ஆமாம், அப்படி ஆசைப்பட்டதில் தவறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அவரைப் போன்ற ஒரு பெண்ணை மனைவியாக அடையக்கொடுத்து வைத்திருக்க வேண்டுமே .... " என்றான்.

"யெஸ்.... யெஸ் .... இப்படியெல்லாம் அவஸ்தைப்படக் கொடுத்துதான் வைத்திருக்க வேண்டும் ... " என்று கொதிப்புடன் கூறினான் ஜெயராமன்.

"அண்ணா ப்ளீஸ்.... நான் பேசி முடித்து விடுகிறேன் ... " என்று அண்ணனிடம் கெஞ்சலாகக் கேட்ட சுதா, சுந்தரம் பக்கம் திரும்பி, "அதாவது, நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் காதலித்துக் கல்யாணம் செய்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறீர்கள், இல்லையா?" என்றாள்.

"இல்லை, நான் அவரைக் கல்யாணம் செய்துகொள்ள தீர்மானித்திருந்தேன். அவர் மனத்தில் அப்படி ஓர் எண்ணம் இல்லை என்பதைப் பின்னால்தான் புரிந்துகொண்டேன்."

" வனஜாவின் கல்யாணத்திற்கு நீங்கள் ஏன் வரவில்லை?"

"அன்று எனக்கு உடம்பு சரியில்லை..."

"உடல் வியாதியா? மனோவியாதியா?"

" ஏமாற்றத்தால் ஏற்பட்ட அதிர்ச்சிதான் ...."

"என்ன ஏமாற்றமோ?"

" இது என்ன கேள்வி, மிஸ் சுதா? வனஜா கிடைக்கவில்லையே என்ற ஏமாற்றந்தான்...."

இதைக்கேட்டு, ஜெயராமன் துடித்தான். 'தன் எதிரிலேயே இப்படிப் பேசுகிறானே இவன்!' என்று தவித்தான். உண்மை தன்னை இவ்வளவு சுடும் என்பதை அவன் அதுவரை புரிந்து கொள்ளவில்லை. 'இதனால்தான் உண்மையைத் தரிசிக்கவே பலர் பயப்படுகிறார்களோ' என்றும் எண்ணினான்.

"பொதுவாக இப்படியெல்லாம் காதலிப்பவர்கள், தாங்கள் காதலித்தப் பெண் இன்னொருவருடைய மனைவியாகிவிட்டால், அவர்கள் பாதையிலிருந்து விலகிப் போவதுதானே வழக்கம்? ..."

"யெஸ்......."

" நீங்கள் ஏன் அப்படிப் போகவில்லை?"

" நான் போயவிடத்தான் விரும்பினேன். ஆனால், வனஜாதான் ......."

" கமான் ..... சொல்லுங்கள் ...... வனஜாதான் ......"

" அர்த்தமில்லாமல் குழப்பிக்கொள்ளாதீர்கள் ..... நாம் என்றும் போலப் பழகுவோம்' என்றார். சரி என்று நான் சாதாரணமாகப் பழகினேன். நட்புக்கு ஓர் இலக்கணமே வகுத்துக் கொடுத்திருக்கிறார் வனஜா. ஆனால், அந்தத் 'தூய' நட்பு இப்படி ஒரு பெரிய விபரீதத்தில் கொண்டுபோய்விடும் என்று கனவிலும் நினைக்கவில்லை..... " என்றவன், ஜெயராமன் பக்கம் திரும்பி, "சார் ... வனஜா ஓர் அபூர்வ மலர். அதை வாடவிடாதீர்கள். அவளுக்கு வாழ்வு கொடுங்கள். அதைக் கேட்கத்தான் நான் உங்களை சந்திக்க விரும்பினேன். அர்த்தமற்ற சந்தேகத்திற்கு ஒரு பெண்ணைப் பலி கொடுத்துவிடாதீர்கள் ....." என்றான் நெஞ்சுருக.

"ஐ ஸி" என்று தலையை அசைத்த ஜெயராமன், என்ன மிஸ்டர் சுந்தரம், இப்படியெல்லாம் போய் ஜெயராமனிடம் பேசுங்கள் என்று வனஜா உங்களிடம் வந்து அழுதாளா? அவளுக்காக வக்காலத்து வாங்கிக்கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று நிஷ்டூரமாகக் கேட்டான்.

அந்தக் குரலிலிருந்த குரோதம், சுந்தரத்தைத் திடுக்கிட வைத்தது.

"நோ......நோ! நீங்கள் நினைப்பது தவறு, மிஸ்டர் ஜெயராமன். இந்த விஷயமாக நான் உங்களிடம் பேச விரும்புகிறேன். எனக்கு அனுமதி கொடுங்கள் என்று வனஜாவைக் கேட்டேன். 'தயவு செய்து இதில் தலையிடாதீர்கள்' என்று பதில் எழுதிவிட்டார்...... இருந்தாலும்.... " என்று கூறி நிறுத்தினான் சுந்தரம்.

'ஐஸி! நேரில் பேசுவது போதாதென்று கடிதப் பரிவர்த்தனைகள் வேறா' என்று மனத்துக்குள் கருவிக்கொண்டே ஜெயராமன், "இருந்தாலும் ஏன் வந்தீர்கள்? உங்கள் அருமை வனஜாவின் வார்த்தையை மீறி எப்படி ஒரு காரியம் செய்யத் துணிந்தீர்கள்?" என்று எகத்தாளமாகக் கேட்டான்.

"வனஜாவின் வார்த்தையைவிட, வனஜாவின் வாழ்க்கை முக்கியமாக எனக்குப்பட்டது. அதனால் தான் ....." நிதானமாகப் பதில் சொன்னான் சுந்தரம்.

சுதா பொறுமை இழந்தாள். அவளுக்குச் சுந்தரத்திடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் இன்னும் சில இருந்தன. அதைத் தெரிந்து கொள்ளவிடாமல் இந்த அண்ணா குறுக்கிடுகிறாரே என்று எரிச்சல் அடைந்தாள்.

" மிஸ்டர் சுந்தரம், இதோ பாருங்கள். அநாவசியமாகச் சுற்றி வளைத்துப் பேசிக்கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. எங்கள் அண்ணாவுக்கு வனஜா மீது சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. அவளுடன் வாழ அவர் பிரியப்படவில்லை. சட்டப்படி விடுதலை கோரப்போகிறார். உங்களுக்கு வனஜாவிடம் அதிக அக்கறை இருக்கிறது. வனஜா அபூர்வ மலர் என்கிறீர்கள். என் அண்ணனுக்குச் சாதாரண மலர் போதும்; அபூர்வ மலர் வேண்டாம். அவர் வாழ்வு இப்படியே கருகிப் போய்விடக்கூடாது. அவருக்கு இன்னோர் இடத்தில் பெண் பார்த்திருக்கிறோம். சட்டப்படி அந்தக் கல்யாணம் நடக்கவேண்டும் என்று விரும்புகிறோம். அதற்குத் தடையாக இந்த வனஜா இருக்கக் கூடாது. எனவே, நீங்கள் எங்களுக்கு ஓர் உதவி செய்ய வேண்டும்" என்று கூறி, சுந்தரத்தைத் திகைக்க வைத்தாள்.

"என்னது! நான் உங்களுக்கு உதவி செய்யவேண்டுமா?" என்றான் வியப்புடன்.

"ஆமாம்! வனஜாவிடமிருந்து ஒரு விடுதலைப் பத்திரம் வாங்கித் தர வேண்டும். அது கிடைத்தால், வழக்கு சுலபமாக முடிந்துவிடும்...... நீங்கள் சொன்னால், வனஜா கண்டிப்பாக இதைச் செய்வாள். பிறகு, உங்கள் நட்புக்கு யாதொரு இடையூறும் இருக்காது. தேவையானால், உங்கள் பழைய ஆசையையும் நீங்கள் நிறைவேற்றிக் கொள்ளலாம் ......"

சுந்தரம் 'டக்'கென்று எழுந்தான். "மிஸ் சுதா, ஒரு பெண் பேசும் பேச்சாக இல்லை இது. என்னை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. உங்கள் அண்ணனும் நீங்களும் நினைப்பது போல், நான் வனஜாவை அடையவேண்டும் என்று விரும்பியிருந்தால், இப்படிப்பட்ட சூழ்நிலைகளை வளரவைப்பதிலேயே அதிக கவனம் செலுத்தியிருப்பேன். வனஜாவும் ஜெயராமனும் பிரிவதற்கான காரியங்களில்தான் ஈடுபட்டிருப்பேன். அதைவிட்டு, அவர்கள் இணையவேண்டும் என்று நான் விரும்புவதிலிருந்தே, என் மனம் உங்களுக்குப் புரிந்திருக்கவேண்டும்.... உங்கள் மனம் மிகவும் விகாரமாகியிருக்கிறது, முதலில் அதை மாற்றிக்கொள்ளுங்கள். வனஜாவைப் போன்ற ஒரு வைரத்தின் தன்மையைப் புரிந்துகொள்ள, உங்களுக்கு இன்னும் பக்குவம் வரவில்லை! விபரீதம் நிகழாமல் தடுக்க முடியுமா என்று பார்க்க வந்தேன்; விபரீதத்தை நிகழ்த்தியே தீருவது என்று நீங்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நான் என்ன செய்ய முடியும்? போகிறேன், போகுமுன் ஒன்று சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். வனஜாவை இழந்தால், நஷ்டம் உங்களுடையதுதான் ..." என்று ஆவேசமாகக் கூறிவிட்டு, விறுவிறுவென்று வெளியேறினான்.

அவன் போகும் வேகத்தையே பார்த்துக்கொண்டிருந்த ஜெயராமன், "உம, டெவில் கோடிங் ஸ்க்ரிப்சர்ஸ் .... " என்றான். பிறகு, தங்கையைப் பார்த்து, "நீ எதற்கு அவனிடம் அநாவசியமாகக் கேள்விகள் கேட்டுக்கொண்டிருந்தாய்? ஒரே வார்த்தையில் நான் அவனைத் திருப்பி அனுப்பத் தீர்மானித்திருந்தேன். நீதான் அர்த்தமில்லாமல் ....." என்றான்.

"நோ அண்ணா, நோ! நீ இன்னும் உன் தங்கையைப் புரிந்துகொள்ளவில்லை. நான் எதையும் அநாவசியமாகச் செய்யமாட்டேன். அவரிடம் வேண்டுமென்றேதான் கேள்விகள் கேட்டேன். இப்போது உன் வழக்குக்கு அவர் ஒரு சாட்சி. ஆமாம் அண்ணா, ஹி ஈஸ் எ விட்ன்ஸ் .... அவர் என்னென்ன பேசியிருக்கிறார் என்று கேட்கிறாயா?" என்று கூறி, சுந்தரம் அமர்ந்திருந்த நாற்காலிக்குக் முன்னால் இருந்த 'டீபாயை' நகர்த்தினாள். அதன் கீழே, ஒரு 'போர்டபிள் டேப் ரிகார்டர்' இருந்தது. அதை எடுத்து இயக்கினாள். அத்தனை நேரம் அங்கே நடந்த சம்பாஷணைகளை அந்த ரிகார்டர் பதிவு செய்திருந்தது.

ஜெயராமனின் கண்கள் வியப்பால் விரிந்தன.

"இது எதற்கு, சுதா?" என்றான்.

"ஒருவேளை உன் வக்கீலுக்குத் தேவைப்படலாம்" என்று கூறிக்கொண்டே, டேப்ரிக்கார்டரை நிறுத்தினாள் சுதா.

அப்போது .....

அந்த வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அதனின்றும் ஸ்ரீதரும், அவன் தங்கை பவானியும் இறங்கினர்.

"வாருங்கள் .... வாம்மா, பவானி ... வலதுகாலை எடுத்துவைத்து உள்ளே நடந்து வா ....." என்று கூறி, அவர்களை வரவேற்றாள் சுதா.

## 22

தூண்டில் புழுவினைப் போல் - வெளியே
சுடர் விளக்கினைப் போல்

பாரதியார்

மரப்பலகைகளால் தடுத்து அறையாக்கப்பட்டிருக்கும் ஓர் அறையில் படுத்து, உறக்கம் வராமல் உச்சி முகட்டை வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தாள் வனஜா. அடுத்த அறையில் இருந்த பெண்களின் அரட்டை சத்தம்! சினிமாவைப் பற்றியும், சினிமா நடிகர்களைப் பற்றியும் அந்தப் பெண்கள் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அவர்களில் யாரையும் வனஜாவுக்கு இன்னும் சரியாகத் தெரியாது.

வனஜாவைப் பொருத்தவரை அது முற்றிலும் புதிய சூழ்நிலை. ஓரளவுக்கு அவளுக்கு ஒத்துக்கொள்ளாத சூழ் நிலையுங்கூட. ஏதோ சத்திரத்தில் வாழ்வதுபோல்தான் இருந்தது அவளுக்கு. கட்டுப்பாடுகள், சட்டதிட்டங்கள் வேறு. இரவு ஏழரைக்குள் வந்துவிடவேண்டும்; பெற்றோர் அனுமதிஇன்றி யாரும்யாரையும் பார்க்கவரக்கூடாது என்றெல்லாம்

விதிமுறைகள் அமைத்திருந்தார்கள். இதெல்லாங்கூட வனஜாவுக்குப் பெரிதாகத் தெரியவில்லை. தாயின் கைமணக்கக் கிடைக்கும் சாதமும், தந்தையின் அன்பானபேச்சும் இல்லாமல் போய்விட்டதே என்று ஏங்கினாள். கணவனின் கனிவுமொழி அவள் கவனத்தில் வரவில்லை. அதுதான் இல்லையென்றாகிவிட்டதே. அதை நினது என்ன பயன்?

" 'உண்மைக்கு என்றும் அழிவில்லை' என்ற பழமொழிக்கு என்ன கதை வருகிறது ..... "

"கடற்கரைக்கு வருகிற வெளிநாட்டுக்காரர்களின் காமிராவைத் திருடப்போகிறவர்களை அந்தப் பையன் பிடித்துவிடுகிறான். சத்தியமாக நடந்துகொண்டு, உண்மையை நிலை நாட்டுகிறான். நன்றாக இருக்கிறது ....."

" ஏ.பி.என். எப்போதும் சின்னச் சின்ன கதைகளை வைத்துப் படம் எடுக்கிறார். இந்தப் படமும் அப்படித்தான்...." - அடுத்த அறையில் இரண்டு பெண்கள் 'வா ராஜா வா' என்ற படத்தைப்பற்றி விமர்சனம் செய்து கொண்டிருந்தார்கள். 'அதிலும் உண்மையைப்பற்றி வருகிறதே!' என்று எண்ணி மகிழ்ந்தாள் வனஜா.

"மிசஸ் வனஜா ..உங்களைத் தேடி, மிஸ்டர் சுந்தரம் என்பவர் வந்திருக்கிறார் " யாரோ ஒரு பெண் குரல் கொடுத்தாள்.

படுத்திருந்த வனஜா மௌனமாக எழுந்து அமர்ந்து கொண்டாள்.

'இவர் எதற்கு இன்றும் வந்திருக்கிறார்?' என்று யோசித்தாள். முதல்நாள் இரவும் சுந்தரம் வந்து போனான். ஏதோ சாக்குச் சொல்லி அவனைப் பார்க்காமலேயே அனுப்பிவிட்டால் வனஜா. இன்று என்ன செய்வது?

அறையிலிருந்து வெளியே வந்தாள். வெளியிலிருந்த ஒரு பெஞ்சில் சுந்தரம் அமர்ந்திருந்தான். கைக் கடிகாரத்தைப் பார்த்தபடியே அவனை நெருங்கிய வனஜா, "இந்த ஹாஸ்டலில் சில சட்டதிட்டங்கள் உண்டு. நீங்கள் என்னை இங்கே வந்து பார்க்க முயல்வது சரியில்லை .... நாளைக்கு ஆபீசில் சந்திக்கலாம் ..." என்றாள். அவள் குரலில் இருந்த கடுமை, சுந்தரத்தைச் சற்றுத் திகைக்க வைத்தது.

"ஓ! ஐயாம் ஸாரி ...." என்று நெகிழ்ச்சியாகக் கூறிவிட்டு, வாயிர்புறம் நகர்ந்தான்.

அநாவசியமாக அவன் மனத்தை நோகச் செய்துவிட்டோமே என்ற தவிப்பில், "இருங்கள், நானும் உங்களுடன் பஸ் ஸ்டாண்ட்வரை வருகிறேன் ..." என்றுகூறி, தன் அறைக்குச்சென்று, செருப்பை மாட்டிக்கொண்டு வந்தாள் வனஜா.

இருவரும் மௌனமாக நடந்தனர். பஸ் ஸ்டாண்டை அடைந்து சுந்தரதிற்கான பஸ் வரும்வரை அவனுடன் காத்திருந்தாள் வனஜா. அவனிடம் எதுவும் பேசவில்லை. அவன் ஏதோ ஒரு விஷயம் பேச விரும்புகிறான் எனபது அவளுக்குத் தெரியும். பார்க்கப் போனால் அவளும் அவனுடன் அதுபற்றிப் பேச விரும்பினாள். இருப்பினும் 'ஏதோ ஒன்று' அவனுடன் பேசவிடாமல் தடுத்ததுக் கொண்டிருந்தது.

அவர்கள் இருவரும் பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்தபோது, அவர்களைக் கடந்து சென்ற ஒரு பியட் காரை, அவர்கள் கவனிக்கவில்லைதான். ஆனால், காரில் இருந்த சுதா, அவர்களைக் கவனித்துவிட்டாள். ஸ்ரீதருடன் அவள் டாக்டர் வீட்டுக்குப் போய்த் திரும்பிக்கொண்டிருந்தாள். தற்செயலாக பஸ் ஸ்டாண்டைப் பார்த்தவள், "ஸ்லோ டவுன், ஸ்ரீதர் ..... கொஞ்சம்மேதுவாகப் போங்கள் ..... " என்று கூறி, திரும்பி, காரின் பின் கண்ணாடி வழியாக நன்றாகப் பார்த்தாள். 'ஆமாம், சந்தேகமில்லை. அவர்களேதான் ..... ஐஸி..... இப்படிப் பகிரங்கமாகவே நடுத்தெருவில் நிற்கும் அளவுக்குத் துணிந்து விட்டார்களா!' என்று மனத்திற்குள் பொருமினாள்.

"வாட் ஈஸ் தி மாட்டர்..... யாராவது தெரிந்தவர்களா? ரிவர்சில் போகட்டுமா? 'லிப்ட்' கொடுக்கலாமா?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

"ரொம்பவும் தெரிந்தவர்கள்தான். ஆனால், நாம் 'லிப்ட்' கொடுக்க முயன்றால் அவர்கள் நிலை தர்ம சங்கடமாகிவிடும் ..... நாம் போகலாம்" என்று ஸ்ரீதரிடம் சொன்னாள் சுதா. அவள் என்ன சொல்கிறாள் எனபது புரியாமல், அது என்ன என்றும் கேட்க்காமல், மேலே வண்டியைச் செலுத்தினான் ஸ்ரீதர். அவனைப் பொறுத்தவரை எந்த விஷயத்தையும் துருவித்துருவிக் கேட்க்க மாட்டான். சொல்லவேண்டும் என்று தோன்றினால் அவர்களாகச் சொல்வார்கள் என்ற சித்தாந்தம் அவனுடையது. பிறருடைய அந்தரங்கத்தில் அவன் தலையிடவே மாட்டான்.

'ஓ, தினமும் இப்படிச் சந்திக்கிறார்களா! இங்கேதான் அவள் தாங்கும் ஹாஸ்டல் இருக்கிறது ..... சரி .... சரி... நாளைக்கும் இந்த நேரத்திற்கு நாம் வரவேண்டும். தனியாக வரக்கூடாது. அண்ணனையும்

அழைத்துவரவேண்டும்.அவனும் இந்தக் காட்சியைக் கண்ணால் பார்க்கட்டும். ஏதோ பத்தினிபோல் வேஷம் போடுகிறாளே, அந்த வேஷம் கலையட்டும் என்றெல்லாம் எண்ணியபடி ஸ்ரீதருடன் காரில் பயணம் செய்தாள் சுதா.

ஸ்ரீதரின் காரையோ, அந்தக் காரில் சுதா சென்றதையோ கவனிக்காத வனஜாவும், சுந்தரமும் பஸ் வரும்வரை மௌனமாக நின்றிருந்தனர். பஸ் வந்ததும் சுந்தரம் ஏறிச் சென்றான். வனஜா மீண்டும் ஹாஸ்டலை நோக்கி இயந்தரகதியில் நடந்தாள். ஆமாம்! இவள் இப்போது ஓர் இயந்திரம்போல்தான் ஆகிவிட்டாள்.யாருடனும் எதுவும் பேசுவதில்லை. கொஞ்சநஞ்சம் பேசிக்கொண்டிருந்த சுந்தரத்துடனும் பேசுவதை நிறுத்திவிட்டாள். அதுதான், சுந்தரத்தை வேதனைக்குள்ளாகி இருந்தது.

'என்ன, எது?' என்று கேட்டுப் போக ஹாஸ்டலுக்கு வந்தான் சுந்தரம். ஆனால், அங்கேயும் அவள் முகம் கொடுத்துப் பேசவில்லை.

மறுநாள் மாலை.

'ஹாண்ட்லூம்' என்று கண்டக்டர் குரல் கொடுத்தார். பஸ் நின்றது. வனஜா கீழே இறங்கினாள்.

அங்கே -

அவளை எதிர்நோக்கிக் காத்திருந்தவன்போல், சுந்தரம் நின்றுகொண்டிருந்தான்.

அவனைக் கண்டதும், வனஜாவின் முகத்தில் சிறிது திகைப்புத் தோன்றியது. ஆனால், அவள் தவிர்க்க விரும்பிய சந்திப்பு நிச்சியமாகிவிட்டது. சோதனைபோல், பஸ் ஸ்டாண்டில் சுந்தரம் மட்டுமே நின்றான். இனி தப்பிக்க முடியாது என்பதை உணர்ந்துகொண்டாள் வனஜா.

அவனை ஒதுக்க வேண்டும் என்று வனஜா நினைக்கவில்லை. சந்திப்பதைத் தவிர்க்க வேண்டும் என்றுதான் அவள் விரும்பினாளே தவிர, சந்திக்கவேண்டிய சூழ்நிலை ஏற்பட்ட பின், அதற்காக மறைந்து ஒதுங்கிவிடும் எண்ணம் அவளுக்கு எழவில்லை.

எனவே, அவன் அருகில் சென்றாள். சுந்தரம் அவளைப் பார்த்து, கம்மிய குரலில் " மிஸஸ் வனஜா" என்றான்.

"ஹலோ சுந்தரம்" என்றாள் வனஜா, அவளுடைய அந்த ஹலோவில் துடிப்பான உற்சாகமோ,அல்லது உற்சாகம் இருப்பதுபோல் காட்டும் போலித்தனமோ இல்லை.

" மிஸஸ் வனஜா, நாம் கடந்த இரண்டு நாட்களாகச் சந்திக்கவே இல்லை... ஹாஸ்டலுக்கும் வரக்கூடாது என்று சொல்லிவிட்டீர்கள். அதனால்தான் இங்கே உங்களைச் சந்திக்கலாம் என்று வந்தேன்" என்றான் சுந்தரம்.

" ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? ஆபீசில் சந்திக்கிறோம்...." என்றாள் வனஜா.

"அந்தப் பொதுவான சந்திப்பை நான் சொல்லவில்லை ..... நாம் மனம் விட்டுப் பேசவில்லை ....." என்றான்.

வனஜா பதில் சொல்லவில்லை.

" அப்படி நாம் பேசக்கூடிய சந்தர்ப்பங்களை நீங்கள் வேண்டுமென்றே தவிர்த்திருக்கிறீர்கள்."

வனஜா இதற்கும் பதில் சொல்லவில்லை.

" உங்களுக்கு ஒன்று நினைவுபடுத்த விரும்புகிறேன், மிஸஸ் வனஜா .... " என்று வேதனைக் குரலில் ஆரம்பித்தான் சுந்தரம்.

'என்ன' என்று கேட்பதுபோல், அவனைப் பார்த்தாள் வனஜா.

" உங்களுக்குத் திருமணமானதும், அதிலும் குறிப்பாக என்னால் உங்கள் வாழ்க்கை குழப்பமடைந்தது, நான் தங்கள் நட்பிலிருந்து என்னை விலக்கிக்கொள்ள விரும்பியதுண்டு. அதைத் தங்களிடமே தெரிவித்தும் இருக்கிறேன், இல்லையா?"

வனஜாவின் புன்னகையில் லேசாகக் கனிவு தெரிந்தது. இருப்பினும், அவள் பதில் சொல்லவில்லை.

"அந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள்தான், 'மிஸ்டர் சுந்தரம், நம் நட்புக்கும் என் சொந்த வாழ்க்கையின் லாப நஷ்டங்களுக்கும் சம்பந்தமில்லை' என்று கூறி, நம் நட்பைத் தழைக்கச் செய்தீர்கள். அன்று நீங்கள் சொன்ன வார்த்தைகளை - இன்று நீங்கள் காரணமில்லாமல் நம் நட்பை அலட்சியப்படுத்திக் கொண்டிருக்கும்போது - நினைவு படுத்த விரும்புகிறேன்..... " என்றான் சுந்தரம் கம்மிய குரலில்.

இப்போதுதான் வனஜா பதில் சொன்னாள் : "மிஸ்டர் சுந்தரம், நம் நட்பை நான் அலட்சியப்படுத்திவிட்டதாக நீங்கள் கூறுவது தவறு. கடந்த இரண்டு நாட்களாக நான் நம் நட்பைப்பற்றியே தான் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன் ...."

"அப்படிச் சிந்திப்பவர்கள் ஏன் என்னுடன் பேசவே விரும்பாதவர்போல் ஒதுங்கவேண்டும்."

"அது நம் நட்பைப் பற்றிய சிந்தனையில் ஏற்பட்ட குழப்பந்தான். என் குழப்பம் தீர்ந்து, நானே ஒரு முடிவுக்கு வரும்வரை, எதைப்பற்றியும் உங்களிடம் பேசத் தோன்றாததலாயே சச்ந்திப்பைத் தவிர்த்துவிடுகிறேன் ...."

"அப்படி என்ன குழப்பம் உங்களுக்கு?"

"நீங்கள் என் உண்மையான நண்பராக இருக்கிறீர்களா என்பதே குழப்பமாக இருக்கிறது ....." என்று, ஒரு வார்த்தையைத் தூக்கிப் போட்டாள் வனஜா.

"என்னைப் பார்த்தா அப்படிக் கேட்டீர்கள்?" என்று பதட்டத்துடன் கேட்டான் சுந்தரம்.

"ஐயாம் ஸாரி, சுந்தரம். அப்படிக் கேட்க வேண்டிய மாதிரி உங்கள் போக்கு அமைந்துவிட்டது."

"என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?"

" என்னைப் பொருத்தவரை நம் நட்பின் அஸ்திவாரம் என்ன தெரியுமா? நாம் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்துகொண்டிருக்கிறோம் என்பதுதான். ஆனால், நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லையோ என்றுதான் இப்போது சந்தேகப்படுகிறேன்.

"ஏன் அப்படி?"

" நீங்கள் ஏன் கணவரை சந்த்தித்தீர்கள் அல்லவா?"

சுந்தரம் ஒரு கணம் திகைத்தான்.

"தயங்காதீர்கள். நான் தீர விசாரித்த பிறகேதான் கேட்க்கிறேன். சொல்லுங்கள்... " என்று அவனை வற்புறுத்தினாள் வனஜா.

"ஆமாம், சந்தித்தேன்" என்று பதில் சொன்னான் சுந்தரம் மெதுவாக.

"ஏன் விஷயமாகப் பேசினீர்கள் அல்லவா?"

"யெஸ் ..... பேசினேன் .... "

"அதுவும் நான் வேண்டாம் என்று கேட்டுகொண்ட பிறகும் ..... "

சுந்தரம் சட்டென்று பதில் சொல்ல முடியாமல் தவித்தான்.

வனஜாவின் குரல் சற்று உயர்ந்தது.

"மிஸ்டர் சுந்தரம் நான் ஒவ்வோர் உறவுக்கும் ஓர் எல்லை நிர்ணயித்து, அத்தை அந்த எல்லைக்குள் அடக்கி, உண்மை என்ற விளக்கை மட்டும் கையில் ஏந்தி வாழ்பவள். நமது நட்பு என்ற உறவைக்கூட அப்படி ஓர் எல்லைக்குட் படுத்தி, அதனுள் என் உயிருக்குயிரான கணவரையே நுழையவிடாமல் தடுத்து வைத்திருப்பவள். நம் நட்பைவிட, ஏன் கணவருக்கும் எனக்கும் உள்ள உறவு நெருக்கமானது, உயர்வானது, ஏன் தெயவீகமானதுங்கூட. அந்த தெய்வீக உறவுக்கு நான் எவ்வளவு புனிதமான வேலி கட்டி வைத்திருப்பேன் என்று நீங்கள் யோசித்திருக்க வேண்டுமே .... அப்படிப்பட்ட புனிதமான கோட்டிற்குள்ளிருக்கும் எங்கள் உறவுக்குள், அந்நியரான நீங்கள் தலையிட என்ன நியாயம் உண்டு? அப்படி அநாவசியமாக, அதிகப்பிரசங்கித்தனமாக நீங்கள் தலையிடவேண்டாம் என்று நான் தடுத்தும், நீங்கள் கேட்கவில்லை. நம் நட்பில் குறுக்கிட்டார் என்ற காரணதிற்காகவே ஏன் கணவரை விட்டு விலகி வந்த எனக்கு, எங்கள் புனித உறவில் தலையிட்ட உங்களை நண்பர் என்ற அந்தஸ்திலிருந்து ஒதுக்கிவிடுவது பிரமாதமான காரியமா என்ன? என் தந்தையையே எங்கள் தாம்பத்யத்தில் தலையிடக்கூடாது என்று தடுத்தவள் நான். மிஸ்டர் சுந்தரம், ஐயாம் ஸாரி, உங்களிடம் இவ்வளவு கடுமையாக நான் பேசும் சூழ்நிலையை நீங்கள்தான் உருவாக்கிவிட்டீர்கள். நீங்கள் செய்த காரியத்தை என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை ...." என்று பொரிந்து தள்ளினாள் வனஜா.

அவள் பேசப் பேச, சுந்தரத்தின் முகம் மாறியது. அவன் உதடுகள் துடித்தன.

" மிஸஸ் வனஜா ஜெயராமன் .... " என்று அழுத்தமாகக் கூறி, அவளுடைய பேச்சை அடக்கினான். திகைத்துப்போய் அவனை ஏறிட்டுப் பார்த்தாள் வனஜா.

"மிஸஸ் வனஜா ஜெயராமன், நான் இப்போது சுந்தரம் என்ற நண்பனாக உங்களிடம் பேசவில்லை. நீங்கள் குறிப்பிட்டதுபோல், உங்கள் தாம்பத்ய உறவுக்கு அந்நியனாகவே பேசுகிறேன். எப்படி உங்கள் தாம்பத்ய உறவுக்குள் அந்நியனாகத் தலையிட்டேனோ, அப்படியே இப்போதும் ஓர் அந்நியன் என்ற நிலையில் என்னை வைத்தே ஒரு கேள்வி கேட்கிறேன்" என்றான்.

" என்ன? என்றாள் வனஜா.

" உங்கள் உறவு எல்லைக்குள் நான் நுழையக்கூடாது என்று இப்போது சொல்கிறீர்கள். நான் எப்போதோ அந்த எல்லைக்குள் நுழைந்திருப்பது உங்களுக்குத் தெரியாதா?"

" என்ன சொல்கிறீர்கள், மிஸ்டர் சுந்தரம்?"

"மிஸஸ் வனஜா ஜெயராமன்! உங்கள் கணவரின் சந்தேகத்தின் மூலமாக, நான் ஏற்கெனவே உங்கள் உறவுக்குள் புகுந்து ஒரு பிரச்சனையாக உங்கள் இருவருக்கிடையே இருப்பது தெரியவில்லையா? என் பெயரை அநாவசியமாக உங்கள் உறவுக்கிடையே உங்கள் கணவரே இழுத்துப் போட்டுக்கொண்டிருப்பதால்தானே, இவ்வளவு குழப்பமும் கஷ்டமும்? உங்கள் தாம்பத்ய உறவை நீங்கள் புனிதமாக வைத்துக் காவல் காத்துக்கொண்டிருக்கலாம். ஆனால், சந்தேகம் என்ற பின்கதவு வழியாக உங்கள் கணவர் என்னை உள்ளே இழுத்து விட்டுவிட்டாரே! ஏற்கெனவே உங்களுக்கிடையில் நின்றுகொண்டிருக்கும் என்னைப் பார்த்து, 'நீ உள்ளே நுழையாதே ..... ' என்கிறீர்களே, அதற்கு ஏதாவது அர்த்தம் உண்டா? நீங்கள் என்னவோ, நான் உங்கள் உறவுக்கு வெளியே இருப்பதாகப் பிரமையில் இருக்கிறீர்கள். உண்மையில் நான் குடும்ப வாழ்க்கைக்குள் அகப்பட்டுக்கொண்டு, சிறைவாசம் செய்கிறேன். பழி சுமந்து நிற்கிறேன். அந்தப் பழியிலிருந்து தப்பித்து வெளியே வரவேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருக்காதா? இருக்கக் கூடாதா? இதில், உங்கள் வாழ்க்கை மட்டும் பாதிக்கப்படவில்லை; என் சுய கௌரவமும் பாதிக்கப்படுகிறது. அதை மீட்க, நான் உங்கள் கணவரின் சந்தேகத்தைப் போக்கத்தான் வேண்டும். உண்மை உங்களைத் தேடிவரும் என்று நீங்கள் பொறுமையாகக் காத்திருக்கலாம். அது உங்கள் விஷயம். ஆனால், நான் அப்படி 'நம் மேல் இருக்கிற பழி தீருகிற காலத்தில் தீரட்டும். அதுவரை அவமானத்தைச் சுமந்துகொண்டு சுய மரியாதைக்கும் இழுக்கும் தேடிக்கொண்டு பொறுமையாக இருக்கவேண்டும்' என்று என்ன அவசியம்? என்மேல் இருக்கும் பழியைத் துடைக்க நான் முந்திக் கொண்டு நடவடிக்கை எடுத்தேன். என்மீது சந்தேகப்பட்டிருப்பவரிடமே போய், 'என் மீது பழி சுமத்துவது தப்பு' என்று வாதாடினேன். என் களங்கத்தைப் போக்கிக்கொள்ள நான் செய்த காரியத்தை, நீங்கள் எப்படித் தவறு என்று சொல்ல முடியும்? என்றான்.

வனஜா பிரமிப்புடன் சில விநாடிகள் நின்றாள். பிறகு, மனம் கனிய, ஐயாம் ஸாரி, சுந்தரம். இந்த நோக்கில் நான் இந்த விஷயத்தைப் பார்க்கவே இல்லை" என்றாள்.

சுந்தரம் புன்னகைதான். பிறகு, "டஸன்ட் மேட்டர்." உங்களுக்கு நிலைமையைப் புரியவைக்க நானும் சற்றுக் கடுமையாகப் பேசவேண்டியதாகிவிட்டது. அதற்காக மன்னித்துக்கொள்ளுங்கள். மிஸஸ் வனஜா, உங்களிடம் ஒரு விஷயம் சொல்கிறேன். அதை நீங்கள் ஒரு நண்பன் சொல்லும் விஷயமாக எடுத்த்துக்கொண்டாலும் சரி, அந்நியன் என்ற முறையில் எடுத்த்துக்கொண்டாலும் சரி! உலகத்தில் எல்லோரும் பொய்மையில் உழன்றுகொண்டு, பொய்யான பிரமையில் வாழ்ந்துகொண்டிருக்கும்போது, நீங்கள் மட்டும் அர்த்தமில்லாமல் அசட்டுப் பிடிவாதத்தில் அடங்கி இருப்பது தவறு. விளக்கைக் குடத்திற்குள் வைப்பதில் பிரயோஜனமில்லை. அதை எடுத்துக்கொண்டுபோய் இருட்டறையில் வைக்க வேண்டும். அப்போதுதான் இருள் மறையும். அதைப்போல் உண்மையை உங்களுக்குள் வைத்துக்கொண்டிருப்பதில் லாபமில்லை. அதை பொய்மைக்கு முன்னால் கொண்டுபோய் வைக்கவேண்டும். பொய்யான பிரமையில் இருக்கும் உங்கள் கணவர் முன்பாக, உங்கள் மனத்தில் இருக்கும் உண்மை என்ற விளக்கை வைக்கவேண்டும். அப்போதுதான் பொய்மை அகலும் - இதுதான் உலகின் போக்கு. உலகின் போக்கை அனுசரித்து நாம் வாழாவிட்டால், நாம் உலகின் பார்வையிலிருந்து ஒதுங்கிவிடுவோம். உங்களுக்கு அந்த நிலை வரக்கூடாது ன்பதே என் எண்ணம். நான் உங்கள் கணவரிடம் சொன்னதையே சொல்கிறேன். வெறும் வார்த்தைகளைவிட, அப்பழுக்கில்லாத வாழ்க்கையே முக்கியம். உங்கள் வாழ்க்கையை நீங்கள் பெறுவதற்காக, உங்கள் வார்த்தையை

மீறுவதுகூடச் சாதாரண விஷயந்தான். அதைவிட ஒரு படி மேலே சென்று, என் மனசையே மீறி ஒரு காரியம் செய்யலாமா என்று யோசித்துக்கொண்டிருக்கிறேன்..." என்றான் சுந்தரம்.

"மனசை மீறியா? அது என்ன காரியம்?" என்று கேட்டாள் வனஜா.

" அதை உங்களிடம் சொல்வதற்கான சமயம் வரவில்லை. வரும்போது சொல்கிறேன்" என்றான் சுந்தரம்.

வனஜா குழம்பி நின்றாள்.

அவனிடம் மேற்கொண்டு என்ன பேசுவது என்று புரியாமல் அவள் மௌனமாக நின்றுகொண்டிருந்தபோது, அவர்களை ஒட்டி ஒரு டாக்ஸி சென்றது. வனஜா அதைக் கவனிக்கவில்லை. சுந்தரம் கவனித்தான்.

அந்த டாக்ஸியில் ....... சுதாவும் ஜெயராமனும் அமர்ந்திருந்தனர். பஸ் ஸ்டாண்டிலிருந்து சற்றுத் தள்ளி அந்த டாக்ஸி நின்றது. பின் ஸீட்டில் அமர்ந்திருந்த சுதா, ஜெயராமனிடம், "நன்றாகப் பார்த்துக்கொள் அவர்களை. இது தினசரி நடக்கும் நாடகம். நாலுபேர் பார்த்து நடக்கும் பஸ் ஸ்டாண்ட் காதல்! சே! ஒரு மானமுள்ளபெண் செய்யும் காரியமாஇது?" என்று எரிச்சலுடன் ஆங்கிலத்தில் கூறினால். டாக்ஸி டிரைவருக்குப் புரிந்துவிடக் கூடாதென்றுதான், ஆங்கிலத்தை நாடினாள் அவள்.

ஜெயராமனுக்கு அந்தக் காட்சியைக் காணவே பிடிக்கவில்லை.

டிரைவரை புறப்படச் சொன்னான். அந்த டாக்ஸியிலேயே நேராக வக்கீல் வீட்டிற்குச் சென்றான்.

**பி**யானோவின் இசை அந்த அறையை நிறைத்தது.தன்னை மறந்து, அந்த இசையில் ஒன்றிப்போனாள் பவானி. புகழ்பெற்ற ரஷ்ய பாலே நடனமான 'ஸ்வான் லேக்'கின் இசையை, அந்த ஆங்கிலோ - இந்தியப் பெண்மணி அற்புதமாக வாசித்துக்கொண்டிருந்தாள். அதைக் கேட்டுக்கொண்டிருந்த பவானியின் நரம்புகள் எல்லாம் முறுக்கேறின. அவள் உடலில் ஏதோ பரவசம் பரவியது. சட்டென்று எழுந்திருந்து, பியானோ அருகே சென்று, அந்த ஆங்கிலோ - இந்தியப் பெண்மணியை நகரச் சொல்லிவிட்டு, பியானோவின் முன்னால் தான் அமர்ந்தாள். அவள் கைவிரல்கள், பியானோ கட்டைத் தடவின. ஏதோ பூர்வ ஜன்மத்தில் அதனுடன் உறவாடியது போன்ற பிரமை ஏற்பட்டது அவளுக்கு. மெதுவாகத் தடவிக் கொடுத்தாள். பிறகு, அந்தக் கட்டைகளை அழுத்தினாள். நாதம் பிறந்தது. உற்சாகம் பீறிட்டது. அவள் பியானோ வாசிக்க ஆரம்பித்து விட்டாள். அவளுக்குப் பிடித்தமான பல ட்யூன்கள் ஒவ்வொன்றாக வெளிப்பட்டன. அவள் செவிகளை அவளால் நம்பவே முடியவில்லை. அரை மணிநேரம் அவள் வாசித்தாள். வாசித்து முடித்தபோது, அந்த அறையில், அவளுக்கு வழக்கமாக பியானோ வாசிக்கும் ஆங்கிலோ-இந்தியப் பெண்ணைக் காணவில்லை.

மாறாக -

" பிரமாதம் ...ஒண்டர்புல் ..என்சான்டிங் மியூஸிக்" என்றுசொல்லியபடி, அவளை நெருங்கினான் ஜெயராமன்.

சற்றும் எதிர்பார்க்காமல் ஓர் ஆடவன் தன்னை நெருங்குவதைக் கண்டதும், மிரண்டுபோய் 'வீல்' என்று அலறினாள் பவானி.

அந்தக் குரல் கேட்டு, கீழே ஹாலில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்த சுதாவும், அந்த ஆங்கிலோ - இந்தியப் பெண்ணும் அவசர அவசரமாக மாடிக்குச் சென்றனர்.

## 23

கனவு கண்டதிலே ஒருநாள் கண்ணுக்குத் தோன்றாமல்
இனம் விளங்கவில்லை எவனோ என்னகந் தொட்டுவிட்டான்

பாரதியார்

"ஐயாம் வெரி ஸாரி" என்று, மெல்லிய குரலில் ஜெயராமனைப் பார்த்துச் சொன்னபடி, படுக்கையில் நிமிர்ந்து அமர்ந்தாள் பவானி.

"பரவாயில்லை ..... இப்போது எப்படி இருக்கிறாய்? ஆர் யூ பெட்டர்?" என்று கேட்டபடி, அவள் படுக்கையில் ஓர் ஓரமாக அமர்ந்தான் ஜெயராமன்.

"மச் பெட்டர் ..... அது என்னவோ தெரியவில்லை. நேற்று மாலை நீங்கள் பாராட்டியவாறு என்னை நெருங்கிய போது, ஏதோ ஒரு பயம் - எப்போதோ என் மனத்தின் அடித்தளத்தில் ஆழப் பதிந்துவிட்ட ஒரு பயம், பீறிட்டுக்கொண்டு கிளம்பியது. அதனால்தான் அப்படி என்னைமீறி வீறிட்டுக் கத்திவிட்டேன். அதன் பிறகு என்ன ஆயிற்று?" என்று கேட்டாள் பவானி.

கொஞ்ச நேரம் மயக்கமாக இருந்தாய். டாக்டர்கள் வந்தார்கள். பயப்படும்படியாக ஒன்றும் இல்லை என்று சொன்னார்கள். ஓய்வுதான் தேவை என்றார்கள். இரவெல்லாம் நன்றாகத் தூங்கினாய் அல்லவா? ......" - பரிவுடன் கேட்டபடி, அவள் நெற்றியில் கை வைத்துப் பார்த்தான் ஜெயராமன்.

அந்த ஆடவனின் ஸ்பரிசம், பவானிக்குப் பிடித்திருந்தது.

" நன்றாகத் தூங்கினேன். நீங்கள்?" என்று, ஏதோ அர்த்தமில்லாமல் கேட்டாள் பவானி.

எனக்கு என்ன கேடு? ஜாலியாகக் குரட்டைவிட்டுக் கொண்டு தூங்கினேன். காலையில் எழுந்தவுடன், முதலில் உன்னைப் பார்க்கவேண்டும் என்று தோன்றியது. அதனால்தான் உடனே வந்துவிட்டேன். இன்னும் சுதா வீட்டில்தான் இருக்கிறாள். அவளிடங்கூடச் சொல்லிக்கொள்ளவில்லை.ஏதோ உன்னைப் பார்க்க வேண்டும்போல் தோன்றியது. உடனே வந்துவிட்டேன் ...." என்று கூறி, தனது வெண்பற்கள் தெரியச் சிரித்தான் ஜெயராமன்.அந்தச் சிரிப்பு பவானிக்குப் பிடித்திருந்தது.

"தாங்க்யூ .... ! இந்த நோயாளியின்மீதுகூட இவ்வளவு அக்கறை செலுத்துபவர் ஒருவர் இருக்கிறார் என்றால், அது நான் செய்த பாக்கியம்தான்" என்றாள்.

"வாட் ஈஸ் திஸ் ...! உன்னை நோயாளி என்று யார் சொன்னது?"

"யார் சொல்லவில்லை. டாக்டர், நர்ஸ், சைகாட்ரிஸ்ட் .... அண்ணா .... எல்லோருந்தான் சொல்கிறார்களே" என்றாள் பவானி புன்முறுவலுடன்.

"அப்படிப் பார்க்கப்போனால் எல்லோருமே நோயாளிகள்தான்! அர்த்தமில்லாமல் அதைப்பற்றி நினைத்துக்கொண்டிராதே! இப்போது நீ சாதாரணப் பெண்...... மற்ற எல்லாப் பெண்களையும் போல்தான் நீயும் ..... அதனால் ..... " என்று கூறி, மேலே என்ன சொல்வது என்று புரியாமல் நிறுத்தினான் ஜெயராமன்.

"அதனால் ....... கன்டின்யூ ........ மேலே சொல்லுங்கள் ... " என்று அவனைத் தூண்டினாள் பவானி.

"அதனால் நீயும் எல்லாக் காரியங்களையும் செய்யலாம் என்று சொல்லவந்தேன்...... " - அசடு வழிந்தான் ஜெயராமன்.

"எல்லாக் காரியங்களையும் என்றால் ......"

'போ, பவானி ...... ஏதோ பேச்சுக்குச் சொன்னால் அதைப் போய்ப் பிடித்துக்கொண்டு ...... " - பெண்போல் சிணுங்கினான் ஜெயராமன்.

பவானி அவனையே உற்றுப் பார்த்தாள். பிறகு, "மிஸ்டர் ஜெயராமன் " என்று ஆரம்பித்தாள்.

"என்னை வெறும் ஜெயராமன் என்று கூப்பிட்டாலே போதும் ....." என்றான் ஜெயராமன்.

" தாங்க்யூ! அப்படியே கூபிடிகிறேன். அதுவுங்கூட ரொம்ப பார்மலாகத்தான் இருக்கிறது. உங்களை நான் ஜெயம் என்று கூப்பிடட்டுமா? நோ .... நோ... அது ஏதோ பெண்ணின் பெயர் போல் இருக்கிறது. ஐ வில் கால் யூ ராம் ..... ஓகே! ....... " என்றாள்.

"ஐ லைக் இட் ...... ராம் என்றே கூப்பிடு .... " என்று அதை ஆமோதித்தான் ஜெயராமன்.

"ராம், உங்களைப் பற்றி நான் எதுவுமே தெரிந்து கொள்ள வில்லையே ... சுதாவின் பிரதர் என்றுதான் தெரியும். மற்ற விவரங்கள் எதுவும் தெரியாதே ..... " என்றாள்.

" இன்னும் என்ன வேண்டும் ..... ? ரிசர்வ் பாங்கியில் வேலை செய்கிறேன். சங்கீதப் பிரியன் ..... கிரிக்கெட் பிடிக்கும் ..... பட்டோடியிடம் மிகவும் பற்று உண்டு ..... அப்புறம் ..... அவ்வளவுதான்" என்றான்.

"அவ்வளவுதானா? இன்னொரு முக்கியமான விஷயத்தைப்பற்றிச் சொல்லவில்லையே ..... உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள்?"

அவனுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா என்பதைத் தெரிந்துகொள்ள, சாமர்த்தியமாக இப்படி ஒரு கேள்வியைப் போட்டாள் பவானி.

"குழந்தைகளா? சரிதான் ...." என்றான் ஜெயராமன் விரக்திச் சிரிப்புடன்.

"அப்படியானால் நீங்களும் இன்னும் ஸ்ரீதர் அண்ணா மாதிரி பிரம்மசாரியாகவே இருக்கிறீர்களா?" என்று சற்றே ஆர்வத்துடன் கேட்டாள் பவானி.

அவளுக்கு உடனே பதில் சொல்லவில்லை ஜெயராமன். அவளையே உற்றுப் பார்த்தான். பிறகு, "இப்போது அந்த நிலைதான் ....." என்றான்.

"ஐ டோண்ட் அண்டர்ஸ்டாண்ட் யூ .... நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள் பவானி.

"போகப் போக புரியும். இப்போதே எல்லாவற்றையும் பேசி முடித்துவிட வேண்டுமா என்ன? இன்று மாலை நாம் எங்காவது வெளியே போகலாமா?" என்று கேட்டு, பேச்சை மாற்றினான்.

"மாலைதானா? இப்போதே உங்களுடன் டெஸ்ட் மாட்ச் பார்க்கப் போகலாம் என்று நினைத்தேன். நீங்கள் என்னடாவென்றால் ...." - குழைந்தாள் பவானி.

" ஓ! அப்படியா பிளான்! நான் லீவ் போடவில்லையே .... இதை நேற்றே சொல்லி இருக்கக்கூடாதா?"

" நேற்றுத்தான் மயக்கமாகிவிட்டேனே .... மயக்கத்தில் எப்படிச் சொல்வது?" என்றவள், "ஆபீஸ் முக்கியம். போய் வாருங்கள் ..... " என்றாள்.

"நீ வேறு யாருடனாவது போயேன் ...."

" நோ! ஐ வில் கோ வித் யூ ஒன்லி .... உங்களுடன்தான் நான் போவேன் .." - குழந்தைபோல் முகத்தை வைத்துக்கொண்டு சொன்னாள் பவானி.

" ஏன் அப்படி?"

"ஏனோ அப்படித்தான் .... "

"குட் .... நாளை நாம் இருவரும் போவோம் .... "

" நாம் இருவர் மட்டும்தான் ... "

" அதென்ன அப்படி ...."

" அப்படித்தான் ... "

அதன் பிறகு அவர்கள் இருவரும் பேசிக்கொள்ளவில்லை. பவானியின் பார்வை ஏதேதோ பேசியது.

அந்தப் 'பார்வையை'கண்டு, ஜெயராமன்கூடச் சற்று துணுக்குற்றான். சற்றுப் பொறுத்து, "சரி, நான் புறப்படட்டுமா?" என்று எழுந்தான்.

"போகிறீர்களா? சரி ..எனக்கு ஜுரம் இருக்கிறதா என்று இன்னும் ஒருதரம் பாருங்களேன் .. " என்றாள் பவானி.

புருவம் சுருங்க அவளைப் பார்த்த ஜெயராமன், அவள் நெற்றியை மீண்டும் ஒருமுறை தொட்டுப் பார்த்தான். இந்த முறை அது லேசாகச் சுட்டது. பவானி, அவன் கைமீது தன் கையை வைத்து அழுத்தினாள். மெல்லத் தன் கையை விடுவித்துக்கொண்டு, அந்த அறையைவிட்டு வெளியேறினான் ஜெயராமன்.

அப்போது .......

அதுவரை அறைவாசலில் அவர்கள் அறியாமல் நின்றிருந்த ஸ்ரீதர், சட்டென்று நகர்ந்து, தன்னை மறைத்துக்கொண்டான். ஜெயராமன் படியில் இறங்கிக் கீழே போன பிறகு, தங்கையின் அறைக்குள், ஏதோ அப்போதுதான் நுழைபவன் போல் நுழைந்து, "ஹலோ, பவானி ..... ஹௌ ஆர் யூ?" என்று கேட்டவண்ணம், அவளை நெருங்கினான்.

"ஐ ஆம் ஆல் ரைட், அண்ணா ..... " என்றால் பவானி. அவள் குரலில் ஒரு தெளிவும், தெம்பும் காணப்பட்டது.

" குட் .... இன்றைக்கு டெஸ்ட்மாட்ச் இருக்கிறது. வருகிறாயா?" என்று வேண்டுமென்றே கேட்டான் ஸ்ரீதர்.

" இல்லை அண்ணா! நாளைக்குப் போகிறேன்."

" இன்றைக்கு நம் பிளேயர்ஸ் பாட்டிங் .... அதைப் பார்க்க உனக்குப் பிடிக்குமே ... "

" நாளைக்குத்தான் பேதியின் பௌலிங் இருக்கும். நாளைக்கே போய்க்கொள்கிறேன். மிஸ்டர் ஜெயராமனும் நாளைக்குதான் வருகிறேன் என்றார் ..." என்றாள்.

"ஓ! ஐ ஸி " என்றவன், சில கண நேர மௌனத்திற்குப் பிறகு, "பவானி, டூ யூ லைக் மிஸ்டர் ஜெயராமன்? .." என்று கேட்டான்.

ஏன் இந்தக் கேள்வி?' என்பதுபோல் ஒரு கணம் அண்ணனைப் பார்த்த பவானி, "அவரை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறதண்ணா..... அவரும் உன்னைப்போல் பிரம்மசாரிதானாம் ......" என்றாள்.

இதற்கு ஸ்ரீதர் பதில் ஏதும் சொல்லவில்லை.

" சரி .... நான் புறப்படுகிறேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் சுதா வந்துவிடுவாள். ஷி வில் டேக் கேர் ஆஃப் யூ ...." என்றான்.

" இனிமேல் என்னை நானே பார்த்துக்கொள்ள என்று தோன்றுகிறதண்ணா... " என்று கூறி, அண்ணனுக்கு விடை கொடுத்தாள் பவானி.

மாடிப்படியில் இறங்கும்போது, ஸ்ரீதரின் மனம் சஞ்சலப்பட்டது.

"ஜெயராமன் ஏன் தன்னை பிரம்மசாரி என்று சொல்லிக்கொள்ள வேண்டும்? இந்த அப்பாவிப் பெண்ணை அவன் ஏன் ஏமாற்ற வேண்டும்? இந்தப் பெண், அவனிடம் மனததைப் பறிகொடுத்துவிட்டாள் போல் தெரிகிறதே. போயும் போயும் மணமான ஒருவனிடமா இவள் ஈடுபாடு கொள்ளவேண்டும்.... ஐயோ, ஜெயராமனின் மனைவியின் காதில் இந்தச் சேதி விழுந்தால் ..... சே! சே! இதை நாம் தடுத்தே ஆகவேண்டும். இதை வளரவிடக்கூடாது. இன்று மாலையே இதற்கு ஒரு முடிவு காணவேண்டும் .....' இந்த முடிவுக்கு வந்த பிறகுதான், ஸ்ரீதரின் மனம் கொஞ்சம் நிம்மதி அடைந்தது.

**மே**ஜைமீது 'செஸ்' காயின்கள் இறைந்து கிடந்தன. செஸ் போர்டை துடைத்துக்கொண்டே, ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த சுதா, போர்டிகோவில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டதும் எழுந்திருந்து வாயிற்புறம் நோக்கி நடந்தாள்.

டையைத் தளர்த்தியபடி உள்ளே நுழைந்த ஸ்ரீதர், குட்ஈவினிங் சுதா, என்றபடி, ஹாலில் இருந்த நாற்காலியில் வந்தமர்ந்தான்.

"என்ன இன்றைக்கு லேட்?" என்று கேட்டுக்கொண்டே, அவன் எதிரில் அமர்ந்தாள் சுதா. இதோ பாருங்கள், இது எவ்வளவு நேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறது தெரியுமா?" என்று கூறி, செஸ் போர்டைக் காண்பித்தாள்.

"ஒன் மினிட்" என்று கூறி உள்ளே சென்றவன், இரண்டு நிமிஷத்தில், மணக்க மணக்க வந்து சேர்ந்தான்.

"என்ன இது! ஆபீஸ் ட்ரஸ்ஸைக் கழற்றாமல்" என்றாள் சுதா.

"எட்டு மணிக்கு ஒரு என்கேஜ்மென்ட். கன்னிமாரா ஓட்டலில் ஓர் அமெரிக்கனைப் பார்க்கவேண்டும். இப்போது கழற்றி மீண்டும் மாட்டிக்கொள்வானேன் என்றுதான் ....." என்று கூறிக்கொண்டே, 'செஸ்' போர்டில் காயின்களை அடுக்கினான். பிறகு, "சுதா, பவானி எப்படி இருக்கிறாள்" என்று கேட்டான்.

அவளுக்கென்ன? ஜாலியாக இருக்கிறாள்," என்று உற்சாகத்துடன் பதில் சொன்னாள் சுதா.

சட்டென்று சுதாவை நிமிர்ந்து பார்த்தான் ஸ்ரீதர். பிறகு, "நீ என்ன சொல்கிறாய்?" என்றான்.

"அவள் பழைய பவானி இல்லை, இப்போது காதல் வயப்பட்ட பவானி. அதனால்தான் ஜாலியாக இருக்கிறாள் என்று சொன்னேன் .... " என்றாள் பெருமையுடன்.

"சுதா ....." என்று சற்றே கடுமையான குரலில் அழைத்தான் ஸ்ரீதர்.

அந்தக் கடுமையின் பொருள் புரியாமல், அவனை ஏறிட்டுப் பார்த்தாள் சுதா.

"இதோபார் சுதா, என் தங்கையின் வாழ்வு மறுபடியும் தழைக்க வேண்டும் என்பதில் என்னைவிட யாரும் அதிக ஆசைப்பட முடியாது. ஆனால், அவள் வாழ்வு தழைக்கும் அதே நேரத்தில் இன்னொரு பெண்ணின் வாழ்வு கருகிவிடக்கூடாது. அதை என்னால் தாங்கிக் கொள்ள முடியாது..... " என்றான்.

"நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை" என்றாள் சுதா.

"இன்று காலைதான் கவனித்தேன். ஜெயராமனும் பவானியும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டேன். அவர்கள் நட்பு காதல் என்ற எல்லையைத் தொட்டுக்கொண்டிருக்கிறது. அதை அனுமதிப்பது தவறு. ஒரு மணமான வாலிபனுடன் என் தங்கையைப் பழகவிடுவது விஷ விளையாட்டு. அது கண்ணியக் குறைவான காரியமும் கூட ......." என்றான்.

"ஐ டோண்ட் அக்ரீ வித் யூ .... என் அண்ணனின் மணவாழ்க்கை முடிந்துபோன விஷயம். எனவே, அதை ஒரு காரணம் காட்டிப் பேசவேண்டாம்..... வேறு ஏதாவது காரணம் இருந்தால் சொல்லுங்கள் ..... " என்றாள் சுதா.

"என் சகோதரிக்கு அன்பும் காதலும் தானமாக, கருணையின் பேரில் வழங்கப்படுகிறது. அது எனக்குப் பிடிக்கவில்லை.... அதோடு இப்படிப் பழகுவதனால் பவானிக்கு மறுபடியும் ஏதாவது .... " என்றான்.

"நீங்கள் தவறாக நினைக்கிறீர்கள், ஸ்ரீதர். என் அண்ணன் அப்படிப்பட்டவர் அல்ல. பவானி என் மேற்பார்வையில் இருக்கிறாள். அதனால் தவறாக எதுவும் நடந்துவிடாது. இன்னொன்றும் சொல்கிறேன், நீங்கள் நினைப்பதுபோல், அன்பும் காதலும் தானமாக அவளுக்கு அளிக்கப்பட்டாலும், அதிலும் தவறில்லை என்பேன் நான். இப்போது பவானி கருணையைப் பெறும் நிலையில் இருக்கிறாள். வாழ்க்கையில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சமயத்தில் பிறரிடமிருந்து கருணையைப் பெறும் நிர்பந்தத்தில் இருக்கிறார்கள். அது அகௌரவமானால், 'கருணை செய்' என்ற வார்த்தையே அர்த்தமற்றதாகிவிடும் ..... எனவே, அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்து விடாதீர்கள். விடியாதா விடியாதா என்று நான் காத்திருக்கிறேன். இப்போது வந்து குட்டையைக் போட்டுக் குழப்பி விடாதீர்கள். இப்போதுதான் கொஞ்சம் கொஞ்சமாகப் பழைய பவானி தென்படுகிறாள். தர்மம், கண்ணியம் என்று எதாவது சொல்லி, அதைக் கலைத்து விடாதீர்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன் ..... " என்றாள் சுதா. ,

ஸ்ரீதர் சிறிது நேரம் மௌனம் சாதித்தான். பிறகு," நீ என்ன சொன்னாலும், உன் மன்னி வனஜாவுக்குத் துரோகம் செய்யும் தர்மக் குறைவான ஒரு செயலை நான் அனுமதிக்கமாட்டேன்" என்றான்.

அப்போது .........

"துரோகிகளுக்கு துரோகம் செய்வது தர்மக்குறைவான செயலே இல்லை ......" என்று கூறிக்கொண்டே, அவர்களை நெருங்கினான் ஜெயராமன்.

"அடடே! அண்ணா, நீ எப்போது வந்தாய்?" என்று அசடு வழியக் கேட்டுக்கொண்டே எழுந்தாள் சுதா.

"முக்கியமான விஷயங்களெல்லாம் கேட்கும் அளவுக்கு முன்னாலேயே வந்துவிட்டேன். பேச்சு சுவாரஸ்யத்தில் நான் ஒருவன் இருப்பது கூட உங்கள் கண்களுக்குப்படவில்லை. அதுவும் ஒருவிதத்தில் நல்லதுதானே ." என்றவன், ஸ்ரீதரைப் பார்த்து, "மிஸ்டர் ஸ்ரீதர், நீங்கள் பயப்படும்படி எதுவும் நடந்து விடாது. உங்கள் தங்கைமீது எனக்கும் பரிவும், பாசமும்தான் மிகுந்திருக்கிறது. அவளை எனக்குப் பிடித்திருக்கிறது. நீங்கள் நினைப்பதுபோல், என்னைப் பொருத்தவரை எதுவும் நடந்துவிடவில்லை. அதேசமயத்தில், அவள் நினைவில், அப்படி ஒரு மாற்றம் நிகழ்ந்திருப்பதும் எனக்குப் புரிகிறது. அவள் இப்போதுதான் தேறி வருகிறாள். அவளைத் தேற்றி மனுஷியாக்குவது நம் பொறுப்பு. இந்த நேரத்தில், நாம் தர்மம், கடமை, நேர்மை என்றெல்லாம் பேசி, ஒரு பெண்ணின் வாழ்வைப் பாழாக்கி விடக்கூடாது. என்மீது நம்பிக்கை வையுங்கள். அத்து மீறி எதுவும் நடந்துவிடாது ...." என்றான். .

"ஆமாம், ஸ்ரீதர். என்னுடைய அண்ணனைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். பயப்படவே வேண்டாம். இப்போது நம் நோக்கமெல்லாம், பவானி பழைய பவானியாக வேண்டும் என்பதுதான். அதற்கு இடைஞ்சலாக எதையும் செய்து விடாதீர்கள். பவானியையும் அண்ணாவையும் இப்படியே பழகவிடுங்கள். நாளை நடக்கப் போவதை இன்றே நாம் ஏன் தீர்மானிக்க வேண்டும்.? அண்ணன் அந்த வனஜாவுடன் வாழப் போவதில்லை. இன்னொரு பெண்ணுடன்தான் வாழப்போகிறான். அந்த இன்னொருப் பெண் பவானியாக இருந்தால் என்ன தப்பு..... ? எல்லாவற்றையும் போகப்போக முடிவு செய்துகொள்வோம்" என்றாள்.

ஸ்ரீதர் தலை குனிந்து அமர்ந்திருந்தான். அவனால் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை. "தங்கையின் நிலையும் சரியாகவேண்டும்; தர்மக் குறைவாக எதுவும் நடந்துவிடக் கூடாது' என்ற மனப் போராட்டத்தில் இருந்தான்.

அப்போது .........

" சார் ...... உங்களுக்குப் போன்" என்று பணியாள் ஒருவன் வந்து அவனிடம் சொன்னான்.

டெலிபோன் இருக்கும் அறைபக்கம் சென்று, ரிஸீவரை எடுத்து, "ஹலோ, ஸ்ரீதர் ஹியர்" என்றான்.

"நமஸ்காரம், என் பெயர் வனஜா. உங்களை நான் நேரில் சந்திக்க விரும்புகிறேன். எப்போது வரலாம்?" என்று மறுபக்கத்திலிருந்து குரல் வந்ததும், ஸ்ரீதர் திகைத்தான்.

"வனஜா? எந்த வனஜா? .... வந்து ......."

"யெஸ் ...... உங்கள் ஸ்டெனோ சுதாவின் மன்னி வனஜாதான் ...... என் சொந்த விஷயமாக உங்களிடம் கொஞ்சம் பேசவேண்டும். ஐந்து அல்லது பத்து நிமிடத்திற்கு மேல் எடுத்துக்கொள்ளமாட்டேன். மறுக்காமல் அனுமதி கொடுக்கவேண்டும். இப்போதே வேண்டுமானாலும் வருகிறேன்" - அவள் பேசிக்கொண்டிருக்கும்போதே, ஸ்ரீதர் ஒரு முடிவுக்கு வந்து விட்டான்.

"யெஸ் ... இப்போதே நீங்கள் வரலாம். உங்களுக்காக நான் காத்திருக்கிறேன் ..." என்று கூறி ரிஸீவரைக் கீழே வைத்துவிட்டு, ஹால் பக்கம் நடந்தான்.

# 24

சாத்திரம் கோடிவைத்தான் - அவை
தம்மினும் உயர்ந்தோர் ஞானம் வைத்தான்.

பாரதியார்

**வ**னஜா வரப்போவதைச் சொல்லலாமா வேண்டாமா என்று யோசித்துக்கொண்டே மீண்டும் ஹாலுக்குள் நுழைந்த ஸ்ரீதரைப் பார்த்து, "நாங்கள் கொஞ்சம் வெளியே போய்வருகிறோம். நீங்கள் அனுமதி அளித்தால் பவானியையும் அழைத்துக்கொண்டு போய் வருகிறோம்" என்றாள் சுதா.

நீங்கள் அனுமதி அளித்தால் ' என்ற அந்த வார்த்தையைக் கேட்டு,சற்றே துணுக்குற்ற ஸ்ரீதர், சுதாவைப் பார்த்து, "தாராளமாக பவானியையும் அழைத்துக்கொண்டு போங்கள். நான் என் மனத்தில் பட்டதை ஒளிவு மறைவின்றிச் சொன்னேன், அவ்வளவுதான்.அதற்காக இப்படி 'பார்மலா'கப் பேசவேண்டும் என்று அவசியமில்லை. இனி அப்படித் தான் பேசப்போகிறோம் என்று நீங்கள்சொன்னால்,அதற்கும் 'சரி' என்றுதான் நானும் சொல்ல வேண்டிவரும்" என்றான்.

தன் வார்த்தை ஸ்ரீதரைப் புண்படுத்திவிட்டது என்பதைப் புரிந்துகொண்ட சுதா, "ஐயாம் ஸாரி, ஸ்ரீதர்! நாங்கள் 'பார்மலா'க அப்படிக் கேட்கவில்லை. இன்டர் நேஷனல் பிலிம் பெஸ்டிவல் படத்திற்கு டிக்கெட் வாங்கி யிருக்கிறேன், வருகிறாயா என்று அண்ணா கேட்டார். பவானிக்கும் சேர்த்தே வாங்கி இருப்பதாகச் சொன்னார். அந்த மாதிரிப் படங்களுக்குப் பவானியை அழைத்துப் போகத்தான் உங்கள் அனுமதி கேட்டோம்" என்று விளக்கம் சொன்னாள் சுதா.

ஸ்ரீதர் அதை ஏற்றுக்கொள்ளும் 'மூடி'ல் இல்லை. அப்போது, அவன் மனமெல்லாம் எதற்காக வனஜா தன்னைப் பார்க்க வரப்போகிறாள் என்பதிலேயே இருந்தது.

"ஓ, கே, போய்வாருங்கள் ....." என்று அவர்களுக்கு விடை கொடுத்துவிட்டு, தன் அறைக்குள் சென்றான். அங்கிருந்தபடியே, ஏதோ ஓர் ஓட்டலுக்கு டெலிபோன் செய்து, தனது அடுத்த எங்கேஜ்மெண்டை ஒரு மணி நேரம் தள்ளி வைத்துக்கொண்டான்.பிறகு, பேப்பரில் சற்று கவனம் செலுத்தினான். அவன் மனமெல்லாம் சற்றுப் பொருத்து வரப்போகும் வனஜாவின் மீதே இருந்தது.

என்னதான் சுதாவும், ஜெயராமனும் அடித்துக் கூறியபோதிலும், அவனுக்கென்னவோ பவானி - ஜெயராமன் பழக்கம் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அந்தப் பழக்கத்தின் மூலம் பட்டுப்போய்க் கொண்டிருக்கும் தன் தங்கையின் வாழ்வு தழைக்க வழி இருக்கிறது என்றாலும், அது இப்படியா தழைக்கவேண்டும் என்று எண்ணி மருகினான். 'ஒரு பெண்ணின் சாபம் மிகவும் பொல்லாதது, அது வேற, தன் தங்கையை வாட்டும்' என்றெண்ணி, எப்படியாவது கொஞ்சம் கொஞ்சமாக இதைத் தடுத்துவிட வேண்டும் என்று தனக்குள் உறுதி செய்துகொண்டான்.

மீண்டும் அவன் ஹாலுக்குள் நுழைந்தபோது மாடியிலிருந்து பவானியும் மற்றவர்களும் இறங்கி வந்துகொண்டிருந்தார்கள்.

"அண்ணா .... " என்று உற்சாக மிகுதியுடன் அழைத்தவண்ணம், ஸ்ரீதரின் அருகில் ஓடி வந்தாள் பவானி.

தங்கையின் கைகளைப் பற்றியபடி அவளையே அன்புடன் பார்த்த ஸ்ரீதர், "படத்திற்குப் போகிறாயா, அம்மா .குட் ..... ஏதாவது சண்டைப்படமாக இருந்தால் கண்களை மூடிக்கொண்டுவிடு. பார்க்காதே " என்று, தமையனுக்குரிய வாத்சல்யத்துடன் கூறினான் ஸ்ரீதர்.

"பயப்படாதே, அண்ணா, இப்போது நான் ரொம்பவும் மாறிவிட்டேன். என் மாற்றம் எனக்கே புருகிறது. இப்படி என்னை மாற்றியவர் யார் தெரியுமா?" என்று கேட்டு, ஜெயராமன் பக்கம் பார்வையைச் செலுத்தினாள் பவானி.

"ஐ நோ .... நான் செய்ய வேண்டிய காரியத்தை அவர் செய்திருக்கிறார் .... அவருக்கு நீ மிகவும் கடமைப் பட்டிருக்கிறாய் ..." என்றான் ஸ்ரீதர் புன்முறுவலுடன்.

"இதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன், அண்ணா ..." என்று சிணுங்கினாள் பவானி.

"ஏன்?"

"பின் என்ன? உன்னையும் அவரையும் இணைத்துப் பேசுகிறாய் .... எனக்கு ஒரே ஒரு அண்ணாதான். அந்த அண்ணாவுக்கு இணையாக வேறு யாரும் கிடையாது. அதனால் 'என்னைப்போல் அவர்' என்று நீ சொல்வதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன் ... " என்றாள்.

ஜெயராமனை 'அண்ணன்' ஸ்தானத்தில் வைத்து நீ பேசாதே என்றுதான் தங்கை மறைமுகமாகச் சொல்கிறாளோ என்று எண்ணினான் ஸ்ரீதர். ஆனால், அவள் அதைச் சொன்ன தோரணையில், அந்தப் பொருள் இருப்பதாக அவனுக்குப் படவில்லை.

"சரியம்மா, ஐ அண்டர்ஸ்டாண்ட் யூ .... " என்றவன், கடிகாரத்தைப் பார்த்து, "இட் ஈஸ் கெட்டிங் லேட் .... மவுண்ட்ரோட் டிராபிக் வேறு இருக்கிறது... புறப்படுங்கள் ..." என்று அவர்களைத் துரிதப்படுத்தினான். அவர்கள் மூவரும் கிளம்பிச் செல்வதையும் போர்டிகோவில் நின்று பார்த்துவிட்டு, மௌனமாக உள்ளே திரும்பினான்.

ஹாலில் அமைதி நிலவியது. அவன் மனத்திலும் ஏதோ ஒரு தெளிவு பிறந்தது. வரப்போகும் பெண்ணிடம் எப்படிப் பேசவேண்டும் எனபது குறித்து, தன் மனத்திற்குள் ஒரு திட்டம் வகுத்துக்கொண்டான்.

"முதலில் அவளைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். ஒருவேளை உண்மையிலேயே அவள் 'ஒரு மாதிரி'யானவள்தானா என்பதையும் அறிந்துகொள்வோம். பிறகு, கொஞ்சம் கொஞ்சமாக அவளை மடக்குவோம். அவள் தவறான பாதையில் சென்று கொண்டிருந்தால், அவளைத் திருத்தி வழிக்குக்கொண்டு வருவோம். புத்திமதி சொல்வோம். முடிந்தால், பிரிந்த ஜோடியைச் சேர்த்தே வைப்போம்.!"

'ட்ரிங் ....'

அழைப்பு மணியின் ஓசை அவன் சிந்தனைக் கலைத்தது. திரும்பி வாயிற்புறம் பார்த்தான். அடக்கமே உருவாக, போர்த்திய தலைப்புடன் வனஜா அங்கே நின்றுகொண்டிருந்தாள். சட்டென்று எழுந்திருந்து, வாயிற்பக்கம் நடந்துசென்று, "வாருங்கள் ... கமான் .... கமான் ..." என்று அவளை வரவேற்றான் ஸ்ரீதர்.

வனஜா தலைகுனிந்து அவனைப் பின்தொடர்ந்தாள். ஹாலில் சோபாவைக் காட்டி, "அமருங்கள்" என்றான் ஸ்ரீதர். வனஜா சுற்றும்முற்றும் பார்த்துத் தயங்கினாள். அவள் தயக்கத்தைப் புரிந்துகொண்ட ஸ்ரீதர், "இங்கு யாரும் இல்லை. யாரும் வரமாட்டார்கள். சொந்த விஷயங்கள் பேச உகந்த இடம் இது ..." என்றான். பிறகே, சோபாவின் முன்பகுதியில், பட்டும்படாமலும் அமர்ந்துகொண்டாள் வனஜா.

அவளையே தீட்சண்யமாக ஒரு முறை பார்த்தான் ஸ்ரீதர். அந்த முகத்தை உற்றுக் கவனித்தான். அதில் தெரியும் பாவங்களைப் படம் எடுப்பதுபோல் பார்த்தான்.

அதில் தெரிந்தது என்ன?

சோகமா? - வருத்தமா?

அதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. பிரபல ஓவியன் பிகாஸோவின் 'மோனோலிஸா' படம்போல், ஒரு புதிராகத் தோற்றமளித்தாள் வனஜா.

'இந்தப் பெண்ணா தவறான பாதையில் போகிறாள்? தவறு என்ற சொல்கூட இவள் பாதையில் வராது போலிருக்கிறதே ...'

இப்படித்தான் ஸ்ரீதரால் எண்ண முடிந்தது.

விநாடிகள் கடந்து நிமிஷங்களாகி, அதுவும் கடந்துகொண்டிருந்தது. மௌனம் அங்கே ஆட்சி செலுத்தியது.

கடைசியில் அந்த மௌனத்தை ஸ்ரீதர்தான் கலைத்தான்:

"காப்பி சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டான் அவன்.

"வேண்டாம், இப்போதுதான் சாப்பிட்டேன் ...." என்றாள் வனஜா.

"உங்கள் ஹாஸ்டலில் காப்பி நன்றாக இருக்காதே ..."

இதைக் கேட்டுச் சட்டென்று தலைநிமிர்ந்து பார்த்தாள் வனஜா.

"அது எப்படி எனக்குத் தெரியும் என்று கேட்கிறீர்களா? என்னிடம் பணி புரியும் ஒருத்தி சில காலம் அங்கே இருந்தாள். அவள் சொல்லி இருக்கிறாள் ...." என்றவன், "யார் அங்கே ... ? என்றான். பணியாள் ஓடி வர, அவனிடம், "நல்ல ஸ்பெஷல் காப்பி ..... சீக்கிரம்" என்று உத்தரவு கொடுத்துவிட்டு, "ஹௌ ஈஸ் மிஸ்டர் சுந்தரம்?" என்று, வெடிகுண்டைத் தூக்கிப் போடுவதைப்போல ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டான்.

வனஜா மீண்டும் தலைநிமிர்ந்து ஸ்ரீதரைப் பார்த்தாள். அவன் கேள்வியின் பொருள் எண்ண என்பதைப் புரிந்து கொள்பவள் போல், அவனை ஊடுருவிப் பார்த்தாள்.

"ஏன், ஏதாவது கேட்கக்கூடாத கேள்வியைக் கேட்டுவிட்டேனா என்ன? ஏன் என்னை அப்படித் திகைப்போடு பார்க்கிறீர்கள்?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

"என்னைப் பொறுத்தவரை அது கேட்கக்கூடாத கேள்வி அல்ல ..... ஒரு வேளை, ஏதேனும் உள் அர்த்தம் வைத்துக் கொண்டு அப்படிக் கேட்கிறீர்களோ என்றுதான் பார்த்தேன் ..." என்றாள் வனஜா.

" நோ.... நிச்சயமாக இல்லை, மிசஸ் வனஜா. என்னை நீங்கள் நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும். நான் எதையும் மூடிமறைத்துப் பேசமாட்டேன். நேரிடையாகத்தான் பேசுவேன். மிஸ்டர் சுந்தரம் உங்கள் நெருங்கிய நண்பர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதனால்தான் அந்தக் கேள்வியைக் கேட்டேன் ... " என்றவன், ஒரு விநாடி இடைவெளிவிட்டு, "யெஸ் உங்கள் கணவரைப் பற்றியோ, அவர் சகோதரியைப் பற்றியோ விசாரித்திருக்கலாம். ஆனால், அவர்கள் சௌக்கியமாக இருக்கிறார்கள் என்று எனக்கு நன்றாகத் தெரியும். எதற்காக வீண் உபசார வார்த்தைகள் என்றுதான், சுந்தரத்தைப் பற்றிக் கேட்டேன். ஏன், கேட்டது தவறா?" என்றான்.

"நிச்சயமாக இல்லை. உற்ற நண்பர்கள் சௌக்கியமாக இருக்கிறார்களா என்று கேட்பதில் தவறேதும் இல்லை ஏதாவது உள்நோக்கத்துடன் கேட்டால்தான் தவறு. மிஸ்டர் சுந்தரம் சௌக்கியமாக இருக்கிறார்" என்றாள் உறுதியான குரலில்.

"சந்தோஷம் ..... நீங்கள் ஏதாவது குறிப்பான விஷயம் பற்றிப் பேச வந்திருக்கிறீர்களா" என்று அடுத்த கேள்வியைக் கேட்டான் ஸ்ரீதர்.

"ஆமாம்! என் சொந்த விஷயம் பற்றிப் பேச வந்திருக்கிறேன். என்னுடைய விவாகரத்து விஷயம் பற்றி உங்களுடன் விவாதிக்க வந்திருக்கிறேன் ...." என்றாள்.

அவளுடைய இந்த நேரிடைப் பேச்சு, ஸ்ரீதரைக்கூட கொஞ்சம் திடுக்கிட வைத்தது.

"ஆமாம் சார் .... என் கணவர் என்னிடமிருந்து பிரிய விரும்புகிறார். ஏனோ என்னை அவர் விரும்பவில்லை. அதற்கு அவர் கூறும் காரணங்களை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. ஆனால், அவர் என்னை விரும்பவில்லை என்பது என்னவோ உண்மை! அதற்காகச் சிரமப்பட்டு, கோர்ட், வழக்கு என்றெல்லாம் பாடுபடுகிறார். வழக்காடி அவர் இதைப் பெற முடியாது. சட்டம் ரொம்பவும் சிக்கலாக இருக்கிறது. விவாக பந்தத்திலிருந்து விடுதலை பெற, நீதிமன்றம் அவருக்கு உதவி செய்யாது. அதனால், நானே அந்த உதவியைச் செய்யத் தீர்மானித்துவிட்டேன். அது பற்றி உங்களிடம் பேசிப் போகத்தான் வந்திருக்கிறேன் ..."

"என்னிடமா?" - குழப்பத்துடன் கேட்டான் ஸ்ரீதர்.

"ஆமாம்! நான் ஏதோ ஒழுக்கக்குறைவாக நடந்து கொண்டுவிட்டதாகவும், அதனால் அவரிடமிருந்து பிரிய விரும்புவதாகவும் எண்ணிவிடாதீர்கள். என் கணவரின் விருப்பத்தை நிறைவேற்றவே நான் இதைச் செய்கிறேன். அவர் மகிழ்ச்சிக்காக நான் இந்தத் தியாகம் செய்கிறேன் ... "

"புதுமையாக இருக்கிறதம்மா, உங்கள் பேச்சு .... கணவனுடன் வாழத்தான் ஒரு பெண் தியாகம் செய்வாள். நீங்கள் அந்த வாழ்க்கையைத் துறக்கத் தியாகம் செய்கிறேன் என்கிறீர்களே!"

"சார் .... நான் இப்படிப் பேசுவதற்காக என்னை மன்னித்துவிடுங்கள். கணவரின் சந்தோஷத்திற்காக இதைவிடப் பெரிய தியாகங்களைச் செய்துள்ள பெண்களைப் பற்றி நம் புராணங்களில் நீங்கள் படித்ததில்லையா? அவருக்கு என்னுடன் வாழப் பிரியமில்லை. அதனால் நான் ஒதுங்கிக்கொள்கிறேன். அப்படி ஒதுங்குவதால் நான் அவருடன் கொண்ட பந்தம் போய்விடுமா என்ன? உறவுப்படி இல்லாவிட்டாலும், ஓர் உரிமைப்படி அவர் என் கணவர்தான்! அவரிடமிருந்து பிரிந்தாலும் நான் அவருடன் மனத்தால் வாழ்வேன். ஏன், என்னைப்போல் எத்தனையோ பெண்கள் நம் நாட்டில் மனத்தால் வாழ்கிறார்கள். திருப்தியான வாழ்க்கை எனபது மனத்தால் ஏற்படக் கூடியது. அந்த முறையில், நான் மிகவும் மனத் திருப்தியுடன் வாழ்வேன். நான் என் கணவரை, அவருடைய திருப்திக்காகவே விட்டுக் கொடுக்கிறேன்.... அவர் மகிழ்சிக்காகவே நான் இந்தத் தியாகத்தைச் செய்கிறேன். இதைவிட மகிழ்ச்சி எனக்கு வேறு எனன சார் இருக்க முடியும்? என்று கேட்டாள்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? அவர் மகிழ்ச்சிக்காக நீங்கள் விட்டுக் கொடுக்கிறீர்களா?"

"ஆமாம், என்னை விட்டுப் பிரிந்தால் அவர் மகிழ்ச்சியுடன் இருப்பார். அதன் பிறகு, அவர் வாழ்க்கையில் இன்னொரு பெண்ணுடன் இடம் கிடைக்கலாம். அதன் மூலம் அவர் மகிழ்ச்சி அடைவார் .... இல்லையா சார்?

"இருக்கலாம் ... அது சரி, இதையெல்லாம் நீங்கள் என்னிடம் ஏன் சொல்கிறீர்கள்?"

"அவர் மகிழ்ச்சி அடைய உங்களாலும் உதவமுடியும் என்பதால்தான் உங்களிடம் சொல்கிறேன் ...."

"நீங்கள் சொல்வது புரியவில்லையே!"

"புரியும்படி சொல்கிறேன். இப்போது கொஞ்ச நாளாக அவர் உங்கள் வீட்டிற்கு வந்துபோவதாகத் தெரிகிறது. உங்கள் தங்கையுடன் நெருங்கிப் பழகுவதாகவும் தெரிகிறது. உங்கள் தங்கையைப் பற்றி எனக்கும் கொஞ்சம் தெரியும், அவளுக்கு நல்வாழ்வு கிடைப்பதில் உங்களைப் போல் எனக்கும் அக்கறை உண்டு .... அதனால்தான் இது பற்றி உங்களிடம் பேச வந்தேன் ... "

"மிசஸ் ஜெயராமன் ...... நீங்கள் என்ன பேசுகிறீர்கள் என்று புரிந்துதான் பேசுகிறீர்களா? என் தங்கைக்கு யாரும் பிச்சை போடா வேண்டாம் .... ஐ டோன்ட் வான்ட் சாரிடி ..." என்று சற்று கடுமையான குரலில் சொன்னான் ஸ்ரீதர்.

நோ ... நோ ... இதை ஏன் நீங்கள் பிச்சை என்று எடுத்துக்கொள்கிறீர்கள்? என்னை விட்டுவிட்டு இன்னொரு பெண்ணை அடையப் போகிறார் என் கணவர். அந்த இன்னொரு பெண் உங்கள் தங்கையாக இருந்தாள் என்ன என்று கேட்கிறேன், இது தவறா?

இதே கேள்வியை சுதாவும் தன்னிடம் கேட்டது ஸ்ரீதருக்கு நினைவுக்கு வந்தது. 'இவர்கள் என்ன, கல்யாணத்தைப் பண்டமாற்று என்று நினைக்கிறார்களா ... " என்றுதான் அவனால் எண்ண முடிந்தது.

"அதாவது உங்கள் வாழ்க்கையை அழித்துக்கொண்டு, என் தங்கைக்கு வாழ்க்கை அளிக்கிறேன் என்கிறீர்கள், இல்லையா? என்று சற்று சூடாகக் கேட்டான்.

"அதை ஏன் அப்படி எடுத்துக் கொள்ளவேண்டும்? என் கணவரின் திருப்திக்காக நான் செய்யும் உபகாரம் என்று எடுத்துக்கொள்ளுங்களேன்..."

"இன்னொரு பெண்ணின் வாழ்க்கையின் அழிவின் மேல், என் சகோதரியின் வாழ்வு தழைக்க வேண்டாம்..."

"யூ ஆர் ராங், மிஸ்டர் ஸ்ரீதர். அந்த இன்னொருபெண் தன் வாழ்க்கையை விட்டுக் கொடுத்த பிறகு, அழிவு என்ற சொல்லுக்கு அங்கு இடமே இல்லை .... மீண்டும் சொல்கிறேன், உங்கள் தங்கை இல்லாவிட்டால், இன்னொருத்தி வரப்போகிறாள். நான் ஏன் இவ்வளவு பாடுபடுகிறேன் என்றால், இதில் உங்கள் தங்கையின் மகிழ்ச்சியோடு, அவர் தங்கையின் மகிழ்ச்சியும் இருக்கிறது என்பதால்தான். இதைவிட நான் இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டாம் என்று நினைக்கிறேன். சுதாவுக்கு வாழ்வு கிடக்க, முதலில் பவானிக்கு வாழ்வு கிடைத்தாக வேண்டும். பவானியை நீங்கள்

நினைப்பதுபோல் அவ்வளவு எளிதில் யாரும் ஏற்றுக்கொண்டுவிடமாட்டார்கள். தேவையானால் நானே அவளுக்குத் தாதியாக இருந்து, சில காலம் பணிவிடையும் செய்கிறேன் .... மிஸ்டர் ஸ்ரீதர் .... வீணாக என் யோசனையைப் புறக்கணிக்காதீர்கள் .... நான் எல்லோருடைய நன்மையையும் உத்தேசித்தே இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன்...... வாழ்க்கையில் நாம் நினைப்பது போல் எல்லாம் நடப்பதில்லை. ஆகவே, நடக்கும் விஷயங்களிலாவது, நன்மையைத் தேடிக்கொள்வோம்.... நீங்கள் தயவு செய்து அவரிடம் சொல்லி, அநாவசியமாக கோர்ட் கீர்ட் என்று அலையாமல், உங்கள் தங்கையை ஏற்றுக்கொள்ளச் சொல்லுங்கள். அவர் உங்கள் தங்கையை ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தால், நான் அதற்கான விடுதலைப் பத்திரத்தைத் தந்துவிடுகிறேன் .... அதன் பிறகு உங்கள் திருமணமும் நடைபெறும். இந்த விதத்திலாவது நான் சந்தோஷப் படக்கூடாதா? இதற்கு நீங்கள் உதவக் கூடாதா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டாள் வனஜா.

ஸ்ரீதருக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. குழம்பிப்போய் மௌனமாக அமர்ந்திருந்தான்.

அப்போது ....

" சார் ..... " என்று பணியாள் குரல் கொடுத்தான்.

"என்ன?" எனபது போல் நிமிர்ந்தான் ஸ்ரீதர்.

"உங்களைத் தேடி யாரோ சாமா ஐயராம் வந்திருக்கிறார் ..." என்று அவன் சொல்லிக்கொண்டிருக்கும் போதே ....

"நமஸ்காரம், நான்தான் தரகன் சாமா .... தெரிந்திருக்குமே ... கேள்விப்பட்டிருப்பீர்களே .... உங்கள் தங்கைக்கு வரன் தேடுவதாகக் கேள்விப்பட்டேன். ஒரு பஸ்ட் கிளாஸ் ஜாதகம் வந்திருக்கிறது, பார்க்கிறீர்களா? என்று சொல்லிக்கொண்டே ஸ்ரீதரின் முன்னால் வந்து அமர்ந்து கொண்டார், ஒரு காவிப் பர்காரப் பெரியவர்.

"நான் யாரிடமும் என் தங்கையின் கல்யாணத்தைப் பற்றிப் பேசவில்லையே .... " என்று ஸ்ரீதர் தயங்கியபடி சொல்லிக்கொண்டிருந்தபோது -

"சுபஸ்ய சீக்கிரம் என்பார்கள்,இதோ பாருங்கள். அயனான இடம் " என்று ஒரு ஜாதகத்தை ஸ்ரீதரிடம் நீட்டினார்.

அதை வாங்கி பிரித்துப் பார்த்தான் ஸ்ரீதர்.

அதன் மேல் சிரஞ்சீவி சுந்தரத்தின் ஜாதகம் என்று இருந்தது.

# 25

இன்பத்தை இனிதெனவும் - துன்பம்
இனிதில்லை யென்றுமவன் எண்ணுவதில்லை

பாரதியார்

**ஆ**டும் நாற்காலியில் ஆடிக்கொண்டு சுவாரசியமாக ஒரு புத்தகத்தில் ஆழ்ந்திருந்தாள் பவானி. அந்தப் புத்தகத்தை எப்படியாவது தேடிக் கண்டுபிடித்துப் படித்தாக வேண்டும் என்று பிடிவாதமாக இருந்தாள் அவள். கடைசியில் சுதா மூலமாகவே அந்தப் புத்தகத்தைப் பெற்றாள். அது கையில் கிடைத்ததிலிருந்து விடாமல் படித்துக்கொண்டிருந்தாள்.

'நமது செயல்களுக்கெல்லாம் மனோதத்துவ ரீதியாக சில அடிப்படைக் காரணங்கள் உண்டு. அந்த அடிப்படையைப் புரிந்துகொண்டால் நம் செயல்களைப் பற்றிக் குழப்பமே இருக்காது. சிக்மண்ட் பிராய்ட் இதைத் தனது புத்தகத்தில் மிகச் சிறப்பாக விளக்கி இருக்கிறான்' என்று ஜெயராமன் விளையாட்டாகச் சொன்னதுதான் காரணம், 'கொண்டு வா, பிராய்டை' என்று துடியாய்த் துடித்தாள் பவானி.

லைப்ரரியிலிருந்து சுதா அதைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டாள். புரிகிறதோ, புரியவில்லையோ , பவானி அப்போது அதை வெகு சுவாரஸ்யமாகப் படித்துக்கொண்டிருந்தாள்.

ஷூவின் சத்தம் ஒலிக்க ,படியேறி அறைக்குள் நுழைந்து, அவள் அருகில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு ஸ்ரீதர் அமர்ந்ததுகூடத் தெரியாமல், அந்தப் புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள் பவானி.

அது, ஸ்ரீதருக்கு மிகவும் வியப்பாய் இருந்தது. புத்தகத்தின் முதுகுப்புறத்தைப் பார்த்தான். 'ஓ, பிராய்டா .... இவளால் இதை எப்படிப் புரிந்துகொள்ள முடியும்' என்ற கவலையுடன் "என்ன பவானி, படிக்கிறாயா?" என்று சற்று உரத்த குரலில் ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான். அப்போதுதான் தன் நினைவுக்கு வந்த பவானி, "ஊம் .... அண்ணாவா? வா ..... வா ...." என்று கூறி, புத்தகத்தை மூடினாள்.

"அப்படி என்ன சுவாரசியமான புத்தகம், நான் வந்துக் கூடத் தெரியாமல்." - சிரித்தவண்ணம் கேட்டான் ஸ்ரீதர்.

"பெரிய மனோதத்துவ ஆசிரியரின் புத்தகம் ....."

"அது எதற்கு உனக்கு?

"இல்லை, ஏன் வாழ்க்கையில் திடீரென்று ஏற்பட்டு விட்ட மாறுதலுக்கு என்ன காரணம் என்று அறிய விரும்பினேன் .... இந்தப் புத்தகம் விளக்கம் தரும் என்றார்கள் ....."

"வேண்டாம் அம்மா ..... இந்த மாதிரி 'ஹெவி புக்ஸ்' எல்லாம் உனக்கு வேண்டாம். இப்போதுதான் நீ கொஞ்சம் கொஞ்சமாகத் தேறி வருகிறாய்...." - ஆதங்கத்துடன் கூறினான் ஸ்ரீதர்.

இதைக் கேட்டு பவானி 'கலகல'வென்று சிரித்தாள்.

"என்னம்மா சிரிக்கிறாய்?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

"ஹெவி புக்ஸ் படிக்கிற அளவுக்கு உன் தங்கைக்கு இன்னும் மனப்பலம் வரவில்லை என்று பயப்படுகிறாயா, அண்ணா? பயம் வேண்டாம். இப்போது எண்ணைத் தேய்த்துக் குளித்தவள் மாதிரி, புது உணர்ச்சியுடன் இருக்கிறது என் மனம். நான் இந்த மனோதத்துவ புத்தகத்தைப் படிப்பது, என் மனத்தில் அதிசயமாக ஏற்பட்ட மனமாறுதலுக்கு என்ன காரணம் என்று விளக்கம் கிடைக்குமா என்று பார்க்கத்தான். ஆனால், இதில் அதற்கு எந்தவித விளக்கமும் கிடைக்கவில்லை, அண்ணா ..." என்றாள்.

ஸ்ரீதர், பவானியையே உற்றுப் பார்த்தான்.

'அவள் மன நிலை என்ன? எந்த மன நிலைக்கு அவள் விளக்கம் கேட்கிறாள்? ஒரு வேளை, அவன் பயந்தபடி அவள் மனத்தில் ஜெயராமன்மீது காதல் ஏற்பட்டு, அந்த மாறுதலுக்கு விளக்கம் தேடுகிறாளோ?'

"அண்ணா, இதுவரை இருட்டிலிருந்த எனக்குத் திடீரென்று உலகம் முழுவதிலும் ஒரு புது ஒளியைக் கண்ட மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இந்தப் புது உலகத்தில், அன்பு ஒன்றுதான் ஆட்சி செலுத்துவது போலவும், இந்த அன்பு உலகில் நான் ஒரு சிட்டுக்குருவியாகச் சுற்றி வருவது போலவும் இருக்கிறது. நான் சந்திக்கும் ஒவ்வொருவரும் என்னிடம் அன்பையே மலர்ப் பரிசாகத் தருகிறார்கள். சுதா, ஜெயராமன் - எல்லோரும் என்னிடம் பழகும் விதம் ...." - உணர்சிவசப்பட்டவள்போல் பேசிக்கொண்டே போனாள் பவானி.

ஸ்ரீதர் மீண்டும் குழம்பினான்.

'ஜெயராமனைப் பற்றி இவள் என்ன நினைக்கிறாள்? அவன் செலுத்தும் அன்பை எப்படி புரிந்துகொண்டிருக்கிறாள்

இதைத் தெரிந்துகொள்ள விரும்பினான். எனவே, "இந்தப் புத்தகத்தைப் பற்றி உன்னிடம் யாரம்மா சொன்னார்கள்?" என்று கேட்டான்.

"ஜெயராமன்தான் சொன்னார், அண்ணா .... ஹி எஸ் எ வெரி நைஸ்மேன். ரொம்பவும் கண்ணியமான மனிதர். பழகுவதற்கு இனிமையானவர்" என்றாள்.

"இனிமையானவர் என்றால் ...." என்று கேட்டு, பவானியை உன்னிப்பாகப் பார்த்தான் ஸ்ரீதர்.

"இனிமையானவர் என்றால் இனிமையானவர்தான்...... வெரி நைஸ்மேன். ஒரு பெண்ணுடன் பழகும்போது, சாதாரணமாக ஆண்களுக்கு ஏற்படும் படபடப்பு, நெகிழ்ச்சி எதுவும் இல்லாமல் அமைதியாகப் பழகுகிறார் ...."

பவானியின் பேச்சு சாமர்த்தியத்தை மனத்திற்குள் புகழ்ந்தான் ஸ்ரீதர். 'குறுகிய காலத்திற்குள் இவள் பழைய பவானியாகவே மாறிவிட்டாள்' என்பதைக் கண்டு, அந்த அண்ணன் மகிழ்ந்தான். 'ஒரு வேளை, இந்தப் பெண், ஜெயராமனிடம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டாளோ? அப்படி இருந்தால், நிலைமை தர்மசங்கடமாயிற்றே! ஜெயராமன் மணமானவன் என்பது இவளுக்குத் தெரியுமா? அதைத் தெரிய வைத்தால் ..... ஒருவேளை, அது தெரிந்து மீண்டும் அதிர்ச்சி அடைந்து விடுவாளோ? ஏன் வம்பு? இப்போதைக்கு இதுபற்றி அதிகம் பேசவேண்டாம்!'

இந்த முடிவுக்கு வந்தவன், பொதுவாகத் தங்கையிடம் திருமணம் பற்றிப் பேசி, அதைப் பற்றிய அவள் கருத்தை அறிவது என்றும் தீர்மானித்தான்.

"பவானி, உனக்குக் கல்யாணம் செய்து வைக்கலாம் என்றிருக்கிறேன். வாட் ஈஸ் யுவர் ஐடியா?" என்றான்.

"கல்யாணமா? எனக்கா?" என்றாள் பவானி.

"ஏன் நீ கல்யாணமே செய்துகொள்ளப் போவதில்லையா?"

"அப்படியெல்லாம் சொல்லும் குழந்தை அல்ல நான். இருந்தாலும், இப்போது என் மனம் அதில் ஈடுபடவில்லை ..."

"அதற்கில்லை, பவானி .... இப்போதிருந்தே பார்த்தால் தானே கொஞ்சம் பொறுத்தாவது நல்ல இடமாகக் கிடைக்கும் ..... அதனால்தான், நான் உன் ஜாதகத்தைத் தேடிக் கண்டுபிடித்தேன் ..... இப்போது ஜோசியர் வீட்டிற்குப் போகப்போகிறேன். உன் கல்யாணத்திற்கான வேலைகளில் இறங்குவதற்கு முன்பு, உன்னிடமும் ஒரு வார்த்தை சொல்லலாம் என்றுதான் ...."

. "அண்ணா, இதற்கெல்லாம் என்னைக் கேட்க வேண்டிய அவசியமே இல்லை. நீ என்னுடைய அண்ணன். உன்னுடைய கடமையைச் செய்கிறாய்... ஆனால், என்னைக் கேட்காமல் எதையும் நிச்சயம் செய்துவிடாதே.... உன் தங்கை இப்போதும் வியாதிக்காரி இல்லை .... அவளுக்கு மனம் என்று ஒன்று இருக்கிறது ..... அவ்வளவுதான் சொல்வேன் .... " என்றால் சிரித்துக்கொண்டே.

தங்கையை நெருங்கி, ஆதரவுடன் அவள் தலையை வருடிக்கொடுத்த ஸ்ரீதர், " என்னை என்ன , அவ்வளவு பண்பில்லாதவன் என்றா நினைத்துவிட்டாய் .... உன்னைக் கேட்காமல் முடிவு செய்யமாட்டேன், அம்மா ... முதலில் உன் ஜாதகத்தை எடுத்துக்கொண்டு ஜோசியர் வீட்டிற்குப் போகலாம் என்றிருக்கிறேன், திருமணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவதாகச் சொல்கிறார்கள் .... பார்ப்போம் ...." என்றான்.

"சில திருமணங்கள் நரகத்திலும் நிச்சயிக்கப்பட்டு விடுகின்றனவாமே ... " என்றாள் பவானி.

" வாட் .... நீ என்ன சொல்கிறாய்?" பதத்ததுடன் கேட்டான் ஸ்ரீதர்.

' நீ ஏன் அண்ணா பதட்டப்படுகிறாய்? இதை நான் சொல்லவில்லை, மிஸ்டர் ஜெயராமன்தான் சொன்னார்."

"ஈஸ் இட்? ....... ஏன் அப்படிச் சொன்னார்?"

"என்னைக் கேட்டால்?"

"இல்லை, எந்தச் சந்தர்ப்பத்தில் அப்படிச் சொன்னார் என்று கேட்டேன் ...."

"ஐ டோண்ட் ரிமெம்பர் ... நாங்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்போம். அதில் ஒன்றாக இதுவும் வந்தது. நீ சொன்ன பழமொழியை நான் சொன்னேன். அதற்குத்தான் அவர் அப்படிப் பதில் சொன்னார் ...."

"நீங்கள் ஏன் அப்படி நினைக்கிறீர்கள் என்று நீ அவரைக் கேட்கவில்லையா?"

"கேட்கவில்லை ...."

"ஏன்?"

"பொதுவாக அவர் சொல்வார், நான் கேட்டுக்கொள்வேன். நான் பதிலுக்கு எதுவும் கேட்பதில்லை ...."

"ஐ ஸி......."

"ஆமாம். அவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஒருமுறை கேட்டேன். அதற்கு அவர் சரியாகப் பதில் சொல்லவில்லை .... அதன் பிறகு அந்தக் கேள்வியையே விட்டுவிட்டேன் ...."

"அவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றி நீ ஏன் தெரிந்து கொள்ள விரும்பினாய்?"

"ஜஸ்ட் லைக் தட் . என் சொந்த வாழ்க்கையைப் பற்றி அவர் தெரிந்துகொள்ளவில்லையா? அதைப் போலத்தான்.... ."- பேசிக்கொண்டே போன தங்கையை உன்னிப்பாகப் பார்த்த ஸ்ரீதர், "பவானி, ..... லெட் மீ ஆஸ்க் யூ ப்ளெய்ன்லி .... வெளிப்படையாக உன்னிடம் கேட்டு விடுகிறேன்" என்று ஆரம்பித்தபோது, " நன்றாயிருக்கிறது .... உடம்பு சரியில்லாத பெண்ணை இப்படித்தான் மாற்றி மாற்றிக்கேள்வி கேட்டுத் திணற அடிப்பதா? உலகத்தில் நாம் எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று அவசியமில்லை. சில விஷயங்களைக் கேட்காமல்தான் தெரிந்துகொள்ள வேண்டும் ... " என்று சொல்லியவாறே, அவர்களை நெருங்கினால் சுதா.

தலையை மெல்லத் திருப்பி, சுதாவைப் பார்த்த ஸ்ரீதர், "நீ எப்போது வந்தாய்?" என்று கேட்டான்.

"எப்போது வரவேண்டுமோ, அப்போது வந்தேன் .... " என்று ஏடாகூடமாகப் பதில் சொன்ன சுதா, என்ன பவானி , நேற்று நன்றாகத் தூங்கினாயா? ராத்திரி எத்தனை நேரம்வரை பியானோ வாசித்தாய் ....... ? படுக்கப் போகும் பொது மறக்காமல் அந்த மாத்திரையைச் சாப்பிட்டாயா?" என்று கேள்வி மேல் கேள்வி கேட்டுக் கொண்டே போனாள்.

ஸ்ரீதர் மௌனம் சாதித்தான். அவனுக்குக் கொஞ்சம் கோபங்கூட வந்தது. இருப்பினும், அதை அடக்கிக் கொண்டு, "சுதா, பவானி பழைய நிலைக்கு வந்துவிட்டாள். இனி அவளுக்கு எந்த மாத்திரையும் தேவை இல்லை" என்று கூறியவன், "நான் கொஞ்சம் வெளியே போகவேண்டும்" என்று கூறி எழுந்தான்.

"ஜஸ்ட் எ மினிட் ..... நானும் உங்களுடன் வெளியே வருகிறேன். எனக்கும் வேலை இருக்கிறது ... வேலை யோடு வேலையாகப் பவானியை ஒரு முறை பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன், அவ்வளவுதான்.... சீரியோ, பவானி ... சாயங்காலம் பார்க்கிறேன் .... " என்று கூறி எழுந்து, ஸ்ரீதரைத் தொடர்ந்து படிகளில் கீழே இறங்கினாள்.

ஸ்ரீதர் நேராகக் காரில் போய் ஏறிக்கொண்டான். சுதா, காரைத் திறந்து கொண்டு அவன் அருகில் அமர்ந்து கொண்டாள். காரை 'ஸ்டார்ட்' செய்த ஸ்ரீதர், "நீ எங்கே போகவேண்டும்?" என்று கேட்டான். அவன் குரல் சற்று 'கடின'மாக இருந்தது.

"நீங்கள் ஏகே போகிறீர்களோ, அங்கேதான் நானும் போகவேண்டும் ......" என்றாள் சுதா.

"வாட் டூ யூ மீன் .... நான் இப்போது ஆபீசுக்குப் போகவில்லை ..."

"ஐ நோ தட் ..... " ஒய்யாரமாக ஸ்ரீதரைத் திரும்பிப் பார்த்தபடி பதில் சொன்னால் சுதா.

"ஐஸீ .... நான் எங்கே போகிறேன் என்றாவது உனக்குத் தெரியுமோ? - சாலையையும், சுதாவையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டே, வண்டியை ஓட்டியபடி பேசினான் ஸ்ரீதர்.

"யெஸ் ..... ஜோசியர் வீட்டிற்குப் போகிறீர்கள் என்று தெரியும் ...."

"ஓ .... நீ ரொம்ப நேரமாக ஒட்டுக்கேட்டுக் கொண்டிருந்தாயா?"

இந்த வார்த்தை சுதாவைச் சுட்டது.

" என்ன சொன்னீர்கள்? ஒட்டுக்கேட்கிறேன் என்றா? ஸ்ரீதர், உங்கள் வீட்டில், உங்களுக்கும் உங்கள் தங்கைக்கும் இடையே நடக்கும் பேச்சை நான் கேட்பது தவறா? அதை ஒட்டுக் கேட்பதென்றா சொல்வது? குற்றம் சாட்டும் தோரணையில் பேசுகிறீர்களே ..... நான் உங்களையெல்லாம் அன்னியராக நினைக்கவே இல்லை .... அப்படியிருந்தும் ..... " குரல் நெகிழ்ந்தது சுதாவுக்கு.

ஸ்ரீதர் குறுக்கிட்டான்.

"ஐயாம் ஸாரி, சுதா ... ஐ நெவர்மென்ட் தட்வே ..... நான் ஜோசியர் வீட்டுக்குப் போவதை நீ எப்படித் தெரிந்துகொண்டாய் என்றுதான் .....

சுதா, மறுபுறம் திரும்பி கண்ணாடி வழியாகச் சாலையைப் பார்த்தால். அவள் கண்கள் பனித்தன.

கார் ஜோசியர் வீட்டை அடையும்வரை அவள் ஸ்ரீதர் பக்கம் திரும்பவே இல்லை.

**ஸ்ரீ**தரையும், சுதாவையும் "வாருங்கள், வாருங்கள்" என்று வரவேற்றார் ஜோசியர்.

"இந்த ஜாதகத்தைப் பாருங்கள்" என்று கூறி, தங்கையின் ஜாதகத்தை எடுத்து நீட்டினான் ஸ்ரீதர்.

'அந்த ஜாதகத்துடன் இது பொருந்துகிறதா என்று பாருங்கள்' என்று கேட்க விரும்பி, தன் கைப்பையைத் திறந்து அண்ணன் ஜெயராமனின் ஜாதகத்தை எடுக்கப் போனாள் சுதா.

அப்போது .........

"ஜோசியரே ...... இந்த ஜாதகத்துடன் இந்தப் பையன் ஜாதகம் பொருந்துகிறதா என்று பாருங்கள் ..... " என்று கூறி, தன் கைப்பையைத் திறந்து, இன்னொரு ஜாதகத்தை எடுத்துக் கொடுத்தான் ஸ்ரீதர்.

அது யாருடைய ஜாதகம் என்று புரியாமல் பிரமித்துப் போனாள் சுதா.

ஸ்ரீதர் கொடுத்த ஜாதகத்தைக் கையில் வாங்கிய ஜோசியர், "வரன் பெயர் என்ன ? ஓ ..... சுந்தரம் - பேஷ் .... பேஷ் ... நல்ல பெயர் ..... " என்றார்.

சுதா, விக்கித்துப் போனாள், தன் கைப்பையை அவள் திறக்கவே இல்லை.

**'மை**க்'கைக் கையில் பிடித்துக்கொண்டு உரத்த குரலில் ஓர் இளைஞன் ஆங்கிலப் பாட்டொன்றைப் பாடிக்கொண்டிருந்தான். அவன் பாடலுக்கேற்ப எலெக்ட்ரிக் கிதார் - டிரம்ஸ் போன்ற மேற்கத்திய வாத்தியங்களைச் சிலர் இசைத்துக் கொண்டிருந்தனர். இந்தப் பாடல் குழுவிற்கு முன்னாலிருந்த கூடத்தில் ஆண்களும் பெண்களும் இணைந்து ஜோடியாக நடனம் ஆடிக்கொண்டிருந்தனர். அந்த நடனக் கூடத்தை ஒட்டிய அறையிலும், அறைக்கு வெளியே இருந்த திறந்தவெளியிலும், மாடியில் உள்ள 'பாரி'லும் ஆண்களும் பெண்களுமாகக் கூடியிருந்தனர். மங்கிய விளக்கொளியில் அவர்கள் தங்களுக்குள் ஏதேதோ சிரித்துப் பேசிக்கொண்டிருந்தனர்.

சிறு சிறு மேஜைகளும், அவற்றைச் சுற்றி நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. அந்த நாற்காலிகளில் அழகே உருவான பல பெண்கள் வீற்றிருந்தனர். .

சென்னையில் மிகப்பெரிய மனிதர்களை அங்கத்தினர்களாகக் கொண்ட ஒரு கிளப் அது. அந்தக் கிளப்பில் அங்கத்தினராக இருப்பதே ஒரு கௌரவமாகக் கருதப்பட்டது. அந்த கிளப்புக்குள் நுழைந்துவிட்டால், அதன் நாகரீகம், பழக்கவழக்கம் எல்லாமே அலாதியானது.

அது ஒரு தனி உலகம்.

வெள்ளைக்காரன் விட்டுச் சென்ற நாகரிகத்தின் நினைவுச்சின்னம்.

அப்போது, அந்தக் கிளப்பில், பழைய ஆண்டைக் கழித்து, புத்தாண்டை வரவேற்கும் 'நியூ இயர் ஈவ்' கொண்டாட்டம் நடைபெற்றுக்கொண்டிருந்தது.

மாடியிலுள்ள 'பாரி'ல் ஏகக் கூட்டம். நகரத்துப் பிரமுகர்கள் பலரும், தங்களை மறந்து மது அருந்தி மகிழ்ந்துகொண்டிருந்தனர். எல்லார் தலையிலும் ஒரு காகிதக் குல்லாய். ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டும், தட்டிக்கொடுத்துக்கொண்டும், எந்தவிதப் போலி சம்பிரதாயமும் இன்றி, எல்லோரும் சகஜமாகப் பழகிக் கொண்டிருந்தனர். தினசரி வாழ்க்கையில் பலவிதக் கட்டுப்பாடுகளுக்குத் தங்களை உட்படுத்திக்கொண்டு இயந்திர வாழ்க்கை வாழ்ந்துகொண்டிருந்த அவர்களில் பலருக்கு, அத்தகைய 'சுதந்திரம்' மிகவும் பிடித்திருந்தது போலும்! தறியில் கட்டிப்போட்டிருந்த மாட்டை அவிழ்த்துவிட்டால் என்ன நடக்குமோ, அது அங்கே நடந்து கொண்டிருந்தது.

நடனக் கூடத்தை ஒட்டிய அறையின் மையத்தில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில், நளினமே உருவாகச் சில நங்கையர் அமர்ந்திருந்தனர். அவர்களில் சுதாவும், பவானியும் தனித்துக் காணப்பட்டனர். எதிலும் பட்டுக்கொள்ளாமல், எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டு அவர்கள் அமர்ந்திருந்தனர். நண்பர்களில் சிலர், அவர்களை நெருங்கி, 'ஹலோ' சொல்லிச்சென்றனர். ஸ்ரீதர், இங்கும் அங்கும் உலாவிக்கொண்டிருந்தான். அவன் முகத்தில் மகிழ்ச்சிக் களை தாண்டவமாடியது. இந்தச் சுதந்திரமான சூழ்நிலை பவானிக்கு உற்சாகம் அளிக்கும் என்று அவளையும், அவளுக்குத் துணையாக சுதாவையும் அன்று 'கிளப்பு'க்கு அழைத்து வந்திருந்தான் ஸ்ரீதர். விதவிதமான 'ஹேர்டு'க்களையும், ஆடை அணிகளையும் பார்த்துக்கொண்டு, மனித மனத்தின் விசித்திரமான - விகாரமான ஆசைகளின் விசுவரூபத்தை ரசித்துக்கொண்டு மௌனமாக அமர்ந்திருந்தாள் சுதா. சாதாரண நாட்களில் கையாலும் தொடாத காகிதக் குல்லாயைப் பெருமையுடன் தலையில் வைத்துக்கொண்டு உலவும் 'பெரிய'மனிதர்களையும், சின்னக்குழந்தைபோல் பலூன்களைப் 'பட்பட்' டென்று உடைத்துக்கொண்டிருக்கும் சீமான்களையும் கண்டு, அவள் மனதிற்குள் சிரித்துக்கொண்டிருந்தாள்.

இரவு மணி பதினொன்று ஐம்பது. இன்னும் பத்து நிமிஷத்தில் புத்தாண்டு பிறக்கப் போகிறது.

அதற்கு அறிகுறியாக, அந்த கிளப்பிலுள்ள விளக்குகள் எல்லாம் மங்க ஆரம்பித்தன. சரியாகப் பன்னிரண்டு மணிக்கு விளக்குகள் எல்லாம் அணைக்கப்படும்.

இருள் சூழும். அந்த இருண்ட வேளையில், பட்டாசுகள் படபடக்கும்; சில விநாடிகள் பொறுத்து, புத்தாண்டின் வருகையை எடுத்துக்காட்டுவது போல் ஒளி வரும்.

அப்போது, அந்த இருண்ட வேளையை எதிர்நோக்கித்தான் அனைவரும் காத்திருந்தனர். நடன அரங்கில், கூட்டம் கட்டு மீறியது. சில ஆண்களும், பெண்களும் கட்டிப்பிடித்து, போதையேறி நிலைகொள்ளாமல் தவித்தனர்.

சரியாக மணி பன்னிரண்டு.

எங்கும் இருள் சூழ்ந்தது. பட்டாசுகள் வெடித்தன.

மீண்டும் விளக்கு வெளிச்சம் வந்தபோது ....

தன் அருகே ஒரு புதிய ஆடவன் நிற்பதைப் பார்த்துச் சற்றே துணுக்குற்றாள் பவானி.

பிறகு, அந்த ஆடவனை உற்றுப் பார்த்தாள். சிறிது நேரம் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

பின்னர், "ஹலோ, குமார் ..... சௌக்கியமா?" என்றாள்.

அந்த இளைஞன் மலங்க மலங்க அவளையே பார்த்தான். "நீ .... நீ .... " என்று அவன் தடுமாறும்போதே, சுதாவின் பக்கம் திரும்பிய பவானி, "சுதா, இவர்தான் என் பால்ய நண்பர், குமார் ... பல ஆண்டுகளுக்குப் பிறகு இன்றுதான் நாங்கள் சந்திக்கிறோம் ...." என்று அறிமுகப்படுத்தி வைத்தாள்.

பவானியின் நிதானமான அந்தப் பேச்சைக்கேட்டு, குமார் வியந்துபோய் நின்றான்.

அப்போதுதான் ......

"விஷ் யூ ஹாப்பி நியூ இயர்" என்று கூறிக்கொண்டே அவர்களை நெருங்கினான் ஸ்ரீதர்.

# 26

நல்லது தீயது நாமறியோம் - அன்னை
நல்லது காட்டுக தீயவை ஓட்டுக.

- பாரதியார்

**தி**ருப்பாவை பாடல்களைக் கண்மூடி அமர்ந்து சொல்லிக்கொண்டிருந்தால் வனஜா. ஹாஸ்டலில் இருந்த போதும், அவள் மாகழி மாதம் முழுவதும் அதிகாலையில் எழுந்திருந்து, குளித்துவிட்டு, ஆண்டாளின் பாசுரங்களை சொல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தாள். மற்ற எதிலும் கிடைக்காத ஒரு மன நிறைவு அவளுக்கு இதில் கிடைத்தது. கவிதை நயத்துடன் பக்தி ரசமும் நிறைந்த அந்தப் பாடல்களில், அவள் மனமொன்றிப் போயிருந்தபோதுதான், வேலைக்காரி ஒருத்தி வந்து, "அம்மா" என்று அழைத்தாள். கண் திறந்து 'என்ன?' எனபது போல் அவளைப் பார்த்தாள் வனஜா.

“உங்களைப் பார்க்க யாரோ வந்திருக்காங்க"

இதைக் கேட்டதும் ஒருவேளை சுந்தரமாயிருக்குமோ என்ற பயம் ஏற்பட்டது அவளுக்கு. அதை அடக்கிக் கொண்டு, "யாராம்? கேட்டாயா?" என்றாள்.

"யாரோ சுதாவாம். உங்களை முக்கியமாகப் பார்க்க வேண்டுமாம்" என்றாள் வேலைக்காரி.

'சுதா' என்ற பெயரைக் கேட்டதுமே வனஜா வியப்படைந்தாள். அதே சமயத்தில், 'வராதவள் வருகிறாளே' என்ற திகிலும் அவளுக்கு ஏற்பட்டது.

"கொஞ்சம் இருக்கச் சொல் .... இதோ வருகிறேன் .... " என்று சொல்லி வேலைக்காரியை அனுப்பினாள். அவசர அவசரமாக மீதிப் பாசுரங்களைச் சொல்லிமுடிக்க அவளுக்கு மனம் இல்லை. மனம் ஒன்றில் ஈடுபடாமல் இத்தகைய பாசுரங்களையெல்ல்லாம் படிப்பது அர்த்தமற்றது எனபது அவள் கருத்து.

ஸ்நானம் செய்து ஈரத்துடன் இருந்த கூந்தலைக் கொஞ்சம் ஆற்றிவிட்டு, இரண்டு கால் போட்டுக்கொண்டாள். ஆண்டாளின் படத்தின்மேல் இருந்த கதம்பத்தை எடுத்துத் தலையில் சூட்டிக்கொண்டாள் இதையெல்லாம் செய்யும் போது, "சுதா எதற்காக வந்திருக்கிறாள்? வழிய வலியப் பேசினாலும் சட்டென்று எடுத்தெறிந்து பேசி, கொஞ்சம் அகந்தையுடன் பழகும் சுதா வந்திருப்பது சாதாரண விஷயமாக இருக்காது' என்ற முடிவுக்கு அவள் மனம் வந்தது.

அவசர அவசரமாக வரவேற்பறைக்குச் சென்று, சுதாவைப் பார்த்து, "வா சுதா, சௌக்கியமா? என்று அகமும் முகமும் மலர விசாரித்தாள்.

"சௌக்கியம்தான், வனஜா!" என்று சிரித்துக்கொண்டே பதில் சொன்னாள் சுதா. சாதாரணமாகத் தன்னை மன்னி என்று அழைப்பவள், அன்று வனஜா என்று பெயர் சொல்லி அழைத்ததை அவள் கவனிக்கத் தவறவில்லை.

அவளைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றாள் வனஜா.

அந்த ஹாஸ்டல் முழுவதையுமே கண்ணோட்ட மிட்டபடி, வனஜாவைப் பின்தொடர்ந்து அவள் அறைக்குச் சென்றாள் சுதா.

"காப்பி சாப்பிடுகிறாயா? - உபசாரத்திற்காக இல்லாமல், உண்மையாகவே கேட்டாள் வனஜா.

"தாங்க்ஸ், வனஜா. இந்தச் சூழ்நிலையே எனக்குப் பிடிக்கவில்லை. இங்கு போடப்படும் காப்பியோ, போர்ன் விட்டாவோ எனக்குப் பிடிக்காது. ரொம்பவும் 'அன் ஹைஜீனிக்காக' இருக்கிறது ...." என்றவள், "ஒன்றுமில்லை, பக்கத்திலே சேட் காலனியில் என் தோழி ஒருத்தி இருக்கிறாள். அவளைப் பார்க்க வந்தேன். அப்படியே உங்களையும் பார்த்துவிட்டுப் போகலாம் என்றுதான் ....." என்று திடீரென்று தான் வந்ததற்கான காரணத்தை விளக்கினாள் சுதா.

அவள் பொய் சொல்கிறாள் எனபது வனஜாவுக்குத் தெளிவாகப் புரிந்தது. அவள் வார்த்தைகளை நம்பா விட்டாலும் நம்பியதாகக் காட்டிக் கொண்டாள்.

"அப்படியா? சரி, அவர் சௌக்கியமாக இருக்கிறாரா?" என்று கேட்டாள் வனஜா.

"யாரைக் கேட்கிறீர்கள்?" - வேண்டுமென்றே இப்படிக் கேட்டாள் சுதா, அதையும் புரிந்துகொண்டாள் வனஜா.

"உங்கள் அண்ணா, மிஸ்டர் ஜெயராமன் சௌக்கியமாக இருக்கிறாரா என்று கேட்டேன்" என்றாள்.

"ஓ, அண்ணாவா? அவர் எப்படி வனஜா சௌக்கியமாக இருக்க முடியும்?" என்று குத்தலாகச் சொன்னாள் சுதா.

"என்?" - புரியாமல், சற்று திகைப்புடன் கேட்டாள் வனஜா.

" நீங்களோ அவரைவிட்டு வந்தாயிற்று. வாழ வேண்டிய வயதில், பொருத்தமான துணையில்லாமல் யாரும் சுகமாக இருக்க முடியாதே ..."

"அது, ஆண் - பெண் இரு சாராருக்கும் பொருந்துமல்லவா?" என்று கேட்டாள் வனஜா சட்டென்று.

"கண்டிப்பாகப் பொருந்தும். ஆனால், அந்தத் துணை இல்லாவிட்டாலும் சிலரால் அத்யந்த நண்பர்களுடன் பழகி, வாழ்க்கையைக் குறையில்லாமல் சௌக்கியமாக மாற்றிக்கொள்ள முடிகிறது. பாவம், அண்ணாவால், அப்படியிருக்க முடியவில்லை. அவருக்கு நண்பர்களும் இல்லை. சிநேகதர்களும் இல்லை. போதாக்குறைக்கு அவர் எங்கே சுகப்பட்டுவிடப் போகிறாரோ என்று கண் கொத்திப் பாம்புபோல் பார்த்துக்கொண்டிருக்கிற பொறாமைக்காரர்கள் வேறு சதி செய்கிறார்கள் ..." என்று, நெருப்பை அள்ளி வீசுவதுபோல், வார்த்தைகளை அள்ளி வீசினாள் சுதா.

வனஜாவுக்கு அவளுடைய வார்த்தைகள் முழுமையாகப் புரியவில்லை. முதல் பகுதி தன்னைத் தாக்குவதற்காக என்பதைப் புரிந்துகொண்டாள். ஆனால், பின் பகுதி? 'ஜெயராமனின் சந்தோஷத்திற்குத் தடையாகச் சதி செய்வது யார்? - அதுதான் அவளுக்குப் புரியவில்லை.

"ஏன் சுதா அப்படிச் சொல்கிறாய்? உன் அண்ணாவின் சந்தோஷத்திற்குத் தடையாக யார் இருக்கிறார்கள்? என் உயிரைக்கொடுத்தாவது அவருக்கு எதிரான சதியை உடைத்தெறிய முயலுகிறேன் ... " என்றாள்.

"அப்படியா! நிச்சயமாகவா?" என்ற, கேலியான குரலில் கேட்டாள் சுதா.

"நிச்சயமாக ..." உறுதியான குரலில் பதிலளித்தால் வனஜா.

"அந்தச் சதிகாரர்களுக்கு எதிராக நீங்கள் உயிரைக் கொடுப்பதென்றால், நீங்களே உங்களுக்கு எதிராகப் போராடி, தற்கொலை செய்துகொள்ள வேண்டியதுதான் ..."

விஷ ஊசியைப்போல் சுதா பாய்ச்சிய சொற்களின் உள் அர்த்தத்தைப் புரிந்துகொண்டாள் வனஜா. அவள் தன்மீது சாட்டும் குற்றம் என்னவென்று புரியாவிட்டாலும் தன்னைத்தான் குற்றம் சாட்டுகிறாள் என்பதைப் புரிந்துகொண்டாள்.

"நானா உங்கள் அண்ணாவுக்கு எதிராகச் சதி செய்கிறேன்? கொஞ்சம் விளக்கமாகச் சொல்ல முடியுமா, சுதா? - குமுறலுடன் கேட்டாள் வனஜா.

"நீங்கள் நேரிடையாகச் செய்யாவிட்டாலும் உங்கள் நண்பர் மூலம் செய்வது போதாதா?"

"கொஞ்சம் விளக்கமாகச் சொல், சுதா ...... இப்படிப் பேசி என்னைச் சித்திரவதை செய்யாதே ......."

"ஓகோ! புரியாததுபோல் நடிக்கிறீர்களா? சரி, விளக்கமாகவே சொல்கிறேன். நீங்கள்தான் அண்ணாவிற்கு இல்லையென்றாகிவிட்டது. அவர் இன்னொரு பெண்ணை மணந்து கொள்ள முயலும்போது, அதை ஏன் தடுத்தீர்கள்? அந்த பவானியிடந்தான் அண்ணா கொஞ்சம் மனம் விட்டுப் பேசிப் பழகுகிறார். அதற்கும் ஏன் குறுக்கே வருகிறீர்கள்? எங்கே பவானியை அண்ணா மணந்துகொண்டு விடுவாரோ என்று அஞ்சி, உங்கள் நண்பரையேமாப்பிள்ளையாக அனுப்புகிறீர்களே, இது சதி இல்லையா? சுந்தரத்திற்கு கல்யாணமே தேவையில்லை. அப்படியே உலகின் கண்களுக் காக ஒரு பெண் தேவையென்றால், எங்கள் பவானிதானா கிடைத்தாள் ! எதற்காக ஸ்ரீதரைப் போய்ப் பார்த்துப் பேசி, சுந்தரத்தின் ஜாதகத்தை அனுப்பித்து .... வனஜா, ஆனாலும் நீங்கள் இவ்வளவு கொடுமைக்காரியாக இருக்கக்கூடாது ... கொண்ட கணவனுக்கு எதிராக இவ்வளவு பெரிய சாதியைச் செய்யக்கூடாது ...." என்று பொரிந்து தள்ளினாள்.

வனஜா ஒரு நிமிஷம் மௌனம் சாதித்தாள். தான் செய்யாத குற்றத்தைத் தன்மீது சுமத்துகிறாளே என்ற வேதனை, அப்படியேதான் அதைச் செய்திருந்தாலும், அது எப்படி 'சதி'யாகும் என்று புரியாத குழப்பம், கணவன் இன்னொருபெண்ணை மணந்துகொள்ள முற்பட்டால், மனைவி தடுக்காமல் இருப்பாளா? என்று சிந்தனை!

"சுதா, நீ ரொம்ப அவசரப்பட்டு பேசுகிறாய்? வாழ்க்கையில் நிதானம் வேண்டும். நீ சொல்லும் எந்தக் குற்றத்தையும் நான் செய்யவில்லை. சுந்தரம் கல்யாணம் செய்துகொள்ளப்போகிறார் என்பதே நீ சொல்லித்தான் எனக்குத் தெரியும் ..."

"ஏன் வனஜா, அந்தச் செய்தி அதிர்ச்சியைத் தருகிறதா?" - குத்தலாகக் கேட்டாள் சுதா.

"சுதா!" - கடுமையான குரலில் அழைத்தாள் வனஜா. அந்தக் குரலே 'நாக்கை அடக்கு' என்று கர்ஜித்தது. வனஜாவிடமிருந்து அத்தகைய கடுமையைச் சுதா எதிபார்க்கவில்லை. ஒரு விநாடி அவளும் நடுங்கினாள். மறுகணம் அவள் சமாளித்துக்கொண்டாள்; வனஜாவும் பழைய நிலைக்கு வந்தாள்.

"இதோ பார் சுதா, உனக்கு நான் எதையும் விளக்கிக்கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. இருந்தாலும் சொல்கிறேன். உங்கள் அண்ணனின் சந்தோஷந்தான் எனக்கு முக்கியம். அதற்காக எதையும் செய்வேன். அதற்காக நான் ஏதாவது செய்யவேண்டும் என்று நீ விரும்பினால், என்னிடம் சொல் ..." என்றாள்.

இதற்குள் சுதா பழைய 'தெம்பை'ப் பெற்றுவிட்டாள்.

"என் அண்ணனுக்கு எதிராகச் சதி செய்யும் எண்ணம் இல்லையென்றால், இப்போது அவர் மகிழ்ச்சிக்குக் குறுக்காக ஏற்பட்டிருக்கும் தடையை உடைத்தெறிய நீங்கள் உதவவேண்டும். உங்கள் எண்ணம் பரிசுத்தமானது என்பதை நிரூபியுங்கள். முன்பொருமுறை, அண்ணாவுக்கு எழுதிய கடிதத்தில், 'அவருடைய சந்தோஷம், உங்கள் சந்தோஷம்' என்று நீங்கள் சொன்னதை நிறைவேற்ற வேண்டியநேரம் வந்திருக்கிறது. நினைவிருக்கிறதா? இதோ அந்தக் கடிதம்" என்று கூறி, ஒரு கடிதத்தை அவளிடம் நீட்டினாள். பிறகு, "இதில் எழுதியள்ளபடி செய்து காட்டுங்கள். உங்கள் நண்பர் சுந்தரம் பவானிக்காகப் போட்டி போடுவதை நிறுத்தவேண்டும். நீங்கள் சொன்னால் அவர் கேட்ப்பார். எங்கள் அண்ணன் மனம் எளிதில் இன்னொரு பெண்ணிடம் போகாது. இதை விட்டால் அவருக்கு வேறு இடம் கிடைப்பது கஷ்டம். ஆனால், உங்கள் சுந்தரத்தின் நிலை அதல்ல. எனவே, சீக்கிரம் அவரிடம் பேசி, அந்த எண்ணத்திலிருந்து அவரை விடுவியுங்கள். அதுதான் நீங்கள் என் அண்ணனுக்குச் செய்யும் பேருதவி ..... " என்றாள்.

"சுதா, நிச்சயமாக நான் உதவியைச் செய்கிறேன். அவர் மகிழ்ச்சிதான் என் மகிழ்ச்சி ...." என்று மனமுருகக் கூறினாள் வனஜா.

அதைக் கேட்டுச் சுதாகூடக் கொஞ்சம் நெகிழ்ந்து போனாள். ' இந்தக் காலத்தில் இப்படியும் ஒரு பெண்ணா?' என்ற எண்ணம் அவளிடம் கணநேரம் எழுந்தது.

"தாங்க் யூ, வனஜா ஐயாம் ஸாரி, உங்களிடம் கொஞ்சம் கடுமையாகப் பேசிவிட்டேன். அண்ணன் படும் வேதனையத் தாங்க முடியாமல்தான் அப்படிப் பேசினேன் ...... மன்னித்துவிடுங்கள் .... " என்றாள்.

"பரவாயில்லை, சுதா, அவசியமானால் என்னை எரித்துக்கொண்டே அவருக்கு உதவ நான் தயார் ... " என்றாள் விரக்தியான குரலில்.

"வனஜா .... " என்றழைத்த சுதா, நெற்றிப்பொட்டில் கைவைத்து, "திடீரென்று தலை வலிக்கிறது. ஆஸ்ப்ரோவும் வென்னீரும் கிடைக்குமா?" என்று கேட்டாள்.

"கண்டிப்பாக .... " என்று கூறி, அந்த அறையை விட்டு வெளியேறினாள் வனஜா.

அவள் வெளிய போன மறுகணமே, அந்த அறையை ஆராய ஆரம்பித்தாள் சுதா. புத்தகங்களையும், பெட்டிகளையும் தள்ளிப் பார்த்தாள். டிரங்க் பெட்டியைத் திறந்து, குடைந்தாள். அவள் கையில் ஒரு புகைப்படம் கிடைத்தது.

அது ஒரு குரூப் போட்டோ.

வனஜாவின் ஆபீசில் ஒரு பிரிவுபசார விழா ஏற்பாடு செய்தபோது எடுத்த படம். அதில் பின்னால் நின்ற பெண்கள் வரிசையில் வனஜாவும், அதன் பின்னால் இருந்த ஆண்கள் வரிசையில் வனஜாவுக்குச் சமீபமாகச் சுந்தரமும் காணப்பட்டார்கள். படத்திலுள்ள மற்றவர்களை மறைத்துவிட்டால், வனஜாவும் சுந்தரமும் அருகருகில் நிற்பதுபோல் தோன்றும்.

சுதா, அதை எடுத்துத் தன் கைப்பைக்குள் மறைத்துக் கொண்டாள்.

"இந்தா சுதா, சாரிடான்தான் கிடைத்தது" என்று கூறி, ஒரு சாரிடானையும் வெந்நீரையும் அவளிடம் கொண்டுவந்து கொடுத்தாள் வனஜா.

பஸ்ஸில் ஜன்னல் பக்கமான ஒரு'சீட்'டில் அமர்ந்து பயணம் செய்துகொண்டிருந்தால் வனஜா. காலையில் ஏக நெரிசல். வண்டிகளும், கார்களும், மனிதர்களும் .... ஆனால், இவை எதுவும் வனஜாவின் கண்களுக்குத் தெரியவில்லை. 'சுந்தரம் ஏன் இந்த முடிவுக்கு வந்தார்' எனபது பற்றித்தான் அவள் யோசித்துக்கொண்டிருந்தாள்.

அவனைச் சந்திக்கத்தான் அப்போது அவள் பஸ்ஸில் புறப்பட்டிருந்தாள்.

தன் நன்மைக்காக, அதாவது ஜெயராமன் தன்னைக் கைவிட்டுப் பவானியை மணந்துகொண்டு விடக்கூடாது என்று நினைத்தே, சுந்தரம் பவானிக்காகப் போட்டியிடுவதாக வனஜா நினைத்தாள். இருப்பினும், ஏனோ சுந்தரம் மீண்டும் தன் அந்தரங்க வாழ்க்கையில் குறுக்கிடுவதாகவே அவளுக்குத் தோன்றியது. அவனிடம் பளிச்சென்று அதைப்பற்றிப் பேசிவிட வேண்டும் என்ற முடிவுடன் புறப்பட்டு விட்டாள்.

சுந்தரத்தின் வீட்டுக்குள் நுழையும்போதே அவன் தாய் எதிர்ப்பட்டு, "அடடே! மழை வரப்போகிறது .... நீதானா அது?" என்று வியப்புடன் கூறி வரவேற்றாள்.

வனஜா பதிலுக்குச் சிரித்தாள். பிறகு, கொஞ்சம் வேலை இருந்தது. அதனால்தான் வரவில்லை. சுந்தரம் வீட்டில் இல்லையா?" என்று கேட்டாள்.

"வெளியே போயிருக்கிறான்; வந்து விடுவான்.... " என்று பதிலளித்த சுந்தரத்தின் தாய், "உனக்கொரு சந்தோஷமான செய்தி சொல்லப் போகிறேன், கடைசியாக என் மகன் கல்யாணத்திற்கு ஒப்புக்கொண்டுவிட்டான் ..... அதற்கு நீதான் காரணம் என்று நினைக்கிறேன் .... " என்றாள்.

நான் காரணமா? என்ன சொல்கிறீர்கள்?" - புரியாமல் கேட்டாள் வனஜா.

"ஆமாம். புத்திசாலிப் பெண்ணான நீ, அவனுக்கு அவ்வப்போது,யோசனை சொன்னதாலோ என்னவோ, அவனுக்குத் திருமணத்தில் விருப்பம் ஏற்பட்டிருக்கிறது. அவனே ஒரு தரகரை வரவழைத்து, அக்கறையாகச் சொல்லி, ஜாதகங்களைப் பார்த்தான். பவானி என்ற பெண்ணின் ஜாதகம் பொருந்தியிருக்கிறது. ஒரு நல்ல நாளில் பெண் வீட்டாரிடம் பேச்சு வார்த்தை நடத்தவேண்டும் .... " என்று பூரிப்புடன் சொன்னாள் அந்தத் தாய்.

"இந்தத் தாயின் மகிழ்ச்சியை நாம் குலைப்பதா?" என்று ஒருகணம் எண்ணினாள் வனஜா. அவள் மனத்தில் ஒரு போராட்டம். "கணவரின் சந்தோஷமா? நண்பரின் தாயின் சந்தோஷமா?' சிறிது நேர யோசனைக்குள் கணவனின் மகிழ்ச்சிதான் என்ற முடிவுக்கு வந்தான் :

"காப்பி சாப்பிடுகிறாயா, வனஜா?" என்று கேட்டு அந்தத் தாய் எழுந்திருந்தபோது, வெளியே போயிருந்த சுந்தரம் திரும்பி வந்தான். வனஜாவைக் கண்டதும் அவனுக்கும் திகைப்பு ஏற்பட்டது.

"வாருங்கள் ..... ஏது அத்தி பூத்தாற்போல் ....." என்றான்.

"வரவேண்டும் போலிருந்தது, வந்தேன் ...." என்றவள், "மிஸ்டர் சுந்தரம், உங்களுடன் கொஞ்சம் பேச வேண்டுமே" என்றாள்.

சுந்தரம் அவளைப் புருவம் சுருங்கப் பார்த்தான். பிறகு, "ஷ்யூர் .... என் அறைக்குப் போகலாம், வாருங்கள்" என்று கூறி, அவளை அழைத்துக்கொண்டு தன் அறைக்குச் சென்றான்.

வெகு நேரம்வரை வனஜா எதுவும் பேசவில்லை. மௌனம் சாதித்தாள். பிறகு, "நீங்கள் பவானி வீட்டிற்கு ஜாதகம் அனுப்பினீர்களா?" என்று அவனை நிமிர்ந்து பார்த்துக் கேட்டாள்.

"ஆமாம்" என்றான் சுந்தரம்.

"எதற்காக ....?

" இது என்ன கேள்வி? ஜாதகம் எதற்காக அனுப்புவார்கள்? கல்யாணத்திற்குத்தான் ...."

"அது சரி, குறிப்பாக பவானியை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள் ..."

"வேறு எந்தக் குறிப்பும் இல்லை. அவள் கல்யாணமாகாத பெண். இது போதாதா?"

"என் கணவர் திருமணம் செய்துகொள்ள விரும்பும் பெண்ணையே நீங்களும் ஏன் திருமணம் செய்துகொள்ளப் போட்டி போடுகிறீர்கள்?" என்று கேட்டாள் வனஜா.

சுந்தரம் சிரித்தான். பிறகு, "வனஜா, உங்களைப் பார்க்க எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. உறுதியாகவும் ,வாதத் திறமையோடும் பேசவும், சிந்திக்கவும் தெரிந்த நீங்கள்கூட இப்படிக் குழப்பத்திற்கு உள்ளானதைப்பற்றி எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. உங்கள் கணவருக்குத் தான் சந்திக்கும் பெண்களையெல்லாம் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்படுகிறது என்பதற்காக, உலகமே அவருக்கு வழி விடவேண்டுமா ....? நீங்கள் வேண்டுமானால் நளாயினி மாதிரி உங்கள் கணவரின் எல்லா விருப்பத்தையும் பூர்த்தி செய்ய விரும்பலாம். அதற்கு நான் ஒத்துழைக்க வேண்டுமென்றோ, அவர் விரும்பிவிட்டார் என்பதற்காக நான் விலக வேண்டும் என்றோ நீங்கள் எப்படி எதிர்பார்க்கலாம் ..." என்றான்.

"மிஸ்டர் சுந்தரம், உங்களை எனக்கு நன்றாகத் தெரியும். நீங்கள் வேண்டுமென்றே மறைத்துப் பேசுகிறீர்கள், எனக்கு நன்மை செய்வதாக நினைத்துக்கொண்டுதான் நீங்கள் பவானியை மணக்கத் துணிந்திருக்கிறீர்கள். உங்கள் மனம் எனக்குத் தெரியும்" என்றாள் குரல் தழ தழக்க.

"இல்லை, உங்கள் நன்மைக்காக நான் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று என்ன அவசியம்? நான் என் நன்மைக்காகத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன் .... " என்றான்.

வனஜா, தடுமாற்றமும் ஆத்திரமுமாக, "மிஸ்டர் சுந்தரம், அவசியமானால், நம் நட்பையும் மீறி உங்களுக்கு எதிராக நான் காரியங்கள் செய்யவேண்டியிருக்கும்" என்றாள்.

சுந்தரம் புன்னகையுடன், "வனஜா, நட்பு வேறு, திருமணம் போன்ற சொந்த விவகாரம் வேறு என்பதை உங்கள் மூலமாகத்தான் நான் தெரிந்துகொண்டேன். நீங்கள் சொன்னதை நீங்களே கடைசிவரை கடைபிடித்தால் நல்லது .... இல்லாவிட்டால் உங்கள் இஷ்டம் .... " என்றான்.

இதற்கு மேல் வனஜாவால் எதுவும் பேசமுடியவில்லை. எரண்டு நிமிஷம் மௌனமாக அமர்ந்திருந்தாள்.பிறகு, அந்த அறையைவிட்டு வெளியேறி, அவன் தாயைத் தேடிச் சமையல் அறையை அடைந்தாள்.

அப்போது .....

அந்த வீட்டு வாசலிலிருந்து ஜெயராமன் சாலையில் இறங்கி நடப்பதைக் கண்டாள்.

என்ன இது? அவரா? வாசல்வரை சென்று பார்த்தால். ஜெயராமன்தான்! அவன் முதுகுப்புறம் தெரிந்தது.

'இவர் எங்கே வந்தார்? இங்கு அவருக்கு என்ன வேலை இருக்கிறது? என்ற குழப்பத்துடன் சுந்தரத்தின் தாயாரை நெருங்கி, "வெளியே ஒருவர் போகிறாரே, அவர் யாரைத் தேடி வந்தார், அம்மா?" என்று கேட்டாள்.

"சுந்தரத்தைப் பார்க்க வந்தார். நீயும் சுந்தரமும் ஏதோ தனியாகப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள் என்றேன். "ஓ, அப்படியா?" என்று கேட்டுவிட்டு வெளியே போய்விட்டார்." என்று, சர்வசாதாரணமாகப் பதில்சொன்னாள் அந்தத்தாய்.

அதைக் கேட்டு, குழப்பத்துடன் செய்வதறியாது நின்று விட்டாள் வனஜா.

# 27

இன்ப முதிர்ந்த முதிர்வே சக்தி
எண்ணத் திருக்கும் எரியே சக்தி

\- பாரதியார்.

**வ**ழக்கத்திற்கு மாறாக அன்று விடியற்காலையிலேயே விழித்துக் கொண்டுவிட்டான் ஸ்ரீதர். அறையிலிருந்து "வெனீஷியன் ஷட்டர்'களை விலக்கி வெளியே பார்த்தான். மார்கழி மாத்து அதிகாலை நேரம். பனிப்படலம் புகைபோல் மண்டியிருந்தது.எங்கோ தொலைவிலிருந்து வசந்தகுமாரியின் இனிய குரலில் திருப்பாவைப் பாட்டு தவழ்ந்து வந்தது. அந்த உஷத்கால இன்மையை ரசித்தவாறு சிறிது நேரம் நின்றிருந்தான்.

இரவெல்லாம் அவன் சரியாகவே தூங்கவில்லை. புது வருஷத்தை வரவேற்கக் கிளப்பிற்குச் சென்ற பின் வீடு திரும்பியதே ஒரு மணிக்குத்தான். ஆனால், அதன் பிறகும் தூக்கம் வராமல் புரண்டி புரண்டு படுத்தான். அவனை அந்த நிலைக்கு ஆளாக்கியவன், குமார்தான்.

முதல்நாள் இரவு, கிளப் அங்கத்தினர்கள் புத்தாண்டை வரவேற்றதுடன், அந்த ஒளியில் குமாரைத்தான் கண்டாள் பவானி, முதலில் ஒருகணம் அவளுக்கு அதிர்ச்சியாக இருந்தபோதிலும், அடுத்தகணம் தன்னைச் சமாளித்துக்கொண்டு, 'அவனிடம் பேசினாள்'.

முதலில் குமாரின் குரல் கம்மியிருந்தது. அந்த இடத்தில, அந்த நிலையில் அவன் பவானியைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அவனைப் பொறுத்தவரை பவானி ஒரு நடைப்பிணந்தான்! வாழ்க்கையில் எதற்கும் பயனற்ற ஒரு பிரகிருதியாகத்தான் அவன் பவானியைக் கருதியிருந்தான். அப்படியிருக்க, அழகு தேவதையாக, நிதானம் தவறாமல் 'ஹலோ' என்று அவள் அழைத்தால், குமார் தடுமாறாமல் என்ன செய்வான்.

சுதாவை அறிமுகம் செய்துவைத்த பிறகு குமாரின் பக்கத்தில் நிற்கும் பெண்ணைப்பார்த்து, "உங்கள் மனவியா?" என்று அடுத்தக் கேள்வியைக் கேட்டாள் பவானி.

"ஆமாம் .... யெஸ் .... யெஸ் .... ஷி ஈஸ் மை ஒய்ப் ...." என்று தடுமாறினான் குமார்.

தனக்குத் திருமணமாகிவிட்டது என்பதைச் சொல்லிவிடுவது நல்லது என்று அவசரப்பட்டு, பதட்டத்துடன் சொல்வதுபோல் இருந்தது அவன் குரலில் இருந்த வேகம்.

"ஓ ......" என்ற பவானி, "என் பெயர் பவானி ..... உங்கள் கணவரின் கல்லூரித் தோழி ...... " என்று தன்னைத் தானே அந்தப்பெண்ணிடம் அறிமுகப்படுத்திக்கொண்டாள்.

"என் பெயர் பிருந்தா ......" என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டாள் அந்தப் பெண்.

அப்போதுதான், தன் மனைவியைப் பெயர் சொல்லி அறிமுகப்படுத்தாத அசட்டுத்தனம் குமாருக்குப் புரிந்தது.

இதற்குள் ஸ்ரீதர் அவர்களை நெருங்கிவிட்டான்.

ஏனோ ஸ்ரீதருக்கு குமாரைப் பார்க்கவே பிடிக்கவில்லை. தன் தங்கையின் வாழ்க்கையைக் கெடுத்த அயோக்கியன் என்ற ஆத்திரம் அவனிடம் கொந்தளித்தது. இருப்பினும் அங்கு, பல பிரமுகர்கள் கூடி இருக்கும் அந்த இடத்தில, தன் ஆத்திரத்தைக் காட்டிவிடக்கூடாது என்று, தன்னைத்தானே அடக்கிக்கொண்டு, பவானியின் பக்கம் பார்த்து," போகலாமா, பவானி .... ரொம்ப நேரமாகிவிட்டதே ...." என்றான்.

"என்னண்ணா அவசரம்? இன்னும் கொஞ்ச நேரம் இருந்துவிட்டுப் போவோமே" என்றால் பவானி.

இந்தப் பதிலை அவன் எதிபார்க்கவில்லை. "சரி,... " என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போய்விட்டது ஸ்ரீதருக்கு.

பவானி வேண்டுமென்று தான் கொஞ்சநேரம் தங்க விரும்பினாள். குமாருடன் பேச்சுக் கொடுக்கவேண்டும் என்று தோன்றியது அவளுக்கு. அவன் இப்போது என்ன செய்கிறான் என்று அறிந்துகொள்ள அவள் துடித்தாள். எனவே, குமார் பக்கம் திரும்பி, " ஸோ .... ஹௌ ஆர் யூ, குமார் ...? இப்போ என்ன செய்கிறீர்கள்? எனி பிஸினஸ் ....?" என்று கேட்டாள்.

"இல்லை, பாரி அண்ட் கம்பெனியில் ஒரு பிரிவு மானேஜராகப் பணியாற்றுகிறேன் ......" என்றான் குமார்.

"எத்தனை குழந்தைகள்?"

"ஒரே ஒரு பையன்தான்.... "

"குட் .... அவனை நான் பார்க்க வேண்டுமே .... "

"ஷ்யூர் .... வீட்டிற்கு ஒருநாள் வாயேன் .... "

"அப்பப்பா ..... நான் இப்படிக் கேட்ட பிறகுதான் வீட்டிற்கே அழைக்கத் தோன்றியதோ ?"

" ஐயாம் ஸாரி,.... ஐ அபாலஜைஸ்!"

" சின்ன விஷயத்திற்கு ஏன் இவ்வளவு பெரிய வார்த்தை, மன்னிப்புக் கேட்கவேண்டிய பெரிய விஷயங்களுக்குக் கூட நாம் 'ஸாரி' சொல்வதில்லை .. .... இதற்குப்போய் "அபாலஜி' கேட்கிறீர்களே!"

எதையோ மனத்தில் வைத்துக்கொண்டு தன்னைக் குத்திக்காட்டுகிறாளோ இவள் என்று எண்ணினான் குமார். அவனை மேலே சிந்திக்க விடாமல், "குமார் ... வாருங்களேன், டான்ஸ் ஆடலாம் ...." என்று அழைத்துவிட்டாள் பவானி.

அந்தக் கிளப்பின் நடுக்கூடத்தில், ஆணும் பெண்ணும் இணைந்து நடனமாடிக்கொன்டிருந்தனர். அந்தக் கிளப்பின் நாகரிகப்படி, ஒரு பெண் ஒரு ஆடவனை நடனமாட அழைத்தால், அவன் மறுக்கக் கூடாது. 'எனக்கு நடனமாடத் தெரியாது' என்று குமாரால் சொல்ல முடியவில்லை. அவனுக்கு என்னென்ன தெரியும், என்னென்ன தெரியாது என்பதைத்தான் மனப்பாட்டம் செய்து வைத்திருக்கிறாளே பவானி.

"எக்ஸ்க்யூஸ் மி, பிருந்தா ..." என்று மனைவியிடம் சொல்லிவிட்டு, பவானியின் கையைப் பிடித்துக்கொண்டு, நடன அரங்கில் நுழைந்து விட்டான் குமார். இருவரும் ஒருவரை ஒருவர் லேசாக அணைத்தவாறு இசைக்கேற்ப நடனமாடினர். வெளியே, பிருந்தாவும் சுதாவும் ஏதோ பேசிக் கொண்டனர்.

ஸ்ரீதரால் இந்தக் காட்சியைத் தாங்கமுடியவில்லை. இம்மாதிரி நடனமாடுவது தவறு என்று கருதுபவன் அல்ல அவன். ஆனால், எந்த நினைவை மறந்து, எந்த எண்ணங்களைத் துறந்து பவானி வாழ்கிறாளோ, அந்த நினைவும், எண்ணங்களும் அவளிடம் மீண்டும் ஏற்பட்டு, அவள் உடல்நிலை பாதிக்கப்படுமோ என்று என்று அஞ்சினான். சருகாய்க் கிடந்த தங்கையைப் பசுமையாக்கப் பாடுபட்டதை எண்ணி, அந்தப் பாடெல்லாம் வீணாகிவிடுமோ என்று பயந்தான். அவன் முகத்தில் கலவரத்தின் சாயை தெளிவாகத் தெரிந்தது. கடைக் கண்ணால் பார்த்து, அந்தக் கலவரத்தைப் புரிந்துகொண்டாள் சுதா. இருப்பினும், எதையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல், சகஜமாகப் பேசிக்கொண்டிருந்தாள்.

நடன அரங்கில் நடனமாடியபடியே பவானியும் குமாரும் தங்களுக்குள் ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். அவள் ஏதோ கேள்வி கேட்க, அவன் ஏதோ பதில் சொல்வதுதான் வெளியே இருந்த ஸ்ரீதருக்குப் புரிந்தது. 'ஸ்லோ மியூசிக்' முடிந்து 'பாஸ்ட் மியூசிக்' ஆரம்பித்தது. இணைந்து இருந்த ஜோடிகள், விலகி நின்று, குனிந்தும் நிமிர்ந்தும் இசைக்கு ஏற்ப உடலைக் குலுக்கியவாறு ஆட ஆரம்பித்தனர். அந்த இசை, அந்த நடனம் எல்லாம் குமாருக்கும் , பவானிக்கும் கை வந்த விஷயங்கள். இருவரும் மிக அழகாக ஆடினர். அது அங்கிருந்த அனைவருக்குமே ஒரு விருந்தாக அமைந்தது.

இரவு வீடு திரும்பும்போது, ஸ்ரீதர் தங்கையிடம் எதுவும் பேசவில்லை. எதாவது கேட்கப்போய், ஏதாவது விபரீதம் நிகழ்ந்துவிடப்போகிறதே என்று அஞ்சியே, மௌனம் சாதித்தான் அவன். சுதாவை அவள் வீட்டில் விட்டுவிட்டு, தன் வீட்டை அடைந்தான். அண்ணனுக்கு 'குட் - நைட்' சொல்லிவிட்டுத் தன் அறைக்குள் சென்றுவிட்டாள் பவானி.

இந்த நிகழ்ச்சிகள்தான் ஸ்ரீதரைத் தூக்கமின்றித் தவிக்க வைத்தன.

குமாரின் சந்திப்பு, பவானியிடம் என்னென்ன புதுக்குழப்பங்களை உண்டாக்கப் போகிறதோ என்று பயந்தான். அவளும் அவனும் நடன அரங்கில் தனிமையில் என்னென்ன பேசியிருப்பார்களோ என்று எண்ணிக் கலங்கினான்.

திருப்பாவைப் பாடல், ஜன்னல் அருகே நின்றிருந்த ஸ்ரீதரின் சிந்தனையைக் கலைத்தது. சீக்கிரம் குளித்துவிட்டு, மாடிக்குச் சென்று, பவானிக்குப் 'புத்தாண்டு வாழ்த்து'க் கூறவேண்டும் என்று தீமானித்து,பாத்ரூமிற்குள் நுழைந்தான் ஸ்ரீதர்

ஷைகவாஸ்க்கியின் ஓர் இனிமையான டியூனைத் தன்னைமறந்து, கண்மூடி, பியானோவில் இசைத்துக் கொண்டிருந்தாள் பவானி. அவளுக்கும் முதல் நாள் இரவு சரியான தூக்கம் இல்லை. அதிகாலையில் எழுந்து குளித்துவிட்டு, பியானோவின் முன்னால் அமர்ந்துவிட்டாள். அவளுக்குப் பிடித்தமான சில டியூன்களை இசைத்து அதிலே ஒரு தன்னிறைவைக் கண்டுகொண்டிருந்தாள் அவள்.

அப்போதுதான் .......

"குட் மார்னிங், பவானி .... விஷ் யூ வெரி ஹாப்பி நியூ இயர் ....." என்று குரல் கொடுத்தவாறு உள்ளே நுழைந்தான் ஸ்ரீதர்.

" தாங்க்யூ அண்ணா, விஷ் யூ தி ஸேம் .... " என்று கூறி, பியானோ ஸ்டூலைச் சுழற்றி, அண்ணன் பக்கம் திரும்பினாள் பவானி.

" ஹௌ ஆர் யூ?" என்று கேட்டபடி, தனக்கு எதிரில் இருந்த ஒரு பிரம்பு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான் ஸ்ரீதர்.

"இது என்ன புதுக் கேள்வி? நான் நன்றாகத்தான் இருக்கிறேன் .... " என்றாள் பவானி.

"நன்றாகத் தூங்கினாயா?"

"அதுதான் இல்லை, அண்ணா .... தூக்கமே வரவில்லை .... "

"ஏன்?'"

"அதற்கு காரணமும் புரியவில்லை ..... "

ஸ்ரீதர் மனத்தில் பயம் ஏற்பட்டது; தான் பயந்தது நடந்து விட்டதோ என்று அஞ்சினான்.

"நேற்று இரவு கிளப்பிலிருந்து நாம் சீக்கிரம் திரும்பி இருக்க வேண்டும் ...."

"ஏன் அண்ணா அப்படிச் சொல்கிறாய்?"

"இல்லை .... நேரம் கழித்து வந்ததால்தான் உன் தூக்கம் கெட்டுவிட்டதோ என்று நினைக்கிறேன் ....."

"நோ .... நோ ... நேற்றைய தினம் கிளப்பை நான் மிகவும் ரசித்தேன்.... அதிலும் குமாரைச் சந்தித்ததில் எனக்கு ரொம்பவும் சந்தோஷம் .... " என்று கூறி, தரையில் பார்வையைப் பதித்தாள் பவானி.

அவள் குரலும், பார்வையும் ஸ்ரீதரை 'என்னவோ' செய்தன. 'ஒருவேளை நாம் பயந்ததுபோல் அவள் மனத்தில் பழையஎண்ணங்கள் தோன்றிவிட்டனவோ?அந்தக்குமாரை நினைத்து இவள் மறுபடியும் ஏங்க ஆரம்பித்துவிடுவாளோ?

"பர்கெட் ஹிம், பவானி .நாணயமில்லாத இளைஞன், அவனைப் பற்றி இனி நமக்கென்ன .." என்றான் ஸ்ரீதர்.

இதைக் கேட்டதும் சட்டென்று அண்ணனை நிமிர்ந்து பார்த்தாள் பவானி. அவள் பார்வையின் பொருளைப் புரிந்துகொள்ள முடியாமல் திணறினான் ஸ்ரீதர்.

"அண்ணா, நீ என்ன நினைக்கிறாய், எதை நினைத்துப் பயப்படுகிறாய் எனபது எனக்கும் புரிகிறது. டோன்ட்ஒர்ரி .... நீ நினைப்பதுபோல் எதுவும் நடந்துவிடாது. நான் பழைய பவானி இல்லை. இப்போது கொஞ்சம் உலகம் தெரிந்தவள். நேற்று டான்ஸ் ப்ளோரில் குமாருடன் நிறைய பேசிக்கொண்டிருந்தேன். அதை நினைக்க நினைக்க எனக்கு மிகவும் வியப்பாக இருக்கிறது. இளம் வயதில் ஒவ்வொருவரும் எப்படி அசட்டுத்தனமாகக் கற்பனை காண்கிறார்கள், பேசுகிறார்கள்! பிறகு, வாழ்க்கை எவ்வளவு அர்த்தபுஷ்டியுடன் அமைந்து விடுகிறது! இதே குமார் ஒரு காலத்தில் என்னிடம், 'உன்னைக் கல்யாணம் செய்து கொண்டால்தான் எனக்கு வாழ்க்கையே நிறைவுபெறும்' என்றெல்லாம் சொன்னதாக நினவு. எனக்கும்கூட அவர் இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டுவிட்டால் வாழ்க்கையே சூன்யமாகிவிடும் என்று தோன்றியதுண்டு. ஆனால் இப்போது பாருங்கள் அவர் வேறு ஒரு பெண்ணை திருமணம் செய்துகொண்டு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறார். எனக்குங்கூட, அவர் இன்னொரு பெண்ணை திருமணம் செய்துகொண்டு மகிழ்ச்சியாக வாழ்வதைப் பற்றி ஒன்றுமே வித்தியாசமாகத் தோன்றவில்லை. பொறாமையோ, கவலையோகூட ஏற்படவில்லை. மனம் வளர வளரத்தான் வாழ்க்கையின் உண்மையான அர்த்தங்களை நாம் புரிந்துகொள்கிறோம்...... என்றாள் .

அவளுடைய தெளிவான பேச்சைக் கேட்டு ஸ்ரீதர் பிரமித்துப்போய் நின்றான். இவ்வளவு தெளிவாக, உணர்ச்சிவசப்படாமல் பேச இவள் எங்கிருந்து கற்றாள் என்று ஆச்சரியப்பட்டான்.

"பவானி .... " என்று உணர்ச்சி போங்க அழைத்து, "உன்னை நினைக்க நினைக்க எனக்குப் பெருமையாக இருக்கிறதம்மா .... " என்றான்.

" தாங்க்யூ, அண்ணா .... " என்று, அந்தப் பாராட்டைப் பெற்றுக்கொண்ட பவானி, "என்ன, இன்னும் சுதாவைக் காணோம் ? ஏழு மணிக்கே வந்து எனக்கு " ஹாப்பி நியூ இயர் சொல்கிறேன் என்றாளே .... " என்றாள்.

"பாவம் தூங்கி இருப்பாள் ...... என்றான்.

"அவளுக்காக இப்போதே 'பாவம்' சொல்ல ஆரம்பித்துவிட்டாயா?" - கேலியில் இறங்கினாள் பவானி.

"ஓ .... ஸ்டாப் இட் ...." என்றவன், "பவானி, புது வருஷம் அதுவுமா உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி பேசப்போகிறேன். உன் கருத்தைத் தெரிந்துகொண்ட பிறகே அந்த விஷயத்தில் முன்னேற இருக்கிறேன் .... " என்று பீடிகை போட்டான்.

"அண்ணா, இந்தப் பீடிகை எல்லாம் வேண்டாம். எனக்கு சஸ்பென்ஸே பிடிக்காது எனபது உனக்குத் தெரியும். விஷயம் என்ன? சொல் .... "

"உனக்கு வெகு விரைவில் திருமணம் செய்துவிட வேண்டும் என்று ஆசைப்படுகிறேன் .... " என்றான்.

"அப்படியா? தாங்க்யூ ...... உனக்கும் அது ரொம்ப அவசரமோ, அண்ணா ....." என்றாள் சிரித்துக்கொண்டே.

"ஏன் அப்படிக் கேட்கிறாய்?"

"எனக்கு ஆனால்தான் உனக்கும் ஆகும். வே க்கிளியராகவில்லை என்று பார்க்கிறாயாக்கும் ..... ஊம் .... முயற்சி செய் ..... விஷ் யூ ஆல் தி பெஸ்ட் .... விரைவில் உனக்கு ஒரு பிரதர்இன்லா வரட்டும் ...." என்றாள் சிரித்துக்கொண்டே.

" தாங்க்யூ ... வந்து ... இது சம்மந்தமாக உன் தனிக் கருத்து ஏதாவது இருந்தால் .... "

ஜெயராமனைப் பற்றி அவள் ஏதாவது சொல்கிறாளா என்று அறிய விரும்பியே, இப்படி ஒரு கேள்வியைக் கேட்டான் ஸ்ரீதர்.

"நத்திங் பர்டிகுலர் .... என்னை உனக்குத் தெரியும். எனக்கு எப்படிப்பட்ட கணவர் வந்தால் நன்றாக இருக்கும் என்று நீ நினைக்கிறாயோ, அப்படிப்பட்ட இடத்தைப் பார் .... " என்று கூறி அவன் சந்தேகத்தைப் போக்கினாள் பவானி.

"குட் ..... சுந்தரம் என்று ஒரு பையனின் ஜாதகத்தைப் பார்த்தேன் ..... ஜாதகம் பொருத்தமாக இருக்கிறது. பையன் சாதாரண வேலையில்தான்இருக்கிறான். அது ஒரு பெரிய பிரச்சனை இல்லை. திருமணமான பிறகு அதை ராஜிநாமா செய்யச் சொல்லிவிட்டு, நம் கம்பெனியில் பெரிய வேலை போட்டுக் கொடுத்துவிடலாம். பையனின் நடவடிக்கைகளை ஆராய்ந்த பிறகே முடிவு செய்ய வேண்டும் .... " என்றான்.

"குட் ..... முதலில் நீ ஆராய்ச்சி செய்துவிட்ட, பிறகு என் ஆராய்ச்சிக்கு அனுப்பு" என்றாள் பவானி சிரித்துக்கொண்டே.

அப்போது -

வேலையாள் ஒருவன் பவானிக்கு எக்ஸ்பிரஸ் டெலிவரியில் வந்த ஒரு கடிதத்துடனும், ஒரு காகிதத்துடனும் மேலே வந்தான். எண்ணைப் பார்த்துக் கையெழுத்துப் போட்டாள் பவானி.

அதனுள் ......

ஒரு புகைப்படம் காணப்பட்டது .

அத்துடன், 'இதில் இருப்பவரை நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். பிறகு, இவர் நம்பிக்கைக்கு உரியவரா என்று யோசித்துக்கொள்ளுங்கள்' என்று ஒரு குறிப்பு காணப்பட்டது.

அந்தப் படத்தை உற்றுப் பார்த்த பவானி, "அண்ணா, எனக்கு ஒன்றுமே புரியவில்லையே. இது யாருடைய படம்?" என்று கேட்டு, அந்தப் படத்தை ஸ்ரீதரிடம் கொடுத்தாள்.

அதை வாங்கிப் பார்த்த ஸ்ரீதரின் முகம் சுருங்கியது.

"நான் சற்று முன்பு சொன்னேனே சுந்தரம் என்ற ஒரு பையன், இவன்தான் அது ..... " என்றான் ஸ்ரீதர்.

"ஐ ஸி! அது சரி, உடன் இருக்கும் அந்தப் பெண் யார்?" என்று கேட்டாள் பவானி.

"அவள்தான் வனஜா, ஜெயராமனின் மனவி .... " என்று வறண்ட குரலில் பதில் சொன்னான் ஸ்ரீதர்.

அதைக் கேட்டதும் பவானியின் முகம் சுருங்கியது.

# 28

பெண்ணறத்தினை ஆண்மக்கள் வீரந்தான்
பேணுமாயின் பிறகொரு தாழ்வில்லை.

- பாரதியார்

'**சு**வாமி சின்மயானந்தாவின் பிரசங்கங்கள்' என்ற புத்தகத்தை ஆழ்ந்து படித்தவாறு, சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தான் ஜெயராமன். கடந்த இரண்டு நாட்களாக மாலை வேளைகளில் அந்தப் புத்தகத்தைப் படிப்பதுதான் அவனுடைய பொழுது போக்காக இருந்தது. எல்லோரையும் போல், விரக்தியினால்தான் வேதாந்தத்திற்கு வந்திருந்தான் அவன். இருப்பினும், சுவாமிஜியின் கருத்துக்களும் உவமைகளும், இக்காலத்திற்கேற்ப அவர் கூறும் உண்மைகளும் அவனை வெகுவாகக் கவர்ந்தன.

"மனம் ஏன்றால் என்ன? அது எங்கிருக்கிறது? தலையில் இருக்கிறதா? இதயத்தில் இருக்கிறதா? மனிதனிடம் மனம் எங்கிருக்கிறது? என்ற கேள்வியைக் கேட்டு, அதற்கான அற்புதமான விளக்கத்தைத் தந்திருந்த சுவாமிஜி 'நீரோடை' போன்ற தம் ஆங்கில மொழியில், தேன் சிந்தும் மலர்களாகக் கொட்டியிருந்த பல கருத்துக் குவியல்களை அவன் ரசித்துக் கொண்டிருந்தான்.

அப்போதுதான் .......

"அண்ணா .... " என்று உற்சாகமாக அழைத்தவண்ணம் உள்ளே வந்தாள் சுதா. வந்தவள் அண்ணன் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்து, "என்ன அண்ணா இது? என்றாள்.

"இங்கிலீஷ் தெரியுமில்லையா? அட்டையில் போட்டிருக்கிறதே ...... என்ன கேள்வி?" என்றான் ஜெயராமன்.

"தெரிகிறதனால்தான் கேட்கிறேன். சாயங்கால வேளையும், அதுவுமாக இந்தப் புத்தகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிராயே என்றுதான் கேட்டேன் .... "

"எந்த வேளையிலும் படிக்கக் கூடிய சிறந்த நூல் இது...."

"இருக்கலாம். ஆனால், வேதாந்த நூல் படிக்கிற அளவிற்கு உனக்கு இன்னும் வயதாகி விடவில்லை. அதை மறந்து விடாதே .... " என்றாள்.

ஜெயராமன் சிரித்தான். பிறகு, "நான்கூட முதலில் என் மனத்தில் ஏற்பட்டிருக்கும் விரக்தியையும் வேதனையையும் போக்கிக்கொள்ளத்தான் இந்த நூலை நாடினேன். பிறகுதான் இதில், நான் நினைத்ததை விட இன்னும் கொஞ்சங்கூட விஷயங்கள் இருக்கின்றன என்பது புரிந்தது. அதோடு, வாழ்க்கையில் இப்படிப்பட்ட பெரிப விஷயங்களில் ஈடுபாடு கொள்வதுதான் நிரந்தரமான சுகம் அளிக்க வல்லது என்பதையும் உணர்ந்துகொண்டேன். இந்த ஈடுபாட்டில் ஏமாற்றமே இல்லாத சுகம் கிடைக்கிறது, சுதா, ..... " என்றான் மனக்குமைச்சலுடன்.

"என்ன அண்ணா இது? ஏன் இந்த சலிப்பு? உனக்குத் திடீரென்று என்ன ஆயிற்று?" என்று பதட்டத்துடன் கேட்டாள் சுதா.

"எனக்கு ஒன்றும் ஆகாமல் இருக்கிறதே, அது போதாதா?"

"அண்ணா, விஷயத்தை நேரிடையாக என்னிடம் சொல் .... உனக்காக நான் எந்தக் காரியத்தையும் செய்யத் தயாராக இருக்கிறேன், ஏன் - செய்துகொண்டும் இருக்கிறேன் .... " என்றாள் சுதா.

"பைத்தியக்காரி, நீ எனக்கு என்ன செய்ய இருக்கிறது! ஒரு சகோதரனான நான், உன் வாழ்க்கைக்கு விடிவு எற்படுத்தச் செய்யும் முயற்சிகளே ஒன்றன்பின் ஒன்றாகக் கை நழுவிப் போகிறது ...... ஊம் .... " என்று கூறிப் பெருமூச் செறிந்தான் ஜெயராமன்.

"எதைப்பற்றி அண்ணா சொல்கிறாய்?" என்று உண்மையிலேயே புரியாமல் கேட்டாள் சுதா.

"உன்னை ஸ்ரீதர் மணந்துகொள்வதற்குத் தடையாக இருப்பது பவானியின் திருமணந்தான் என்பதை அறிந்து, என் சொந்த விருப்பு வெறுப்புகளைக்கூட ஒதுக்கிவிட்டு, வேண்டுமானால் பவானியையே திருமணம் செய்து கொள்ளலாம் என்றுகூட எண்ணினேன் ........"

ஜெயராமன் முடிக்கும் முன் சுதா மகிழ்ச்சியுடன் குறுக்கிட்டாள்.

"அதுதான் நான் அல்லும் பகலும் கனவு காணும் முடிவு ஆயிற்றே! அதில் உன் வெறுப்பு வெறுப்புகளை ஒதுக்குவதற்கு என்ன இருக்கிறது? நீ விருப்பத்துடன் நிறைவேற்றகூடிய முடிவாயிற்றே அது ..." என்றாள்.

"இல்லையம்மா ..... வனஜாமீது எனக்கு எவ்வளவு கோபமிருந்தாலும், எவ்வளவுதான் அவளோடு சேர்ந்து வாழ எனக்குக் கொடுத்துவைக்காமல் இருந்தாலும் அவளை என்னால் 'நடத்தை கேட்டவள்' என்று மனப்பூர்வமாகத துறந்து புறக்கணிக்க முடியாமல் இருந்தது. உண்மையில் அவள் தூய்மையானவளாகஇருந்து, நான் அவள் தூய்மைக்கு மாசு கற்பித்துவிட்டு ஒதுக்கிவிட்டால், எனக்கு மீண்டும் பழி ஏற்பட்டுவிடுமே என்று நான் யோசித்ததுண்டு. அப்படி ஒரு பழி ஏற்படக்கூடாது என்பதற்காக நான் ஒரு செயலில் ஈடுபட்டேன். சுந்தரத்திடம் மீண்டும் ஒருமுறை நானே மனம்விட்டுப் பேசவேண்டும் என்று விரும்பினேன். அந்த நோக்கத்துடன்தான் நான் அவனைத் தேடிப்போனேன்.... " - ஜெயராமன் எதையோ நினைத்து வருந்துபவன்போல் முகத்தை வைத்துக்கொண்டு, பேச்சை நிறுத்தினான்.

சுதா பொருமலுடன் பேசினாள்:

"நன்றாயிருக்கிறதண்ணா! நீ அவளைத் தேடிப் போனாயா? நான் உன்னையும் பவானியையும் இணைத்து, உன் வாழ்க்கையில் அமைதி ஏற்படுத்த, படாதபாடு பட்டுக்கொண்டிருக்கிறேன். நீயானால் பழைய உறவைப் புதுப்பிப்பதற் காகச் சுந்தரத்தைத் தேடிப் புறப்பட்டேன் என்கிறாயே .... "

"அவசரப்படாதே, சுதா, நான் சுந்தரத்தைப் பார்க்கப்போனதற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது ...."

"என்ன?"

" நீ எவ்வளவுதான் துடித்தாலும் பவானி விஷயத்தில் அவளுடைய அண்ணன் ஸ்ரீதரின் துடிப்பு என் பக்கம் இல்லை என்பதை நான் அறிவேன். யாருக்குத்தான் இருக்கமுடியும்? தன் சகோதரியை, ஏற்கெனவே திருமணமாகி, ஒரு குழப்பத்தில் சிக்கிக்கொண்டிருக்கும் ஒருவனுக்குக் கொடுக்க எந்த சகோதரனுக்குத்தான் மனம் வரும்? அப்படி ஓர் இடத்தில் உன்னைக்கொடுக்க நான் சம்மதிப்பேனா? ஸ்ரீதர் என்னைத் தம் வீட்டு மாப்பிள்ளயாக்க விரும்பாததில் தவறில்லை. அவர் மனம் சுந்தரம் பக்கம் திரும்பியிருந்ததைக் கேள்விப்பட்டேன். எனக்கு ஒரு விதத்தில் அதுவும் சரிதான் என்று தோன்றியது. எப்படியோ பவானிக்கும் சுந்தரத்திற்கும் திருமணம் ஆகிவிட்டால் கூட, ஸ்ரீதர் உன்னை மணம் செய்துகொள்ள வழி பிரந்துவிடுமே .... எனவே, அது விஷயமாகவும் சுந்தரத்திடம் பேசலாம் என்று நினைத்தேன். உன்னுடைய சுபகாரியம் சீக்கிரம் நடக்கட்டும் என்ற காரணத்திற்காகச் சுந்தரத்தைப் பார்க்கச் சென்றேன் ..ஆனால் .... "

"என்ன அண்ணா! போன இடத்தில என்ன ஆயிற்று?"

" வேறென்ன ஆகும்? சுந்தரத்தின் தாய், வீடு வாசலில் உட்கார்ந்திருக்க, சுந்தரமும், வனஜாவும் ரகசியமாக உள்ளே தனியறையில் இருந்தார்கள். அந்தத் தாய் வெட்கமில்லாமல் அவர்கள் ஏதோ தனியே பேசிக்கொண்டிருப்பதாக என்னிடமே கூறுகிறாள் .... " ஆத்திரம் பீறிக்கொண்டு வந்தது ஜெயராமனுக்கு.

"ஊம் ...... நீ நேரில் போய் அந்தக் கண்றாவியைப் பார்த்திருக்கவே வேண்டாம். அவர்கள் விஷயத்தில் நான் என்றோ முடிவு செய்துவிட்டேன்.

"நீயும் நானும் முடிவு செய்வதில் என்னம்மா லாபம்? ஸ்ரீதரின் மனம் சுந்தரத்தின் பேரில் இருக்கிறது. அவர் விருப்பப்படியே பவானிக்கும் சுந்தரத்திற்கும் திருமணம் ஆகிவிடட்டும் என்று நினைத்தால், அவனுடைய துரோக நடத்தை இன்னும் தொடர்ந்துகொண்டுதான் இருக்கிறது. அவன் எப்படி பவானியை மணந்துகொள்வான்? எப்படி உனக்கு விடிவு வரும்? நினைத்தாலே கவலையாயிருக்கிறதம்மா?"

"போ, அண்ணா! நீ வேதாந்தங்களைப் படிக்க ஆரம்பித்து, அநாவசியமாக நியாயம் பேச ஆரம்பித்து விட்டாய். அந்த அயோக்கியன் சுந்தரத்திற்கும் பவானிக்கும் கல்யாணம் செய்வதாவது! அது ஒருகாலும் நடக்காது. ஸ்ரீதர் மனத்தில் ஒரு சபலமாக இருக்கிற அந்த திட்டத்தை உடைத்தெறிய, நான் ஏற்பாடு செய்துவிட்டேன். இனி ஸ்ரீதரோ, பவானியோ சுந்தரத்தை நினைத்துப் பார்க்கமாட்டார்கள். நீ நியாயமான காரணத்துடன்தான் வனஜாவை ஒதுக்கி வைத்திருக்கிறாய்

என்பதை அவர்களே புரிந்துகொள்வார்கள். அதைப் புரிந்து கொண்டதும், ஸ்ரீதரே விரும்பி அழைத்து, பவானியை உன்னிடம் ஒப்படைப்பார் ....." என்றாள் பெருமிதமான குரலில்.

"என்ன சொல்கிறாய், சுதா, நீ என்ன செய்தாய்?" என்று புதிருடன் கேட்டான் ஜெயராமன்.

"சுந்தரம் வனஜா, இருவருக்கிடையேயுள்ள சந்தேகத்திற்குரிய நட்ப்பைப் பற்றி, சந்தேகத்திற்கு இடமில்லாமல் ஸ்ரீதரும் பவனியும் தெரிந்துகொள்ள, அவர்கள் இருவரும் இணைந்திருந்த 'போட்டோ' ஒன்றை கண்டுபிடித்து, பவானி பேருக்கு அனுப்பி விட்டேன். பவானி அதைப் பார்த்துவிட்டு, தன் அண்ணனிடம் காட்டுவாள். அப்போது ஸ்ரீதரும், சுந்தரத்தின் யோக்கியதையைப் புரிந்துகொள்வார் ....... சுந்தரத்தின் மேல் இப்போது அவருக்கு ஏற்பட்டிருக்கும் மோகம் குறையும், இல்லை இல்லை மறையும். நியாயத்தின் பக்கம் நின்று, அநியாயக்காரப் பெண் ஒருத்தியால் வஞ்சிக்கப்பட்ட உன்னைப் பற்றி அவர் நிச்சயம் நினைப்பார். பவானிக்கும் உனக்கும் திருமணம் நடந்தேதீரும் ....." என்று உணர்ச்சியுடன் பேசி முடித்தாள்.

தங்கையையே உற்றுப் பார்த்தான் ஜெயராமன். 'எவ்வளவு 'பெரிய' காரியம் செய்திருக்கிறாள் இவள்?' என்று எண்ணிக் கலங்கினான் அவன்.

அப்போது ........

அவர்கள் வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

"யாராயிருக்கும்?" என்ற நோக்குடன் வெளியே வந்தாள் சுதா. காரிலிருந்து இறங்கும் நபரைப் பார்த்ததும், அவள் முகம் வியப்பால் மலர்ந்தது. அவசர அவசரமாக மீண்டும் அவனை நெருங்கி, "அண்ணா, யார் வந்திருக்கிறார்கள் என்று வந்து பாரேன் ....." என்று படபடப்புடன் கூறினாள்.

"யார் வந்திருக்கிறார்கள்?" என்று நிதானமாகக் கேட்டவண்ணம் தலையுயர்த்திய ஜெயராமன், காரிலிருந்து இறங்கி வீட்டுக்குள் நுழைந்துவிட்ட பவானியைக் கண்டு வியப்படைந்தான்.

"வா பவானி வா! வலதுகால் எடுத்துவைத்து உள்ளே வா ....." என்று பூரிப்புடன் கூறியவாறு அவளை நெருங்கினாள் சுதா.

"உனக்கு நூறு வயது .... " என்றான் ஜெயராமன்.

"தட் ஈஸ் டூ மச் ..... கொஞ்சம் குறைத்துக்கொள்ளுங்கள் ...." என்றாள் பவானி.

"எவ்வளவு குறைக்கலாம் ? ...... பத்து குறைக்கலாமா .....?" ஜெயராமன் கேட்டான்.

" நோ ... நோ .... ஆறு குறையுங்கள். ஆறு வருஷங்கள் இல்லை, ஆறு மாதங்கள் ...... " - கலகலப்பாகப் பேசிக்கொண்டே, எல்லோரும் கூடத்தில் இருந்த சோபாவில் அமர்ந்து கொண்டனர்.

" பவானி, நானும் அண்ணாவும் உங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம். நீயே வந்துவிட்டாய் .... " என்றாள் சுதா.

' பெண்கள் இருவரும் பேசிக்கொள்ளட்டும்'.என்ற முடிவுடன் அந்த இடத்திலிருந்து எழுந்தான் ஜெயராமன்.

அதைக் கவனித்த பவானி, "எங்கே போகிறீர்கள்? நான் உங்களுடன் பேசத்தான் இங்கே வந்தேன் ..." என்றாள்.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம்! என்ன விஷயம்?" என்று சுதா கேட்டாள்.

"நன்றாயிருக்கிறது, இந்தக் கேள்வியை உங்கள் அண்ணா அல்லவா கேட்டிருக்கவேண்டும் ...... அப்படிக் கேட்க்காததிலிருந்து, அவருக்கு நான் வந்ததில் மகிழ்ச்சி இல்லை என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது ..... " இப்படிக் கூறிவிட்டுக் 'கலகல'வென்று சிரித்தாள் பவானி.

"ஐயாம் ரெடி .... பேசுங்கள் .... " என்றான் என்றான் ஜெயராமன்.

" மாலை வேளையில் வீட்டுக்குள் அடைபட்டுக் கொண்டு பேசுவானேன்? எங்கேயாவது வெளியே போகலாமா ..... ?

"ஷ்யூர்! எங்கே போகலாம்? ...."

"சென்னையில் நிம்மதியாகப் பேச 'டிரைவ் இன் ஓட்டலை'த் தவிர வெறு இடம் ஏது? அங்கே போகலாம் ..."

"ஒரு நிமிஷம், பவானி. நான் டிரஸ் செய்துகொண்டு வந்துவிடுகிறேன் ...." என்று எழுந்தாள் சுதா.

அப்போது .......

" சுதா ..... " என்று அழைத்த பவானி, " நீ தவறாக நினைக்கவில்லையென்றால், நானும் உங்கண்ணாவும் மட்டும் தனியாகப் போய் வருகிறோம். அவரிடம் கொஞ்சம் அந்தரங்கமாகப் பேசவேண்டியிருக்கிறது" என்றாள்.

இதைக் கேட்டு, சுதா ஒருகணம் அயர்ந்துபோய் விட்டாள்.

'தன்னை இவள் ஒதுக்க விரும்புகிறாள்' என்பது அவளுக்குப் புரிந்தது. அதே நேரத்தில், அதை வெளிகாட்டிக் கொள்ளக்கூடாது என்ற உணர்வும் மேலோங்கியது. எனவே, கஷ்டப்பட்டுச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு "ஷ்யூர் ...... தாராளமாகப் போய்வாருங்கள் ..... " என்றாள். பிறகு, அண்ணன் பக்கம் திரும்பி, "எப்படிப் பார்த்தாயா? இப்போதே பவானி என்னை ஒதுக்கிவிட்டாள் ..... ஊம் ..... " என்று, கேலியாகக் கூறி, கண் சிமிட்டினாள்.

"இந்தப் பெண் என்னிடம் என்ன பேசப் போகிறாள்? தனிமையில் பேச என்ன விஷயம் இருக்கிறது? நேரிடையாகக் கல்யாணத்தைப் பற்றிக் கேட்டுவிட்டால், என்ன பதில் சொல்வது?" - இப்படியெல்லாம் யோசித்த வண்ணம் குழப்பத்துடன் காரில் ஏறி அமர்ந்தான் ஜெயராமன்.

பவானியோ?

'அவனிடம் என்ன பேசவேண்டும், எப்படிப் பேச்சைத் துவக்க வேண்டும்' என்றெல்லாம் திட்டமிட்டு வைத்திருந்தபடியால், தெளிவான மனத்துடன் இருந்தாள்.

"என்ன சாப்பிடுகிறாய்?" பவானியைப் பார்த்துக் கேட்டான் ஜெயராமன். 'டிரைவ் இன் ஓட்டல்' சர்வர் அவர்கள் முன்னால் நின்றிருந்தான்.

"எனிதிங் ......... நீங்கள் சொல்லுங்கள் ....."

"சரி ..... " என்றவன், சர்வரைப் பார்த்து, "ஆப்பிள் பஜ்ஜி இரண்டு ...." என்றான்.

"அதென்ன ஆப்பிள் பஜ்ஜி?" - பவானி சிரிப்புடன் கேட்டாள்.

"அது இந்த ஓட்டலின் ஸ்பெஷாலிடி .... கம் ஆன், விஷயத்திற்கு வா .... என்ன பேச வேண்டும்? .... " என்று கூறி, தனது பிரம்பு நாற்காலியை இன்னும் சற்று முன்னால் தள்ளிப்போட்டுக் கொண்டான் ஜெயராமன்.

"மிஸ்டர் ஜெயராமன், நான் உங்கள் மனைவி வனஜாவைச் சந்திக்க விரும்புகிறேன் ..... " என்றாள் பவானி.

"அவளை நீ சந்திக்க வேண்டிய அவசியமே இல்லை. அவளால் நமக்கு ஏற்படக்கூடிய பிரச்சனை சீக்கிரமே தீர்ந்துவிடும் .... " என்றான் ஜெயராமன், சற்றுப் பதட்டத்துடன்.

பவானி வியப்புடன் அவனைப் பார்த்து, "நம் பிரச்சனையா? நான் சொல்வதை நீங்கள் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது. நான் உங்கள் மனைவியைப் பார்க்க விரும்புவது, என் சொந்தப் பிரச்னை ஒன்றைப் பற்றிப் பேச, உங்கள் மனைவியின் யோசனை அதற்குப் பயன்படக்கூடும் ......"

அவள் வேறெதையோ பேசுகிறாள் என்றதுமே, ஜெயராமனுக்கு எரிச்சல் ஏற்பட்டது. அதோடு, 'உங்கள் மனைவி' என்று திருப்பித் திருப்பிச் சொன்னதும் அவனுக்குப் பிடிக்கவில்லை.

"பவானி, இப்போது அவள் என் மனைவி என்ற ஸ்தானத்தில் இல்லை. ஏற்கெனவே என் மனத்திலிருந்தும் அவள் நீங்கிவிட்டாள். விரைவில் உலகத்தின் கண் முன்னால் இருக்கும் உறவும் நீங்கப்போகிறது ....." என்றான் விரக்தியுடன்.

"ஓ! உங்களுக்குள் தீவிரமாக மனக்கசப்பு இருக்கிறது போலிருக்கிறது. ஸாரி, நான் அதைக் கிளப்ப விரும்ப வில்லை. உண்மையில் நான் அந்தப் பிரச்சனையின் பக்கம் வரவும் கூடாது ...... ஓகே, நான் அவளிடம் கேட்க விரும்புவதை, உங்களிடமே கேட்டுவிடுகிறேனே ....." என்று கூறியவாறு, தன் கைப்பைக்குள் வைத்திருந்த படத்தை எடுத்து, ஜெயராமனிடம் காட்டினாள். அது, வனஜாவும் சுந்தரமும் அருகருகில் இருந்த படம்.

சுதா அனுப்பியதாகச் சொன்ன படம் அதுதான் என்பதை அதைப் பார்த்தவுடன் புரிந்துகொண்டான் ஜெயராமன்.

"மிஸ்டர் ஜெயராமன், இந்தப் படம் தபால் மூலம் எனக்கு வந்து சேர்ந்தது. அத்துடன் ஒரு குறிப்பும் வந்தது. இதை யார் அனுப்பியிருப்பார்கள் என்று என்னால் ஊகிக்கமுடிகிறது. அது அல்ல எனக்குப் பிரச்சனை. இதில் இருக்கும் அந்த இளைஞனைப்பற்றி எனக்குக் கொஞ்சம் தெரியவேண்டும். அந்த விஷயமாகத்தான் உங்கள் மனைவியின் உதவியை நாட விரும்புகிறேன் .... "

பவானி பேசியது ஜெயராமனின் காதில் விழவில்லை. அவன் அந்த போட்டோவையே உற்றுப் பார்த்தான். அவன் கண்கள் சிவந்தன; அவன் ரத்தம் கொதித்தது; அந்தக்கணமே, அவன் ஒரு முடிவுக்கு வந்தான்.

# 29

அன்பு தருவதில் - உனைநேர்
ஆகுமோர் தெய்வமுண்டோ?

– பாரதியார்

**மே**ஜைமீது ஆப்பிள் பஜ்ஜி ஆறிப்போய்க் கொண்டிருந்தது. பவானி, முதன்முறையாக அந்தப் பஜ்ஜியைச் சுவைத்துக்கொண்டிருந்தபடியால், ஜெயராமன் அதைச் சாப்பிடவில்லை. சற்றுப் பொருத்து தற்செயலாக ஜெயராமன் மேஜையைக் கவனித்த அவள், "என்ன இது? நீங்கள் ஏன் சாப்பிடவில்லை?" என்று கேட்டாள்.

அந்தக் குரல் கேட்டுத்தான் தன் நிலைக்கு வந்தான் ஜெயராமன். அதுவரை அவன் மணம் அலைபாய்ந்து கொண்டிருந்தது. வனஜாவும் சுந்தரமும் இணைந்து காணப்பட்ட அந்தப் போட்டோவைப் பார்த்தவுடன், அவன் மனம் ஏதேதோ எண்ணியது. ஆத்திரம், கோபம்,அவமானம் - எல்லாம் போட்டி போட்டுக்கொண்டு வந்தன. இறுதியில் பழிவாங்கும் உணர்ச்சிதான் மேலோங்கியது. இந்தப் போட்டோவைக்கொண்டு நம் வழக்கை ஜெயித்துவிடலாம் என்ற முடிவுக்கு வந்தான் அவன். அப்போதுதான் பவானி, அவனிடம் பேச்சுக் கொடுத்தாள்.

"ஊம் .... இதோ சாப்பிடுகிறேன், இந்தப் பஜ்ஜி ரொம்பவும் கொதிக்கும். கொஞ்சம் ஆறட்டுமே என்று காத்திருந்தேன்" என்று எதையோ சொல்லிவிட்டு, " பவானி, இந்தப் போட்டோ உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டான்.

"இந்தப் படம் என் பெயருக்குத் தபால்மூலம் வந்தது. 'இவர் நம்பிக்கைக்கு உரியவரா என்று யோசித்துக் கொள்ளுங்கள்' என்று ஒரு கடிதமும் இருந்தது. அனுப்பியவரின் பெயர் தபாலில் இல்லை. ஆனால், இதை யார் அனுப்பியிருப்பார்கள் என்று நான் ஊகித்துத் தெரிந்து கொண்டுவிட்டேன் ....." என்றாள்.

சுதா அனுப்பியதைப் பவானி தெரிந்துகொண்டுவிட்டாளோ என்ற தவிப்புடன் "யார்?" என்று கேட்டான் ஜெயராமன்.

" வேறு யார்? மிஸ்டர் சுந்தரந்தான் அனுப்பியிருக்கவேண்டும். அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது" என்றாள் பவானி.

" சுந்தரமா?" - திகைப்புடன் கேட்டான் ஜெயராமன்.

"இந்தக் காலத்தில் மொட்டைக் கடிதங்கள் எல்லாம் சம்மந்தப்பட்டவர்கள் எழுதிக்கொள்வதுதானே! வேறு யாருக்கு அறிமுகப்படுத்திக்கொள்வதற்காகவே, இந்தப் படத்தை அனுப்பி இருக்க வேண்டும். முன்பின் பழக்கமில்லாதவர்கள் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளும்போது, அறிமுகமான வேறு ஒருவர் பெயரைக் குறிப்பிடுவதில்லையா? அப்படித்தான் இதுவும். நம் குடும்ப நட்பைப் புரிந்துகொண்டு வனஜாவைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரிந்திருக்கும் என்று மிஸ்டர் சுந்தரம் எண்ணியிருப்பார். எனவே, தன்னைப் பற்றிய விவரங்களை வனஜா மூலந்தான் தெரிந்துகொள்ளட்டுமே என்று நினைத்து, வனஜாவுக்கு நான் அறிமுகமானவன் என்று காட்டுவதற்காக அவளோடு சேர்ந்திருந்த படத்தை அனுப்பியிருக்கிறார் ..... " என்றால் பவானி.

இதைக் கேட்டு சிறிது நேரம் பதிலேதும் சொல்லாமல் பவானியையே பார்த்தான் ஜெயராமன்.

'எவ்வவளவு சின்னக் குழந்தையாக இருக்கிறாள் இவள்' என்ற பரிதாப உணர்ச்சிதான் அவனிடம் மேலோங்கியது. 'இப்படி ஒரு படத்தைப் பார்த்ததும் ஒரு பெண்ணுக்கு ஆத்திரமல்லவா ஏற்படவேண்டும்? இவள் என்னவோ புதிய வியாக்யானம் கொடுத்துக்கொண்டிருக்கிறாளே' என்று எண்ணி வருந்தினான்.

“சரி பவானி, இந்தப் போட்டோவைப் பார்த்தவுடன், முதலில் இவர்களைப் பற்றிச் சந்தேகம் அல்லவா ஏற்பட வேண்டும்? உனக்கு ஏன் அப்படி ஏற்படவில்லை" என்றான்.

"சந்தேகமா, ஏன்? ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து ஒரு போட்டோவில் இருந்தால், உடனே சந்தேகப்பட வேண்டியதுதானா? எங்கள் கிளப்பில்கூட, பல சமயம் பல ஜோடிகள் மாறிமாறி இணைந்து நடனமாடுவார்கள். அவர்களைப் படமும் எடுக்கிறார்கள். அவர்களை எல்லாம் சந்தேகப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா? அதனால்தான்

இதைக்கண்டு நான் சந்தேகப்படவில்லை. அத்துடன் இன்னொரு காரணமும் இருக்கிறது .." என்று கூறி, ஒரு 'சஸ்பென்ஸ்' வைத்தாள்.

"அதென்ன இன்னொரு காரணம்?" - சற்றே பரபரப்புடன் கேட்டான் ஜெயராமன்.

"அந்த போட்டோவை நன்றாக உற்றுப் பாருங்கள் ....." என்றாள்.

ஜெயராமன் உற்றுப் பார்த்தான்.

"ஒன்றும் புரியவில்லையே?"

"இல்லையே!"

"ஹூம் .... இவ்வளவுதானா நீங்கள்? இது ஒரு பெரிய 'க்ரூப்' போட்டோவிலிருந்து எடுக்கப்பட்டு 'மாஸ்க்' செய்து 'டச்சப்' செய்யப்பட்ட படம் ...."

இதைக் கேட்டதும், ஜெயராமன் அசந்துவிட்டான்.

"அடேயப்பா! இந்தப் பெண் இவ்வளவு கெட்டிக்காரியாக இருக்கிறாளே' என்று பிரமித்தான். சற்று முன்புதான் அவளைக் 'குழந்தை' என்று அவன் எண்ணினான். இப்போதோ? பவானியை அவனால் சரியாக எடை போட முடியவில்லை.

"சரி, சுந்தரம் எதற்குத் தன்னை உனக்கு அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டும்?" - வேண்டுமென்றே இப்படி ஒரு கேள்வியைப் போட்டான் ஜெயராமன்.

"சரிதான் போங்கள். உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா? அவருக்கும் எனக்கும் திருமணப் பேச்சு அடிபடுகிறதே. உங்களுக்குத் தெரியும் என்றுதான் நினைத்திருந்தேன். ஸ்ரீதர் அண்ணா இப்போது அவரைப்பற்றி விசாரித்துக்கொண்டிருக்கிறார். அதற்குள் நானும் அவரைப்பற்றி விசாரிக்க வேண்டிய அவசியத்தை இந்தப் போட்டோ ஏற்படுத்திவிட்டது. சரி, மிஸ்டர் சுந்தரத்தைப் பற்றி வனஜாவிடம் நான் கேட்க விரும்புவதை உங்களிடமே கேட்டுத் தெரிந்துகொள்கிறேனே! நீங்கள் வேறு, உங்கள் மனவி வேறா?" என்று கூறி, சர்வரை அழைத்து, "ஒரு கப் டீ, ஒரு காப்பி" என்று ஆர்டர் கொடுத்துவிட்டு, தனது பிரம்பு நாற்காலியை இன்னும் கொஞ்சம் முன்னால் இழுத்துப் போட்டுக்கொண்டாள்.

"என்ன கேட்கப் போகிறாய்?" என்றான் ஜெயராமன்.

"மிஸ்டர் சுந்தரம் எப்படிப்பட்டவர் என்ற கேள்விதான். கொஞ்சம் அவரைப்பற்றிச் சொல்லமுடியுமா?" என்றாள்.

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று புரியாமல் மௌனமாக அமர்ந்திருந்தான் ஜெயராமன்.

ட்ரைவ் இன் ஹோட்டலின் 'கசமுச' சத்தத்தையும் மீறி, அவர்கள் ஒலிபரப்பிய 'கம் செப்டம்பர்' இசைக் கேட்டது. பவானி அவளையறியாமல் அதற்குக் காலால் தாளம் போட்டாள். பிறகு, "என்ன, ஒன்றுமே சொல்லாமல் இருந்தால் எப்படி?" என்று கேட்டாள்.

அப்போது ......

"என்னைப்பற்றி மிஸ்டர் ஜெயராமனுக்குத் தெரிந்தால்தானே சொல்வதற்கு ..... சரிவரத் தெரியாமல் என்ன சொல்வார், பாவம் ..... ! என்று அவர்கள் அருகில் ஒரு குரல் வந்தது.

குரல் கேட்டு, ஜெயராமன் திடுக்கிட்டு நிமிர்ந்தான்.

அவர்கள் மேஜைப் பிடித்தவாறு புன்முறுவலுடன் நின்றிருந்தான் சுந்தரம்.

"சுந்தரம் ... நீங்களா?" என்று அவனையும் மீறிக் கூறிவிட்டான் ஜெயராமன்.

"யெஸ், நான்தான். நான் வந்து ஐந்து நிமிஷமாகிறது. நீங்கள் இருவரும் அமர்ந்திருப்பதைப் பார்த்துத்தான் இங்கே வந்தேன். நீங்கள் ஏதோ சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருந்தீர்கள். உங்கள் பேச்சைக் கேட்கவேண்டுமென்று நான் முயலவில்லை. ஆனால், தானாகச் சில என் காதில் விழுந்தன. அதிலும் என்னைப் பற்றிய விஷயமாக இருக்கவே, சற்று அதிக கவனம் செலுத்தினேன் .... " என்றான்.

பவானி, சுந்தரத்தை நிமிர்ந்து பார்த்தாள். ஏனோ, பார்த்தகணமே அவளுக்கு அவனைப் பிடித்துவிட்டது.

" ஓ, தென் யூ ஆர் மிஸ்டர் சுந்தரம் ..... உங்களைச் சந்தித்ததில் ரொம்பவும் மகிழ்ச்சி ..... உட்காருங்களேன் ...." என்றாள் புன்முறுவலுடன். சுந்தரம் ஒரு நாற்காலியை அவர்கள் அருகில் இழுத்துப் போட்டுக்கொண்டான். .

**மா**டியில் தன அறையில் அமர்ந்து மகிழ்ச்சியுடன் பியானோ வாசித்துக்கொண்டிருந்தாள் பவானி. முதல் நாள் மாலை, ட்ரைவ் இன் ஹோட்டலில் சுந்தரதச் சந்தித்ததிலிருந்து அவளிடம் ஒரு தனி உற்சாகம் தெரிந்தது. சுந்தரத்தின் பேச்சு, முகபாவம், துளைக்கும் அந்தக் கண்கள் - எல்லாமே அவளை வெகுவாகக் கவர்ந்திருந்தன.அது மட்டுமா? மிகவும் தெளிவாக அவன் பேசிய பேச்சுக்கள், குழப்பமில்லாத எண்ணங்கள், அழுத்தமான கருத்துக்கள் எல்லாமே அவளுக்கு மிகவும் பிடித்துவிட்டன. தன்னைப் பற்றியும், தனக்கும் வனஜாவுக்கும் இடையேயுள்ள நட்பைப்பற்றியும், அதன் தூய்மையைப்பற்றியும் அவன் எடுத்துச் சொன்னபோது, 'சத்தியத்தின் தூதன்' ஒருவன் பேசுவதுபோலவே உணர்ந்தாள் அவள். அவன் வார்த்தைகள் ஒவ்வொன்றையும் அவள் நம்பினாள். அவனால் பொய் சொல்லமுடியாது என்று அவளுக்குத் தோன்றியது.

"வனஜாவைப் போன்ற ஒரு பெண்ணைப் பார்ப்பதுகூட அபூர்வம். சத்தியத்தின் பிழம்பாக வாழ்கிறாள் அவள். தூய்மையின் இருப்பிடம் அவள். அவளைப் புரிந்துகொண்டு போற்றாவிட்டால், சத்தியத்திற்கு நாம் அவமரியாதை செய்வதாகத் தான் அர்த்தம். அவள் என்ன தப்பு செய்து விட்டாள் என்று அவளுக்கு இந்தத் தண்டனை வழங்கப் படுகிறதோ எனக்குத் தெரியவில்லை. வாழப்பிறந்த அந்தப் பெண் தெய்வம் வாடுகிறது. அதை வாட வைப்பவர்கள் பாவம் செய்கிறார்கள். இதற்குமேல் நான் எதுவும் சொல்லமாட்டேன்" என்று உணர்ச்சிவசப்பட்டு அவன் பேசியதையும், அவனுக்குப் பதிலே சொல்லாமல், அதிக நேரம் அங்கே இருக்கப் பிரியமில்லாதவன்போல், "என்னை மன்னிக்க வேண்டும்; எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது" என்று ஜெயராமன் விடைபெற்று சென்றதையும், அதன் பிறகு தானே சுந்தரத்தைக் கொண்டுபோய் அவன் வீட்டில் விட்டதையும், அன்பே உறவான அவன் தாயுடன் பேசியதையும் எண்ணி எண்ணிப் பார்த்து மயங்கிக் கொண்டிருந்தாள் பவானி.

அப்போதுதான் -

"அம்மா! உங்களுக்குத் தபால் வந்திருக்கிறது .... " என்று ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தாள் வேலைக்காரி.

"மிஸ் பவானி ....' என்ற பெயரைக் கவரில் கண்டதும், 'நமக்கு யார் கடிதம் எழுதப் போகிறார்கள்?' என்ற எண்ணத்துடன் அதைப் பிரித்தாள்.

'அன்புமிக்க சுதா' என்று கடிதம் ஆரம்பித்திருந்தது. அதைக் கண்டதும் சற்றே துணுக்குற்று, தவறுதலாகப் பிறர் கடிதத்தைப் பிரித்து விட்டோமோ என்ற அச்சத்துடன், மீண்டும் கவரைப் பார்த்தாள். 'மிஸ் பவானி' என்றுதான் கவரில் இருந்தது. பிரித்துவிட்டோம், படித்துவிடுவோம் என்ற முடிவுடன் அந்தக் கடிதத்தைப் படித்தாள் பவானி.

அன்புமிக்க சுதா,

என் கடிதத்தைக் கண்டதும் உனக்கு எரிச்சலாக இருக்கும். 'இந்த மனிதரிடம் எத்தனைதடவை முகத்தில் அடித்தாற்போல் பேசுவது, இருந்தாலும் இவருக்கு வெட்க்கமில்லையே' என்று, இந்தக் கடிதத்தைக் கண்டதும் உன் முகம் சிவந்து இருப்பதை நான் மனக்கண்ணால் பார்க்கிறேன். இருந்தாலும் நீ என்னைச் சதா நினவு வைத்துக் கொண்டிருக்கும்போது, நான் உன்னை மறக்க முடியுமா?

ஆம் சுதா, நீ சதா என்னை நினவு வைத்துக்கொண்டுதான் இருக்கிறாய். ஆத்திரப்படாமல் யோசித்துப்பார். நான் உன்னைக் காதலித்து, உன் அன்பைக் கோரியபோது, நீ அந்த ஸ்ரீதரின் பேரிலுள்ள காதலால், என் காதலைப் புறக்கணித்ததும், கண்ட கண்ட பெண்களோடு நட்புக்கொண்டிருப்பவன் என்று என்னைத் தூற்றியதும் உண்மைதான். என்னை உனக்குப் பிடிக்கவில்லையென்றால், என்விஷயத்திலிருந்தே நீ ஒதுங்கியிருக்க வேண்டும். அதை விட்டுவிட்டு, என் வாழ்க்கைத் திட்டங்களை நீ கெடுத்துக்கொண்டிருப்பதிலிருந்து, என்னை நீ இன்னும் மறக்கவில்லை யென்றுதானே தெரிகிறது!

போகிறது. நீதான் என்னைக் காதலிக்கவில்லை. நான் வேறு பெண்ணோடு வாழ்வதை ஏன் கெடுக்கிறாய்? நீ ஏன் காதலைப் புறக்கணித்தபின், நான் மனத்தை மாற்றிக்கொண்டு வனஜாவிடம் பழகினேன். வனஜாவும் நானும் உயிருக்குயிராகக் காதலித்தோம். எங்கள் காதலுக்கு இடையூறாக உன் அண்ணன் ஜெயராமன் வந்து, வனஜாவை அவளுடைய இஷ்டத்திற்கு விரோதமாக மனம் செய்துகொண்டு போய்விட்டான். பெற்றோரை மீறமுடியாமல் அவளும் மணம் செய்துகொண்டுவிட்டாள். அத்துடன் அவளை மறந்தேன்.

மீண்டும் அவள் கணவனுடன் சண்டை பிடித்துக்கொண்டுவந்து, பழைய முறையில் என்னுடன் பழக ஆரம்பித்தாலும், என்னால் அவளோடு பழக முடியவில்லை. உன் அண்ணனை மணந்த பெண் அவள் என்ற எண்ணத்தை மனத்தில் கொண்டு, என் மனத்தை மீண்டும் கல்லாக்கிவிட்டேன். இப்போது பவானி என்ற பணக்காரப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறேன். என் மனத்தை உனக்குப் பறிகொடுத்துவிட்டாலும், வாழ்க்கைக்காக ஒரு பெண் தேவை இல்லையா? ஆமாம், உன்னை நினத்ததும், வனஜாவுடன் நான் உறவாடி வாழ்ந்ததும் கனவுகள் ...... பவானியுடன் நான் வாழப் போவது நனவு.

அன்று நான் உன்னைத் தற்செயலாகச் சந்தித்தபோது 'அந்தப் பேதை பவானியின் வாழ்க்கையையும் கெடுக் காதீர்கள்' என்று கேட்டாய். என்னை எமாற வைத்து, என் வாழ்க்கையையும் கெடுத்தவள் நீ. அதற்கு உன்னைச் சார்ந்த பெண்குலத்தையே அழித்தாலும் தகும். இந்த நிலையில் நீ என்னிடம் நியாயம் கேட்பதில் என்ன தர்மம் இருக்கிறது?

பவானிக்கும் எனக்கும் கல்யாணம் ஆகப்போவது உறுதி. அவள் அண்ணன் என் பக்கம் இருக்கிறான். என் பேச்சுத் திறமையால் அந்தப் பெண்ணையும் என் பக்கம் சாய்த்து விடுவேன். இன்னொரு விஷயம் தெரியுமா? அந்தப் பெண் ஏற்கெனவே ஒருவனை காதலித்துக் கெட்டுப் போனவள்தான். அதனால் என்னைவிடப் பிரமாதமான மாப்பிள்ளை எவனும் கிடைத்துவிடப் போவதில்லை. எனவே, எங்கள் விஷயத்தில் தலையிட்டு நீ தோல்வி அடைய வேண்டாம். இப்படிக்கு,

உன்னை இன்னும் மறக்க முடியாத,

சுந்தரம்

கடிதத்தைப் படிக்கப் படிக்க பவானிக்குத் தலை சுற்றியது. அவளால் எதையுமே நம்ப முடியவில்லை.

அப்போதுதான் -

"பவானி, பவானி .... " என்று இனிய குரலில் அழைத்தவண்ணம் மாடிக்கு வந்தால் சுதா. பவானி சட்டென்று தன் கையிலிருந்த கடிதத்தை மறைத்தாள். .

"பவானி, நீ என்னை மன்னிக்க வேண்டும் .... " என்றாள் சுதா.

"மன்னிப்பா! எதற்கு?" என்று புரியாமல் கேட்டால் பவானி.

"ஒரு தவறு செய்துவிட்டேன்."

"என்ன அது?"

உனக்கு வந்த ஒரு கடிதத்தை நான் படித்துவிட்டேன். அதுகூட என்னுடைய முழுத் தவறல்ல. கவரில் என் விலாசம் இருந்தது. உள்ளே உனக்குக் கடிதம் இருந்தது. அதனால்தான் படித்தேன். இந்தா .... ஐயாம் ஸாரி பார் திஸ் ..." என்று கூறி, அவளிடம் ஒருகவரைக் கொடுத்துவிட்டு, அவசர அவசரமாகக் கீழே இறங்கிச் சென்றாள் சுதா.

கையில் வாங்கிய அந்தக் கவரைப் பார்த்தல் பவானி. அதன் மேல் 'மிஸ் சுதா' என்றிருந்தது. கவரைப் பிரித்தாள். உள்ளே, 'அன்புள்ள பவானி' என்று ஒரு கடிதம் ஆரம்பித்திருந்தது.

அன்புள்ள பவானி,

என்னைப் பற்றி நீ அறிந்திருக்கலாம். நம் ஜாதகங்கள் பொருந்தியிருக்கின்றன என்ற விஷயமும், நம் திருமணத்திற்குப் பெரியவர்கள் சம்மதம் கிடைத்திருக்கிறது என்ற விஷயமுங்கூட உன் காதிற்கு எட்டியிருக்கும். உன்னைப் போன்ற விலைமதிக்க முடியாத மாணிக்கத்தை மணக்கப்போகும் நான் பாக்கியசாலி. என்னைப் பற்றி வீண் புரளிகள் வந்தால் நம்பாதே. திருமணத்திற்கு முன் உன்னைச் சந்தித்துப் பேச விரும்புகிறேன். அடையாறு பீச் நிம்மதியான இடம். நம் உள்ளம் கலந்துறவாடத் தனித்த இடம். நாளை மாலை வரமுடியுமா? காத்திருப்பேன்.

அன்பன்,

சுந்தரம்.

பவானியின் கரங்கள் நடுங்கின. அவள் தலை சுற்றியது.

# 30

கண்ணில் தெரியுதொரு தோற்றம் - அதில்
கண்ணன் அழகு முழுதில்லை.

– பாரதியார்

'ஸ்ரீதர் அண்ணா எதற்காக ஜெயராமனைப் போனில் வீட்டிற்கு வரும்படி அழைக்கவேண்டும்' என்று புரியாமல் குழம்பித் தவித்தாள் பவானி. ஜெயராமன் வரவை அவளால் ரசிக்க முடியவில்லை. அவன் வரவால் தன் மனத்தில் வகுத்திருக்கும் திட்டங்கள் எதுவும் கலைந்து விடக்கூடாதே என்ற காரணமற்ற பயம் அவளைக் கலக்கியது.

எத்தனை மேகக்கூட்டங்கள் மறைத்தாலும், அவற்றையும் மீறிச் சந்திரன் தோன்றி அதே ஒளியைப் பாய்ச்சுவதுபோல், சுந்தரத்தைச் சுற்றி எத்தனை சந்தேகங்கள் சூழ்ந்திருந்தாலும் அவற்றையும் மீறி அவனுடைய முகம் அவள் மனத்தில் ஓர் ஒளியை உண்டாக்கிக்கொன்டிருந்தது.

'நான் உண்மையானவன், தூய்மையானவன், நேர்மையானவன். என்னை நம்பு' என்ற அந்த முகம் சதா அவளிடம் சொல்லுவதுபோல் இருந்தது பவானிக்கு.

அந்தக் கடிதங்களின் விஷயம் அவளைக் குழப்பியது என்னவோ உண்மைதான். ஆனால், அந்தக் குழப்பமும் கொஞ்ச நேரந்தான் இருந்தது.

'இந்த இரண்டு கடிதங்களுமே பொய்யாக இருக்குமோ!'

இப்படித்தான் பவானி எண்ணினாள்.

'இது யாரோ ஒருவரின் சதிச் செயலாக இருக்கும்' என்று அவளுடைய உள்ளுணர்வு உறுத்தியது.

' ஏன்? சுதாவோ, அவளுடைய அண்ணன் ஜெயராமனோகூட இதைச் செய்திருக்கக்கூடும். அவர்களுக்கு உண்மையிலேயே நான் வேறு ஒருவரைத் திருமணம் செய்துகொள்வது பிடிக்கவில்லை. அதனாலேயே அவர்களில் ஒருவர் இதைச் செய்திருக்கலாம்.இல்லாவிட்டால் எவ்வளவு பெரிய அயோக்கியனாக இருந்தாலும், ஏதோ வாக்குமூலம் கொடுப்பதுபோல் 'உன்னைக் காதலிக்கிறேன்', இன்னொருத்தியைக் காதலிக்கிறேன்' என்றெல்லாம் எழுதுவானா? 'சுவர்களுக்கும் காதுண்டு' என்று பயந்து, காதோடு காதாகப் பேசிக்கொள்ள வேண்டிய விஷயங்களை. 'ரிகார்டு' மாதிரி எழுதி அனுப்பும் பயித்தியக்காரன் ஒருவனும் இருக்க முடியாது. சுந்தரத்தைப் பார்த்தால் அப்படி ஓர் அசடாகவும் தோன்றவில்லை; எதற்கும் துணிந்து கடிதம் எழுதும் அயோக்கியனாகவும் தோன்றவில்லை ..... "

சிந்திக்க சிந்திக்க பவானியின் மனத்தில் ஒரு தெளிவு ஏற்பட்டது. 'நிச்சயம் ஏதோ ஒரு சதி வேலை நடக்கிறது. முல்லை முள்ளால்தான் எடுக்கவேண்டும். இந்தச் சதியைஇன்னொரு சதியால் அம்பலப் படுத்தவேண்டும்!" என்ற முடிவுக்கு வந்தாள்.

இந்த முடிவை ஒட்டி, அதைச் செயல்படுத்துவதற்கான பணிகளில் கவனம் செலுத்தினாள்.

'ஒரு வேளை நாம் அளவுக்கு மீறி சுந்தரதின்மீது நம்பிக்கை வைக்கிறோமோ' - இப்படி ஒரு சந்தேகமும் அவளிடம் அடிக்கடி தோன்றாமல் இல்லை. ஆனால், அந்தச் சந்தேகங்கள் எல்லாம் தோன்றிய வேகத்திலேயே மறைந்துவிடும். சுந்தரத்தின் மீது அவளுக்கு ஏற்பட்டிருந்த நம்பிக்கை, அவ்வளவு ஆழமாக வேரூன்றியிருந்தது.

இந்தப் போக்கில் மனத்தை அலையவிட்டுக்கொண்டு, கீழே ஒரு வேலையாகப் போயிருந்தபோதுதான், ஜெயராமனுடன் அண்ணன் டெலிபோனில் பேசுவதைக் கேட்டாள்.

"இன்று ஆபீசிலிருந்து திரும்பும்போது கொஞ்சம் வீட்டுக்கு வந்துவிட்டுப் போங்களேன், மிஸ்டர் ஜெயராமன். முக்கியமான ஒரு விஷயம் பற்றி உங்களிடம் நேரில் பேசவேண்டும் ..... " என்று ஸ்ரீதர் சொல்லிக்கொண்டிருந்தது, அவள் காதில் விழுந்தது.

'இந்த அண்ணாவுக்கு ஜெயராமனிடம் என்ன வேலை? சுதாவிடம் காதல் இருந்தால், நிச்சயம் செய்து கல்யாணத்தைப் பண்ணிக்கொண்டுவிட வேண்டியதுதானே! இதற்கு அநாவசியமான ஆலோசனைகள் என்ன வேண்டியிருக்கிறது?'

ஜெயராமனிடம் அவளுக்குக் கொஞ்ச நாளாக அவ்வளவு மரியாதை இல்லை. வனஜாவை அவன் புறக்கணித் திருப்பதை அவளால் நியாயம் என்று ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவனுக்குத் தன்னை மணந்துகொள்ளவேண்டும் என்ற ஆவல் இருப்பதையும் அவளால் ரசிக்க முடியவில்லை; 'என்ன இந்த ஆண்கள்? ஒருத்தியைக் கல்யாணம் செய்துகொண்டு, பின் எதையோ ஒரு நொண்டிச் சாக்கை வைத்துக்கொண்டு பிடிக்கவில்லை என்று உதறி விடுவது?'

எல்லாவற்றுக்கும் மேலாகத் தனக்கும் சுந்தரத்திற்கும் இடையே அரும்பியிருக்கும் இனிய தொடர்பை ஜெயராமன் சீர்குலைத்துவிடுவானோ என்ற பயம் வேறு இருந்தது.

வெளியே போகத் திட்டமிட்டிருந்த பவானி, உடனே வெளியே போய்விட மனமில்லாமல், வீட்டுக்குளேயே சுற்றிக்கொண்டிருந்தாள். ஸ்ரீதர் அறைக்குப் பக்கத்துக்கு அறையிலேயே இருந்தாள். ஜெயராமனும், அண்ணன் ஸ்ரீதரும் எதைப் பற்றிப் பேசிக்கொள்கிறார்கள் என்று தெரிந்துகொண்டபின்தான் வெளியேற வேண்டும் என்ற முடிவுடன் அங்கே காத்திருந்தாள்.

திடீரென்று ஸ்ரீதரின் அறையில் ஜெயராமனின் குரல் கேட்டது.

'ஓ, வந்துவிட்டாரா?'

காதுகளைக் கூர்மைப்படுத்திக்கொண்டு, அடுத்த அறையிலேயே உட்கார்ந்துவிட்டாள் பவானி. 'ஒட்டுக்கேட்பது தப்புதான்'. ஆனால், தன் விஷயமாக ஏதாவது விபரீதம் நடந்துவிடாமல் தடுக்க, இக்காரியம் செய்யலாம்' என்ற சமாதானத்துடன் அந்த அறையிலேயே இருந்தாள்.

"காப்பி சாப்பிடுகிரீகளா?" ஸ்ரீதர் ஆரம்பித்தான்.

"நோ .... தாங்க் யூ .... இப்பத்தான் சாப்பிட்டேன் .... "

"அப்படியா?"

சிறிது நேரம் மௌனம்.

"மிஸ்டர் ஜெயராமன், உங்களை நான் அழைத்த முக்கியகாரணம், உங்களுக்கு நன்றி செலுத்துவதற்குத் தான்" ... " நன்றியா? எதற்கு?"

"நீங்கள் ஒருவிதத்தில் பெருமைபட்டுக்கொள்ள வேண்டிய விஷயம்."

"என்ன ..... தெளிவாகச் சொல்லுங்களேன்."

கொஞ்ச நாட்களுக்கு முன்பு, அதாவது, சுதா விஷயமாக நீங்கள் என்னிடம் பேசவந்தபோது, நமக்குள் நடந்த பேச்சு உங்களுக்கு நினைவிருக்கிறதா? நான் பவானியின் எதிர்காலத்தைப் பற்றிக் குழப்பத்தோடு 'அவளை யார் கல்யாணம் செய்து கொள்ளப்போகிறார்கள்' என்று கலங்கினேன். நீங்களும், சுதாவும் அப்போது 'நிச்சயம்' பவானிக்கு விரைவிலேயே கல்யாணம் ஆகும்' என்று தெய்வம்போல் உறுதி கூறினீர்கள்; நினைவிருக்கிறதா?" - ஸ்ரீதரின் குரல் நெகிழ்ந்தது. ,

"ஆமாம் .... "

உங்கள் வாக்கு மெய்யாகிவிட்டது. பவானி குணமாகிவிட்டாள். அது உங்களுக்குத் தெரியும். சுதா தான் அதற்குக் காரணம். ஆமாம், உங்கள் தங்கை சுதா தான் அதற்குக் காரணம். என் தங்கையின் வாழ்க்கையில் ஒளிகொடுத்த உங்கள் தங்கைக்கு நன்றியாக நான் என்னையே கொடுத்துக்கொள்ளப் போகிறேன். அப்போதுதான் என் நன்றிக்கடன் தீரும். ஆனால், அவளோடு ஒத்துழைத்து, சுதாவை இங்கு வந்து போக அனுமதித்து, ஆறுதல் கூறி, பல விதங்களிலும் உதவிய உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்! வெறும் வார்த்தைகளினால் மட்டுமே நன்றி சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன் ..."

"சே, சே! என்ன இதெல்லாம்? உங்கள் இதயம் நிறைந்த நன்றியைவிட வேறென்ன வேண்டும் எனக்கு?"

"இல்லை, மிஸ்டர் ஜெயராமன். அந்த நன்றிக்கும் அப்பால், நான் உங்களுக்கு ஒன்று தருவதற்கு இருந்தது. அதை நான் தரவேண்டும் என்று உங்கள் தங்கை சுதா துடித்தாள். உங்களுக்குக்கூட அது விஷயமாக ஆர்வம் இருந்திருக்கலாம் .... "

"நீங்கள் எதைத் தருவதைப் பற்றிப் பேசுகிறீர்கள், மிஸ்டர் ஸ்ரீதர்?... "

"என் தங்கை பவானியை ......, "

"ஓ ..... "

மீண்டும் மௌனம்.

"மிஸ்டர் ஜெயராமன், பவானி விஷயமாக உங்களுக்கும் சுதாவுக்கும் ஏற்பட்ட விருப்பதிற்குத் தெளிவான பதில் சொல்லவேண்டி இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. என்னைப்பொறுத்தவரை நான் என் அருமைத் தங்கை பவானிக்காகவே வாழ்ந்தவன். அவளை வாழ வைப்பதைவிடப் பெரிய சுகம் எனக்கு எதுவும் இல்லை. அவளுக்குக் கிட்டாத திருமணம் எனக்கும் வேண்டாம் என்று அதைத் துறந்து இருந்தேன். சுதா, பவானியைத் திருமணத்திற்குத் தகுதியான பெண்ணாக்கினாள். உண்மையில் அவள் என தங்கைக்குச் செய்த உதவிக்காகவே அவளை மணக்க நான் முடிவு செய்தேன். மற்றபடி சுதாவிடம் எனக்குக் காதல்கூட இல்லை. இப்படி நான் வெளிப்படையாகச் சொல்வதற்கு நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும்."

"நோ நோ, மிஸ்டர் ஸ்ரீதர், நீங்கள் மனம் திறந்து உண்மையைப் பேசுகிறீர்கள். நான் அதைப் பாராட்டுகிறேன்" .

"தாங்க்யூ .... பவானியைத் திருமணத்திற்குத் தகுதியானவளாக்கிய பின் அவள் யாரைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறாளோ, யார் அவளுக்கு எல்லாவிதத்திலும் பொருத்தமோ, அவரையே அவளுக்குத் திருமணம் செய்து வைப்பதுதானே முறை? என் நன்றிக் கடனைத் தீர்க்கும்போது, அவளுக்கு விருப்பமில்லாத ஒன்றைச் செய்து விடக் கூடாதல்லவா?"

"இதிலென்ன சந்தேகம்? அவள் விருப்பந்தான் முக்கியம்."

"அந்தப்படி, என் பவானிக்கு பொருத்தமான ஒருவரை நான் தேர்ந்தெடுத்தேன். அவரை அவளும் விரும்புவதாக எனக்குத் தெரிகிறது."

"அது நீங்களாக இல்லை என்பதைச் சொல்ல எனக்கு வருத்தமாக இருக்கிறது. சுதா ரொம்பவும் எமாற்றமடைவாள். ஒரு வேளை, நீங்களும் .... "

ஜெயராமன் உரக்கச் சிரித்தான். பிறகு, "மிஸ்டர் ஸ்ரீதர், இது சுதாவுக்கு வேண்டுமானால் கொஞ்சம் ஏமாற்றமாக இருக்கலாம். எனக்கு ஏமாற்றமில்லை. உண்மையில் சொல்கிறேன், மிஸ்டர் ஸ்ரீதர், நீங்கள் இப்படி மனம் திறந்து பேசியபின் நானும் மனம் திறந்து பேசலாம் என்று நினைக்கிறேன் .... ".

"யூ ஆர் வெல்கம் ....."

"நீங்கள் ஊகிப்பது ஓரளவு உண்மைதான். நான் பவானியைத் திருமணம் செய்துகொள்ள விரும்பியது உண்மைதான். ஆனால், அது எந்தச் சூழ்நிலையில் என்று நீங்களும் தெரிந்துகொள்ள வேண்டும். மிஸ்டர் ஸ்ரீதர், உங்களுக்கு உங்கள் தங்கைமேல் உள்ள பாசத்தைப் பற்றிச் சொன்னீர்கள். அதில் பாதியாவது உள்ளவன்தான் நானும். பவானியை நான் திருமணம் செய்துகொள்ள விரும்பியதற்கு முக்கிய காரணம், என தங்கை சுதாவின் மேல் எனக்கேற்பட்ட பாசந்தான். அவள் உங்களைக் காதலிக்கிறாள்; நீங்களோ உங்கள் பவானிக்குத் திருமணம் ஆகும்வரை மணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று இருக்கிறீர்கள். பவானி, நோயிலிருந்து பூரணமாகக் குணமாகாத நிலையில் இருந்தாள். வெளியிலிருந்து ஒருவன் வந்து அவளை எற்றுக்கொள்ளமாட்டனா என்ற சூழ்நிலை, அப்போது தான் நான் பவானியைத் திருமணம் செய்துகொள்ள நினைத்தேன். அதற்கு வசதியாக என் நிலையும் இருந்தது .... "

"என்ன அது? புரியவில்லையே ... " .

என் மண வாழக்கையைப் பற்றிதான் சொல்கிறேன். அதாவது, எனக்கும் வனஜாவுக்கும் இடையே ஏற்பட்டுள்ள முறிவு. எங்களுக்குள் முறிவு ஏற்பட்டதன் காரணத்தை நான் உங்களுடன் பேசவிரும்பவில்லை. அது முற்றிலும் என் சொந்த விஷயம். ஆனால், நான் என் மனைவியைவிட்டுப் பிரிந்திருப்பது, ரகசியமான செய்தியாக இல்லை. அந்த நிலையில் நான் என் பிரிவைச் சட்டபூர்வமாக்கிவிட்டு, வேறொரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள

வேண்டியவனாக இருந்தேன்.அந்தத் தகுதியைக்கொண்டே, என் தங்கையின் காதல் நிறைவேறப் பவானியைத் திருமணம் செய்துகொள்ள முடிவு செய்தேன். மற்றபடி நீங்கள் சுதா விஷயத்தில் செய்வதுபோல் எனக்குப் பவானியைத்தான் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற எந்தவிதமான பிடிவாத எண்ணமோ, ஆசையோ இல்லை. நான் பவானியைத் திருமணம் செய்துகொள்ள வேண்டிய அவசியமில்லாமல், சுதாவுக்கு வாழ்வு கிடைத்தால், எனக்குச் சந்தோஷந்தான் ....."

"மிஸ்டர் ஜெயராமன், மிகவும் வேதனையான மனநிலையிலும், இவ்வளவுத் தெளிவாகத் தங்கள் மனப்போக்கு அமைந்திருப்பது கண்டு எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. பவானியின் திருமணம் விரைவில் நிகழப்போகிறது. அது முடிந்ததும், முடிந்தால் அடுத்த முகூர்த்தத்திலேயே நான் சுதாவைத் திருமணம் செய்துகொள்கிறேன்."

"மகிழ்ச்சி, மிஸ்டர் ஸ்ரீதர். அது சரி, பவானியின் திருமணம் இவ்வளவு தூரம் நிச்சயமான பின்பு மாப்பிள்ளை யார் என்றும் சொல்லவில்லையே ....."

"ஷ்யூர்! அதைச் சொல்லுமுன், ஒருவரைப் பற்றி உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் .... "

"யாரைப் பற்றி?"

"மிஸ்டர் சுந்தரத்தைப் பற்றி ...."

"அவரை பற்றி எனக்கு இரண்டு அபிப்பிராயங்கள் உண்டு. ஒன்று, முந்தய அபிப்பிராயம், இப்போது நான் அவரைப் பற்றி மிக உயர்ந்தஅபிப்பிராயம் கொண்டிருக்கிறேன். அவர் மிகவும் நேர்மையானவர் என்று நான் மனப்பூர்வமாக நம்புகிறேன் .... "

இதற்கு மேலும் ஜெயராமனும் ஸ்ரீதரும் பேசிக்கொண்டதைக் கேட்கும் பொறுமை பவானிக்கு இல்லை. சுந்தரத்தைப் பற்றி ஜெயராமனே சொன்ன பிறகு, வேறு என்ன?

சிட்டுக்குருவிபோல் உல்லாசத்தில் மிதந்தாள் பவானி. தன் அறைக்குள் நுழைந்து, அவசர அவசரமாக டிரஸ் செய்துகொண்டு வெளியே புறப்பட்டாள் பவானி.

வழியில் ஹாலில் ஜெயராமனும், ஸ்ரீதரும் இருந்தார்கள். ஏதோ அப்போதுதான் முதலில் அவர்கள் இருந்ததைக் கவனித்ததுபோல், "ஹலோ .... " என்று அழைத்துவிட்டு, வாயிற்பக்கமாக நடந்தாள்.

"வெளியே போகிறாயா, பவானி?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

"ஆமாம் அண்ணா! சீக்கிரம் வந்து விடுகிறேன். என்ன விஷயம்?" என்றாள் அவள்.

"ஒன்றுமில்லை, இன்று ஜெயராமனும் நம்முடன் சாப்பாட்டில் கலந்துகொள்கிறார். நீயும் இருந்தாள் நன்றாக இருக்கும் .... " என்றான்.

"ஷ்யூர் ..... இன்னும் அரைமணியில் நான் வந்துவிடுவேன் .... " என்றவள், "மிஸ்டர் ஜெயராமன், ஐ வில் ஜாயின் யூ பார் டின்னர் .... " என்று கூறிவிட்டு, வெளியேறினாள்.

**அ**டையாறு பீச்சை நோக்கிப் பவானியின் கார் போய்க்கொண்டிருந்தது. வேண்டுமேன்றேதான் அவள் அப்போது அங்கே போய்க்கொண்டிருந்தாள்.

எல்லா டெஸ்ட்களிலும் பாஸ் செய்துவிட்ட சுந்தரத்தை, புடமிட்ட தங்கம்போல் மின்னச் செய்யக் கடைசியாக ஒரு விஷயத்தில் பரிசோதிக்கதான் அவள் அங்கே போய்க்கொண்டிருந்தாள்.

"கடிதம் பொய்யாக இருந்தால் சுந்தரம் அங்கே இருக்கக் கூடாது, இருக்க முடியாது!'

அந்தக்கடிதம் பொய்தான் என்று அவளுக்குப் பூரணமாகத்தெரிந்தாலும் போய்ப் பார்ப்பதென்று முடிவுசெய்தாள்.

'கடிதம் பொய், பிறகு கவலை ஏன்? அவர் அங்கு இருக்கப் போவதில்லை பிறகு போய்ப் பார்த்தால் என்ன? தங்கம் என்று தெரிந்துவிட்டது; பிறகு உரசிப் பார்க்கத் தயங்குவானேன்.'

வண்டி அடையாறு பீச்சை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. எவ்வளவுதான் உறுதியுடன் இருந்தாலும், "அவர் பீச்சில் இல்லாமல் இருக்கவேண்டுமே .... ' என்ற உளைச்சலும் அவள் உள் மனத்தில் இருக்கத்தான் செய்தது. விரும்பிய

வனைப் பார்க்கப்போகும்போது, அவன் இருக்கவேண்டுமே என்றுதான் எல்லோரும் எண்ணுவார்கள். பவானியோ, மாறாக எண்ணினாள். அவர் அங்கு இல்லாமல் இருக்கவேண்டுமே என்று எல்லாத் தெய்வத்தையும் வேண்டினாள்..

அடையாறு பீச்சை அடைந்து கார் நின்றது. 'திக்திக்'கென்று நெஞ்சு அடித்துக்கொள்ள, மணலில் இறங்கி நடந்தாள் பவானி.

அங்கே ....

சற்றுத் தொலைவில் .......

அது யார்?

சுந்தரமே தான்!

யார் வரவையோ எதிர்நோக்கி ஆவலுடன் காத்திருந்தான் சுந்தரம்.

நம்பிக்கைக் கோபுரம் தூள் தூளாக இடிந்து தலையில் விழ, திக்பிரமை பிடித்து நின்றுவிட்டாள் பவானி.

**டை**னிங் டேபிளில் அமர்ந்து ஸ்ரீதரும், ஜெயராமனும் மிக மகிழ்ச்சியுடன் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். பவானி மௌனமாக அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். சமையற்காரர் கொண்டு வந்து போட்ட ஜாங்கிரியைப்பார்த்து, "ஓ, ஸ்வீட்டா?" என்ற ஜெயராமன், பவானியின்பக்கம் திரும்பி, "என்ன மிஸ் பவானி, உங்களுக்கும் சுந்தரத்திற்கும் நடக்கப்போகும் கல்யாணத்திற்கான அட்வான்ஸ் விருந்தாக இதை நான் கொள்ளலாமா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

"நோ, மிஸ்டர் ஜெயராமன், எனக்கும் சுந்தரத்திற்கும் திருமணம் நடக்கப் போவதில்லை. அவர் ஒரு ரோக் ..... அயோக்கியர் ..... " என்று கூறிய பவானி, பாதி சாப்பாட்டில் சட்டென்று எழுந்துவிட்டாள்.

இதைக் கேட்டு ஜெயராமனும், ஸ்ரீதரும் திடுக்கிட்டனர்.

# 31

நல்லது தீயது நாமறியோம் - அன்னை
நல்லது நாட்டுக! தீமையை ஓட்டுக!

- பாரதியார்

**ஹா**லில் அமர்ந்து பேப்பர் புரட்டிக்கொண்டிருந்தான் ஸ்ரீதர். அவன் மனம் அதில் ஈடுபடவில்லை. இரவெல்லாம் அவன் சரியாகத் தூங்காததால், கண்கள் சிவந்திருந்தன. வெண்ணைய் திரண்டு வரும்போது தாழி உடைவதுபோல், எல்லாம் கூடிவரும் வேளையில், பவானியே சுந்தரத்தை 'அயோக்கியன்' என்று கூறி ஒதுக்கிவிட்டதை அவனால் ஜீரணித்துக்கொள்ள முடியவில்லை. முதல் நாள் இரவு பவானி அப்படிக் கூறிய பிறகு, அவளிடம் மனம் விட்டுப் பேச, ஸ்ரீதருக்கு நேரம் கிடைக்கவில்லை.

முதல்நாள் இரவு சாப்பாட்டின்போது சுந்தரத்தை அயோக்கியன் என்று பவானி விமர்சித்ததில், ஜெயராமன், - ஸ்ரீதர் - இருவருமே வாயடைத்துப் போனார்கள். அந்த விஷயத்தில் அவசரப்பட்டுத் தான் எந்தவித அபிப்பிராயமும் கூறிவிடக்கூடாது என்று முன் எச்சரிக்கையுடன் பேசாமல் இருந்தான் ஜெயராமன். தன் தங்கையின் மனத்தில் இருக்கும் எண்ணங்களைப் புரிந்துகொள்ளாமல் அவளைத் தொடர்ந்து பேசவிட ஸ்ரீதருக்கு விருப்பமில்லை. அதோடு, ஜெயராமன் முன்னிலையில் சுந்தரத்தைப் பற்றிப் பவானி அவ்வளவு ஆணித்தரமாக அபிப்பிராயம் கூறியதையும் அவனால் ரசிக்க முடியவில்லை. எனவே, பேச்சின் போக்கை மாற்றி நிலைமையைச் சமாளித்தான். எந்தவித உற்சாகமும் இன்றி, சாப்பாடு முடிந்தது. .

ஜெயராமன் பவானியிடம் விடை பெற்றுக்கொண்டான். ஸ்ரீதர் தன் காரில் அவனைக் கொண்டுவிட்டுத் திரும்புவதற்குள், அறைக் கதவைத் தாளிட்டுக்கொண்டு தூங்கிவிட்டாள் பவானி. காலையில் எழுந்து, அவள் வருகைக்காகத்தான் ஹாலில் காத்திருந்தான் ஸ்ரீதர்.

மிக நேர்த்தியாகத் தன்னை அலங்கரித்துக்கொண்டு படிகளில் இறங்கிவந்த பவானி, ஹாலில் இருக்கும் அண்ணனைப் பார்த்து, "குட்மார்னிங், அண்ணா" என்றாள். அவள் குரலில் வழக்கமாகக் காணப்படும் உற்சாகமில்லை. வெறும் சம்பிரதாயத்திற்காகச் சொன்ன வார்த்தை அது என்பது, தெளிவாகத் தெரிந்தது. அதைப் புரிந்துகொண்ட ஸ்ரீதர், வெளிக்காட்டிக்கொள்ளாமல், பதிலுக்கு "குட்மார்னிங்" சொல்லிவிட்டு, " என்னம்மா, இவ்வளவு காலையிலேயே எங்கோ கிளம்பிவிட்டாயே ...." என்று கேட்டான்.

"ஒரு சிநேகதியைப் பார்க்க .... " என்றாள் பவானி.

'யார் அந்த சிநேகதி' என்று பவானி தெரிவிக்கவுமில்லை, ஸ்ரீதரும் கேட்கவில்லை. ஸ்ரீதரின் மனம் சுந்தரத்தைச் சுற்றியே இருந்தது.

"இரண்டு நிமிஷம் என்னுடன் பேச உனக்கு அவகாசம் இருக்கிறதா?" என்று பவானியைப் பார்த்துக் கேட்டான்.

பவானி கடிகாரத்தைப் பார்த்து, "நேரமாகி விட்டது, இருந்தாலும் பரவாயில்லை, என்ன விஷயம்?" என்றாள்.

"பவானி,,நேற்று நீ சுந்தரத்தைப் பற்றிக் கூறிய வார்த்தைகள் உன் மனத்திலிருந்து பொறுப்பு உணர்ச்சியுடன் வந்தவைதானா? ஈஸ் இட் எ ரெஸ்பான்சிபிள் ஸ்டேட்மென்ட்?"

"அண்ணா, என்னுடைய ரெஸ்பான்சிபிலிட்டியைப் பற்றிப் பின்னால் ஆராய்வோம். அதற்கு முன்பு உன் பொறுப்பைப் பற்றி நான் தெரிந்துகொள்ளலாமா?"

"ஷ்யூர் .... என்ன தெரிய வேண்டும்?"

"வேறொன்றுமில்லை . சுந்தரத்துக்கு என்னை திருமணம் செய்துவைக்க வேண்டும் என்று உன் மனத்தில் ஆர்வம் எற்பட்டிருக்கிறதல்லவா?

"யெஸ் ...."

"அது பொறுப்பு உணர்ச்சியுடன் செய்த காரியந்தானா? ஈஸ் இட் எ ரெஸ்பான்சிபிள் ஆக்ட்?"

ஸ்ரீதர் சிறிது தயங்கினான். பிறகு கனிவான குரலில், "பவானி, நான் ஒரு பெரிய கம்பெனியின் உயர் அதிகாரி. என்னால் நூற்றுக்கணக்கானவர் அக்கம்பெனியில் வேலையில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். ஒவொருவரின் தகுதியைப்பற்றியும் ஓரளவு தெளிவான முடிவு என் மனத்தில் தோன்றிய பிறகே, நான் அவர்களைவேலையில் சேர்த்துக்கொள்வேன். அப்படி நான் நம்பிக்கையுடன் தேர்ந்தெடுத்த எவரும் அயோக்கியர்களாக மாறியதில்லை. ஐ ஹேவ் நெவர் பெயில்ட் ...... அப்படியிருக்க ….. , என் அருமைத் தங்கைக்கு நான் தீர்மானித்திருக்கும் வரன் விஷயத்தில் ஏமாளியாகிவிடுவேன் என்றா நினைக்கிறாய்! இதில் பொருப்பில்லாதவனாக நடந்துகொள்வேன் என்றா எண்ணுகிறாய்! என் தேர்வுக்கள் தோற்றதில்லை, தோற்கவும் தோற்காது, புரிகிறதா?"

"அண்ணா, ஒரு விஷயம் .... உன் கம்பெனித் தேர்வில் தவறு நடந்தால் திருத்திக்கொள்ளலாம் ..... என் வாழ்க்கையில் ஒரு தவறு நடந்தால் திருத்திக்கொள்ள முடியாது ...... "

"நீ என்ன சொல்கிறாய், பவானி?"

"உங்கள் தேர்வு சரியானதா என்று தெரியவில்லை. அவர் தூய்மையானவரா என்று புரியவில்லை .... "

"அதற்குக் காரணம்?"

"இன்னும் ஒரு வாரம் வரை என்னால் சொல்லமுடியாது. அதுவரை நீ எனக்காகப் பொறுத்திருக்க முடியுமா?"

"உன்னால் நேற்றே கூற முடிந்த ஒரு வார்த்தைக்கான காரணத்தை எனக்குத் தெரிவிக்க ஒரு வார காலமா?"

"ஆமாம், அண்ணா! என்னால் அதை நேற்றே நம்ப முடிந்தது. ஆனால், உன்னை நம்பவைக்க ஒரு வாரம் தேவைப்படுகிறது .... "

"அதற்குள் உன்னால் நம்ப வைக்க முடியாவிட்டால் ...... "

"தட் ஈஸ் எ டிபரென்ட் மாட்டர் ... , ஒரு வாரத்திற்குப் பிறகு பேசுவோம் ..... இப்பொது எனக்கு நேரமாகிறது ..... நான் வருகிறேன் ...." என்று கூறி வெளியேறினாள் பவானி.

அவள் போவதையே பார்த்துக்கொண்டு, மனத்தில் பெரும் சுமையுடன் அமர்ந்திருந்தான் ஸ்ரீதர்.

"இங்கேதான் ...... ஸ்டாப் ஹியர்."

டாக்ஸி டிரைவருக்குக் குரல் கொடுத்தாள் பவானி.

"சர்ர்ர்ர்' என்று பிரேக் போட்ட டிரைவர், வண்டியைக் கொஞ்சம் 'ரிவர்ஸில்' கொண்டுவந்து, எழும்பூர் உமன்ஸ் ஹாஸ்டல் வாசலில் நிறுத்தினான். மீட்டருக்கான பணத்தைக் கொடுத்துவிட்டு கீழே இறங்கிய பவானி, ஹாஸ்டலுக்குள் நுழைந்தாள். தான் போகும் இடம் யாருக்கும் தெரியக்கூடாது என்பதற்காகவே அவள் காரில் வரவில்லை. டிரைவருக்குத் தெரிந்து, அவன் மூலம் அண்ணாவுக்குத் தெரிந்துவிடும் என்று அஞ்சினாள்.

"வனஜாவைப் பார்க்கவேண்டும் ....." என்று கூறியதும், ஹாஸ்டலின் வேலைக்காரி, "அப்பப்பா .... இந்த வனஜா அம்மாவுக்குத்தான் எத்தனை விஸிட்டருங்க வராங்க .... ஆம்பிளைங்களும் பொம்பிளைங்களும் மாறிமாறி வராங்களே" என்று முணுமுணுத்துக்கொண்டே உள்ளே சென்றாள்.

அடுத்த நிமிஷம் வெளியே வந்த வனஜா, அங்கே நிற்கும் பவானியைப் பார்த்து, 'யார் இவள்? எங்கோ பார்த்தாப் போல் இருக்கிறதே' என்று யோசித்தாள். அதற்குள் பவானி தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டாள். "வாருங்கள், வாருங்கள்" என்று அவளை வரவேற்றாள் வனஜா. பவானி மௌனமாக அவளைப் பின் தொடர்ந்தாள்.

அவள் அறையை அடைந்ததும் சுற்றுமுற்றும் ஒரு முறை பார்த்துவிட்டு, வனஜா காட்டிய ஒரு பிரம்பு நாற்காலியில் அமர்ந்துகொண்டாள்.

இருவரும் சிறிது நேரம் எதுவுமே பேசிக்கொள்ளவில்லை. 'எப்படி பேச்சை ஆரம்பிப்பது?" என்று தயங்கியவாறு மௌனம் சாதித்தாள் பவானி. 'இவள் எதற்காக வந்திருக்கிறாள்?' என்று யோசித்தவாறு மௌனம் சாதித்தாள் வனஜா.

"காப்பி சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டாள் வனஜா.

"இப்போது வேண்டாம். உங்கள் காப்பி உபசாரத்தை, நாம் பேசி முடித்த பின் வைத்துக்கொள்ளலாமே .... " என்றாள் பவானி.

"ஏன் அப்படி?" புரியாமல் கேட்டாள் வனஜா.

"அது அப்படித்தான். நான் காப்பி கொடுத்து உபசரிக்கத் தகுந்த நபர்தானா என்பதை, நம் பேச்சின் முடிவில்தான் நீங்கள் தீர்மானிக்க வேண்டும். நான் இப்போது பிடிக்காத சில விஷயங்களைப் பேசப்போகிறேன் ..."

"பரவாயில்லை. மற்றவர் தகுதி அறிந்து எதையும் கொடுக்கத் தெரியாதவள் நான். தகுதியற்றவர்களுக்குக்கூட மிக உயர்ந்த பொருளைக் கொடுத்துப் பழக்கப்பட்டவள்.எனவே, எதைப் பற்றிப் பேசவந்தாலும்,காப்பி சாப்பிடுவதில் தவறில்லை. என் இருப்பிடம் தேடி வந்தால், என் மன நிறைவுக்காக காப்பி சாப்பிட்டாக வேண்டும் ...." என்று கூறி, வேலைக்காரியைக் கூப்பிட்டு, இரண்டு காப்பி கொண்டுவரச் சொன்னாள்.

காப்பி வந்தது. பவானி அதை எடுத்து அருந்தியவாறு, "உங்கள் மன நிறைவுக்காகக் காப்பி சாப்பிட்டுக் கொண்டே, என்றென்றும் உங்கள் மனநிறைவைப் போக்கக்கூடிய விஷயத்தைப் பற்றிப் பேசக்கூடிய தர்மசங்கடமான நிலைமை எனக்கு ஏற்பட்டுவிட்டது..... " என்றாள்.

"பரவாயில்லை, சொல்லுங்கள் ...."

"நேரடியாகவே சொல்கிறேன், மிஸ்டர் ஜெயராமனும் நானும் திருமணம் செய்துகொள்வதில் உங்களுக்கு ஆட்சேபணை உண்டா?"

பவானியின் முகத்தில் இருந்த புன்னகயைக் கூர்மையாகக் கவனித்தாள் வனஜா. பிறகு, அழுத்தமான குரலில், "சட்டப்படியும், தர்மப்படியும் அவர் உங்கள் பக்கத்தில் மணமேடையில் உட்காரக்கூடிய தகுதி பெற்றுவிட்டால், அதற்குப் பிறகு உங்கள் திருமணம் உங்கள் இருவருடைய சொந்தப் பிரச்சனை ஆகிவிடும். அதற்குப் பிறகு என் ஆட்சேபணைக்கோ, குறுககீட்டுக்கோ என்ன தகுதி?"

"அது எப்படி? உங்கள் அனுமதி இருந்தால்தான் அவர் மணமேடைக்கு வரமுடியும். நீங்கள் ஆட்சேபித்தால் அவர் வரமுடியாதே ..... "

"அவருடைய மகிழ்ச்சிக்காக அவர் செய்துகொள்ளும் திருமணத்திற்கு எனக்கு ஆட்சேபணை இல்லை என்று அவருக்கு முன்பே தெரிவித்திருக்கிறேன்."

"ஏன் அப்படித் தெரிவித்தீர்கள்?"

"அதைப் பற்றித் தெரிந்துகொள்ள உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?"

"உங்கள் கணவரைத் திருமணம் செய்து கொள்ளக்கூடிய உரிமையை எனக்கு எற்படுத்தித்தரக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டிருப்பதால், எனக்கும் உங்கள் வாழ்க்கையைப் பற்றி முழுமையாகத் தெரிந்துகொள்ள உரிமை இருப்பதாக நினைக்கிறேன் ....."

இதைக் கேட்டு வனஜா சிறிதுநேரம் யோசித்தாள்.

பவானியே மீண்டும் கேட்டாள்: "இப்போதாவது சொல்லுங்கள். நீங்கள் ஏன் அப்படி ஆட்சேபணை இல்லை என்று தெரிவித்தீர்கள்? ...."

"ஒரு கணவரின் மகிழ்ச்சிக்கு வழிவிடுவது ஒரு மனைவியின் கடமை இல்லையா? அதனால் ...... "

"ஆனால், மிஸ்டர் ஜெயராமனின் மகிழ்ச்சி ஆரம்பத்தில் இன்னொரு கல்யாணம் செய்துகொள்வதில் இல்லை. உங்களோடு வாழ்வதில்தான் இருந்தது, இல்லையா?"

"இருந்திருக்கலாம் ..... "

"அப்படியானால், அவருடைய மகிழ்ச்சிக்காக, அவர் விருப்பப்படி, அவர் சொல்லுக்கு அடங்கிய மனைவியாக இருந்து, ஏன் அவருக்கு மகிழ்ச்சியைத் தந்திருக்கக்கூடாது?"

"என் தூய்மையான எண்ணங்களைச் சந்தேகித்து, என்னை அவமானப்படுத்தினார் அவர் .... "

"அதாவது, உங்களுக்கும் சுந்தரத்திற்கும் உள்ள நட்பை அவர் சந்தேகித்தார், இல்லையா? அது மேலும் நீடிப்பதை அவர் விரும்பவில்லை, அப்படித்தானே?"

பவானி ஒரு வக்கீலைப் போல கேள்வி கேட்பதை வனஜா வரவேற்றாள். தன் நிலைமையைத் தான் தெளிவாகத் தெரிந்துகொள்ள அது அவளுக்கு உதவியது. எனவே, பவானியின் கேள்விக்கு "ஆமாம்" என்றாள்.

"அப்படியானால், உங்கள் கணவரின் மகிழ்ச்சிக்காக கூட உங்கள் தூய்மையான நட்பை நீங்கள் தியாகம் செய்யத் தயாராகஇல்லை, இல்லையா?"

"ஊம் ...."

"உங்கள் கணவரின் மகிழ்ச்சிக்காக வெகு சாதாரணமாக அவர் மறுமணம் செய்துகொள்வதை அனுமதித்து, அவரை இன்னொரு பெண்ணுக்குக் கொடுக்கத் தயாராக இருக்கும் நீங்கள், உங்கள் நட்பை மட்டும் துறக்கத் தயாராக இல்லை. அதாவது, உங்கள் கணவரை இன்னொரு பெண்ணுக்குக் கொடுத்தாலும் கொடுப்பீர்கள், ஆனால், உங்கள் நட்பை மட்டும் விடமாட்டீர்கள் ..... அப்படியானால், உங்கள் கணவரைவிட, உங்கள் நண்பரை அதிகமாக நேசிக்கிறீர்கள் என்றுதானே அர்த்தம்? ...."

"இல்லை, என் கணவரைவிட என் நேர்மையை அதிகமாக மதிக்கிறேன்."

"அப்படியென்றால் ... "

"விதிவசத்தால் ஒரு பெண் தன் கணவரை இழக்கக்கூடும். ஆனால், எந்தச் சந்தர்ப்பத்திலும் ஒரு பெண் தூய்மையை இழக்கக்கூடாது. இழந்தால் 'பெண்' என்ற அந்தஸ்தை இழந்து விடுவாள். என் கணவர் என் தூய்மயைத்தான் சந்தேகித்தார். அதை இழந்துவிட்டு, அவரோடு வாழ்வதிவிட, அவரை இழப்பது மேல் என்ற இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன் .... "

"என் இவ்வளவு கஷ்டம்? உங்கள் தூய்மையை உங்கள் கணவருக்கு நிரூபித்துவிட்டால் உங்கள் பிரச்சனை தீர்ந்துவிடுமே ......"

"ஒரு மனைவியின் தூய்மையை, சாட்சியங்களால் நிரூபிக்கப்படுவதல்ல. கணவரின் மனத்தால் உணரப்பட்டு நிரூபணமாவது.சாட்சியங்களால் நிரூபிக்கப்படவேண்டுமானால், சாதாரணப்பெண்களால் முடியாது. அக்கினிப் பகவானைக் கொண்டுவந்த சீதாதேவியைப் போன்றவர்களால்தான் முடியும். மற்றவர்கள் கணவரின் மனத்தால்தான் வாழமுடியும் ..... "

பவானி புன்னகைத்தாள். பிறகு, தன் பையிலிருந்த ஒரு போட்டோவை எடுத்துக்காட்டி, "மிசஸ் வனஜா, இந்தப் படத்தால் உங்கள் தூய்மை நிரூபணமாகுமா? இல்லை, மேலும் சந்தேகத்துக்குலாகுமா?" என்று கேட்டாள்.

அது வனஜாவும் சுந்தரமும் அருகருகில் இருக்கும் படம். அதைப் பார்த்ததும், வனஜா ஒருகணம் துணுக்குற்றாள். ஏதோ யோசித்தாள். அவளுக்குக் கொஞ்சம் விளக்கமும் கிடைத்தது. சிறிதுநேரம் அந்தப் படத்தையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, 'கலகல'வென்று சிரித்தாள்.

"இந்தப் படத்தை வைத்துக்கொண்டு ஒருவர், மனைவியைச் சந்தேகித்தால், அவர் இந்தக் காலத்தில் வாழ்பவராக இருக்கமுடியாது ...."

"ஏன்?"

"இந்த மாதிரியே, ஏன் இதைவிட இன்னும் நெருக்கத்தில் கூட ஆண்களின் சமீபம் இருக்கவேண்டிய அவசியம் வேலைக்குப்போகும் பெண்களுக்கு ஏற்படுகிறது. இதை ஓர் அளவுகோலாகக் கொண்டால் ..... என் மீது சந்தேகப்படுவதற்கு எல்லையே இருக்காது .... "

பவானி, வனஜாவையே உற்றுப் பார்த்தாள். 'இப்படியும் ஒரு பெண்ணா? என்ற வியப்புத்தான் அவளுக்கு ஏற்பட்டது. 'உண்மை சொல்ல வேண்டும்' என்ற ஒன்றுக்கே வாழும் பெண்ணாக இருக்கிறாளே .... இவள் வாழ்வு சீராக வேண்டுமே .... ' என்ற கவலை அவள் மனத்தில் ஏற்பட்டது.

"இந்தப் போட்டோ எப்படி ..... ? என்று அவள் கேட்க ஆரம்பித்தவுடன்.

"ஹூம் ... இது எங்கிருந்து, 'எப்படி' யாரால் கொண்டுபோகப்பட்டது என்று எனக்குத் தெரியும் ..... அதைக் கேட்காதீர்கள் .... இது கற்பனை போட்டோ ...... உண்மையை மறைத்துக் காட்டும் போட்டோ ...." என்றாள்.

தான் நினைத்தது 'சரி' என்ற மகிழ்ச்சி ஏற்பட்டது பவானிக்கு.

"சரி, இப்படியெல்லாம் உங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றிக் கேட்கிறேனே, எப்படி உங்களால் பதட்ட மில்லாமல் பதில் சொல்ல முடிகிறது? ..." என்று ஒரு கேள்வியைப் போட்டால் பவானி.

"இதில் பதட்டப்பட என்ன இருக்கிறது?" என்று நிதானமாகக் கேட்டாள் வனஜா.

"சரி, இவ்வளவு நேரம் என்னைக் கேள்விகேட்டீர்கள், இப்போது நான் ஒரு கேள்வி கேட்கலாமா?" - வனஜா.

"கேளுங்களேன்."

"என் கணவருக்குக் கல்யாணத்திற்கு முன் வேறு ஆண்களுடன் பழகிய பெண்களே பிடிக்காதே, உங்களை எப்படி அவருக்குப் பிடித்தது?"

"அப்படியென்றால் ..... " வியப்புடன் கேட்டாள் பவானி.

"அந்தக் குமார் விஷயம் அவருக்குத் தெரியாதா?" என்றாள் வனஜா.

மிரண்டு போய் வனஜாவைப் பார்த்தல் பவானி.

# 32

ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கிஇவ் வையம் தழைக்குமாம்

- பாரதியார்

**க**ண்ணாடி முன்நின்று அலங்காரம் செய்தவண்ணம், வாயிற்புரம் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தாள் சுதா.வெளிச்சம் நன்றாக விழவேண்டும் என்பதற்காக, ஜன்னல் ஓரமாகக் கண்ணாடி வைக்கப் பட்டிருந்தது. அதுவே, 'யார் வருகிறார்கள், யார் போகிறார்கள்' என்று அறிந்து கொள்ளவும், சுதாவுக்கு உதவியது.

'அனுபமா' படத்தின் பாட்டு ஒன்றை லேசாக முணுமுணுத்துக்கொண்டே நெற்றிக்குப் போட்டு இட்டுக் கொண்டிருந்தாள் அவள். அப்போதுதான் அவள் வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது. 'யாரது?' என்று திரும்பிப் பார்த்த சுதா, அதனின்றும் இறங்கும் பவானியைக் கண்டதும் வியப்படைந்தாள்.

தன் வீடு தேடி பவானி வருவாள் என்று கனவிலும் எதிர்பார்க்காததால்தான் , அந்த வியப்பு ஏற்பட்டது.

அவசர அவசரமாகத் தன் அறையிலிருந்து வெளிப்பட்டு, ஹாலில் அமர்ந்து எது ஆபீஸ் 'பைல்'களைப் பார்த்துக் கொண்டிருந்த அண்ணன் ஜெயராமனை நெருங்கி, "அண்ணா, யார் வருகிறார்கள் பார்த்தாயா?" என்று மகிழ்ச்சியுடன் கூவினாள்.

தலை நிமிர்ந்து பார்த்த ஜெயராமன் பவானியைக் கண்டு சற்றே வியந்தான்.

"வா, வா .... ஏதேது திடீர் விஜயம்?" என்று அவளை வரவேற்ற ஜெயராமன், ஆபீஸ் பைலை மூடி வைத்தான்.

"என்ன பவானி, இப்படி திடுதிப்பென்று?" என்றாள் சுதா.

"ஏன், வரக்கூடாதா? இந்த வீட்டில் நினைத்த நேரத்தில் வந்துபோக எனக்கு உரிமை கிடையாதா?" என்று சிரித்தவாறு கேட்டுக்கொண்டு, அங்கிருந்த நாற்காலி ஒன்றில் அமர்ந்துவிட்டாள் பவானி.

"என்ன அப்படிக் கேட்கிறாய்? வந்து போக மட்டுமா? நீ விரும்பினால் நிலையாக இங்கே தங்கிவிடவும் அனுமதி தருகிறோம் ..... " என்று கூறிவிட்டு, "என்ன அண்ணா, அப்படித்தானே ..... என்று ஆமோதிப்பிற்காக அண்ணனைப் பார்த்தாள் சுதா.

உள்ளே ஓர் அர்த்தம் வைத்துப் பேசுகிறாள் சுதா என்பதைப் புரிந்துகொண்டான் ஜெயராமன். ஏனோ அத்தகைய பேச்சை அவன் அப்போது விரும்பவில்லை. எனவே, "சுதா, என்ன இது? வந்ததும் வராததுமாக, அசட்டுப்பிசட்டென்று ..... ' என்று தங்கையைக் கண்டித்தான்.

"என்ன, மிஸ்டர் ஜெயராமன்! என்னைப்போல் ஒரு கன்னிப்பெண்ணுக்கு அப்படி அனுமதியும் உரிமையும் கொடுக்க முன்வருவதில் தப்பொன்றுமில்லையே ..." என்றாள் பவானி, குறுக்கிட்டு.

"இருந்தாலும் .... யாரிடமும் அநதப் பேச்சை பேசிவிடுவதா என்ன ...?" என்று இழுத்தான் ஜெயராமன்...

"பேசினால் என்ன? ஒருவேளை நானே அதை விரும்பக் கூடாதா?" புன்முறுவலுடன் கேட்டாள் பவானி.

சட்டென்று நிமிர்ந்து அவள் முகத்தைப் பார்த்தான் ஜெயராமன்.

சுதாவுக்கு பவானியின் அந்தப் பேச்சு மிகவும் பிடித்தது. அவள் உள்ளம் குளிர்ந்தது.

"அப்படிச் சொல், பவானி" என்று ஆர்வத்துடன் ஆமோதித்தாள் சுதா.

"மிஸ்டர் ஜெயராமன், உங்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச வந்திருக்கிறேன் ..... " என்றாள் பவானி.

"அப்படியா! என்ன விஷயம்?" என்ற ஜெயராமன் நாற்காலியில் சற்று சாய்ந்து அமர்ந்துகொண்டான்.

"கல்யாண விஷயம்" என்றாள் பவானி.

"கல்யாண விஷயமா? யாருக்கு?"

"எனக்குத்தான்."

"குட் ..... வெரி குட் .....மாப்பிள்ளை யாரோ ...... ?"

"அன்றொரு நாள் நீங்கள் என் அண்ணனிடம் பேசிக்கொண்டிருந்த போது, ' மிஸ்டர் ஜெயராமன், நீங்கள் மாப்பிள்ளையாக இருக்க முடியாமைக்கு வருந்துகிறேன்' என்று அவர் கூறினார், நினைவிருக்கிறதா? ஆனால், நான் அப்படிச் சொல்லத் தயாராக இல்லை. ஒருவேளை, மாப்பிள்ளை நீங்களாகக் கூட இருக்கலாம்..... அதாவது, அதற்குரிய தகுதி உங்களிடமிருந்தால் .... " என்று நிறுத்தினாள். ஜெயராமனின் முகம் மாறியது.

"அப்படியானால் சுந்தரம்?" என்று மெல்லக் கேட்டான்.

ஒரு பெண்ணுக்குத் திருமணமாகுமுன் எத்தனையோ வரன்களைப் பார்ப்பது வழக்கம்தான். விதித்ததுதான் முடிவாகும். பை தி பை , இப்போது நான் சுந்தரத்தைப்பற்றிப் பேசவரவில்லை. என்னைப்பற்றிப் பேச வந்திருக்கிறேன்" என்று கூறி, 'சுந்தரத்தைப் பற்றிப் பேசாதீர்கள்' என்று தடை விதித்தாள்.

"உன்னைப் பற்றியா?" என்றான் ஜெயராமன் வியப்புடன்.

"ஆமாம், என் அண்ணா, எங்கெல்லாமோ சல்லடைபோட்டுப் பார்த்துவிட்டுச் சுந்தரத்தை வரனாகத் தேர்ந்தெடுத்தார். என் வருங்கால மன்னி சுதாவோ, உங்களைச் சிபாரிசு செய்தாள். சுந்தரம் விஷயம் எனக்கு அவ்வளவு திருப்திகரமாகத் தெரியவில்லை. இப்போது உங்கள் பெயர்தான் பரிசீலனைக்குரியதாக இருக்கிறது. உங்களுக்கும் அதில் ஆர்வம் இருக்கிறது என்று நினைக்கிறேன் .... " - நிறுத்தினாள் பவானி.

"ம் ..... மேலே சொல்லு ..... " என்றான் ஜெயராமன்.

"அதனால் உங்களைப் பரிசீலிப்பதற்கு முன், என்னையும் நீங்கள் பரிசீலித்து, என்னைப் பற்றியும் நீங்கள் பூரண மாகத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று விரும்புகிறேன். அதுமிக அவசியங்கூட" என்றுகூறி, நிறுத்தினாள் பவானி.

ஜெயராமனும், சுதாவும் அவள் என்ன சொல்லப்போகிறாளோ என்று அவள் முகத்தை ஆர்வமுடன் பார்த்துக்கொண்டிருந்தனர்.

"மிஸ்டர் ஜெயராமன், 'கற்பு' என்ற பதத்திற்கு அர்த்தம் என்ன? என்று திடீரென்று எதையோ கேட்டாள் பவானி.

"இது என்ன கேள்வி? எல்லோருக்கும் தெரிந்த விஷயம் அல்லவா அது?" என்றான் ஜெயராமன்.

"இல்லை, ரொம்பப் பேசிப் பேசிச் சரியாகத் தெரியாமல் இருப்பதால்தான் அதைக் கேட்கிறேன் .... உங்கள் கருத்தைச் சொல்லுங்கள் ..... "

"ஒரு பெண் பாதுகாக்க வேண்டிய தூய்மையைக் கற்பு என்கிறோம் ...."

"சரி, அந்தத் தூய்மைக்கு அளவுகோல் உண்டா?"

"வாட் டு யூ மீன்? ....."

"எனி யார்ட் ஸ்டிக் ஃபார் தட் ...... அதாவது, அதை நிரயிக்கும் முறையைப் பற்றிக் கேட்க்கிறேன். முந்தய காலத்தில் கார்த்தவீர்யாச்சுனனின் நிழலை நீரில் பார்த்த முனிபத்தினி, தன கற்பை இழந்ததாகக் கதை .... இல்லையா? அந்த அளவுகோலை வைத்துப் பார்த்தால், இன்று எத்தனை கற்புக்கரசிகள் தேறுவார்கள்?"

"நீ தவறாகக் கதையைச் சொல்கிறாய், பவானி. முனிபத்தினி நிழலைப் பார்த்ததால் மட்டும் கற்பை இழக்க வில்லை. அவனுடைய ஆண்மையில் மனத்தைப் பறி கொடுத்ததால் கற்பை இழந்தாள். அவளுடைய மனம் விகார மடைந்துவிட்டது. மனத்தால் கேட்டாலும் கற்புக்கு களங்கம் என்று வைத்திருந்தார்கள் ..... "

"அப்படியா, சரி, அது கல்யாணமான பெண்ணுக்கு மட்டும் உள்ள ஒன்றா? இல்லை, கல்யாணமாகாத பெண்ணுக்கும் ஏற்படுத்தப்பட்ட ஒன்றா?" என்று கேட்டாள் பவானி.

ஜெயராமன் ஒருகணம் யோசித்தான். பிறகு, " புராணங்கள் கல்யாணமான பெண்களின் கற்பைப் பற்றிதான் பேசுகின்றன, அவள்தான் மனத்தாலும் கெடக்கூடாது என்ற கட்டாயம்" என்றான்.

"கல்யாணமாகாத பெண்களைப்பற்றி ஏன் புராணத்தில் கூறவில்லை?" - பவானி

"கூறியிருக்கலாம். எனக்குத் தெரியவில்லை. சொல்லவில்லை என்பதற்காக, கல்யாணமாகாத பெண் தவறிவிட அனுமதி உண்டா என்ன? அவளுக்கும் ஒழுக்கத்தைக் காக்க வேண்டிய கடமை உண்டே ...." - ஜெயராமன்

"அந்த ஒழுக்கத்தில், கல்யாணமாகாத பெண் ஓர் ஆடவனை மனத்தால் நினைக்க விரும்புவது, அதாவது நம் பாஷையில் காதல்செய்வது தவறு என்று சொல்லியிருக்கிறதா?" என்று கேட்டாள் பவானி.

"என் அறிவுக்குத் தெரிந்தவரை இல்லை ....." - ஜெயராமன்

"அதைத் தவறு என்று யாராலும் கூற முடியாது, அதுவும் இந்தக் காலத்தில் ...... என்று நான் நினைக்கிறேன் ..... " என்றாள் பவானி.

இதைக் கேட்டு சீறி எழுந்தான் ஜெயராமன் :

"ஏன் தவறு இல்லை? கல்யாணமாகாத பெண், கல்யாணமாகாத பருவத்தில் ஒருவனை நினைத்துவிட்டு வேறொரு -வனைக் கல்யாணம் செய்துகொண்டால், மனநிறைவுடன் வாழ முடியுமா? அப்படி வாழ்வதும் ஒரு வாழ்க்கை ஆகுமா?"

"உங்கள் வாதம் எனக்குப் புரியவில்லை, மிஸ்டர் ஜெயராமன். அப்படி வாழமுடியும் என்று ஓர் உறுதி தந்தால் தவறே இல்லை. அதற்கு ஒரே நிபந்தனைதான் உண்டு. அந்தப் பெண், தன் பழைய எண்ணகளைச் சுட்டுப் பொசுக்கி விட்டு, புதிய வாழ்வுக்குத் தன்னை தயார் செய்துகொள்ள வேண்டும். இது என் கருத்து, நீங்கள் ஒப்புக்கொள்கிரீகளா மிஸ்டர் ஜெயராமன் .....?" என்று கேட்டு, அவன் முகத்தைப் பார்த்தாள்.

"என்னால் அதை மனமார ஒப்புக்கொள்ள முடியவில்லை ..... "

"ஏன்?"

"மனத்தை சலனப்படுத்திக்கொண்டவள் எப்படி உறுதியாக வாழ முடியும்?" என்றான் ஜெயராமன்.

"அதாவது வாழ முடியாது என்பது உங்கள் முடிவு. அந்தச் சந்தேகத்தின் அடிப்படையிலேயே, ஒரு பெண்ணுடைய வாழ்க்கையோட விளையாடலாம் என்று நினைக்கிறீர்கள் ...." என்றவள், ஒரு நிமிஷ மௌனத்திற்குப் பிறகு, "மிஸ்டர்

ஜெயராமன், காலம் ரொம்பவும் மாறியிருக்கிறது. இப்போது பெண்கள் ஆண்களுக்குச் சமமாக எல்லாத் துறைகளிலும் ஈடுபடுகிறார்கள். வேலைக்குப் போகிறார்கள்; அங்கெல்லாம் அவர்கள் பலவித ஆண்களுடன் பழக நேரிடும். அவர்களிடம் சில சிறப்புகளை நேரிடையாகக் காண நேர்ந்து, அந்தச் சிறப்புகளுக்காக ஓர் ஆடவனைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பக்கூடும். பிறகு வேறு சில சிறப்புகளுக்காக வேறு ஆடவனைத் திருமணம் செய்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும். அந்த நிலையில், அந்தப் பெண், தன் பழைய எண்ணங்களுக்காக வாழ்க்கையைப் பலியிட வேண்டுமா? கொஞ்சம் 'லாஜி'க்கோடு சிந்தியுங்கள். நியாயத்தைப் பாருங்கள். என்னைக்கேட்டால் இந்த விஷயத்தில் ஆண் - பெண் இரு பாலருக்கும் ஒரே சட்டம்தான் உண்டு. 'கற்பு நிலை என்று சொல்லவந்தால், இரு கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்' என்று பாரதியார் பாடியிருக்கிறார் ...... எனவே, ஆண்களுக்கும் இது பொருந்தும். அவர்கள் ஏற்றுக்கொண்டால், பெண்களையும் வற்புறுத்தலாம். திருமணத்திற்கு முன்பு, பிற பெண்களைப் பார்த்து ஆசைப்படாத ஆண்களின் எண்ணிக்கை ரொம்பக் குறைவு, சார்."

இதுவரை பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்த சுதா, குறுக்கிட்டாள்:

"பவானி, நீ ஏன் இப்படிச்சுற்றி வளைத்துப் பேசுகிறாய் என்று தெரியும்."

"நோ .... உனக்குத் தெரியாது, சுதா."

"நீ யாரைப் பற்றிச் சொல்கிறாய்?"

"நான் என்னை பற்றித்தான் சொல்கிறேன். மிஸ்டர் ஜெயராமன், நான் வந்து ..... " என்று அவள் ஆரம்பிக்கும் முன், சுதா குறுக்கிட்டு, "இப்போது உன்னைப் பற்றி என்ன, பவானி?" என்றாள்.

பவானி, சுதாவை உற்றுப் பார்த்தாள். பிறகு, "சுதா, நீ குறுக்கிடுவதிலிருந்து என்னைப்பற்றி முழுமையாக உன் அண்ணனிடம் சொல்லியிருக்கவில்லை என்று தெரிகிறது. நீ சொல்லாவிட்டாலும் நான் சொல்ல வேண்டும், அது என் கடமை. மிஸ்டர் ஜெயராமன், கொஞ்ச நாள் நான் வியாதியாக இருந்தது உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன், என் வியாதிக்குக் காரணம் என்ன தெரியுமா?" என்று கேட்டு நிறுத்தினாள்.

ஜெயராமன் பதிலேதும் பேசாது அவளையே பார்த்தான். பவானி தொடர்ந்தாள்.

"என் வியாதிக்குக் காரணம் என் காதல்தான் ..... ஆமாம், நான் குமார் என்பவரைக் காதலித்தேன். ஏனோ எங்கள் காதல் நிறைவேறவில்லை. நான் நோய்வாய்ப்பட்டேன். அவர் வேறு ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டுவிட்டார். அவர் இப்போது மிக மகிழ்ச்சியாக இருக்கிறார். இபோதும் நான் அவரை சந்திக்கிறேன், ஆனால், பழைய நினைவோடு அல்ல; முற்றிலும் மாறிய மனநிலையில். அவருடைய திருமணத்தைப்பற்றி எனக்குப் பொறமை இல்லை, வருத்தமும் இல்லை. இந்தக் காலத்தில் இது சகஜம் என்று ஏற்றுக்கொண்டுவிட்டேன். என் மனத்தில் இப்போது எந்தவிதக் களங்கமும் இல்லை, தெளிந்த மனநிலையில் இருக்கிறேன். இந்த நிலையில் என்னை உங்களால் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ள முடியுமா?" என்று கேட்டு நிறுத்தினாள்.

ஜெயராமன் பதிலேதும் சொல்லவில்லை. அவளையே பார்த்தான் அவன். குழப்பத்தில் இருக்கிறான் அவன் என்பதை அவன் முகம் காட்டியது.

"சொல்லுங்கள் மிஸ்டர் ஜெயராமன், கமான் ..... " என்று தூண்டினால் பவானி.

"கொஞ்சம் என்னைச் சிந்திக்க விடு, பவானி ..... " என்றான் ஜெயராமன்.

"நீங்கள் சிந்திக்க வேண்டிய அவசியம் இல்லாமல், அதாவது சிந்திக்காமலேயே பதில் சொல்லக்கூடிய அளவில் நான் ஓர் உதாரணம் சொல்லட்டுமா?"

"என்ன அது?" - எங்கே தன்மனத்தில் இருப்பதையே சொல்லிவிடுவாளோ என்ற அச்சத்துடன் கேட்டான்.

வனஜாவைப் பற்றி பேச்சு வந்துவிடப் போகிறதே என்று. சுதாவும் பயந்தாள்.

அவர்கள் இருவரின் பயத்தையும் போக்கும் வகையில் பேசினாள் பவானி;

"மிஸ்டர் ஜெயராமன், உங்கள் தங்கை சுதா என் அண்ணனைக் காதலிக்கிறாள். சப்போஸ், என் அண்ணன் அவளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால் ..... நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் சொல்கிறபடி - உங்கள் தத்துவப்படி, மனத்தால் கேட்டுப்போய்விட்ட உங்கள் தங்கைக்கு வேறு ஒரு வரனைத் தேடிக் கல்யாணம் செய்துவைப்பீர்களா? இல்லை, அது தவறு என்று கருதி, அவளைச் சந்நியாசினியாக்கி விடுவீர்களா?"

பவானியின் இந்தக் கேள்வி ஜெயராமனைத் தைத்தது. அவன் மனம் வேதனைப்பட்டது.

"நோ ... நோ ..... பவானி. அது எப்படி? வாழ்க்கை முக்கியமானது என்று கருதுபவன் நான். வாழ்க்கையில் சில கட்டுப்பாடுகள், ஒழுக்கங்கள் வேண்டுமே தவிர, இம்மாதிரி சாதாரண விஷயங்களுக்காக வாழ்க்கையைப் பலியிட்டு விடக்கூடாது ....... நான் உறுதியாகச் சொல்கிறேன், பவானி, மற்ற சூழ்நிலை சரிப்பட்டு வந்து,,நம் கல்யாணம் நிச்சயமானால், உன் பழைய வாழ்க்கையை மறந்து, உன்னை மனதார ஏற்றுக்கொள்ள நான் தயார். அதற்கு நான் எந்தவித ஆட்சேபணையும் சொல்ல மாட்டேன் ...."

"ஷ்யூர்? ...." என்று மீண்டும் கேட்டாள் பவானி.

"ஷ்யூர்? ...." என்று உறுதியாகச் சொன்னான் ஜெயராமன். சுதாவின் முகம் மலர்ந்தது.

பவானி நிதானமாகப் பேசினாள்: "தாங்க் யூ மிஸ்டர் ஜெயராமன். ஆனால், எனக்கு ஒரு பிரச்சனை. நான் உங்கள் மனைவியாக மாறிய பிறகும், உங்கள் கருத்து மாறாமல் இருக்குமா என்பதுதான். ஏனென்றால், என்னை ஏற்றுக்கொள்ள அதாவது என் பழைய காதலை மறந்து என்னை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கும் உங்களால், உங்கள் மனைவியின் பழைய நட்பை சகித்துக்கொள்ள முடியாமல் அவளை இப்படித் தள்ளிவைத்து .... " பேச்சை நிறுத்தினாள் பவானி.

அவள் சொல்லாமல் சொன்னதைப் புரிந்துகொண்ட ஜெயராமன் திடுக்கிட்டான். அவன் மண்டையில் யாரோ ஓங்கி அடிப்பதுபோல் இருந்தது. தன்னை எப்படி மடக்கிவிட்டாள் இந்தப் பெண் என்று எண்ணி, மருண்டான். அவன் கண்கள் குளமாயின.

அடுத்த கணம் ......

"பவானி ..... " என்று உணர்ச்சி போங்க அழைத்து, அவளை நெருங்கினான் ஜெயராமன்.

# 33

நிச்சயம் நீவெல்வாய் - வெற்றி
நினக்கியல் பாயின தறியாயோ?

\- பாரதியார்.

**த**ன் அருகே திக் பிரமை பிடித்தவன்போல் பேச்சற்று நின்றிருந்த ஜெயராமனையே கண்கொட்டாமல் பார்த்தாள் பவானி. அவன் முகத்தில் ஓடும் எண்ணங்களை அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. தவறு செய்துவிட்டுப் பிராயச்சித்தம் கோரும் மனிதன் போன்று தோன்றினான் அவன். வெகு நேரம்வரை அப்படியே நின்றவன், 'பவானி' என்று மீண்டும் உணர்ச்சி போங்க அழைத்து,, தாங்க் யூ பவானி, தாங்க் யூ" என்றான்.

ஏதோ நாடகத்தில் வரும் காட்சி ஒன்றைப் பார்ப்பதுபோல், இதை வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்தாள் சுதா. அவளுக்கு அங்கு நடப்பது எதுவுமே புரியவில்லை; பிடிக்கவுமில்லை. பவானியைத் தன் அண்ணனுக்குத் திருமணம் செய்துவைத்து, அவளைத் தன் மன்னியாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சுதா விரும்பியது உண்மை. அந்த ஆர்வத்தில் அவளுக்குப் பவானிமீது எவ்வளவு அன்பு ஏற்பட்டதோ, அந்த அளவு இப்போது அவளைக் கண்டு பயந்து கொண்டிருந்தாள். பவானியின் பேச்சு அவளை வெகுவாகக் கலக்கியிருந்தது.

ஸ்ரீதருக்கும் தனக்கும் உள்ள உறவைப்பற்றிப் பவானி குறிப்பிட்டவிதம்,சுதாவுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை.

'என் அண்ணா உங்கள் தங்கையைத் திருமணம் செய்துகொள்ள மறுத்துவிட்டால், உங்கள் தங்கைக்கு என்ன வழி செய்வீர்கள்?" என்று பவானி நேரிடையாகவே ஜெயராமனிடம் கேட்டதை, பெரிய அபசகுனமாகக் கருதினாள் சுதா.

ஸ்ரீதர் தன்னை ஒதுக்கும் சூழ்நிலை ஏற்படக்கூடும் என்று அவள் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அப்படி ஒரு கற்பனைகூட அவள் மனத்தில் தோன்றுவதற்கு அவள் இடமளித்தது இல்லை. ஆனால், அப்படி ஒரு பயத்தை, பவானி சர்வசாதாரணமாக கிளப்பிவிட்டதும் சுதாவுக்கு எரிச்சலாக இருந்தது. 'இந்தப் பெண் ஏன் என்னை வம்புக்கு இழுக்கிறாள்' என்று பொருமினாள். இவளால் நம் இன்பக் கோட்டைகள் சிதைந்துவிடுமோ' என்று அஞ்சினாள்.

கடைசியில், பவானி சுற்றி வளைத்துப் பேசி, வனஜாவைக் குறிப்பிட்டுக் கேட்டபோது, பவானியின் மீதிருந்த கொஞ்சநஞ்ச அன்பும் அற்றுப்போய்விட்டது அவளுக்கு. 'இந்தப் பெண் ஏதோ ஒரு திட்டத்துடன்தான் வந்திருக்கிறாள். இவளிடம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டாள்.

அவள் தீர்மானத்தை உறுதிப்படுத்துவதுபோல், ஜெயராமனுக்கும் பவானிக்கும் இடையே நிகழ்ந்த பேச்சின் முடிவும் அமைந்தது.

"பவானி, நீ என்னைவிட வயதில் சின்னவளாக இருந்தாலும், வனஜாவுக்காக இவ்வளவு தெளிவாக வாதாடியது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. உன் பேச்சினால்,எனக்கும் வனஜாவுக்கும் உள்ள உறவு சீர்பட்டுவிட்டது என்று சொல்லமுடியாவிட்டாலும் அது விஷயமாக நான் இன்னும் கொஞ்சம் சிந்திக்கவேண்டும் என்ற அவசியத்தை ஏற்படுத்திவிட்டது. ஐ பிராமிஸ் யூ, நான் வனஜா விஷயமாகச் சிந்திக்கிறேன். ஐ வாண்ட் டு திங் அலோன்" என்றான்.

"தாங்க யூ, மிஸ்டர் ஜெயராமன், அதுதான் என் வேண்டுகோளும். நாம் பல விஷயங்களில் இப்படித்தான் அவசரப்பட்டு முடிவெடுத்து விடுகிறோம். உணர்ச்சிவசப்படும்போது எந்த முடிவும் எடுப்பது தவறு. உணர்ச்சி நம் தெளிவான சிந்தனைக்குத் தடைவிதித்துவிடுகிறது. எப்போதும் அமைதியாகச் சிந்தித்துத்தான் முடிவெடுக்கவேண்டும். அப்படிச் சிந்திக்கத் தனிமை தேவை. திங் அலோன், நல்ல முடிவுக்கு வருவீர்கள் .... " என்றாள்.

"யெஸ், பவானி ...ஐ வில் டு இட்! பை தி பை .உன் விஷயமாக எனக்கொரு சந்தேகம்,கேட்கலாமா?" என்றான்.

"கேளுங்களேன்."

"எனக்கும் வனஜாவுக்கும் உள்ள உறவைப் பற்றி, இவ்வளவு உறுதியுடன் வாதாடிய நீ, உன் விஷயத்தில், அதாவது உனக்கும் சுந்தரத்துக்கும் இடையே உள்ள பிரச்சனையில், மிக வேகமாக ஒரு முடிவுக்கு வந்துவிட்டாய் என்று நினைக்கிறேன். சுந்தரத்தைப்பற்றி நீ இன்னும் கொஞ்சம் பொறுப்பு உணர்ச்சியுடன் ஆராயலாம் என்று நினைக்கிறேன் ...... டு யூ அக்ரீ வித் மீ? ...." என்று கேட்டு நிறுத்தினான்.

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால், சுந்தரம் ரொம்பவும் நல்லவர், தூய்மையானவர் என்று நீங்களே கருதுவதுபோல் தெரிகிறது ..... ஈஸ் இட் ஸோ? .... " என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் பவானி.

"நீங்களே என்று ஏன் அழுத்திச் சொல்கிறாய், பவானி. சுந்தரத்தின்மேல் எனக்குத் தனிப்பட்ட பகைமை எதுவும் கிடையாது. அது மட்டுமல்ல, என் கோபத்திற்காகவோ, தாபத்திற்காகவோ, பிறரின் பெருமைகளை நான் என்றுமே குறைத்து மதிப்பிடுவதில்லை ...... நீ என்னை இன்னும் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்று நினைக்கிறேன் .. என்றான்.

"அப்படியானால், நீங்கள் சுந்தரத்தை மிகவும் தூய்மையானவர் என்றா நினைக்கிறீர்கள் ......" என்று மீண்டும் கேட்டாள் பவானி.

"அப்படி உறுதியாகச் சொல்ல முடியாவிட்டாலும், அப்படிச் சொல்லும் அளவுக்கு எனக்குப் பழக்கமில்லா விட்டாலும் அவரை ஓர் அயோக்கியர் என்று என்னால் நம்பமுடியவில்லை" என்றான்.

'அப்பாடா .... கொஞ்சமாவது மனம் மாறுகிறதே .... இனிமேல் எல்லாம் சரியாகிவிடும் ......' என்று எண்ணிப் பெருமூச்செறிந்தாள் பவானி. பிறகு, "மிஸ்டர் ஜெயராமன், உங்கள் மனம் திறந்த பேச்சுக்கு ரொம்ப நன்றி. எனக்கும் சுந்தரத்தை அயோக்கியர் என்று நம்ப முடியவில்லைதான். ஆனால், அப்படி என் வாயாலேயே சொல்ல வேண்டிய நிர்பந்தத்தை உருவாக்கியது இந்தக் கடிதம்தான்" என்று கூறி, தன் பையிலிருந்த கடிதத்தை எடுத்து, ஜெயராமனிடம் நீட்டினாள் பவானி.

அது, சுந்தரம் பெயரால், பவானிக்கு எழுதப்பட்ட கடிதம்.

அதைப் பார்த்ததும், ஜெயராமனின் முகம் ஒருகணம் கருத்தது. மறுகணமே, தன்னைச் சமாளித்துக்கொண்டான். அந்த சிறு மாற்றத்தை பவானி கவனிக்கத் தவறவில்லை.

"மிஸ்டர் ஜெயராமன், இந்தக் கடிதத்தைச் சுந்தரந்தான் எழுதியிருப்பார் என்று நம்புகிறீர்களா?" என்று கேட்டால்.

ஜெயராமன் பதில் சொல்லவில்லை.மௌனம் சாதித்தான். பவானி மீண்டும் அதே கேள்வியைக் கேட்டாள்.

"அவர் எழுதி இருக்க முடியாது" என்றான் ஜெயராமன்.

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"

"இப்படி ஓர் அசட்டுத் துணிச்சலுடன், முன்பின் தெரியாதப் பெண்ணைப் பீச்சுக்கு வரவழைக்கும் பயித்தியக் காரத்தனம் சுந்தரத்திடம் இருக்க முடியாது. அதனால் நீங்கள் இந்தக் கடிதத்தை மதிக்கவே தேவையில்லை. யூ கேன் ஜஸ்ட் இக்னோர் இட்" என்றான்.

இந்தப் பேச்சையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தாள் சுதா. அவளுக்கு எதுவுமே பிடிக்கவில்லை. வளைத்து வளைத்துச் சுந்தரத்தைப் பற்றிப் பவானி அபிப்பிராயம் கேட்பதும், ஜெயராமனே சுந்தரத்தின் புகழ் பாடுவதும் ...... இதையெல்லாம் சுதாவால் தாங்கவே முடியவில்லை.

"என்னை மன்னித்துவிடுங்கள் ... ஐ ஆம் நாட் பீலிங் வெல் .... நான் போகிறேன்" என்று இருவரிடமும் விடை பெற்றுக்கொண்டு அங்கிருந்து நகர்ந்தாள்.

பத்து நிமிஷம் கழித்து அவள் திரும்பி வந்து பார்த்தபோது, பவானி அங்கு இல்லை. சுதாவிடம் சொல்லிக் கொள்ளாமலேயே புறப்பட்டுப் போயிருந்தாள் பவானி. அதை அறிந்ததும், அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. 'தன்னிடம் விடைபெறும் அளவுக்குக்கூட மரியாதை தெரியாதவளாகப் போய்விட்டாளா இவள்!' என்று எண்ணிப் பொருமினாள். அந்தப் பொருமலை அண்ணனிடம் கொட்டினாள்.

"என்ன அண்ணா, உங்களிடம் உலக நியாங்களையெல்லாம் எடுத்துச் சொல்ல வந்த வனிதாமணி எங்கே?" என்று கேலியாகக் கேட்டாள்.

ஜெயராமன் தலை நிமிர்ந்து பார்த்தான். பிறகு, " ..... ம் ம் ... அந்த வனிதாமணி நியாங்களையும், உண்மைகளையும் எடுத்துச் சொல்லிவிட்டுப் போய்விட்டாள்" என்றான் அதே கேலியான குரலில்.

"இங்கே நான் ஒருத்தி இருப்பது அந்த மகாராணிக்குத் தெரியாதோ? ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போயிருக்கக் கூடாதோ?" என்று எரிச்சலுடன் கேட்டாள் சுதா.

"அவள் உன்னைத்தேடினாள். நான்தான் அவசியமில்லை என்று சொல்லி அவளை அனுப்பினேன் " என்றான்.

"ஏன்?" என்று கேட்டாள் சுதா.

"கையில் ஒரு போலிக் கடிதத்தை வைத்துக்கொண்டு, அதைச் சுந்தரம் எழுதியதாக நம்பாமல், 'யார் எழுதி யிருப்பார்கள்?' என்ற ஆராய்ச்சியில் சுற்றிக்கொண்டிருக்கிறாள் அந்தப்பெண். அவளை உன் அறைக்கு அனுப்பினால், தற்செயலாக உன் கையெழுத்தைப் பார்க்க நேரலாம். கடிதத்திலுள்ள கையெழுத்தையும், உன் கையெழுத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க நேரலாம். அதனால் ஏதாவது சிக்கல் விளையலாம் .... " விஷமமான பார்வையுடன் பேசிக்கொண்டே எழுந்தான் ஜெயராமன்.

சுதா சீறினாள்.

வாட் ஆர் யூ டாக்கிங்? ... என்ன நினைத்துக்கொண்டு பேசுகிறாய் அண்ணா?" என்று கத்தினாள் சுதா.

"ஸ்டாப் இட் மை கேர்ல் ... ஐ நோ .... பிறகு பேசுவோம் .... " என்று ஒரே வார்த்தையில் அவளை அடக்கிவிட்டு, அவசர அவசரமாக வெளியேறினான் ஜெயராமன்.

சுதா சிலையென நின்றுவிட்டாள்.

**சா**ர் .... போஸ்ட் ..... "

வீட்டுவாசலில் விழுந்த தபாலை எடுத்துப் பார்த்தாள் சுதா. அவளுக்கு வந்திருந்த கடிதம் அது.

'அன்புள்ள சுதாவுக்கு, வணக்கம்.

நான் உன்னைச் சந்தித்துப் பேசவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. என்ன அது என்று ஆராயாதே! உன் எதிர்காலம் சிறப்புற அமைய வேண்டுமானால், நீ கண்டிப்பாக என்னைச் சந்தித்துதான் ஆகவேண்டும். எனவே, இன்று மாலை அடையாறு பீச்சுக்கு வா .... மற்றவை நேரில், வராவிட்டால் நஷ்டம் உன்னுடயாகத்தான் இருக்கும். இப்படிக்கு,

- சுந்தரம்.

கடிதத்தைப் படித்துப் பொருமினாள் சுதா. 'என்ன துணிச்சல் உனக்கு? எனக்கேவா கடிதம் எழுதுகிறாய் ..... ?' என்று கொதித்தாள்.

அதன் பிறகு அந்தக் கடிதததைப்பற்றி வெகு நேரம் சிந்தித்தாள் ; போகவிட்டால் எனக்கு ஏதோ நஷ்டம் எற்படும் என்கிறானே, போய்ப் பார்த்துவிடுவோம். என்னதான் ஆகிறது என்று பார்ப்போம் .... லெட் மி ஸீ...'

மாலையில் அவனைச் சந்திக்கும்போது, என்ன பேசுவது என்ற ஒரே எண்ணத்துடன்தான் அன்று முழுவதும் செயல்பட்டாள் சுதா.

**த**னிமையான அந்தக் கடற்கரையிலே, முழங்கால்களைக் கட்டிக்கொண்டு, கடலையே வெறித்துப் பார்த்தவண்ணம் அமர்ந்திருந்தான் சுந்தரம். வானத்தில் ஆங்காங்கே தோன்றியிருந்த நட்சத்திரங்களையும், அஸ்தமனமாகிக் கொண்டிருந்த சூரியனையும் பார்த்து, பரவசமாகிக்கொண்டிருந்தான் அவன்.

அப்போதுதான் அவன் பின்னால் ஒரு குரல் எழுந்தது;

"மிஸ்டர் சுந்தரம் .... "

திரும்பிப் பார்த்தான் சுந்தரம். அங்கே நின்றிருந்த சுதாவைக் கண்டதும், அவன் சற்றே வியந்தான்.

"ஓ! நீங்களா? வாருங்கள் ... " என்றபடி, மரியாதையுடன் எழுந்தான். அவன் குரலில் இருந்த அந்த வியப்பைக் கேட்டுத் துணுக்குற்ற சுதா, "என்ன ..... நீங்களா என்று கேட்கிறீர்கள்?" என்றாள் கேலியான குரலில்.

"ஏன்? பின் எப்படிக் கேட்கவேண்டும் என்கிறீர்கள்?" என்றான் சுந்தரம்.

"வா என்று கடிதம் போட்டுவிட்டு, வந்தவளை 'நீங்களா?' என்றால், என்ன அர்த்தம்? என்றாள்.

"கடிதமா? உங்களுக்கா?" என்றான் சுந்தரம்.

"ஓ .... பேஷ் ... வெகு பேஷ் ... " - சுதா.

"என்ன இது? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" - சுந்தரம்

"நான் ஒன்றும் சொல்லவில்லை. நீங்கள்தான் மிக நன்றாக நடிக்கிறீர்கள்? நிச்சயமாகவே நீங்கள் ஒரு "ரோக் தான் ...." என்றாள் சுதா.

"நடிக்கிறேனா? 'ரோக்'கா? நான்சென்ஸ் ..... இப்படியெல்லாம் மரியாதைக் குறைவாகப் பேசாதீர்கள் ...."

"பேசினால் என்ன செய்வீர்கள்?"

"பதில் பேசாமல் எழுந்து போய்விடுவேன்."

'தாராளமாகப் போங்கள். அதற்கு முன்பு இந்தக் கடிதத்தை எனக்கு எதற்காக எழுதினீர்கள் என்று சொல்லிவிட்டுப் போங்கள்."

"கடிதமா?"

"யெஸ் ..... இந்தக் கடிதம் .... " என்று கூறி, தன் கைப்பையிலிருந்த ஒரு கடிதத்தை எடுத்து, அவனை நெருங்கிச் சென்று அமர்ந்து அவனிடம் கொடுத்தாள்.

அப்போது -

"கிளிக் ...." என்ற ஒலியுடன், ஓர் ஒளி அங்கு எழுந்தது. சட்டென்று திரும்பிப் பார்த்தாள் சுதா.

அங்கே ....

பவானி, கையில் காமிராவுடன் நின்றுகொண்டிருந்தாள்.

"பவானி, என்ன இது? ஏன் படமெடுத்தாய்?" என்று பரபரப்புடன் கேட்டாள் சுதா.

"எல்லாம் என் அண்ணனிடம் காட்டுவதற்குதான். உனக்கு இப்படி ஒருவர் பழக்கமாயிருப்பதையும் அவர் தெரிந்துகொள்ள வேண்டாமா? நல்ல வேளை, இந்த விஷயம் கல்யாணத்திற்கு முந்தியே தெரிந்ததே, என் அண்ணா பிழைத்தார் .... " என்று கூறி, வேகமாகத் திரும்பி, காரில் ஏறிப் பறந்தாள் பவானி.

தன் காலின் கீழிருக்கும் பூமி நழுவுவதுபோல் தவித்தாள் சுதா.

பேதை முன்பு கண்டதுண்டோ?

- பாரதியார்

"அண்ணா, உனக்கு ஜோசியத்தில் நம்பிக்கை உண்டா? என்று புன்சிரிப்புடன் கேட்டுக்கொண்டே தன் அண்ணன் ஸ்ரீதரின் அறைக்குள் நுழைந்தாள் பவானி. தங்கையின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் ஸ்ரீதர். அவளுடைய புன்சிரிப்புக்குப் பொருள் தெரியவில்லை அவனுக்கு.

அவள் முகத்தில் இருப்பது என்ன? வேடிக்கையா,கேலியா? புரியவில்லை அவனுக்கு. ஆனால், பவானி மிகவும் உற்சாகமாக இருக்கிறாள் என்பதை மட்டும் அவளுடைய ஆர்வமான குரலிலிருந்து அவனால் புரிந்துகொள்ள முடிந்தது.

அப்படி அவளுக்கு ஆர்வம் தரக்கூடிய காரியம் என்னவாக இருக்கும் என்று யோசித்துப் பார்த்தான்.ஒருவேளை, 'வாக்களித்தபடி சுந்தரம் ஓர் அயோக்கியன்தான்' என்று நிரூபிக்கப் போகிறாளா? அப்படியே நிரூபித்தாலும் அதில் ஆர்வத்திற்கு என்ன இருக்கிறது? 'பார்த்தாயா, நான் சொன்னபடி செய்துவிட்டேன்' என்ற கர்வந்தானே இருக்கமுடியும்!

ஒன்றும் புரியாமல் விழித்துக்கொண்டிருந்த அண்ணனின் பிரமையைக் கலைக்க, பவானி மீண்டும் கேட்டாள்.

"என்ன அண்ணா யோசனை? என் கேள்விக்குப் பதில் கிடையாதா?"

"என்ன! ... என்ன? .... என்ன கேட்டாய்?"

"ஜோசியத்தில் நம்பிக்கை உண்டா உனக்கு என்று கேட்டேன்."

"முன்பு இருந்தது, இப்போது போய்விட்டது" என்றான் ஸ்ரீதர் சலிப்பான குரலில்.

"ஏன் அப்படி?"

"உன் விஷயத்தில் ஜோசியம் பொய்யாகிவிட்டதே; அதனால் .... "

"என் விஷயத்தில் ஜோசியம் எப்படிப் பொய்த்தது?"

"உனக்கும் சுந்தரத்திற்கும் ரொம்பப் பொருத்தம், உங்கள் இருவருக்கும் திருமணமானால் பிரமாதமாக இருக்கும்; நிச்சயமாக இந்தக் கல்யாணம் நடந்தே தீரும் என்றெல்லாம் உங்கள் ஜாதகங்களைப் பார்த்த ஜோசியர் சொன்னார். இப்போது என்ன நடக்கிறது? இனிமேலும் என்னை ஜோசியத்தை நம்பச் சொல்கிறாயா?" என்றான்.

பவானி 'கலகல'வென்று வாய்விட்டுச் சிரித்தாள். பிறகு, "அண்ணா, நீ செய்வது தப்பு, ஒரு பெண்ணுக்கும் ஆணுக்கும் திருமணம் நிச்சயிப்பதானால், ஜோசியரிடம் போய்க் கேட்பதில் அர்த்தமில்லை. பெண்ணிடம், 'உனக்குப் பையனைப் பிடித்திருக்கிறதா?' என்று கேட்க வேண்டும், பையனிடம் 'உனக்குப் பெண்ணைப் பிடித்திருக்கிறதா?' என்று கேட்கவேண்டும்.அதை விட்டுவிட்டு, யாரோ மூன்றாம் மனிதரான ஜோசியரிடம் கேட்டால் என்ன அர்த்தம்? அவராவது சம்மந்தப்பட்டவர்களிடம் கேட்டார! சம்பந்தமே இல்லாத ராகுவையும், கேதுவையும் அல்லவா கேட்டிருப்பார் ...." என்றாள் வேடிக்கையாக.

அவளுடைய வேடிக்கையை ஸ்ரீதர் ரசிக்கவில்லை. 'உம்'மென்று முகத்தை வைத்துக்கொண்டான். அவனுக்கு உண்மையில் சுந்தரத்தின் சம்பந்தத்தைப் பவானி உதறியதிலிருந்து அவளுடைய நடவடிக்கைகள் எதுவுமே பிடிக்கவில்லை.

"அண்ணா, நீ வேறு ஒரு ஜோசியரிடம் ஏமாந்ததை மறந்துவிட என்னிடம் கொஞ்சம் ஜோசியம் கேளேன்" என்றாள்.

"என்னது? நீ ஜோசியம் சொல்கிறாயா?" என்றான் ஸ்ரீதர் முகத்தைச் சற்றே கடுமையாக்கிக்கொண்டு.

"ஆமாம், நானேதான். நம்பர் ஒன், இன்றைக்குச் சுதா நம்ப வீட்டுக்கு வரப்போகிறாள் ...."

இதைக்கேட்டு ஸ்ரீதர் உரக்கச் சிரித்தான்.

"பேஷ் .... பெரிய ஜோசியந்தான்! சுதா நம்ப வீட்டுக்கு வருவதற்கு ஜோசியமா? அவள்தான் தினமும் வருகிறாளே ..." என்றான்.

"மற்ற நாளிக்கும் இன்றைக்கும் வித்தியாசம் உண்டு. மற்ற நாளில் சாதாரணமாக வருவாள். இன்றைக்கு அடித்துப் புரண்டுகொண்டு ஓடி வருவாள் .... "

" வாட் ஈஸ் திஸ்? என்ன இது?"

"பார்த்தாயா? உனக்கே என் ஜோசியத்தில் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அவள் என் அப்படி வருவாள் என்று கேட்காதே ..... ஜோசியப்படி அதையெல்லாம் சொல்லக்கூடாது. அவள் வந்து, உன்னிடம் என்ன சொல்லுவாள் என்று வேண்டுமானால் ஜோசியம் சொல்லும் ...."

"என்ன சொல்வாள்?"

"அந்தப் படத்தை நம்பாதீர்கள். நான் உங்களைத் தவிர வேறு யாரையும் மனத்தாலும் நினைக்கவில்லை ....' என்று சொல்வாள் .... "

"என்ன பவானி இது? என்ன உளறுகிறாய்? படமா? படத்தைக் காட்டி நம்பாதீர்கள் என்று சொல்லுவாளா? சொல்வதைக் கொஞ்சம் விளக்கமாகத்தான் சொல்லேன் ... என்றான் ஸ்ரீதர்.

"இந்தப் படந்தான். ஆனால், விவரங்களை இப்போது சொல்ல முடியாது. நீ கொஞ்சம் குழம்பித் தவிக்கத்தான் வேண்டும் ..... யு மஸ்ட் கெட் கன்ப்யூஸ்ட் ... " என்று கூறி, தன் கையில் இருந்த புகைப்படத்தை அவனிடம் நீட்டினாள்.

அது .... சுந்தரமும், சுதாவும் கடற்கரையில் நெருங்கியிருந்த போது எடுக்கப்பட்ட படம்.

ஸ்ரீதர் அதைப் பார்த்தான்.

அவன் புருவங்கள் சுருங்கின.

"வாட் ஈஸ் திஸ் ... ? என்ன இதெல்லாம்?" என்றான்.

"தட் ஈஸ் போட்டோ .... படம் ...." என்றாள் பவானி அதே குரலில்.

"அது தெரிகிறது ..... என்ன படம்?"

"பார்த்தாலே தெரியவில்லையா? இரண்டுபேர் மிகவும் நெருக்கமாக இந்த உலகையே மறந்து .... " என்று கேலியாக இழுத்துக்கொண்டே போனாள் பவானி.

அவளைப் பேசவிடாமல் குறுக்கிட்டான் ஸ்ரீதர். "ஸ்டாப் இட் .... ஐ கான்ட் பிலிவ் திஸ் ... என்னால் இதை நம்ப முடியாது .... " என்று கத்தினான்.

"ஏன் அண்ணா நம்பமுடியாது? இவர்கள் இருவரும் உனக்கு வேண்டியவர்கள் என்பதாலா?"

"என்ன உளறுகிறாய், பவானி?"

"உளறவில்லை. இதில் ஒருவர் சுந்தரம். ஆசை ஆசையாக உன் தங்கைக்குப் பார்த்த மாப்பிள்ளை. இன்னொருவர் உன் ஸ்வீட் ஹார்ட், இந்த இரண்டு பேரும் படத்தில் சந்தேகப்படும்வகையில் இருக்கிறார்கள். அதைப் பார்த்து எதுவுமே நடக்காதது போல் நீ நடிக்கிறாய் ..... ஊம் ....." என்றாள்.

"பவானி, பைத்தியக்காரத்தனமாகப் பேசாதே .... நீ நினைப்பது போன்ற சந்தேகம் எந்த அறிவுள்ளவனுக்கும் ஏற்படாது. இது ஏதோ சதி ... எதற்காக நீ இப்படி ஒரு போட்டோவை என்னிடம் காட்டுகிறாய்? .... இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது ..... வாட் ஈஸ் தி மேட்டர்? ..... என்ன விஷயம்? சொல்லு ... என்றான்.

"சொல்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை ....." என்றாள் பவானி.

"ஓகே ...... அக்ரீட் ..... என்ன நிபந்தனை, சொல்லு .... " என்றான் ஸ்ரீதர்.

"அதையும் ரகசியமாகத்தான் சொல்ல வேண்டும் ..... " என்று கூறி, அண்ணனின் காதருகில் சென்று, ரகசியமாக எதையோ சொன்னாள் பவானி.

ஸ்ரீதரின் வீட்டு வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது.

உள்ளே ஹாலில் அமர்ந்திருந்த ஸ்ரீதர், அர்த்தம் நிறைந்த பார்வையுடன் பவானியைப் பார்த்தான். பவானியும், 'நான் சொன்னேனே, பார்த்தாயா?' என்பதுபோல் அண்ணனைப் பார்த்தாள்.

டாக்ஸிலிருந்து இறங்கிய சுதா குழப்பம் மிகுந்து காணப்பட்டாள்.

டாக்ஸி மீட்டர் இரண்டுரூபாய் காட்டியது. எங்கோ கவனமாக ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டுத் திரும்பினாள் சுதா. டிரைவர் 'என்னம்மா ....! என்று கேட்டதும், 'ஸாரி' என்று கூறி, ஐந்து ருபாய் நோட்டைக் கொடுத்துவிட்டு, சில்லறை வாங்கிக்கொள்ளாமல் உள்ளே நுழைந்து விட்டாள்.

அவள் மனம் அந்த அளவுக்குப் பேதலித்திருந்தது. அவளுடைய வாழ்க்கையிலேயே என்றும் இப்படி ஒரு குழப்பம் நேர்ந்ததில்லை. அவளுக்கு எதைப் பற்றிக் கவலை இருந்தாலும், ஸ்ரீதர் தன் அன்பைச் சந்தேகிப்பான் என்ற

கவலை இன்றுவரை இருந்ததில்லை. அவன் தனக்குக் கிடைப்பானா என்று தவித்துக் கொண்டிருந்தபோதும், தன் முழுமையான அன்பை அவன் அறிவான் என்ற நம்பிக்கை அவளிடம் மிகுந்திருந்தது.

அந்த நம்பிக்கையில்தான் அவள் இதுவரை எல்லாக் காரியங்களையும் செய்துவந்தாள். அந்தத் தெம்பில்தான் அவள் வேறு பல காரியங்களையும் செய்துவந்தாள். வசதி மிகுந்து வாழ்பவர், ஊர் விவகாரங்களில் தலையிட்டுக் குழப்புவதுபோல், தன் காதலில் மிதமிஞ்சிய நம்பிக்கை கொண்டு, தன் அண்ணனின் வாழ்க்கையில் விபரீதமாக விளையாடினாள். வாழ்க்கயைப் பற்றியும், காதலைப் பற்றியும் அவள் சிறிதும் கவலைப்பட்டதில்லை. இப்போது அந்த இரண்டைப்பற்றியும் அவளுக்குக் கவலை வந்துவிட்டது.

வனஜாவைத் தள்ளி வைத்துவிட்டு, பவானியை ஜெயராமனுக்குத் திருமணம் செய்துவைப்பதில் அவள் காட்டிய அக்கறை, அவளை மீறிய செயல்தான். அவள் அதில் உற்சாகமாக ஈடுபட்டிருந்ததே, தன்னைப் பற்றிய பிரச்சனை அவளுக்கு இல்லாமல் இருந்ததுதான். காதல் ஏக்கம் அவளுக்கு இருந்ததே தவிர, காதல் தோல்வி இருந்ததில்லை. எனவேதான், பிறர் தோல்வியைப் பற்றி அவள் அக்கறை காட்டவில்லை. வாழ்க்கையில் தோல்வியைச் சந்தித்துத் தவித்துக்கொண்டிருப்பவள் வனஜா என்ற நினைவே சுதாவுக்கு ஏற்பட்டதில்லை. தோல்வி ஏன்றால் என்னவென்றே தெரியாத சுதாவுக்கு, தன் விஷயத்தில் தோல்வி ஏற்பட்டுவிடுமோ என்ற பயம் ஏற்பட்டது. பவானி எடுத்த அந்த போட்டோவினால் என்னென்ன ஆகுமோ, அது தனக்கும் ஸ்ரீதருக்கும் உள்ள உறவை எப்படியெல்லாம் பாதிக்குமோ என்று எண்ணிக் கலங்கினாள். அப்படி அது பாதித்தால் நம் கதி என்ன என்று எண்ணித் தவித்தாள். மனத்துக்குள் புலம்பிக்கொண்டிருந்தாள்.

இரவெல்லாம் வெகு நேரம் சிந்தித்த பிறகு, எதற்கும் எல்லா உண்மைகளையும் ஸ்ரீதரிடம் சொல்லிவிடுவதுதான் நல்லது என்ற முடிவுடன், பொழுது விடிந்தவுடன் டாக்ஸி வைத்துக்கொண்டு ஸ்ரீதரைத் தேடி ஓடி வந்திருக்கிறாள்.

ஸ்ரீதரின் வீட்டுக்குள்ளே அவள் நுழைந்தபோது, அவள் அதிர்ச்சி பன்மடங்காகப் பெருகியது. பவானியும் அங்கு இருந்தாள். அதோடு ஸ்ரீதரின் கையில், எந்த விஷம் தன் காதலையும், வாழ்வையும் கொன்றுவிடும் என்று பயந்துகொண்டிருந்தாளோ, அந்த விஷமான போட்டோ இருந்தது. அதைக்கையில் வைத்துக்கொண்டிருந்த ஸ்ரீதரின் முகம் கருத்திருந்தது.

. சுதாவைக் கண்டதும் பவானி, குறும்புடன், "வா, வா சுதா, கல்யாணத்திற்கு அழைக்க நீயே வந்துவிட்டாயா?" என்று கேட்டாள்.

" என்னது! கல்யாணமா?" - திகைப்புடன் கேட்டாள் சுதா.

"ஆமாம், உனக்கும் சுந்தரத்திற்கும் கல்யாணமாகப் போகிறதே! அதற்குத்தானே அழைக்க வந்திருக்கிறாய்? எப்போது தேதி வைத்திருக்கிறார்கள்? எப்போது இருந்தாலும் ஏன் அட்வான்ஸ் வாழ்த்துக்கள் ...." என்றாள்.

சுதாவுக்குக் கண்ணீர் பொங்கி வந்தது.

"ஏன் பவானி இப்படிப் பேசுகிறாய்?" என்றாள் தொண்டை அடைக்க.

"எப்படிப் பேசுகிறேன்? கடற்கரை உறவு வீட்டுக்கு வருவது தப்பா? இந்த நாகரிக உலகில் இதெல்லாம் சர்வ சாதாரணம். நத்திங் ராங் .... கோ அஹெட்! என்ன அண்ணா, இதற்கு உன் சம்மதமும் உண்டல்லவா?" என்றாள் ஸ்ரீதரைப் பார்த்து.

"ஷுயூர் .... மை ஹார்டி கங்க்ராஜுலேஷேன்ஸ் ...." என்றான் ஸ்ரீதர்.

ஸ்ரீதர் இப்படிச் சொன்னதும், சுதாவுக்கு கொஞ்ச நஞ்சமிருந்த நம்பிக்கையும் அற்றுப்போய்விட்டது. வாய்விட்டுக் குமுறிக் குமுறி அழ ஆரம்பித்தாள்.

வெந்த புண்ணில் வேலைச் செருகுவதுபோல், "கவலைப்படாதே, சுதா. இதெல்லாம் சகஜம். மனித மனத்தில் உணர்சிகளும், ஆசைகளும் நிமிஷத்திற்கு நிமிஷம் மாறுவது சகஜம். முன்பு உனக்கு எனமேல் அன்பு ஏற்பட்டிருந்தது. இப்போது சுந்தரத்தின்மீது ஆர்வம் ஏற்பட்டிருக்கலாம். இது பற்றி நான் வித்தியாசமாக எடுத்துக் கொள்ளவில்லை. நீ முன்பு சொன்ன பழைய வார்த்தைகளை நான் மறந்துவிடத் தயார். சொல்லப்போனால், அதை நான் என்றைக்குமே

பெரிதாக எடுத்துக்கொண்டதில்லை. நீ மனம்போல் மகிழ்ச்சியாக வாழ்வதையே நான் விரும்புகிறேன். மை பெஸ்ட் விஷஸ் டு யூ ...." என்றான்.

அந்தக் கட்டடமே இடிந்து தன்மேல் விழுந்துவிட்டது போல் தவித்தாள் சுதா.

"ஸ்ரீதர், என்னை ஏன் இப்படிச் சித்திரவதை செய்கிறீர்கள்? என் மனம் மனம் உங்களுக்குத் தெரியாதா? உங்களைத் தவிர ... என்று வார்த்தைகளை முடிக்க முடியாமல் பேசினாள் சுதா.

"சுதா, இந்த வார்த்தைகள் எல்லாம் நேற்று நீ கடற்கரையில் சுந்தரத்திடம் பேசிய வார்த்தைகள் மாதிரியே இருக்கிறதே .... கொஞ்சம் மாற்றிச் சொல்லக்கூடாதா? என்று குறுக்கிட்டாள் பவானி.

சுதா கொதித்தெழுந்தாள். "ஏன் பவானி, இப்படி இல்லாததையும், பொல்லாததையும் பேசுகிறாய்? ..... நீயும் வாழவேண்டிய பெண். இன்னொரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழடிக்க நினைக்காதே ..... " என்றாள்.

"அப்படியா, உன் உபதேசத்துக்கு நன்றி சுதா. ஆனால், நீயும் ஒரு பெண்தானே... இந்த உபதேசத்தை இதுவரை உன் வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்திருக்கிறாயா? என்று பவானி கேட்டதும், சுதா அதிர்ச்சியுடன் அவளை நிமிர்ந்து பார்த்தாள்.

"என்ன சொல்கிறாய், பவானி ....? என்று பதட்டத்துடன் கேட்டாள்.

அச்சமயம் ஸ்ரீதர் குறுக்கிட்டு, "அவள் சொல்வது இருக்கட்டும் சுதா, இதற்கு நீ முதலில் விளக்கம் சொல் ...." என்று கூறி, அந்த போட்டோவை சுதாவிடம் காட்டினான்.

"இது தவறான அர்த்தம் ஏற்படும்படி எடுத்த போட்டோ, இதை நம்பாதீர்கள் .... என்று கத்தினாள் சுதா.

"அப்படியெல்லாம் போட்டோவைத் தவறாகப் பயன்படுத்த முடியுமா என்ன?" என்று அப்பாவிபோல் கேட்டான் ஸ்ரீதர்.

"ஏன் முடியாது?"

"முடியுமா? கொஞ்ச நாளைக்கு முன்னால் வனஜாவும் சுந்தரமும் இப்படி இருப்பதாக ஒரு போட்டோ வந்தது. அப்படியானால் அதுவும் தவறாக உபயோகிக்கப்பட்டது தானா?"

"அது .... அது ... " தயங்கினாள் சுதா.

"சொல்லு .... அதுவும் தவறாக இருக்கலாமோ?"

"இல்லை, அது தவறானதல்ல ..... "

"அப்படியானால் இதுவும் அப்படித்தான் என்று நினைக்கிறேன் ..."

சுதா குழம்பினாள்.

"ஒரு வேளை. அந்த போட்டோவும் தவறான நோக்கத்திற்காகத்தான் தயாரிக்கப்பட்டதாக இருக்கலாம்.... ஆனால், நிச்சயமாக இது தவறான நோக்கத்துடன் எடுக்கப்பட்டதுதான் ...." என்று இறங்கி வந்தாள் சுதா.

"சரி, அது இருக்கட்டும், நீயும் சுந்தரமும் எதற்காக இப்படி?" என்று அடுத்தக் கேள்வியைக் கேட்டான் ஸ்ரீதர்.

"ஐயோ! அது பெரிய சதி, இதோ பாருங்கள், சுந்தரம் எழுதிய கடிதத்தை, இதற்காகத்தான் நான் போனேன் ." என்று கூறி, ஒரு கடிதத்தை ஸ்ரீதரிடம் நீட்டினாள்.

ஸ்ரீதர் அதைப் பார்த்தான். பிறகு பவானியிடம் நீட்டினான்.

"அண்ணா, இது பொய்க் கடிதம். இது சுந்தரம் எழுதியதே இல்லை. சுதா பொய் சொல்கிறாள்" என்றாள்.

"இல்லை ..." என்று கத்தினாள் சுதா.

"இது பொய்க் கடிதம் என்று எப்படிச் சொல்கிறாய், பவானி? .... " என்று கேட்டான் ஸ்ரீதர்.

"சுந்தரம் எழுதிய கடிதம் என்னிடம் இருக்கிறது, அந்தக் கையெழுத்து வேறு மாதிரி இருக்கிறது. இதோ காட்டுகிறேன் .... " என்று கூறி, தன் அறைக்குச் சென்று, சுந்தரம் பெயரால் தனக்கு வந்த கடிதத்தைக் கொண்டுவந்து காட்டினாள் பவானி.

அந்தக் கடிதத்தைப் பார்த்த ஸ்ரீதர், "பவானி, நீ காட்டும் இந்தக் கடிதம்தான் பொயக்கடிதம். இது சுந்தரம் எழுதிய கடிதம் அல்ல" என்றான்.

"எப்படிச் சொல்கிறாய், அண்ணா?" என்று கேட்டாள் பவானி.

"எனக்குத் தெரிந்த வேறொருவரின் கையெழுத்து இது ...." என்று கூறி, சுதாவிடம் அதைக் காட்டி, "சுதா, இது யார் கையெழுத்து என்று உனக்குத் தெரிகிறதா?" என்று கேட்டான்.

சுதா மிரட்சியுடன் "இல்லையே...." என்றாள்.

"ஸ்ரீதர் மெதுவாகச் சிரித்தான். பிறகு, "சுதா, நன்றாக யோசித்துச் சொல். நான் உன் மேலதிகாரி. உன்னைப் போன்ற உதவியாட்கள் எப்படி மாற்றி எழுதினாலும் உங்கள் கையெழுத்துக்களைக் கண்டுபிடித்து விடுவேன். அதை மனத்தில் வைத்துக்கொண்டு சொல் ..... சுந்தரத்தின் பெயரால், பவானிக்கு எழுதப்பட்ட இந்தக் கடிதம் யாரால் எழுதப்பட்டது... ? இது யாருடைய கையெழுத்து ....? எனக்குப் புரிந்துவிட்டது; அதை நீ புரிந்து கொண்டு பதில் சொல் .... " என்றான் சற்றே கடுமையான குரலில்.

சுதா கதறி அழுதவாறே, "என்னை மன்னித்து விடுங்கள், ஸ்ரீதர். எல்லாவற்றையும் நானே சொல்லிவிடுகிறேன் ...." என்றாள்.

# 35

ஆத்திரம் கொண்டவர்க்கே - கண்ணம்மா
சாத்திரம் உண்டோடீ

- பாரதியார்

**சு**தா மனம் குமுறி அழுது தீர்க்கும்வரை, பவானியும் ஸ்ரீதரும் அசையாமல் கற்சிலைகளாக அமர்ந்திருந்தார்கள். இருவரும் எந்தவித பரபரப்பும் அடையவில்லை.

தான் நினைத்ததை சாதித்துவிட்ட நிறைவு, பவானியின் முகத்தில் லேசாக இழையோடிக் கொண்டிருந்தது. ஸ்ரீதரின் முகம் சலனமற்றிருந்தது. எது நடக்கவேண்டுமோ, அது நடந்திருக்கிறது என்ற மனோபாவத்துடன், சுதாவையே பார்த்துக்கொண்டிருந்தான். இடையிடையே சுதாவின் கண்ணீர், அவனுடைய இதயத்தில் கனிவையும் பச்சாதாபத்தையும் உண்டாக்கிக்கொண்டிருந்தது.

அழுது முடிந்ததும் சுதா, "நடந்ததை எல்லாம் என் வாயினாலேயே கேட்டுத் தெரிந்துகொள்ளத்தானே விரும்புகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"எஸ் ..... உன்னிடமிருந்து எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள விரும்புகிறோம். ஆனால், இப்போது, இந்த நிலையில் இல்லை ....."என்றான் ஸ்ரீதர்.

'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்பது போல் அவனைப் பார்த்தாள் சுதா.

"ஸ்ரீதர் கனிவுடன் பதில் சொன்னான்: "ஆமாம், சுதா. நீ இப்படி அழுத கண்ணீரும், குழம்பிய மனமுமாய் இருக்கும்போது எதுவும் சொல்லவேண்டாம். ஒரு குற்றவாளியை நீதிபதி விசாரிப்பதுபோல், நாங்கள் உன்னை விசாரிக்க விரும்பவில்லை. நீயும் குற்ற உணர்ச்சியுடன், தாழ்வு மனப்பான்மையுடன் பேசத் தேவையில்லை. ஆப்டர் ஆல், வி ஆர் க்ளோஸ் ப்ரண்ட்ஸ். நமக்குள் ஸ்ட்ரெய்ன்ட் பீலிங்க்ஸ் இருக்க வேண்டாம். ஒருவருக்கொருவர் எந்தத் தீங்கும் செய்யவில்லை. அவரவர் மனப் போக்குப்படி, அவரவர் செய்த காரியங்களினால் சில குழப்பங்கள் நேர்ந்திருக்கலாம். அதைப்பற்றி மனம்விட்டுப் பேசுவோம். அதற்கு உன்னுடைய இந்த மனநிலை சரியில்லை. போய் முகத்தை அலம்பிக்கொண்டு, பிரஷ்ஷாக வா. பவானி, டேக் ஹர டு தி வாஷ் ரூம்" என்றான்.

பவானி ஆதுரத்துடன் சுதாவின் கையைப் பற்றி மாடிக்கு அழைத்துச் சென்றாள்.

அவர்கள் இருவரும் போனதும், ஸ்ரீதர் டெலிபோன் அருகே சென்று, ஜெயராமனுக்குப் போன் செய்தான்.

**த**ன்னைச் சற்றே சரி செய்துகொண்டு, மாடியிலிருந்து சுதா மீண்டும் கீழே இறங்கியபோது, ஹாலில் ஸ்ரீதரோடு ஜெயராமன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகைத்தாள். அவளுடைய தயக்கத்தைப் புரிந்துகொண்ட ஸ்ரீதர், "சுதா,என்ன விழிக்கிறாய்? கம் ஆன். நான் ஏற்கெனவே உன்னிடம் சொல்லியிருக்கிறேன். நாம் மனம்விட்டுப் பேசப் போகிறோம் என்று, உன்னை அவமானப்படுத்துகிற மாதிரியோ, குற்றம் சாட்டுகிற மாதிரியோ எதுவும் நடக்காது, வா' . என்றான்.

அண்ணனை ஏறிட்டுப் பார்க்கும் துணிவு இல்லாமலே தலைகுனிந்தவாறு சோபாவில் அமர்ந்தாள் சுதா.

ஸ்ரீதர் காப்பிக்கு உத்தரவிட்டான். காப்பி வரும்வரை யாருமே பேசிக்கொள்ளவில்லை. விளையாட்டாகப் பேசி, சிறிது கலகலப்பூட்டலாம் என்று ஸ்ரீதர் முயன்றதும் பலிக்கவில்லை. காப்பி வந்தது. எல்லோரையும் போல் சுதாவும் மரியாதைக்காக காப்பியை எடுத்துக்கொண்டாள்.

"எஸ் சுதா, நீ ஏதேதோ சில உண்மைகளைச் சொல்லுவதாகச் சொன்னாயே, கமான் ...சொல்லு " என்றான் ஸ்ரீதர்.

சுதா வேதனையுடன் அவனைப் பார்த்தாள். 'நான் சொல்லாமல் விடமாட்டீர்களா? இப்போது அண்ணன் முன்னாலேயே சொல்ல வேண்டுமா? என்று அவள் பார்வை அவனிடம் பேசியது. "சுதா, உன் மனநிலை எனக்குப் புரிகிறது. நீ எந்த உண்மையைக் கூற விரும்புகிறாயோ, அதை ஊகித்து, நானே உன் அண்ணனிடம் சொல்லிவிட்டேன்" என்றான் ஸ்ரீதர்.

'என்ன சொல்லிவிட்டீர்கள்?' என்பதுபோல் அதிர்ச்சியுடன் பார்த்தாள் சுதா.

"ஏன் அப்படிப் பார்கிறாய், சுதா? நான் உத்தேசமாக ஊகித்துத்தானே சொல்லியிருக்கிறேன் என்றேன். அதுவே தான் உண்மையாக இருக்கும் என்பதும் என் நம்பிக்கை. தவறாக இருந்தால் நீ தாராளமாக மறுக்கலாம். ஒருவேளை, சொல்வதற்கு வேதனைப்படுவாயோ என்று எண்ணித்தான் நானே சொன்னேன். வேறென்ன, சுந்தரம் எழுதியதாகப் பவானிக்கு ஒரு கடிதம் வந்ததே, அது நீயே எழுதியது. ஏதோ ஒரு நோக்கத்துடன் சுந்தரத்தைக் கெட்டவனாகச் சித்தரிப்பதற்கு எழுதிருக்கிறாய் என்று உன் அண்ணனிடம் சொன்னேன். அது தவறில்லையே ..." என்றான்.

சுதா தலையைக் குனிந்துகொண்டாள். ஜெயராமன் ஆத்திரப்பட்டான். "சுதா, நீ மட்டும் தலைகுனிந்திருக்க வில்லை, என்னையும் தலைகுனிய வைத்துவிட்டாய், இப்படி ஒரு பொய்க்கடிதம்எழுதக் கூடிய ஒரு பெண் என் சகோதரி என்று நினைக்கும்போதே, என் மனம் கொதிக்கிறது ...." என்று படபடத்தான். உடனே ஸ்ரீதர் குறுக்கிட்டு, "மிஸ்டர் ஜெயராமன், நீங்கள் ஆத்திரப்படத் தேவையில்லாத விஷயம் இது. டோன்ட் லூஸ் யுவர் டெம்பர். இப்போது அந்தக் கடிதத்தால் எதுவும், யாரும் பாதிக்கப்படவில்லை" என்றான்.

"யூ ஆர் ராங் மிஸ்டர் ஸ்ரீதர். எதுவும் பாதிக்கப்படவில்லை என்று சொல்லாதீர்கள். என் மானம், எங்கள் குடும்ப கௌரவம் - எல்லாமே பாதிக்கப்பட்டிருக்கின்றன. ஏன், அவளுடைய வாழ்க்கையே பாதிக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஒரு பெரிய தவற்றைச் செய்யக்கூடியவள் தன் தங்கை என்பது தெரிந்த பின், அவளுடைய எதிர்காலமும் பாதிக்கப்பட்ட மாதிரிதானே ...." - அவன் குரல் கம்மியது.

"மிஸ்டர் ஜெயராமன், நிகழ் காலத்தைப் பற்றிப் பேசுங்கள். அவளுடைய எதிர்காலத்தைப் பற்றி நீங்கள் இப்போது கவலைப்படவேண்டாம் ..."

"அதைப்பற்றி ஒரு சகோதரன் கவலைப்படாமல் வேறு யார் சார் கவலைப்படுவார்கள்?"

"அவளுடைய எதிர்காலத்திற்கு நான் பொறுப்பாளி என்று ஒருமுறை உங்களுக்கு நான் வாக்களித்திருக்கிறேன். அந்த வாக்குறுதியிலிருந்து நான் பின் வாங்கவில்லை ...." என்றான்.

சுதாவுக்கு அந்த வார்த்தைகள் பெரும் ஆறுதலளித்தன. நன்றிப் பெருக்குடன், கண்ணீர் மல்க ஸ்ரீதரைப் பார்த்தாள்.

ஜெயராமன் முகத்திலும் சற்று தெளிவு பிறந்தது. இருந்தாலும் அதைக் காட்டிக்கொள்ளாமல் தங்கையை குற்றம் சாட்டும் குரலிலேயே ....." என்ன இருந்தாலும் ஒரு பெண் இந்தக் குற்றத்தை ...." என்று ஆரம்பித்தான்.

"அவளுடைய குற்றம் என்று மட்டும் ஏன் சொல்கிறீர்கள்? நீங்களோ, நானோ குற்றம் செய்யவில்லை என்று சொல்லிவிடமுடியுமா?இப்போது நமக்குத் தேவை, சுதா குற்றம் செய்தாளா இல்லையா என்பதல்ல; அத்தவற்றை அவள் ஏன் செய்தாள் என்பதுதான். ஸோ, அவளைப் பேசவிடுங்கள். சுதா, டெல் மி ..... இந்தக் குற்றத்தை நீ ஏன் செய்தாய்? அதற்கு இப்போது என்ன அவசியம் ஏற்பட்டது?" என்று அவளைப் பார்த்துக் கேட்டான் ஸ்ரீதர்.

சுதா மெதுவாக, ஆனால் அழுத்தமாக, "நான் குற்றமே செய்யவில்லை" என்றாள்.

இதைக் கேட்டு ஸ்ரீதர் உட்பட எல்லோருமே மலைத்தனர்.

"என்ன! குற்றமே செய்யவில்லையா? நீ போலிக் கையெழுத்துப் போட்டுக் கடிதம் எழுதியது குற்றம் இல்லையா?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

"அது வாழ்க்கைக்காக நான் செய்த ஒரு செயல், அவ்வளவுதான். அது குற்றம் இல்லை. இட் ஈஸ் எ டாக்டிக், நாட் எ க்ரைம் .... " என்றாள் வக்கீலைப் போல்.

"நீ என்ன சொல்கிறாய், சுதா?"

"மீண்டும் சொல்கிறேன். நான் எந்தக் குற்றமும் செய்ததாக என் மனத்துக்குத் தோன்றவில்லை. என்னைப் போல் ஒரு பெண்ணின் கோணத்திலிருந்து பார்த்தால்தான், அதை உங்களால் பூரணமாகப் புரிந்துகொள்ளமுடியும். என் அண்ணா, 'என்ன இருந்தாலும் ஒரு பெண் இதைச் செய்யலாமா? என்று கேட்டுவிட்டார். என்ன உரிமையில் அப்படிக் கேட்டார் என்று புரியவில்லை. ஒரு காலத்தில், நம் நாட்டில், ஒரு பெண்ணுக்குத் தனி அந்தஸ்து இருந்தது. அவளுக்குப் போதிய பாதுகாப்பு இருந்தது. அவளுடைய நலனில் அவளைவிட அவள் பெற்றோரும், சகோதரர்களும் அதிக அக்கறை செலுத்தினர். பெண் வயதுக்கு வந்ததும், அவளுக்கு மணம் செய்விப்பதைக் குடும்பத்தார் தங்கள் முழுநேர வேலையாகவே கொண்டிருந்தார்கள். ஆனால், இப்போது? எத்தனை பெற்றோருக்கு அந்த அக்கறை இருக்கிறது? பெண்ணின் ஜாதகக் கட்டைத் தூக்கிக்கொண்டு வரனுக்காக அலைந்தவர்கள், அவர்களுடைய சர்ட்டிபிகேட்டைத் தூக்கிக்கொண்டு வேலைக்காக அலைகிறார்கள். இதை நான் குற்றம் சொல்லவில்லை. இது காலத்தின் தேவை. இப்படி ஒரு மாற்றம் ஓசைப்படாமல் பெண்களின் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கிறது. ஒரு நிலை மாறும்போதே, அதோடு பல சூழ்நிலைகளும் மாறத்தான் செய்யும். முன்பு பெண்ணின் திருமணத்தைப் பெற்றோர் கடனோ உடனோ பட்டு முடிப்பார்கள். இன்று பல குடும்பங்களில் பெண் தன சம்பாத்தியத்தில் மிச்சம் பிடித்தே வரதட்சிணை கொடுக்க வேண்டியிருக்கிறது. இப்படி காலம் மாறி, பெண்ணின் கடமைகளும் மாறி இருக்கும்போது, சில தவறுகளுக்காக மட்டும் பெண்ணைப் பிரித்துப் பேசுவானேன்.

' ஏன் என்னையே எடுத்துக்கொள்ளுங்கள். எனக்கு ஏன் மிஸ்டர் ஸ்ரீதர் மீது பற்று ஏற்பட்டது? பார்க்கிலும் பீச்சிலும் இவரைத் தேடிப் பிடித்து மனத்தைப் பறி கொடுத்தேனா? இல்லையே! வேலைக்குப் போனேன். அங்கு இவருடன் பழகினேன். இவருடைய உயர்வு தெரிந்தது. அருமையான ஒரு பொருளை அடைய வேண்டும் என்று விரும்பினேன். அருமையான ஒரு பொருளின் மீது யாருக்குதான் ஆர்வம் ஏற்படாது!

"அவரை அடைய வேண்டும் என்று என் மனத்தில் பிடிவாதமான எண்ணம் ஏற்பட்ட பின், என் மனத்தை மாற்றிக்கொள்ள முடியவில்லை. ஒருவரை விரும்பி, இன்னொருவரை அரைகுறை மனத்துடன் மணம் செய்து வாழ்வதுதான் மனதுக்குச் செய்யும் துரோகமே தவிர, மனத்தை யாரிடம் பறிகொடுத்தேனோ அவரையே அடையவேண்டும் என்று நான் போர்ரடுவது தவறாகுமா?

"நான் சற்று அதிகமான காரியங்களைச் செய்திருக்கலாம். ஆனால், அதை நேர்மையான ஆசையுடன் செய்தேன். அவைகளை அடைவதற்குத் தடையாகப் பவானியின்உடல் நிலை இருந்தது. அதற்காக நான் தாதியாகப் பணிவிடை செய்தேன். பவானிக்குத் திருமணமானால்தான் எனக்குத் திருமணம் என்றதும், அவளுடைய திருமணத்திற்கு ஏற்பாடு செய்தேன். என் அண்ணனை நான் நிச்சயிக்கும்போது, அவரும் துணையற்று இருந்தார். குடும்பத்தோடு சுகமாக வாழ்ந்த அண்ணனின் மனத்தை நான் கலைக்கவில்லை. வாழவேண்டிய இரு உள்ளங்களைச் சேர்த்துவைக்கவே திட்டமிட்டேன். இதை எப்படித் தவறு என்று சொல்லமுடியும்?

"பவானி மனத்தில் சுந்தரத்தைக் கெட்டவராகச் சித்தரிக்க விரும்பியே நான் எழுதிய நான் எழுதிய அந்தப் பொய்க் கையெழுத்துக் கடிதத்தைத் தவறான செயல் என்கிறீர்கள் நீங்கள். ஆனால், அதுவும் தவறல்ல என்று என் மனம் சொல்கிறது. பவானி எனக்குத் தோழி மட்டுமல்ல; என் வருங்காலக் கணவரின் தங்கையுங்கூட, அவளுக்கு நல்லது எது என்று நான் நினைத்தேனோ, அதைத் துணிவுடன் செய்தேன். சுந்தரத்தைவிட என் அண்ணன்தான் பவானிக்கு ஏற்றவர் என்றுநான் நினைத்தேன் ...."

"அதெப்படி?" என்று குறுக்கிட்டான் ஜெயராமன்.

"மிஸ்டர் ஜெயராமன்! கொஞ்சம் அமைதியாக இருங்கள். சுதா பேசி முடிக்கட்டும் ...." என்றான் ஸ்ரீதர்.

சுதா தொடர்ந்தாள்: "என் அண்ணா, தன்னடக்கத்துடன்தான் சுந்தரத்தைவிட உயர்ந்தவர் அல்ல என்கிறார். அதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. என் அண்ணா உயர்ந்தவர்தான். பவானியின் உடல்நலம் சீர்கெட்டிருந்தபோது, என்னை அல்லும் பகலும் இந்த வீட்டில் இருந்து பணிவிடை செய்ய அனுமதித்தவர் அவர். வியாதியிலிருந்த ஒரு பெண்ணை வாழவைக்கச் சம்மதித்தவர் அவர். ஏன், தன் குடும்ப வாழ்வின் தோல்வியிலுங்கூட, மிகக் கண்ணியமாக, வனஜாவின்மீது எந்தக் கெட்ட பழியும் தன் வாயால் சொல்லாதவர் அவர். எனவே, இவரைவிடச் சுந்தரம் எப்படி உயர்ந்தவர் ஆவார் என்று எனக்குப் புரியவில்லை. எனவே, இவருக்குப் பவானியைத் திருமணம் செய்து வைப்பதில் எனக்கு அளவுகடந்த ஆசை இருந்தது ..." - சுதா சிறிது பேச்சை நிறுத்தினாள். ,

"சரி சுதா, நீ முழுக்க முழுக்கப் பவானியின் நன்மைக்காகத்தான் காரியம் செய்தாயா? உன் அண்ணனுக்குப் பவானி கிடைக்க வேண்டும் என்ற சுயநல ஆசையும் அதில் இருக்கிறதே" என்றான் ஸ்ரீதர்.

"ஓரளவும் இருக்கலாம். சுயநலம் யாரிடம் இல்லை? அது அவ்வளவு பெரிய குற்றம் இல்லை. என் மனத்தில் ஏற்பட்ட இந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள முதலில் நான் நேர்மையாகப் போராடினேன். முடியவில்லை. மிஸ்டர் ஸ்ரீதருக்கு, அவளைச் சுந்தரத்திற்குக் கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. 'தகுதி வாய்ந்த என் அண்ணனுக்குப் பவானி ஏன் கிடைக்கக் கூடாது? அது இருவருக்கும் நல்லதுதானே' என்று தோன்றவே, அதை நிறைவேற்றப் போராடினேன். அதற்காகச் சில குறுக்குவழித் திட்டங்களில் நான் ஈடுபட நேர்ந்தது. அந்தத் திட்டங்கள்கூட யாரையும் பாதிக்கவில்லை ...." என்றாள்.

"ஏன் இல்லை? உன் திட்டங்களால் மிஸ்டர் சுந்தரம் பாதிக்கப்படவில்லையா?" என்று கேட்டாள் பவானி.

"இல்லை. அவர் ஏற்கெனவே பாதிக்கப்பட்டவர். வனஜாவுக்கும் அவருக்குமுள்ள தொடர்பால் அவர் பாதிக்கப்பட்டு இருக்கிறாரே தவிர, என்னால் புதிதாக அவர் பாதிக்கப்படவில்லை ....."

"நோ, நோ! யூ ஆர் ராங், சுதா. அவர் வனஜாவிடம் கொண்ட நட்பை, உங்கள் அண்ணன் சந்தேகித்தாரே தவிர, பாதிக்கப்படவில்லை. வனஜாவின் நட்பினால் உண்மையில் அவருக்கு லாபமில்லை. வீண் பழிதான். ஆனால், பவானியை அவர் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினார். நீ பவானியின் மனத்தில் விஷத்தைத் தூவியதால், அவருடைய வாழ்க்கையும் பாதிக்கப்படவிருந்தது. பிறர் வாழ்வுக்கு இடையூராக எதைச்செய்தாலும் அது தவறுதானே? அந்தத் தவற்றைதான் நீ செய்தாய். அதுவும் வேண்டுமென்றே திட்டமிட்டுச் செய்தாய். அதை ஒரு நல்லெண்ணத்தில் செய்தாய் என்பதை வேண்டுமானால் நான் புரிந்துகொள்ளலாம். அதைப் புரிந்துகொண்ட உன்னை நான் மன்னிக்கலாம். ஆனால், உன் திட்டம் மோசமான விபரீத விளைவுகளை ஏற்படுத்தியிருக்கிறது என்பதை மறுக்க முடியாது ...." என்றான் ஸ்ரீதர்.

சுதா, சிறிது நேரம் தலைகுனிந்து நின்றாள். பின், கண் கலங்க "என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்" என்றாள்.

"சுதா, நீ நல்லது கேட்டது தெரிந்துகொண்டு செயலாற்றும் பக்குவம் இல்லாத படபடப்புக்காரி என்பதை நான் அறிவேன். அதனால் உன்னை மன்னித்து நான் ஏற்றுக்கொள்கிறேன். நாளடைவில் உன்னைச் சரிப்படுத்தவும் என்னால் முடியும். அதனால் உன் வாழ்க்கைப் பற்றிக் கவலை இல்லை.ஆனால், உன் அண்ணன் தன் தவறான மனப்போக்கை மாற்றிக்கொள்ளாவிட்டால், அதனால் ஏற்படும் நஷ்டத்தை அவர் மட்டுமல்ல, ஓர் அப்பாவிப் பெண்ணும் சேர்ந்து அனுபவிக்க வேண்டியிருக்குமே ..... "என்றான் ஸ்ரீதர்.

"என்ன சொல்கிறீர்கள், மிஸ்டர் ஸ்ரீதர்?" என்று புரியாமல் கேட்டான் ஜெயராமன்.

"நீங்கள் உங்கள் மனத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளாவிட்டால், வனஜா என்ற விலைமதிக்க முடியாத மாணிக்கத்தை இழக்க வேண்டி வரும். உங்களுக்கு வாழ்க்கைப்பட்ட பாவத்திற்காக அந்த அபலைப்பெண், நிரந்தரத் துறவியாக இல்வாழ்க்கைச் சுகத்தை இழக்க வேண்டிவரும். இதில் அனாவசியமாக நீங்கள் சம்பந்தப்படுத்திக் குழப்பிக்கொண்டிருக்கும் சுந்தரங்க்கூட நஷ்டப்படப் போவதில்லை. ஏனென்றால், அவர் இன்றும் வனஜாவை சிநேகதியாகவே மதிக்கிறார். அவள் என்றும் சிநேகதியாகவே இருப்பாள். அதோடு வாழ்க்கைத் துணைக்கு பவானியை அடைய இருக்கிறார். அதை நான் நிறைவேற்றி வைக்கப்போகிர்றேன் .... ஆமாம், விரைவிலேயே பவானிக்கும் சுந்தரத்திற்கும் திருமணம் ..." என்றான் ஸ்ரீதர்.

இதைக் கேட்டு பவானியின் முகம் சிவந்தது.

"இந்தத் திருமணத்தில் என் எதிர்கால மனைவி சுதாவுக்குப் பூரண சம்மதம் இருக்காது என்று தெரிந்தும், நான் மகிழ்ச்சியுடன் இதைச் செய்யப்போகிறேன். அதற்கு ஒரு காரணம் உண்டு ...." என்று கூறி நிறுத்தினான்.

'என்ன' என்பதுபோல் எல்லோரும் அவனையே பார்த்தனர். .

"சமூக மாற்றத்தின் பயனாக, மனைவி வேலை செய்வது, சம்பாதிப்பது போன்ற விஷயங்களை ஏற்றுக்கொண்டு, அதே சமயத்தில் அவளுடைய அலுவலகப் பழக்கத்தினால் அவளுக்கு ஏற்படும் உண்மையான நட்பைப் பெருந் தன்மையுடன் ஏற்றுக்கொண்டு கௌரவிக்கும் மனப்பான்மை இல்லாத ஜெயராமனைவிட, என் தங்கைக்குக் குமாருடன் முன்பு ஏற்பட்ட காதலைக்கூடப் பொருட்படுத்தாமல் பரந்த மனப்போக்குடன் அவளைத் திருமணம் செய்துகொள்ள முன்வரும் சுந்தரம் உயர்ந்தவர், இந்த சமூகத்திற்குத் தேவையானவர். இக்காலச் சமூகச் சூழ்நிலையில் நம் பெண்கள் சமுதாயத்திற்குச் சுந்தரம் போன்ற இளைஞர்கள்தான் அவசியமே தவிர, ஜெயராமன்கள் அல்ல" என்றான்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் தலை குனிந்தான் ஜெயராமன்.

# 36

போற்றிய போதினிலே - இளம்
புன்னகை பூத்து மறைந்து விட்டாள் அம்மா.

– பாரதியார்.

**ஜெ**யராமன் முகத்தில் எல்லை காண முடியாத துயரம் மண்டி நின்றது. அவன் கண்கள் எங்கோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தன. தன்னைச் சுற்றி, தன்னையே ஆடாமல் அசையாமல் பார்த்துக்கொண்டு நின்றிருந்த ஸ்ரீதர்,சுதா, பவானி - மூவர் மீதும் அவன் பார்வை விழவில்லை. எங்கோ இருந்த ஒரு ஜீவனை, தன் மனக்கண்ணால் பார்த்துக்கொண்டு, அந்த உருவத்துடன் மானசீகமாகப் பேசிக்கொண்டிருப்பது போலிருந்தது.

நீண்ட மௌனத்தைக் கலைத்துப் பேச்சை ஆரம்பித்தான் ஸ்ரீதர்:

"மிஸ்டர் ஜெயராமன்! நான் கொஞ்சம் அதிகமாக, அதாவது, உங்கள் மனத்தைப் புண்படுத்துகிற அளவுக்குப் பேசிவிட்டேனோ என்று பயமாக இருக்கிறது. மிஸ்டர் சுந்தரத்தின் பெருமையைப் பற்றிக் கூற வந்தவன், உங்களைப் பற்றி அநாவசியமாகக் குறைத்துப்பேசிவிட்டதாக நீனைக்கிறேன், உங்கள் மனத்தைப் புண்படுத்தியதற்கு மன்னிப்புக்கோருகிறேன் ..."

குரல் கேட்டு பிரமை கலைந்தவன்போல் ஸ்ரீதரைப் பார்த்தான் ஜெயராமன்.

"நோ, நோ! அப்படி ஒன்றுமில்லை. நீங்கள் என்னைத் தனிப்பட்ட முறையில் எதுவும் பேசவில்லை. அப்படி நீங்கள் பேசியதாக நான் நினைக்கவும் இல்லை. என் மனப்போக்கைக் குற்றம் சாட்டினீர்கள். அந்தக் குற்றதை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், ஒரு சிறு வேண்டுகோள் ....." என்றான்.

"சொல்லுங்கள் ....." என்றான் ஸ்ரீதர்.

"என் மனப்போக்கை நீங்கள் குற்றம் சாட்டியது, சாதாரணமாகப் பார்த்தால் நியாயமானதாக இருக்கலாம். ஆனால், என் மனத்தை நீங்கள் முழுமையாகப் புரிந்துகொண்ட, பிறகு இந்தக் குற்றத்தைச் சட்டியிருந்தால் நன்றாக இருந்திருக்கும் ...."

"என்ன சொல்கிறீகள் நீங்கள்?"

"எனக்கும் வனஜாவுக்கும் உள்ள பிரிவை நீங்கள் எல்லோரும், சந்தேகக் கண்களுடன் பார்க்கும் ஒரு கணவனின் செயலாகவே நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். அது தவறு. நான் வனஜாவின் கற்பைச் சந்தேகிக்கவில்லை. ஆனால், ஒரு 'நட்பை'க்கூடத் தன் கணவனுக்காக ஒரு பெண் தியாகம் செய்ய விரும்பாவிட்டால்,

அந்தக் கணவனால் எப்படி மனநிறைவோடு அந்தப் பெண்ணுடன் வாழ முடியும்!அப்படி ஒரு தியாகத்தை நான் என் மனைவியிடம் எதிர்பார்ப்பது தவறா?" என்று கேட்டான்.

"எதிர்பார்ப்பதில் தவறில்லை, மிஸ்டர் ஜெயராமன். ஆனால், அதைக் கேட்டுப் பெற முயன்றபோது, அவளுடைய கௌரவத்தை நீங்கள் கவனத்தில் கொள்ளவில்லை. அவளை மிகவும் சந்தேகித்துவிட்டீர்கள்; தரக் குறைவாக எண்ணிவிட்டீர்களே. சுந்தரத்தின் நட்பு வனஜாவுக்குக் காரியாலயப் பழக்கத்தில் ஏற்பட்டது. அவனுடைய நல்ல எண்ணங்கள் அவளைக் கவர்ந்தன. வேலைக்குப் போகும் பெண்ணுக்கு இன்னொரு ஆணுடன் நட்பு ஏற்படுவது சகஜம். இந்தப் பெண்ணின் நட்பில் தூய்மை இருந்தது. உத்தமமான நண்பனாகச் சுந்தரத்தைக் கருதி, அவனுடன் பழகினாள். அவள் மனத்தில் வேறு களங்கமே இல்லை. இந்த நிலையில், அவளுக்கு நீங்கள் கணவனானீர்கள். உங்களுடன் அவள் உறவாடினாள். இந்த உறவு மகத்தானது. இதில் காதலும், வேகமும் இருந்தன. காலப்போக்கில் உங்கள் வாழ்க்கையில் குழந்தை குட்டி என்று ஏற்படும்போது, குடும்பச்சுமை அழுத்தும்போது, நட்பு போன்ற விஷயங்களில் ஈடுபாடு குறையக்கூடும். இது சாதாரண விஷயம், இப்படிப்பட்ட சாதாரண விஷயத்தை நீங்கள் பெரிதுபடுத்திவிட்டீர்கள். சுந்தரத்தோடு அவள் கொண்ட நட்பு தவறானது என்ற எண்ணம் கொண்டுவிட்டீர்கள். அதற்கு உங்கள் மனைவி மறுப்பு தெரிவித்திருக்கிறாள். 'எங்கள் நட்பு தவறானது அல்ல, கண்ணியமானது தான்' என்று வாதாடியிருக்கிறாள். வாதாடியதோடு, போராடவும் செய்திருக்கிறாள். ஆமாம், போராட்டந்தான்! என்ன செய்வது? அதற்கு அவசியம் ஏற்பட்டுவிட்டதே..." .

" ஒரு பெண்ணின் வாழ்க்கையில் நிரந்தரமாகப் பிரகாசிக்கக்கூடிய ஒளி, கணவனின் அன்பு ஒன்றுதான். மற்ற உறவுகள் எல்லாம் சாதாரண வெளிச்சங்கள். பெற்றோரிடம் ஏற்படும் அன்பே காலப்போக்கில் மாறிவிடும்போது, மற்ற உறவுகளைப் பற்றிச் சொல்லவேண்டுமா? எல்லாம் மின்மினிப் பூச்சி போன்றவைதான்! இதை உணராமல், சூரியன் மின்மினியைக் கண்டு பொறாமைப்பட்டுப் பகைமை கொள்வதுபோல், கணவராகிய நீங்கள், அவள் காரியாலய பழக்கத்தால் கொன்ட ஒரு நட்பைப் பெரிதுபடுத்தி, உங்கள் வாழ்க்கையைக் குழப்பிக்கொண்டு விட்டீர்கள்" என்று நிறுத்தினான் ஸ்ரீதர்..

சுதாகூட, ஸ்ரீதரின் வார்த்தையை எதிர்க்க முடியாமல் கட்டுண்டு கிடந்தாள்.

"மிஸ்டர் ஜெயராமன்" என்று ஆரம்பித்தாள் பவானி:

"ஒரு புராண உதாரணம் சொல்கிறேன். இராமாயணத்தில் சத்திய தேவதையான சீதை, இராவணனால் சிறை யிருந்தாள். இன்றோ, உண்மைக்காக வாழும் உங்கள் சீதை, உங்கள் அலட்சியம் என்ற இராவணத் தன்மையால் உங்களைப் பிரிந்து சிறையில் இருக்கிறாள். உங்கள் மனத்திலிருந்த இராவணனை அழித்த பிறகு, இனியும் சீதையை அழைத்துவரத் தயங்க வேண்டுமா? என்று கேட்டாள்.

"இல்லையம்மா! என் சீதையாகிய வனஜாவை அழைத்து வர நான் இப்போதே புறப்படுகிறேன் ...." என்று எழுந்தான் ஜெயராமன்.

"நில்லுங்கள், மிஸ்டர் ஜெயராமன், நீங்கள் இப்படியே போய் நின்றால், உங்கள் 'சீதை' வருவாளோ என்னவோ?" என்று குறுக்கிட்டான் ஸ்ரீதர்.

"ஏன்?" என்று திகைப்புடன் கேட்டான் ஜெயராமன்.

"உங்கள் 'சீதை' உங்கள் மனத்திலிருக்கும் இராவணவதைக்காக காத்திருப்பவள். 'என் மனத்திலிருக்கும் அந்த தவறான எண்ணத்தைக் கொன்றுவிட்ட இராமன் நான்' என்று நீங்கள் நிரூபிக்கவேண்டும். நீங்கள் உண்மையான ஜெயராமனாகப் போய் நிற்கவேண்டும்" என்றான்.

"என்ன சொல்கிறீர்கள், ஸ்ரீதர்?" - உண்மையிலேயே புரியாமல் கேட்டான் ஜெயராமன்.

"உங்கள் 'ஐயம்' அழிந்துவிட்டது என்பதை அவள் எப்படி சார் உணருவாள்?"

"நான் எடுத்துச் சொல்வேன் ...."

"போதுமா? சாட்சி வேண்டாமா?"

"சாட்சியா?"

"ஆமாம், சாட்சியுடன் போனால்தான் நல்லது. உங்கள் 'ஐயம்' அழிந்துவிட்டது என்பதை நிரூபிக்க ஒரே வழிதான் இருக்கிறது. அது, உங்களுடன் நீங்கள் சுந்தரத்தையும் அழைத்துக்கொண்டு செல்வதுதான். சுந்தரத்தை வனஜாவின் முன் நிறுத்தி, 'இந்தச் சுந்தரத்தை உன் நண்பனாக மட்டுமே நான் கருதுகிறேன். அந்த நட்பின்மீது எனக்குப் பொறாமை இல்லை. உங்கள் இருவருக்கும் இருக்கும் நட்பைவிட, நமக்கிருக்கும் கணவன் - மனைவி உறவு உயர்ந்தது என்பதை நான் உணர்ந்துவிட்டேன்' என்று அவள்முன் சொல்லவேண்டும். எனவே, சுந்தரத்தையும் உங்களோட அழித்துச் செல்லுங்கள் ....." என்றான்.

"நிச்சயமாக" என்று கூறிப் புறப்பட்டான் ஜெயராமன்.

அவன் மட்டுமா? ஸ்ரீதர், பவானி, சுதா எல்லோருந்தான்.

ஒர்க்கிங் உமன்ஸ் ஹாஸ்டல் வாசலில் நின்ற வண்டியிலிருந்து அவசர அவசரமாகக் கீழே இறங்கி உள்ளே ஓடினான் ஜெயராமன். அவனைப் பின்தொடர்ந்தான் சுந்தரம்.மற்றவர்கள் வண்டியிலேயே இருந்தனர்.

உள்ளே நுழைந்த அவர்களுக்குப் பெரிய அதிர்ச்சி காத்திருந்தது.

"காலையிலேயே வனஜா கணக்கைத் தீர்த்துக்கொண்டு அறையைக்காலி செய்துகொண்டு போய் விட்டார்களே..." என்று தகவல் சொன்னார் ஹாஸ்டல் நிர்வாகி ......

சிறிது நேரம் ஒன்றும் புரியாமல் பிரமித்துப்போய் நின்றான் ஜெயராமன்.

"ஒரு வேளை, ஆபீசில் இருக்கலாம்" என்றான் சுந்தரம்.

எல்லோரும் ஆபீஸைத் தேடி ஓடினர். அங்கே இன்னுமோர் அதிர்ச்சி காத்திருந்தது. வனஜா எழுதியனுப்பியிருந்த ராஜினாமா கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டு குழம்பிக்கொண்டிருந்தார் அவளுடைய மேல்அதிகாரி.

எல்லோரும் வனஜாவை வலைபோட்டுத் தேடினர். அவளுடைய பெற்றோருக்கும் தகவல் தெரிந்தது. அவர்களும் கதறி அழுதுகொண்டே தேடினார்கள்.

- - - - - - - - -

சாலை ஓரத்துப் புழுதியைக் கிளப்பிக்கொண்டு ஆடி ஆடி ஓடிக்கொண்டிருந்தது அந்த பஸ்

. உற்றாரும் சுற்றமும் தன்னைத் தேடி எங்கெங்கோ அலைந்துகொண்டிருந்தபோது, எங்கேயோ கண்ணுக்குத் தோன்றாமலிருக்கும் ஒரு லட்சியத்தை மனத்தில் கொண்டு, தன் மனத்தில் இதுவரை வளர்த்த 'உண்மை' ஒன்றின் துணையோடு, அமைதியைத் தேடி அந்த பஸ்ஸில் பயணம் செய்துகொண்டிருந்தாள் வனஜா.

அவளுடைய பைக்குள் அந்தக் கடிதம் இருந்தது. மனத்தில் முதல் நாள் மாலை தன்னைத் தேடிவந்த பெற்றோரும், தம்பியும் கொட்டித் தீர்த்த கொடுமையான சொற்கள் சுற்றிக்கொண்டிருந்தன.

அவள் மேற்கொண்டிருந்த பயணத்தை நினைத்தபோது, ஒரு விதத்தில் அது அர்த்தமில்லாததாகத் தோன்றியது. இன்னொரு விதத்தில் பார்த்தபோது, அர்த்தமில்லாத எண்ணங்களுடனும், பயங்களுடனும் வாழும் இந்த உலகத்திலிருந்து தப்பித்துச் செல்ல அது ஒன்றே சிறந்த வழியாகவும் பட்டது.

அவள் உடல்தான் பஸ்ஸில் இருந்தது. உள்ளமோ?

முதல் நாள் நிகழ்ச்சியிலேயே உழன்றது.

'தபால்' என்ற குரலுடன் போஸ்ட்மேன் கொடுத்த அந்தக் கவரை வாங்கும்போது, அப்படி ஒரு நஞ்சு அதற்குள் இருக்கும் என்று அவள் எதிர்பார்கவில்லை. சமயம் கிடைக்கும்போதெல்லாம் சொல்லாலும், பார்வையாலும், நடவடிக்கையாலும் அவளைச் சித்திரவதை செய்துகொண்டிருந்த சுதா, இரண்டு நாட்களுக்கு முன்பு எழுதிய அந்தக் கடிதத்தில், எழுத்தாலும் சித்திரவதை செய்திருந்தாள்:

வனஜா, நீ உண்மை உண்மை என்று பேசிக்கொண்டிருப்பாயே, அந்த அர்த்தமற்ற 'உண்மை' உனக்குப் பெருஞ்சுமையாகிவிட்டது. உலகத்திற்கும் பாரமாகிவிட்டது. உன்னால் இந்த உலகத்தில் யாருக்கு என்ன லாபம்? முதலில் உனக்கே நீ லாபமாக இருக்கிறாயா? 'நண்பன்' என்று ஒருவனைக் கொண்டாடி, கணவனை அலட்சியப் படுத்தினாய். அந்தக் கணவன் உன்னைவிட்டு வெகுதூரம் போய்விட்டான். இதுவரை கல்யாணமான உன்னைச் சுற்றிக்கொண்டிருந்த உன் அருமை நண்பன் சுந்தரமோ, வேறு ஒருவன் காதலித்துக் கைவிட்ட பவானியைச் சுற்றிக்கொண்டு அலைகிறான். நீ யாருமற்ற அநாதையாகிவிட்டாய்.

உன் பெற்றோர்தான் உன்னால் நிம்மதி அடைந்தார்களா? கல்யாணமாகியும் கணவனோடு வாழாமல், வாழாவெட்டியாகத் திரியும் உன்னை நினைத்துச் சிறுகச் சுறுக உயிரைப் போக்கிக் கொண்டிருக்கின்றனர்.

உன்னைக் கைப்பிடித்த தோஷத்திற்காக என் அண்ணன் ஜெயராமன் வாழவும் முடியாமல், சாகவும் முடியாமல் தவிக்கிறான். நீ ஒருத்தி உலகத்தைவிட்டே ஒழிந்திருந்தால், அவன் நிம்மதியாக, இன்னொரு பொருத்தமான பெண்ணை மணந்து கொண்டிருப்பான். ஆனால், நீ இன்னும் அவன் 'மனைவி' என்ற பட்டதுடன் வாழ்கிறாயே! அவன் என்ன செய்வான், பாவம்!

இப்படி உனக்கும், உன்னைச் சுற்றி உள்ளவர்களுக்கும் பாரமாக நீ இந்த வாழ்வு வாழ்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இதையும் கொஞ்சம் யோசித்துப்பாரேன் ....      சுதா.

இந்த வார்த்தைகளைச் சுதா நேரில் பேசியிருந்தால், வனஜா ஏதாவது பதிலளித்திருப்பாள்! ஆனால், எதிரில் பேச ஆள் இல்லாத நிலையில், அந்தக் கடிதத்திற்கு அவள் தன் மனத்திற்குள்தான் பதில்சொல்ல வேண்டிவந்தது.

'சுதா சொல்வதில் என்ன தப்பு? நான் என் நல்வாழ்விற்குப் பாரமாக இருப்பதைப் பற்றிக் கவலையில்லை. என் பெற்றோரின் திருப்திக்குப் பாரமாக இருப்பதைப் பற்றியும் நான் கவலைப்படவில்லை. ஆனால், கணவனுக்குப் பாரமாக இருப்பது .... "

இதை எண்ணியதும் -

வனஜாவுக்கு நெஞ்சு வெடித்துவிடும் போல் இருந்தது. 'தான் கட்டிக் காக்கும் உண்மைகளுக்காக என்னைப் பலி கொடுத்துக்கொள்ளலாம்.என் கணவரையுமா?....' வனஜாவின் மனம் புலம்பியது.

"அதற்காக உண்மையைத் துறந்துவிடலாமா! அவரிடம் போய் 'சுந்தரத்திற்கும் எனக்கும் உள்ள உறவு முறையற்றது, என்னை மன்னித்து விடுங்கள். இனி அப்படி நடக்காது!' என்று சொல்லிவிடலாமா? உண்மையை மறைத்து, அவர் மன நிம்மதிக்காக ஏதாவது ஒரு பொய்யைச் சொல்லலாமா?

இந்தப் பிரச்சனையில்  அவள் மனம் மீண்டும் குழம்பியது. மணிக்கணக்கில் சிந்தித்தாள். ஆறுதலுக்காக, மாறுதலுக்காக அவள் ஒரு புத்தகத்தை எடுத்தாள்.

அது காந்திஜியின் 'சத்திய சோதனை'யாக இருந்தது. அட்டையிலிருந்த மகாத்மா, மானசீகமாக அவளிடம் பேசினார்:   'மகளே, நீ சத்திய சோதனையில் இருக்கின்றாய். உன்னைப்போன்றவர்களாவது  சோதனையில் வெற்றிகண்டு, சத்தியத்தைக் காப்பாற்றினால்தான், சத்தியம் வாழும். அரிச்சந்திரன் சோதனைக்குப் பயந்து ஒரு பொய் சொல்லியிருந்தால் என்ன ஆகியிருக்கும்? அவரை விடவா நீ துயரத்தை அனுபவித்துவிட்டாய் ......!'

வனஜா புலம்பினாள்.

'மனித தெய்வமே! அரிச்சந்திரன் எல்லாத் துயரத்தையும் தானே சுமந்தான். அவனுடைய மனைவியும், குழந்தையும் அவனுடைய சுமையில் விரும்பிப் பங்கு பெற்றார்கள். ஆனால் நான்? இந்தச் சோதனையால் வரும் எல்லாத் துன்பங்களையும் நான் மட்டும் ஏற்கத் தயார். ஆனால், என் பொருட்டு என் கணவரும் தவிக்க வேண்டுமா!'

கணவனுக்கு எப்படி உதவலாம் என்பதை அறிய, வழக்கறிஞர் ஒருவரைக் கலந்தாலோசித்தாள் வனஜா.

அவரோ? -   "இந்தாம்மா, நீ ஒண்ணுக்கும் யோசிக்காதே, சட்டம் எல்லாம் பழைய மாதிரி இல்லே. 'விவாக ரத்துக்குச் சம்மதம்'னு நீ எழுதிக்கொடுத்தால்கூட, எளிதிலே உன்னை விலக்கி வச்சுடமுடியாது. விவாகரத்துக்குக் காரணம் இருக்கிறது என்று நீதிபதி முடிவு செய்யவேண்டும். உன் விஷயத்தில் அப்படி ஒன்றும் செய்ய முடியாது. நீ உயிரோடு இருக்கிறவரை, நீதான் அவர் மனைவி. சட்டத்தாலேகூட உன்னைப் பிரிக்க முடியாது" என்று கூறிவிட்டார்.

"அப்படியானால் நான் உயிருடன் இருக்கும்வரை அவருக்கு நிம்மதி தர முடியாதா?" என்று எண்ணிக் குமைந்தாள் வனஜா.

துன்பம் வந்தாலும் அடுக்கடுக்காக வரும் என்பார்கள். அன்று வனஜா வேதனைப்படுவதற்காகவே அடுக்கடுக்காக நிகழ்சிகள் நடந்தன.

மாலையில் அதிசயமாக அவளுடைய அம்மா, அப்பா, தம்பி பாலு - எல்லோரும் அவளைப் பார்க்க வந்தனர்.

ஆனால், பெற்றோரையும் தம்பியையும் பார்த்த மகிழ்ச்சியை அனுபவிக்க முடியாமல், அவளைச் சித்திரவதைப் படுத்தினார்கள் அவர்கள்.

அவள் தாயார் அவளைக் கட்டிப்பிடித்து 'ஓ'வென்று அழ ஆரம்பித்து விட்டாள். "இப்படி வாழாவெட்டியாக நிற்கவா நான் உன்னைப் பெற்றேன்" என்று கதறினாள். தந்தை குப்புசாமிக்கோ வேதனை பாதி, ஆத்திரம் பாதி.

"உன்னாலே நான் வெளியிலே தலைகாட்ட முடியவில்லை. வெளியே போனால் கண்ணில் படுகிறவன் எல்லாம் 'என்ன, உங்க பெண் சரியாக வாழலையாமே .... ஒரு மாதிரியா பேசிக்கிறாங்களே' என்று கேட்கிறார்கள். அதைக் கேட்கும்போது நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகலாம்போல் இருக்கிறது. இந்தக் கண்றாவியையெல்லாம் பார்த்துக்கொண்டு உயிரோட இருக்கவேண்டும் என்று கடவுள் என்னைப் படைத்திருக்கிறானே ..... " என்று கொதித்தார். தம்பி பாலுகூட அல்லவா வார்த்தைகளை அள்ளி வீசினான் "ஸ்கூல்லே எல்லாம் என்னைப் பத்திக் கன்னாபினனான்னு பேசறாங்க, அக்கா .... உன்னை அக்கான்னு சொல்லிக்கவே எனக்கு அவமானமா இருக்கு ..." என்றான் அவன்.

வனஜா யாரிடமும் பதில் பேசவில்லை. போகிற போக்கில் அப்பா கண்ணீரும் ஆத்திரமுமாக, "நீ இப்போதாவது ஜெயராமன் காலில் விழுந்து உன் தவற்றை ஒப்புக்கொண்டுவிடு. இல்லாவிட்டால், உனக்குத் தகப்பனோ, தாயோ இல்லையென்று முடிவுகட்டிவிடு" என்று கூறிவிட்டுப் போனார்.

எல்லோரும் அவளைவிட்டுப் போய்விட்டார்கள்,அவளுக்குத் துணையாக அவளைப் போலவே உலகில் ஆதரிப்பாரற்று அநாதையாக இருக்கும் 'உண்மை' என்ற தத்துவம் மட்டும் இருந்தது.

இரவு முழுதும் கண் விழித்துக்கொண்டிருந்தாள் வனஜா. இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தாள்.

'நான் எரிந்து என் கணவனுக்கு வாழ்வு தருவேன்' என்ற சபதம் அவள் நெஞ்சில் உதித்தது.

காலையில் எழுந்து ஹாஸ்டல் கணக்கைத் தீர்த்தாள். அலுவலகத்தில் ராஜிநாமா கடிதத்தைச் சேர்த்தாள். அதே வேகத்தில் பஸ்ஸில் ஏறிவிட்டாள். தனக்குச் சொந்தமான உறவுகள், ஆசைகள் அனைத்தையும் பின்னால் நிறுத்திவிட்டுத் தான்மட்டும் பயணம் செய்வதுபோல் அவள் மனம் பாரமின்றி இருந்தது.

பஸ் ஓட ஓட, பவானியின் நினைவு அவள் மனத்தில் உறுத்தியது.

'பாவம், அந்தப் பெண்ணை மட்டும் நான் மனதாரச் சிறிது புண்படுத்திவிட்டேன்' என்று நினைத்தாள். 'என் கணவரை மணப்பது பற்றி என்னிடம் அபிப்பிராயம் கேட்க வந்த அவளிடம், 'உன் பழைய காதல் கதை அவருக்குத் தெரியுமா?' என்று நான் கேட்டிருக்கக் கூடாது. அவளைப் புண்படுத்தும் கேள்வி மட்டும் அல்ல, சுயநலக் கேள்வியாகவும் அல்லவா அது ஆகிவிட்டது .... ' என்று எண்ணினாள். மானசீகமாக அவளிடம் மன்னிப்புக் கோரினாள். 'பவானி, என்னை மன்னித்துவிடம்மா, என்ன இருந்தாலும் நான் ஒரு சாதாரணப் பெண்தான். என்னை மன்னித்து என் கணவனுக்கு நிம்மதியான வாழ்வைக் கொடு ....'

சாலையில் பார்வையைச் செலுத்தி வந்தவளுக்கு, திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்தது.

"கண்டக்டர், ஸ்டாப்பிங் ஹோல்டன்" என்றாள் ....

ஸ்டாப்பிங் வந்ததும் பஸ் நின்றது.

வனஜா அவசர அவசரமாக கீழே இறங்கினாள்.

எங்கிருந்தோ ஒலித்த மணியோசை, அவளை அழைத்தது.

'வா மகளே, வா' என்று அது குரல் கொடுப்பது போலிருந்தது.

# 37

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் - புவி
பேணி வளர்த்திடும் ஈசன்

- பாரதியார்

**"ஐ**யோ, என் பெண்ணுக்கு என்ன ஆச்சோ? ரோஷக்காரியாச்சே. என்ன செய்தாளோ, தெரியல்லியே ..... கற்பகாம்பா, தாயே, என் மகளைக் கண்ணிலே காட்டு ......" என்று கதறியழுதாள், வனஜாவின் தாயார். அவளுடைய பெற்றமனம் பதறித் துடித்தது.

குப்புசாமி வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஆனால், அவர் மனைவி உரக்கப் பேசியதைவிட, பலமடங்கு உள்ளத்தால் அவர் புலம்பிக்கொண்டிருந்தார்.

வனஜாவைக் காணோம் என்ற நிமிஷத்திலிருந்து தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் எல்லோருமே பதைத்தனர், சுதா உட்பட. நெருங்கிய சுற்றத்தார் எல்லோருமே ஆளுக்கொருபக்கமாக அவளைத் தேடித் புறப்பட்டனர்.

குப்புசாமி, வனஜாவின் தாயார், தம்பி - இவர்கள் ஒரு டாக்ஸியில்; ஜெயராமன், சுதா - இவர்கள் ஒரு டாக்ஸியில்; ஸ்ரீதர்,சுந்தரம், பவானி - இவர்கள் ஒரு காரில். இப்படி மூன்று திசையில் தனித்தனியாக தேடித் புறப்பட்டனர்.

கோயில் கண்ட இடமெல்லாம் இறங்கி விழுந்து விழுந்து பிரார்த்தித்தாள் வனஜாவின் தாய். குப்புசாமிக்கு ஆத்திரம் பொங்கியது.

"இப்போ போய்க் கோயில் கோயிலாகச் சுத்தி என்ன பிரயோஜனம்? இத்தனை நாளும் வனஜா நம்மைப் பார்த்து, உண்மைங்கிற ஒரேயொரு சத்திய தெய்வத்தை வணங்கும்படி சொன்னா; நாம் ஒத்துக்கல்லே. இப்போ கோயில் கோயிலா போறோம். கடவுள் சத்தியத்துக்குள்ளே இருக்கிறதாகச் சொல்லுவா. நாம அந்தச் சத்தியத்தை அலட்சியப்படுத்திவிட்டு, இப்ப கோயில் கோயிலா சுத்தறோம் ....." என்று தனக்குத்தானே கூறிக்கொள்வது போலச் சொல்லிக் கொண்டார்.

அதன் பிறகு அந்த அம்மாள் டாக்ஸிக்குள் அடங்கிவிட்டாள். ஆனால், அவளுடைய புலம்பல் அடங்கவே இல்லை.

"அவளைப் பெத்து வளர்த்தேன்னு சொல்லிக்கறதுக்கு எனக்கு என்ன இருக்கு? அவளுக்கு என்னென்ன வேணும்னு தெரிஞ்சு வச்சிருந்தேனா, ஆனால், அவளுக்குள்ளே என்னென்ன இருக்குன்னு நான் தெரிஞ்சு வச்சுக்கல்லியே .... ஊரிலே, உலகத்திலே மற்ற பெண்கள் கணவனோட வாழறதே, பிள்ளைக் குட்டிகள் பெத்துக்கறதே என்றுதான் பரிதவிச்சேனே தவிர, இதிலே எத்தனை பெண்கள் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு வாழறதுகள்னு நான் நினைச்சுக்கூடப் பார்க்கல்லியே ...." என்று கூறி அழுதாள் அந்தத் தாய்.

"இப்போ அழுது என்ன பிரயோஜனம்? கையிலே இருக்கிறது வைரம்னு தெரிஞ்சிக்காம, அதை தூர எறிஞ்சுவிட்ட மாதிரி, நம்ப பெண்ணோட அருமையை நாமே புரிஞ்சுக்காம போயிட்டோம்.கணவனோடு ஒரு பெண் வாழறது பெரிசில்லே, கணவன் அவளைக் கடைசிவரை காப்பாத்தினாலும் காப்பாத்துவான், இடையிலே அவளை விட்டுவிட்டுப் போயே போயிட்டாலும் போயிடுவான்.ஆனால் இவ, என்னைக்கும் தன்னைவிட்டுப் பிரியாத ஒரு லட்சியத்தை வச்சு வாழ ஆரம்பிச்சா. அதுதான் உலகத்திலே உள்ள எல்லாத் துணையையும்விட பெரிதுங்கற உண்மையை நான் வனஜாகிட்டேயிருந்து புரிந்துகொண்டேன். சத்தியம்கிற துணையைவிட்டுப் பிரிஞ்சு வாழறதைவிட, சாகறதே மேல்னு அவ புறப்பட்டுட்டா.... " என்று கூறிப் புலம்பினார் குப்புசாமி.

"ஐயோ, உங்க வாயாலே அபசகுனமா எதுவும் சொல்லிடாதீங்கோ! என் மகள் எப்படியும் கிடைத்து விடுவாள்.கற்பகாம்பா என்னைக் கைவிடமாட்டா ....." என்று ஏதோ ஒரு நம்பிக்கையில் புலம்பினாள் அந்தத் தாய்.

"நான்கூட அநாவசியமா அக்காவைத் திட்டிட்டேனே ..... என்னை மன்னித்துவிடு, அக்கா .... நான் செய்த எத்தனையோ தப்பை நீ மன்னிக்கவில்லையா? இதையும் மன்னிச்சுடு ....." என்று பதைபதைத்தான் சிறுவன் பாலு.

டாக்ஸியின் மீட்டர் எறியாதே தவிர, வனஜா கிடைக்கவில்லை. அவளுடைய சிறுவயது தோழிகள் முதல், காரியாலய சிநேகிதிகள்வரை எல்லோரின் வீட்டிலும் ஏறி இறங்கினார்கள். பலனில்லை. நேரமாக ஆக, அவள் தாயாரின் புலம்பல் அதிகரித்துக்கொண்டே போயிற்று.

- - - - - - - -

"**அ**ண்ணா, நீ என் மேல் கோபமாக இருக்கிறாய். எல்லாவற்றிற்கும் நான்தான் காரணம் என்று நீ நினைக்கிறாய், இல்லையா?" என்று கண் கலங்கக் கேட்டாள் சுதா.

ஜெயராமன் மனம் புழுங்க, " உன் பேரில் குற்றம் சொல்ல நான் யார்?" என்றான்.

"அப்படிச் சொல்லாதே, அண்ணா. என் மனம் வெடித்துவிடும் போலிருக்கிறது. உலகத்தில் உள்ள எல்லாச் சாதாரணப் பெண்களைப் போலத்தான் வனஜா மன்னியையும் நினைத்துவிட்டேன். அவள் உண்மையிலேயே நெருப்பா

இருக்கிறாள். அந்த நெருப்பு இப்போ நம்மையெல்லாம் எரியவச்சுட்டு, எகேயோ போயிடுத்து .... ஒருவேளை, அந்த நெருப்பு அணைந்தாலும் ...... "

அவள் வார்த்தையை முடிக்கவில்லை, ஜெயராமன் உரக்கக் குறுக்கிட்டான்.

"சுதா, அந்த வார்த்தையைச் சொல்லாதே. என் வனஜாவுக்கு ஒரு அழிவும் ஏற்படாது ......" என்று கத்தினான்.

"என் மனம் தவிக்கறதைச் சொல்கிறேன், அண்ணா. இவ்வளவு தூரம் தேடியும் மன்னியைக் காணோம் என்றதும், என்னென்னவோ பயமெல்லாம் தோன்ற ஆரம்பித்துவிட்டது.... " சுதா, தன் வாழ்க்கையிலே முதன்முறையாக மனம் கசிந்து அழுதாள்.

ஜெயராமன் முகத்தில் விரக்தியின் எல்லை தெரிந்தது.

"சுதா, அநாவசியமாக அழாதே. நான் எந்த முடிவுக்கும் தயாராகிவிட்டேன் ....." என்றான்.

"என் அண்ணா அப்படிச் சொல்கிறாய்?"

"ஆமாம், சுதா. சீதையைப் போன்ற ஒரு பெண்ணோடு வாழ்வதற்கு, ராமனைப்போல யோக்கியதை வேண்டும். என் வனஜா சீதைக்கு ஒப்பானவள். ஆனால், நான் ராமச்சந்திரமூர்த்தி இல்லையே. அவளுடைய உண்மை என்கிற சத்திய ஜோதியை ஏற்றுக்கொள்ள முடியாத சாதாரண மனிதன் நான். என்னைவிட உயர்ந்த பொருள் என்னோடு இருக்கலாமா? அதனால்தான் அது என்னைவிட்டுப் போய்விட்டது .... " என்றான் உயிரற்ற குரலில்.

டாக்ஸி ஓடிக்கொண்டிருந்தது. அவன் கண்கள் கலங்கிக்கொண்டே இருந்தன.

- - - - - - - - -

**த**னக்கு அருகே வலப்பக்கமும், இடப்பக்கமுமாக, காரின் பின் சீட்டில் உட்கார்ந்திருந்த பவானியையும் சுந்தரத்தையும் மாறிமாறிப் பார்த்தான் ஸ்ரீதர். இருவரும் எதுவும் பேசத் தோன்றாதவர்களாக,ஒகச் சிலைகளாக அமர்ந்த்திருந்தனர்.

அவர்களுடைய கார், சென்னை நகரத்தையெல்லாம் ஒரு சுற்று சுற்றிவிட்டு, எல்லைப் பகுதிக்கு வந்தாகிவிட்டது. இதுவரை அவர்கள் சந்தித்த ஒவ்வொருவரும் 'வனஜாவையா காணோம்', உலகத்தையே எதிர்த்து வாழத் துணிந்த பெண்ணா, இப்படிக் கோழை மாதிரி ஓடிப்போய்விட்டாள் ....' என்று பரிதவித்தார்கள். அவள் எங்கே போயிருப்பாள் என்பது பற்றி ஒரு துப்பும் கிடைக்கவில்லை.

"ஒரு வேளை, கடலுக்குள் விழுந்து ..." என்ற பதட்டத்துடன் கேட்டாள் பவானி.

"வனஜாவுக்கு அப்படி ஒன்றும் ஆகாது. கடவுள் அவளை அப்படித் தண்டிக்க மாட்டார் ....." என்றான் ஸ்ரீதர்.

"எப்படி அண்ணா அவ்வளவு உறுதியாகச் சொல்கிறாய்?" என்று கேட்டாள் பவானி.

"ஆமாம்மா! அவளுடைய வாழ்க்கை முடிந்து விட்டது என்றால் சத்தியத்தின் வாழ்க்கையும் முடிந்துவிட்டது என்று அர்த்தம் ...."என்றான் ஸ்ரீதர் கம்மிய குரலில்.

பவானியின் கண்களிலிருந்து ஊற்றெனக் கண்ணீர் பெருகியது.

சுந்தரம் உணர்வற்ற சிலையாக இருந்தான். வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை.

அவனைப் பேசவைக்கவேண்டும் என்று ஸ்ரீதர் செய்த முயற்சிகள் எல்லாம் வீணாயின.

சென்னை எல்லையைத் தாண்டியதும், "இனி என்ன செய்யலாம்? என்று கேட்டான் ஸ்ரீதர்.

"இந்தச் சாலையிலேயே இன்னும் கொஞ்சம் போய்ப் பார்க்கலாம் ....." என்றாள் பவானி. ஒரு கணங்கூட ஓய்வில்லாது, எங்கேயாவது அலைந்து தேடிப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும்போல் இருந்தது அவளுக்கு.

நகரத்திலிருந்து கிராமப்புறப் பகுதி வழியே செல்லும் ஒரு சாலையில் கார் ஓட ஆரம்பித்தது.

அப்படி ஓடிக்கொண்டிருந்த கார் திடீரென்று நின்றது.

இறங்கி, எஞ்சினைத் திறந்து பார்த்த டிரைவர், "கொஞ்சம் டிரபிள் இருக்கு ... புறப்படப் பத்து பதினைஞ்சு நிமிஷம் ஆகும் ...." என்று கூறி, ரிப்பேரில் ஈடுபட்டான். ஸ்ரீதரும் அவனுக்கு உதவியாக அருகில் சென்றான்.

சுந்தரமோ? இந்த உலகத்துப் பிரக்ஞையே இல்லாதவன்போல், காரின் பின் ஸீட்டில் அமர்ந்திருந்தான். பவானி காரைவிட்டு இறங்கி, சுற்று முற்றும் பார்த்தாள். சற்றுத் தொலைவில் ஒரு சிறு குன்றும்,அதன் மீது ஒரு கோயிலும் இருப்பது தெரிந்தது.

"அண்ணா, நீங்க வேலையைப் பாருங்க. நான், அதோ தெரிகிறதே, அந்தக் கோவில்வரை போய் வருகிறேன். எங்கேயாவது சுவாமி தரிசனம் செய்தால், மனத்துக்குக் கொஞ்சம் தெம்பாக இருக்கும் போலிருக்கிறது" என்றாள்.

"குன்றின் மேலே அல்லவா கோயில் இருக்கிறது! உனக்கோ 'வீக்' உடம்பு. ஜாக்கிரதை ....." என்றான் ஸ்ரீதர்.

"லெட் மி ட்ரை ...." என்று கூறி நடந்தால் பவானி.

- - - - - - - -

**ப**ஸ்ஸைவிட்டு வனஜா இறங்கியதற்கும் இந்தக் கோயில்தான் காரணம். சிறு வயதிலிருந்து பலமுறை அந்தப் பக்கமாக பஸ்ஸில் வந்திருக்கிறாள் வனஜா. பஸ் அந்தப் பகுதியைக் கடக்கும்போதெல்லாம், அந்தச் சிறிய குன்றும், அதன்மீதிருக்கும் அழகிய கோயிலும் அவளைக் கவரும். எப்போதாவது ஒருமுறை அந்தக் குன்றிலிருக்கும் கோயிலுக்குப் போகவேண்டும் என்று நினைப்பாள்.அந்த ஆசை இத்தனை காலம் நிறைவேறாமலிருந்தது.

இம்முறை அதன் வழியாகச் செல்லும்போது, அவள் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது. 'இனி இந்தப் பக்கம் திரும்பி வரப்போகிறோமோ, என்னவோ? சிறு வயது முதல் மனத்தில் இருக்கும் ஆசையை நிறைவேற்றிக்கொள்ளலாமே ..... '

உடனே பஸ்ஸைவிட்டு இறங்கி, அக்குன்றுக் கோயிலுக்குள் சென்றாள். கோயிலில் வயதான ஒரு குருக்கள் மட்டும் இருந்தார். கோயிலைச் சுற்றி வணங்கிவிட்டு,பிரசாதத்தை வாங்கிக்கொண்டதும், அவள் மனத்தில் ஒருவித அமைதி ஏற்பட்டது. ஏனோ அந்த இடத்தைவிட்டு நகர அவளுக்கு மனம் வரவில்லை.

குன்றில் நின்று சுற்றுமுற்றும் பார்த்தாள். அப்போது கோயில் உயரத்துக்கும் அதிக உயரமாக ஒரு பாறைப்பகுதி இருப்பதைக் கண்டாள்.

"இந்தப் பாறையில் ஏறிப் பார்க்கலாமா?" என்று கோயில் குருக்களிடம் கேட்டாள் வனஜா.

"ஐயய்யோ, வேண்டாம்மா ..... அது வழுக்குப் பாறை, ஜாக்கிரதையாக ஏறும்போதும் கொஞ்சம் வழுக்கினாலும் கோவிந்தாதான். அப்படித்தான் ஒரு குழந்தை ஏறி கீழே விழுந்து மண்டை உடைஞ்சு போச்சு. அதிலிருந்துதான் ஜனங்கள் அதிகமாக இந்தக் கோயிலுக்கு வருவதில்லை" என்றார் குருக்கள்.

ஆனால், வனஜாவின் ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. குருக்களின் கண்பார்வைக்கு மறைவாக, அந்த வழுக்குப் பாறையில் மூச்சைப் பிடித்துக்கொண்டு ஏறிவிட்டாள். ஏதோ ஒரு வேகந்தான் அவளுக்கு ஏறுவதற்கான பலத்தைக் கொடுத்தது. சாதாரணமாக அதில் யாராலும் ஏறிவிட முடியாது.

பாறையின் உச்சியிலிருந்து கீழே பார்த்தாள். குன்றின் அடிவாரத்தில் ஒரு சிறு கிராமம் இருந்தது. அதில் மனிதர்கள் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லோருமே சிறுசிறு புள்ளிகளாகத் தெரிந்தார்கள். வெகுநேரம் அந்தக் காட்சியையே கண்கொட்டாமல் பார்த்துக்கொடிருந்தாள் வனஜா.

அந்த அமைதியான, தெய்வீகமான இடத்தில அவள் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்தன.

'எவ்வளவு உயரத்தில் இருந்து இந்த உலகத்தைப் பார்க்கிறோம்' என்ற எண்ணம் வந்ததும், அந்த குன்றுக்கும் தன் வாழ்க்கைக்கும் சம்பந்தம் இருப்பதுபோல் தோன்றியது.

'இந்தக் குன்றில் சாதாரணமாக யாரும் ஏறுவதில்லை, வாழ்க்கையைப் பெரிதாக நினைக்காதவர்கள் தான் ஏறுகிறார்கள். நான் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும் என்று நம்புகிற 'உண்மை'யும் இந்தக் குன்றைப் போலத்தான். வாழ்க்கையைப் பற்றியே கவலைப்படுகிறவர்கள், என் இலட்சியத்தில் ஏறி வர முடியாது. வாழ்க்கையை அற்பமாக நினைப்பவர்கள்தான்,உண்மையைப் பிடித்துக்கொண்டு வாழ முடியும். உண்மை சொல்ல வேண்டும் என்றால், உலக வாழ்க்கையைப் பெரிதாக மதிக்கக் கூடாது.

'இங்கிருந்து பார்த்தால், கீழே இருக்கும் மக்களெல்லாம் எவ்வளவு சிரியவர்களாகத் தெரிகிறார்கள். இப்படித்தான் 'உண்மை' என்ற தத்துவத்தின் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, மற்றவர்களின் பிரச்சனைகள்

எனக்கும் மிகச் சிறியவையாகத் தெரிகின்றன. பெற்றோர் கண்ணீர் விடுவது, கணவரின் தவிப்பு, சுந்தரத்துடன் பழகுவதை அவரால் ஒப்புக்கொள்ள முடியாதநிலை - எல்லாமே அவர்களுடைய கண்ணோட்டத்தில் பெரியவைதான். அவர்களுடைய எண்ணத்திலிருந்து நானும் பார்த்தால், நிலைமை எனக்கு நிச்சயம் புரியும். அவர்கள் என் இலட்சியத்தைப் புரிந்துகொண்டு, உண்மை என்ற குன்றின் மீது ஏறினாலும் பிரச்சனை தீர்ந்துவிடும். அல்லது நான் என் லட்சியக்குன்றிலிருந்து இறங்கினாலும் பிரச்சனை தீர்ந்துவிடும் .... ஆனால் ..... ஆனால் .....

'நான் இந்த இலட்சியக்குன்றிலிருந்து இறங்கமாட்டேன். எனக்கு இது பிடித்திருக்கிறது. இந்த இலட்சியத்தில் நான் அழிந்துபோகவும் தயார். உண்மையை விற்று வாழ நான் தயாராக இல்லை. ஒருகாலும், அப்படிச் செய்யமாட்டேன். ....'

வனஜா இப்படிச் சிந்தித்துக்கொண்டிருக்கும்போது, ஒரு குரல் அவளுடைய கவனத்தைக் கவர்ந்தது.

"அக்கா ..... வனஜா அக்கா .... " என்று கீழிருந்து குரல் வந்தது.

குனிந்து பார்த்தாள் வனஜா.

கீழே ...... வெகு கீழே, ஏறி வருகிற சரிவில் பவானி நின்று கொண்டிருந்தாள்.

"வனஜா, கீழே இறங்குங்கள். உங்களைத் தேடி உங்கள் கணவர், சுதா எல்லோரும் எல்லோரும் அலைகிறோம். பாறையைவிட்டு இறங்குங்கள் ...."

"மாட்டேன், நான் இனி கீழே இறங்கமாட்டேன். என்னுடைய உலகத்திலிருந்து என்னால் இறங்கமுடியாது. பவானி, நீங்கள் போங்கள் ...." என்று கத்தினாள் வனஜா.

பவானி அந்தப் பாறையில் ஏற முயன்றாள். ஆனால், பலவீனமான அந்தப் பெண்ணால், அதில் ஏற முடியவில்லை.

கண்ணீர் பொங்க, "என்னால் ஏற முடியவில்லையே ... நீங்கள் இறங்கி வாருங்களேன் ....." என்றால் பவானி.

உயரே இருந்த வனஜா, "பவானி, நீங்கள் இங்கே வர முயலாதீர்கள் .... இந்த இடம் உங்களை அழித்துவிடும். நீங்கள் நிற்கிற இடத்திலிருந்தே அமைதியைத் தேடி வாழ முயற்சி செய்யுங்கள்" என்றாள்.

திடீரென்று பவானிக்கு ஒரு யோசனை தோன்றியது! தன்னால் முடியாத காரியத்தை மற்ற ஆண்கள் மூலம் செய்யலாமே. உடனே அவசர அவசரமாகக் கீழ்நோக்கி கார் நிற்கும் இடத்திற்கு ஓடினாள்.

பத்தே நிமிஷத்திற்குள் பவானி, சுந்தரம், ஸ்ரீதர் - மூவரும் குன்றுக்கு வந்துவிட்டார்கள்.

ஆனால் ..... குன்றின் மீது வனஜாவைக் காணோம். எவ்வளவோ கத்தி அழைத்தும் வனஜாவைக் காணவில்லை. குருக்களிடம், 'இந்த வழியே ஒரு பெண் இறங்கிச் சென்றாளா?" என்று கேட்டார்கள்.

"இல்லையே ..... " என்றார் அவர்.

"இந்தக் குன்றின் உச்சியிலிருந்து இறங்கிச்செல்ல வேறு வழி இருக்கிறதா?" என்று கேட்டார்கள்.

"ஊஹூம் ...... எனக்குத் தெரிந்தவரை இது ஒன்றுதான் வழி ..... வேறு பக்கமாக இறங்க முடியாது. அப்படியெல்லாம் இறங்க முயன்றால், உருண்டுதான் விழவேண்டும் .... " என்றார் குருக்கள்.

இதைக் கேட்டதும் "வனஜா .... " என்று பரிதாபமாகக் கத்தினான் சுந்தரம்.

# 38

எண்ணிய முடிதல் வேண்டும், நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும், தெளிந்த நல்லறிவு வேண்டும்.

\- பாரதியார்

"என் வனஜா ஒரு வேளை தற்கொலை செய்துகொண்டுவிட்டாளா?" என்று மனம் கலங்கி வாய்விட்டுக் கதறினான் ஜெயராமன்.

அவனைத் தேற்ற ஸ்ரீதரும் சுதாவும் முனைந்தார்கள். பவானிதான் உறுதியாகப் பேசினாள்;

"இருக்காது, நிச்சயமாக இருக்காது. வனஜாவுக்கு ஒன்றும் ஆகாது....." என்றாள்.

" எப்படி இவ்வளவு உறுதியாகச் சொல்கிறாய்?" என்று ஆவலுடன் கேட்டான் ஸ்ரீதர்.

"வனஜா அப்படி ஒன்றும் கோழை அல்ல. அவள் இலட்சியத்திற்காக இந்த உலகையே எதிர்க்கத் துணிந்தவள், கேவலம், பொய்யையே துணையாகக்கொண்டு திரியும் இந்த போலி உலகத்திற்கு மட்டுமே பயந்து அவள் உயிரை விட்டிருக்கமாட்டாள். அவள் உயிர் உண்மை என்ற தத்துவத்தால் உயர்ந்தது. எனவே, அவளை நாம் இன்னும் நன்றாகத் தேடித் பார்க்க வேண்டும்" என்றாள்.

அவள் குரலில் இருந்த உறுதி, மற்றவர்களுக்குத் தைரியத்தைக் கொடுத்தது.

அக்குன்றிலிருந்து அவர்கள் அனைவரும் திரும்பி, காரை நோக்கி நடந்தார்கள்.

"அவளை இனி எங்கே தேடுவது? அதுவும் நம்மைக் கண்டும் அவள் நம்மிடமிருந்து வேண்டுமென்றே ஒதுங்கும்போது ....." என்று கேட்டான் ஸ்ரீதர்.

இப்போது பவானியும் ஸ்ரீதரும்தான் ஒருவருக்கொருவர் வாய்விட்டுப் பேசிக்கொள்ளும் நிலையில் இருந்தார்கள்.தன் இல்லற வாழ்க்கை இப்படி ஓர் அவமானத்திற்க்குரியதாக மாறிவிட்டதே என்ற வேதனையிலும், அர்த்தமில்லாமல் தன்னைவிட்டே வனஜா ஒதுங்கும் நிலையை உருவாக்கிவிட்டோமே என்ற மனக்கசப்பிலும் தன்னைத்தானே நொந்து நடந்துகொண்டிருந்தான் ஜெயராமன். சுதா கூட கொஞ்சம் கொஞ்சமாக தன் தவறுகளைத் உணரத் தலைப்பட்டாள். இத்தனைக் குழப்பங்களுக்கும் தான்தான் காரணம் என்ற குற்ற உணர்ச்சி அவளுடைய நெஞ்சைக் கசக்கிக்கொண்டிருந்தது. யாரிடமாவது, ஏதாவது பேசினால் அவர்கள் வெந்தபுண்ணில் வேல் பாய்ச்சுவதுபோல் தன்னைக் குற்றம் சாட்டிவிடுவார்களோ என்று பயந்து மெளனமாக நடந்தாள்.

சுந்தரமோ? அவனைச் சுற்றி உலகம் இயங்குவதே தெரியாத பிரமையில் நடந்துகொண்டிருந்தான்.

வனஜாவின் போக்கையும் பேச்சையும் உண்மையிலேயே ஸ்ரீதரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவன் அவளைப் பற்றி பிறர் மூலந்தான் அறிந்திருந்தான்.அவளுடன் அவன் நெருங்கிப் பழகியதில்லை. எனவே, அவளுடைய உள்ளத்தையும், அதன் வேகத்தையும் அவனால் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியவில்லை.

'இப்படியும் ஒரு பெண் இருப்பாளா' என்ற என்ற வியப்புதான் அவனை வெகுவாகப் பற்றியது. இந்தக் குழப்பமான சூழ்நிலைக்கு என்ன தெளிவு எனபது அவனுக்குப் புரியவில்லை.

இத்தனைக் குழப்பங்களுக்கும் மத்தியில், ஓரளவு சிந்திக்கும் திறனுடன் இருந்தவள் பவானி ஒருத்திதான். அவள் வனஜாவை முழுமையாகத் தெரிந்து வைத்திருந்தாள். வனஜாவின் செயல்களுக்கு அடிப்படையாக அமைந்திருக்கும் மனோபாவத்தை அவளால் ஊகிக்கமுடிந்தது.

"அண்ணா, நாம் இனிமேல் ரேஸில் ஓடும் குதிரைபோல் வனஜாவை விரட்டிக்கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. அப்படியெல்லாம் அவளைக் கண்டுபிடித்துவிட முடியாது. அவள் மிகவும் வைராக்கியம் உடையவள். அவளை அவள் மனப்போக்கில் விட்டுத்தான் பிடிக்கவேண்டும் ...." என்றாள்.

ஸ்ரீதர் பவானியைத் திரும்பிப் பார்த்தான். "அப்படியானால் அவள் நிச்சயம் உயிரோடு இருப்பாள் என்று நீ நம்புகிறாயா?" என்று தனக்குத் தைரியமூட்டிக் கொள்வதற்காக மீண்டும் ஒருமுறைக் கேட்டான்.

"உன் கேள்வி வேடிக்கையாக இருக்கிறதண்ணா, நான் சற்றுமுன் அவளைப் பார்த்தேன். இப்போது இல்லை. இந்தக் குறுகிய காலத்திற்குள் அவள் தற்கொலை செய்து கொண்டிருக்க முடியாது ..... "

"ஏன் அப்படிச் சொல்கிறாய்? குன்றின் மறுபக்கம் அவள் உருண்டிருந்தால் ..... " என்று ஒரு கேள்வியை எழுப்பினான் ஸ்ரீதர்.

"ஒருவேளை அப்படி இருக்கோமோ? போய்ப் பார்த்துவிடுவோமா?" என்று பரபரத்தான் ஜெயராமன்.

"வேண்டுமானால் வண்டியை எடுத்துக்கொண்டு போய்ச் சுற்றிப்பார்க்கலாம். ஆனால், அது அவசியமற்றது

என்பது என் கருத்து ...." என்றாள் பவானி.

"இல்லை, பவானி. பார்த்துவிடுவோம். பின்னால் மனக்குமைச்சல் வரும். ஒருவேளை, அப்படி ஏதாவது நடந்து, நாம் பார்க்காமல் வந்துவிட்டோமே என்ற ஏக்கத்திற்கு இடம் கொடுக்க வேண்டாம். லெட் அஸ் கோ அண்ட் ஸீ .... " என்றான் ஸ்ரீதர்.

எல்லோரும் வண்டியில் ஏறி, அந்தச் சிறிய குன்றின் மறுபக்கம் சென்றார்கள். காரிலிருந்து இறங்கிச் சுற்றும்முற்றும் பார்த்தார்கள். எங்கும் எதுவும் தென்படவில்லை. தற்கொலை செய்துகொள்ள அவள் உருண்டிருந்தால்கூட, எங்காவது அவள் உடல் தென்படவேண்டுமே ....

"அவள் நம்மை ஏமாற்றிவிட்டு எங்கோ போய்விட்டாள் ...." என்றான் ஸ்ரீதர்.

"அண்ணா, இப்போதாவது என் பேச்சைக் கேள். அவள் நிச்சயம் உயிருடன்தான் இருக்கிறாள். அதில் எனக்குச் சந்தேகமே இல்லை. கோழைகள்தான் தற்கொலை செய்துகொள்வார்கள். வனஜா துணிச்சல் மிக்கவள். அவளால் அப்படியெல்லாம் செய்ய முடியாது. எனவே, நாம் அடுத்து செய்ய வேண்டியதைப் பற்றித்தான் இப்போது சிந்திக்க வேண்டும் ....." என்றாள்.

"நீயே சொல்லு ...... என்ன செய்யலாம்?" என்றான் ஸ்ரீதர்.

"வனஜாவைத் தேடிப் போய், அவளை நம்மோடு சேர வைப்பது என்பது நடக்காத காரியம். அவள் நம்மைத் தேட வைக்க வேண்டும். அது ஒன்று தான் வழி. ...." என்று ஒரு புதிய கருத்தை தூக்கிப் போட்டாள் பவானி.

"வாட் ஈஸ் திஸ் ....? என்ன சொல்கிறாய் நீ? நடக்கிற காரியமா அது?

"முயன்றால் நடக்காத காரியம் ஒன்றுமே இல்லை ...."

"எப்படி?"

"வனஜா என்ற அந்தப் பெண்ணின் உள்மனத்து உனர்ச்சிகளை நான் ஓரளவு புரிந்து வைத்திருக்கிறேன். அவளுடைய வாழ்க்கை இரண்டு இலட்சியங்களில் அடங்கி இருக்கிறது."

"என்ன அது?"

"அவள் இந்த உலகில் வாழ்வதற்கு உறுதுணை, உண்மை. அதே சமயத்தில், தன் உயிரைக் கணவனுக்காகத் தியாகம் செய்துவிடவும் தயாராக இருக்கும் பத்தினிப் பெண் அவள். கணவனுக்காக உண்மையைத் தியாகம் செய்ய அவளால் முடியவில்லையே தவிர, உயிரைத்தியாகம் அவள் யோசிக்கமாட்டாள் ....."

"நீ சொல்வதைப் பார்த்தால், இப்போதே தன் கணவனின் நன்மைக்காக, அவன் இன்னொரு கல்யாணம் செய்துகொள்ள உதவியாக அவள் தன் உயிரைப் போக்கிக் கொண்டிருக்கலாமல்லவா?"

"ஏன் அண்ணா மீண்டும் உனக்கு இந்தக் குழப்பம்? தன் உயிரைக் கொடுப்பதால்தான் பிரச்சனைகள் தீரும் என்ற நிலைமைவரும்வரை, அவள் அசட்டுத்தனமாக உயிரைவிடமாட்டாள். அப்படி ஒரு நிலை வரப் போவதுமில்லை. நான் சொல்லவந்ததே வேறு ....."

"சொல்லு ..... சொல்லு ........"

"கணவனுக்காக உயிரைக் கொடுக்காக்கூடிய அவள், கணவனுக்காக உயிர் வாழவும் செய்வாள். அவள் கட்டிக் காக்கும் உண்மைக்கு தீங்கு வராமல் இருக்கவேண்டும், அவ்வளவுதான். எனவே, அப்படி ஒரு சூழ்நிலையை நாம் உருவாக்கவேண்டும். அவள் வந்தால்தான் ஜெயராமனின் உயிர் நிற்கும் என்ற பதட்டத்தை அவள் நெஞ்சில் உருவாக்க வேண்டும். புரிகிறதா?"

"கொஞ்சம் புரிகிறது, ஆனால், எப்படி அந்த நிலையை உருவாக்குவது?" என்று யோசித்தான் ஸ்ரீதர்.

"முயல்வோம். முதலில் காரில் ஏறுங்கள். வீட்டிற்குப் போய் ஆற அமரப் பேசுவோம். நாம் எல்லோரும் சேர்ந்து சிந்தித்து ஒரு திட்டம் உருவாக்கவேண்டும். இதில் ஜெயராமனும் சுந்தரமும் ஒத்துழைக்க வேண்டும். இது ஒன்றும் சதித்திட்டம் இல்லை. பெரிய நன்மைகளுக்காக செய்யப்படும் சிறிய தவறுகள்; மன்னிக்கப்படுபவை. என் மனத்தில் ஓர் எண்ணம் இருக்கிறது. அதன்படி நடந்தால், வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது ...... லெட் அஸ் ட்ரை " என்றாள் பவானி.

ஸ்ரீதரின் கார் சென்னையை நோக்கி ஓடியது.

- - - - - - - - -

பவானியின் ஊகம் தவறாக இல்லை. வனஜா உயிரோடுதான் இருந்தாள்.

தன்னைத் தானே அழித்துக்கொள்ள வேண்டும் என்ற பதட்டம் அவளுக்குத் திடீரென்று ஏற்பட்டதென்னவோ உண்மைதான். அது வனஜா என்ற பெண்ணின் பலவீனத்தால் ஒருகணம் ஏற்பட்ட கலக்கம். வெகு சீக்கிரமாகவே அவள் மனம் பழைய துணிவைப் பெற்றுவிட்டது.

' என் உயிரைத் தியாகம் செய்வதால் என் கணவருக்கு வாழ்க்கையில் அமைதி கிடைத்துவிடுமா, என்ன? அவர் கண்ணில் படாமல் இருந்துவிடுவோமே ....... அதுதான் சிறந்தது' என்ற முடிவுடன் செயல்பட்டாள். எனவேதான், எல்லோருடைய பார்வையிலிருந்தும் ஒதுங்கி இருப்பது என்ற முடிவுடன் புறப்பட்டாள்.

'அவர்களின் எந்தச் செயலுக்கும் நான் குறுக்கே இல்லை என்பதை உணர்ந்துகொண்டு அவர்கள் செயல்படட்டும்' என்ற முடிவுடன் ஊரைவிட்டுப் புறப்பட்டாள். பாதி வழியில்தான் மன அமைதிக்காக அந்தக் கோயிலை அடைந்தாள்.

ஆனால் ....... அங்கேயும் அவர்கள் வந்துவிடவே, அவர்களிடமிருந்து தப்பி ஓடினாள்.

துணிந்தவர்களுக்குச் சமுத்திரம் முழங்கால் அளவுதானே? பவானி திரும்பி வருவதற்குள் அங்கிருந்து தப்பி ஓடிவிட வேண்டுமென்ற முடிவுடன், அந்தக் குன்றின் சரிவில் வெகுவேகமாக இறங்கினாள் வனஜா. இறங்கினாள் என்று சொல்வதைவிட, உருண்டாள் என்பதுதான் பொருந்தும். இரண்டே நிமிஷத்தில் கீழே இறங்கியவள் ஏதோ நினைத்துக்கொண்டவள் போல் நின்று, திரும்பிப் பார்த்தாள்.

அவளுடைய செயல் அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. ஏனென்றால், நல்லதோ கேட்டதோ அவளுக்கு ஒருகுணம் உண்டு. எதையும் திடமாக முடிவு செய்துகொண்டுதான் முன்னேறி நடப்பாள். அப்படி நடக்கத் தொடங்கியபின், திரும்பிப் பார்க்கும் பழக்கமே அவளுக்குக் கிடையாது. தான் நடந்து வந்த பாதையின் மீது அவ்வளவு நம்பிக்கை அவளுக்கு. ஆனால், கடந்த சில நாட்களாகத் தான் அவளுக்குச் சற்று தடுமாற்றம் ஏற்பட்டிருந்தது. தான் வந்த பாதை சரிதான என்ற ஐயம் ஏற்பட்டிருந்தது.

திரும்பிப் பார்த்தாள். அந்தக் குன்றிலிருந்து எப்படி இறங்கினோம் என்று மலைப்பாக இருந்தது. அதே நேரத்தில் தன் வாழ்க்கையையும் திரும்பிப் பார்க்க அவள்மனம் ஓடியது. 'குன்றிலிருந்து வெகுவேகத்தில் இறங்கிவிட்டதுபோல், மற்றவர்களுக்கு அமைதிதரும் என்று நம் இடத்திலிருந்தும் ஏதோ ஒரு வேகத்தில் ஓடி வந்துவிட்டோமோ?' இந்த எண்ணம் எழுந்ததும் மனம் சஞ்சலப்பட்டது.......

அதிகநேரம் அங்கே நிற்பது ஆபத்து என்ற முடிவுடன், குறுக்குப் பாதை ஒன்றின் வழியாகச் சென்று மறைந்து மறைந்து ஓடினாள். கிராமத்துப் பழைய வீடு ஒன்றில் ஒளிந்துகொண்டாள்.

'இனி எங்கே போவது? எங்கே எனக்கு அமைதி?' இந்தக் கேள்வி மீண்டும் மீண்டும் அவளிடம் எழுந்தது. வெகு நேரம்பொருத்து அதற்குப் பதிலும் கிடைத்தது. 'ஆம்! அங்குதான் போகவேண்டும். அந்த இடம் ஒன்றுதான் சரியான இடம். என்னைப் புரிந்துகொள்ளக்கூடிய இடம். அங்குதான் நம்மைப்போல் வாழ்க்கைத் துறந்த ஜீவன் ஒன்று வாழ்கிறது. அவளைச் சந்தித்தால் நமக்கு அமைதி கிட்டலாம் ......'

இந்த முடிவுடன் கிராமத்துக்குள் புகுந்து மெயின்ரோட்டில் உள்ள பஸ் ஸ்டாண்டை அடைந்தாள்.

"என்ன வனஜா? திடீரென்று இவ்வளவு தூரம்?" என்று, வேதனையே வடிவாகத் தன் வீட்டு வாசற்படி ஏறிய வனஜாவைப் பரபரப்புடன் வரவேற்றாள் , வனஜாவின் நாத்தனார் - ஜெயராமனின் அக்காள் - செல்லம்மாள். அவளுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

விரக்தியுடன் சிரித்துக்கொண்டே உள்ளே நுழைத்தாள் வனஜா. எப்படிப் பேச்சை எடுப்பது என்று புரியாமல் மௌனம் சாதித்தாள்.

அவளை உட்காரவைத்து, காப்பிக் கொடுத்து, உபசரித்தாள் செல்லம்மாள். அவளால் வெகுநேரம் ஆவலைக் கட்டுப் படுத்த முடியவில்லை.

"சொல் வனஜா, திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு வந்திருக்கிறாயே, என்ன விஷயம்?" மீண்டும் கேட்டாள் செல்லம்மாள்.

வனஜா மோட்டுவளையைப் பார்த்தாள். அவள் பார்வையில் வெறுமை பளிச்சிட்டது. அவள் முகம் கவலையால் கனத்திருந்தது. 'ஆமாம் அக்கா, திடீரென்று தான் புறப்பட்டு வந்து விட்டேன். இனி பயணத்தை எப்படி மேற்கொள்வது என்று மனத்தில் தெளிவு ஏற்படவில்லை ....." என்றாள்.

"ஏம்மா இப்படிப் பேசுகிறாய்! பட்டணத்தில் எல்லோரும் சௌக்கியந்தானே?" என்று கேட்டாள் செல்லம்மாள். வேண்டுமென்றே எல்லோரும் என்று பொதுவாகக் கேட்டாள் அவள்.

"எல்லோரும் சௌக்கியம், அக்கா!" என்றாள்.

இதைக் கேட்டு சற்று நிம்மதி அடைந்தாள் செல்லம்மாள்.

"ஏம்மா, நீ அவனோடு சேர்ந்துதானே வாழறே ...." என்று குரலைத் தாழ்த்திக் கேட்டாள்.

"ஒரு பெண் கணவனோடு சேர்ந்து வாழ்ந்தாலும் சரி, வாழாவிட்டாலும் சரி, அவள் பார்வையெல்லாம் அவர் மீதுதானே இருக்கும்! அதனால்தான் அவருடைய சௌக்கியத்தைப்பற்றியும் சொன்னேன் ....."

"என்னம்மா சொல்றே .......? நீ அவனோட .....

"உதிர்ந்த மண், அக்கா ... ஒட்ட ல்லே."

"என்னம்மா சொல்றே நீ ....." மனக்குமைச்சலுடன் மீண்டும் கேட்டாள் செல்லம்மாள்.

வனஜா நடந்தவற்றையெல்லாம் சொன்னாள். தன் மனச்சுமையை இறக்கி வைக்கும் நோக்குடன் எல்லாவற்றையும் சொல்லி முடித்தாள்.

பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த செல்லம்மாள், உள்ளம் பொருமிக் கண்ணீர் சிந்தினாள்.

"ஏன் அக்கா அழுகிறீர்கள்?" என்று கேட்டாள் வனஜா.

"அடி பாவிப் பெண்ணே ..... நீ செய்திருக்கிற காரியத்தை நினைத்தால் அழாமல் வேறே என்ன செய்வது, வாழ வேண்டிய வயசிலே இப்படி வாழ்க்கையைப் பாழாக்கிக்கொண்டு நிற்கிறாயே ......" என்று குமுறினாள்.

"எல்லாம் கொடுத்துவச்சபடிதானே அக்கா நடக்கும்? என் வாழ்க்கை இப்படி அமைந்து போய்விட்டது" என்றாள்.

"அமைப்பாம் அமைப்பு ..... அப்படி என்னடியம்மா அமைப்பு ...." பொருமினாள் செல்லம்மாள்.

"ஆமாம் அக்கா! அவரவர்களுக்கு எப்படி எப்படி வித்திச்சுருக்கோ அப்படித்தான் அமையும். இல்லாவிட்டால் நீங்கள் இப்படி இருக்கனுமா? என்றாள் வனஜா.

தன் விதவை நிலையை வனஜா குறிப்பிட்டதும், ஒரு கணம் கலங்கினால் செல்லம்மாள்.

"அக்கா .... நீங்க உங்க துன்பத்தை ஒதுக்கிவிட்டு மனசைத் தேற்றிக்கொண்டு வாழவில்லையா? அப்படித்தான் நானும் ......" என்றாள் வனஜா.

இதைக் கேட்டு செல்லம்மாள் சட்டென்று உணர்ச்சி வசப்பட்டாள்.

"என்னம்மா, பயித்தியம் மாதிரி பேசறே ..... என் நிலைமையும் உன் நிலைமையும் ஒண்ணாயிடுமா? நீ எனக்கு அமைந்த அமைப்பைப் பற்றிச் சொல்றியே, அது கடவுளாகப் பார்த்து எனக்கு அமைத்தது. ஆண்டவன் போட்ட தீர்ப்பு. 'செல்லம்மா, நீ புருஷனோட வாழ வேண்டிய காலம் இவ்வளவுதான்'னு போட்ட கட்டளை. எனக்கு ஆண்டவன் போட்ட கட்டளையை, உனக்கு நீயே போட்டுக் கொண்டுவிட்டே! அப்படிப் பண்ணிட்டு உன்னை என்னோட சேர்த்துப் பேசறியே, என்ன நியாயம்! இப்படி நீ சொல்றது கடவுளை அவமானப்படுத்தியதற்குச் சமம்.... அக்கினி சாட்சியாகக் கைப்பிடித்தக் கணவனை உன் இஷ்டப்படி விலக்கறதுக்கு உனக்கு யார் அதிகாரம் கொடுத்தது ..... யார்? சொல்லு டீ ......" - படபடத்தாள் செல்லம்மாள்.

"யாரா? என் சுய கௌரவம்! என் மனசிலே இருக்கிற உண்மையை ஒருத்தரும் மதிக்கல்லேன்னா, உலகத்திலே வேறே எந்த வாழ்க்கையிலே நான் உண்மையான சந்தோஷத்தைக் காண முடியும்?"

"ஆமாம், உன் மனசிலே இருக்கிற உண்மையை மத்தவங்க மதிக்கல்லேன்னு நீ கவலைப்படறியே, முதல்லே நீ அதை மதிச்சிருக்கியா?" என்று கேட்டாள் செல்லம்மாள்.

"என்ன அக்கா சொல்கிறீர்கள்? நான் உண்மையை மதிக்கல்லியா?" என்று திகைப்போடு கேட்டாள் வனஜா.

"ஆமாம். நீ மதிச்சிருந்தா, உண்மையை நடுத் தெருவிலே விட்டுவிட்டு இப்படி ஒளிந்துகொண்டிருப்பியா?"

"என்ன சொல்கிறீர்கள் .....?"

" நீ இப்படி ஓடிவந்துவிட்டதாலே, உலகம் என்ன சொல்லப்போகிறது தெரியுமா? ஏற்கெனவே ஜெயராமனை விட்டுவிட்டு வந்த பிறகும் சுந்தரத்துடன் பழகியதற்கு உன்னை எல்லோரும் குற்றம் சாட்டினார்கள். இப்போது என்ன சொல்லப்போகிறார்கள் தெரியுமா? 'சுந்தரத்திற்கு கல்யாண ஏற்பாடு நடக்கிறது, பொறுக்காததனால் ஊரைவிட்டு ஓடிவிட்டாள்' என்று பொய்ப் பிரச்சாரம் நடக்கும். அது பொய் என்று நிரூபித்து, உண்மையை நிலை நாட்டவேண்டியது யார்? நீயல்லவா? ஆனால் நீயோ, உன் மனத்திலிருக்கும் உண்மையைப் பொய்ப் பிரச்சாரத்திற்கு பலி கொடுத்துவிட்டு, இங்கே வந்து நிற்கிறாய், இதுதான் நீ உண்மைக்காக வாழற இலட்சணமா?"

என்னை என்னதான் செய்யச் சொல்கிறீர்கள், அக்கா ....?" என்று விம்மினாள் வனஜா.

"உண்மையைக் காப்பாற்றுவது என்றால், உண்மையை நம் மனசுக்குள்ளேயே ஒளித்து வைத்துக்கொண்டு இருக்கிறதில்லே, உண்மை என்கிற விளக்கை உயர தூக்கிப்பிடித்து, பொய் என்கிற இருட்டுடன் போராடி ஜெயிக்கணும். பொய்யோட போராடத் தயங்கினால், உண்மையைக் காப்பாத்தறேன்னு சொல்றதிலே அர்த்தமில்லே ....." என்றாள் செல்லம்மாள்.

"என்னை என்னதான் செய்யச் சொல்கிறீர்கள், அக்கா?" என்று மீண்டும் கண்ணீர் விட்டாள் வனஜா.

"நான் சொல்கிறபடி செய் ...." என்று கூறி, ஒரு திட்டத்தை விளக்கினாள் செல்லம்மாள்.

# 39

நல்லதோர் வீணை செய்தே - அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ ....

- பாரதியார்

"எனக்கு ஒரே ஒரு யோசனைதான் தோன்றுகிறது. மிஸ்டர் ஜெயராமன் ஒப்புக்கொண்டுவிட்டால், அதை நிறைவேற்றிவிடலாம்" என்றாள் பவானி.

"என்ன?" என்று ஆர்வத்துடன் அனைவரும் கேட்டார்கள்.

"மிஸ்டர் ஜெயராமன் படுத்த படுக்கையாக இருப்பதாக வனஜாவுக்குத் தெரியும்படி செய்தியைப் பரப்ப வேண்டும். உடனே எங்கிருந்தாலும் வனஜா வந்து விடுவாள் ......." என்றாள் பவானி. அவள் பார்த்த சில சினிமாப் படங்களிலே, காணாமற்போனவர்களைக் கண்டுபிடிக்க இத்தகைய 'உத்தி' கையாளப்பட்டிருப்பதைக் கவனித்திருக்கிறாள் அவள்.

எல்லோரும் ஜெயராமன் முகத்தைப் பார்த்தனர். அந்த ஆலோசனைக்கூட்டம் அப்போது ஸ்ரீதர் வீட்டில்தான் நடந்துகொண்டிருந்தது. அனைவரும் அங்கே இருந்தார்கள். வனஜாவின் பெற்றோரும் கவலையே உருவாகக் காணப்பட்டார்கள். ஆனால், சுந்தரத்தை மட்டும் அங்கே காணவில்லை.

வனஜாவைத் தேடி அலையும்போதே எதிலும் பட்டுக்கொள்ளாதவனாகச் சுந்தரம் பிரமை பிடித்தாற்போல் இருந்தான். அவளைத் தேடிவிட்டுத் திரும்பியபோது, "எனக்கு உடம்பே சரியாக இல்லை. வீட்டிற்குப் போகிறேன். அப்புறம் வந்து எல்லோரையும் பார்க்கிறேன் ...." என்று கூறி, வீட்டுக்குப் போய்விட்டான்.

இந்த ஆலோசனைகளில் அவன் கலந்துகொள்ள விரும்பவில்லை. குறிப்பாகச் சுதா ஏதாவது தர்மசங்கடமான நிலைமையை உருவாக்கிவிடக்கூடும் என்ற பயத்தினால்தான் சுந்தரம் வீட்டிற்குப் போகிறான்' என்று நினைத்தாள் பவானி. அதனால், அவன் உடம்பு சரியில்லை என்று சொன்னதை அவள் பொருட்படுத்தவில்லை. 'நம் திட்டத்திற்கு முக்கியமான நபர் ஜெயராமன். அவர் இருந்தால் போதும்' என்ற முடிவுடன் தனது திட்டத்தை விளக்கினாள்.

பவானி கூறிய அந்த யோசனையை ஜெயராமனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. "ஐயாம் ஸாரி, நான் அப்படிச் செய்வதற்கில்லை" என்றான்.

"ஆபத்துக்குப் பாபமில்லை" என்றாள் பவானி.

"இல்லையம்மா! இதுவரை நடந்த இவ்வளவு ஆபத்தும், நான் வனஜாவின் உண்மையை மதிக்காததால் ஏற்பட்ட விளைவுதான். இனிமேலும் அவளிடம் ஒரு பொய்சொல்ல நான் தயாராக இல்லை" என்றான் ஜெயராமன்.

"ஒரு நன்மைக்காகப் பொய் சொல்வது தப்பில்லை" என்று வாதாடினாள் பவானி. ஆனால், ஜெயராமன் பிடிவாதமாக ஏற்றுக்கொள்ள மறுத்தான்.

"எங்கோ இருக்கும் என் வனஜாவுக்கு இப்போதுள்ள ஒரே ஒரு துணை உண்மைதான். உண்மை என்ற ஒரே துணையுடன் இருப்பவளிடம் நான் பொய்யைத் தூது அனுப்பமாட்டேன். பொய்யே நெருங்காமல் உண்மையின் துணையுடன் அவள் வாழட்டும் ....." என்றான் ஜெயராமன். மனம் உடைந்த குரலில்.

பவானி, ஸ்ரீதர் - எல்லோரும், ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துத் திகைத்தார்கள். ஆனால், அந்த நேரத்தில் ஜெயராமன் மனத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டுக்கொண்டிருப்பதை எல்லோராலும் புரிந்துகொள்ள முடிந்தது. வனஜாவிடமிருந்த அந்த சத்யா ஜோதி, ஜெயராமனிடமும் ஒளிவீசத் தொடங்கிவிட்டதைப் புரிந்துகொண்டார்கள்.

ஜெயராமன் அபத்தமான, உறுதியான குரலில், "எந்த உண்மைக்காக என் வனஜா உயிர் வாழ்கிறாளோ, அந்த உண்மை ஒளி என் மனத்திலும் சுடர்விட ஆரம்பித்திருக்கிறது. இதை அவள் மனப்பூர்வமாக என்று நம்புகிறாளோ அப்போது அவள் என்னைத் தேடி வரட்டும். அந்த நாளுக்காக நான் காத்திருக்கிறேன். நாம் எந்தக் குறுக்கு வழிகளிலும் ஈடுபட்டு அவளை வரவழைக்க வேண்டாம். அவள் வழிபடும் உண்மையே அவளை அழைத்து வரட்டும்.... " என்றான்.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போது ......

சுந்தரம் வீட்டருகே குடியிருக்கும் ஒரு பையன் அவசர அவசரமாக அங்குவந்து ஓர் அதிர்ச்சிமிக்க செய்தியைச் சொன்னான்.

"சுந்தரத்திற்கு திடீரென்று உடம்பு அதிகமாகிவிட்டது. டாக்டர் உடனே ஆஸ்பத்திரியில் சேர்க்கவேண்டும் என்று சொன்னார். அவரை ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்திருக்கிறார்கள். அவருடைய அம்மாதான் இந்தச் செய்தியை உங்களிடம் சொல்லிவரச் சொன்னார் ...." என்றான்.

இதைக் கேட்டு, "என்ன? அவருக்கு என்ன உடம்பு ....?" என்று பதறினாள் பவானி.

"ஜுரம் அதிகமாகி ஜன்னி கண்டுவிட்டிருக்கிறது என்கிறார் டாக்டர். ஏதேதோ பேத்திக்கொண்டிருக்கிறார். கொஞ்சம் ஸீரியஸ்தான் என்கிறார்கள் ...." என்றான் அந்தப் பையன்.

பவானியின் உடல் பதறியது, "அண்ணா, அவரைப் போய் உடனே பார்க்கவேண்டும். ஐ மஸ்ட் ஸீ ஹிம் அட் ஒன்ஸ் ...." என்றாள்.

"நிச்சயமாக! நானும் வருகிறேன். போய்ப் பார்க்கலாம் .." என்றவன், "ஸோ . மிஸ்டர் ஜெயராமன் ... " என்றான்.

"நான்மட்டும் வேற்றாளா? சுந்தரம் ஈஸ் மை பிரண்ட்,வாருங்கள் எல்லோரும் போகலாம்" என்றான் ஜெயராமன்.

எல்லோரும் ஆஸ்பத்திரியை நோக்கிப் பறந்தார்கள்.

- - - - - - - - -

**ப**வானிக்குக் கண் கலங்கியது. அவளால் அந்தக் காட்சியைக் காண முடியவில்லை. பிரக்ஞையற்றுப் படுத்திருந்த சுந்தரத்தின் உடல், அனலெனக்கொதித்தது. அவன்அருகே சோகமேஉருவாக அவன்தாய் அமர்ந்திருந்தாள்.

"இவர் கண் விழிக்கவே இல்லை. ஆனால், அடிக்கடி ஏதேதோ பிதற்றிக்கொண்டிருக்கிறார்...... " என்றாள் நர்ஸ்.

"ஒன்றும் ஆபத்து இல்லையே ....." என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு டாக்டரைக் கேட்டான் ஸ்ரீதர்.

"என்னால் முடிந்ததைச் செய்கிறேன். என்ன நோய் என்றே பிடிபடவில்லை. ஏதோ சடன் டெவலப்மெண்ட்! லுக்ஸ் சைகலாஜிகல். அவர் உடல் கோளாறுக்குக் காரணம், மனசுதான் என்று தோன்றுகிறது. ....." என்றார் டாக்டர்.

"எதனால் அப்படிச் சொல்கிறீர்கள், டாக்டர்" என்று கேட்டான் ஜெயராமன்.

"அவர் பிதற்றுவதைக் கேட்டுச் சொல்கிறேன். ஆமாம், வனஜா என்பது யார் சார்?" என்று கேட்டார் டாக்டர்.

"என்? - ஜெயராமனின் கேள்வி இது.

"இல்லை, அந்தப் பெயரைச் சொல்லிச் சொல்லித்தான் எப்போதும் புலம்பிக்கொண்டிருக்கிறார் .... " என்றார் சுந்தரத்தின் படுக்கை லேசாக அசைந்தது. உடல் முறுக்கிக்கொண்டது. மீண்டும் ஏதோ பிதற்ற ஆரம்பித்தான்.

"வனஜா, உன் வாழ்வு பாழாகிவிட்டது .... ஆமாம், அதுக்கு நானும் காரணம். நீ இனிமேல் உண்மை பேசாதே, பொய்யான உலகத்தில் வாழ, பொய்தான் பேச வேண்டும் ...... வேண்டாம் ..... வேண்டாம் .... உண்மையே பேசு ..... அதனால் நீ அழிந்து போனாலும் பரவாயில்லை ....... ஆனால் ... ஆனால் .... நீ கஷ்டப்படுவதற்குக் காரணம் நான்தானம்மா .... என்னாலேதான் இந்தச் சங்கடமெல்லாம். உனக்கு ஞாபகம் இருக்கும் ..... என் மனம் உன்கிட்டே எப்படியெல்லாம் ஈடுபட்டது தெரியுமா? உன்னைக் கல்யாணம் செய்துக்கணும்னு ஆசைப்பட்டவனம்மா நான் .... ஆமாம்மா ! உன்னைக் காதலிச்சேன் நான். ஆனால், நீ? என்னை ஒரு நண்பனாகத்தான் மதிச்சே? நீ இன்னொரு வருடைய மனைவியானதும், கொஞ்ச நாள் கஷ்டப்பட்டேன். அப்புறம் .... ? எனக்கு அந்த எண்ணமெல்லாம் போயிடுத்தம்மா ... நான் உன்னை என் உயிர் சிநேகதியாகத்தான் மதிச்சேன் ..... நீயும் அப்படியேதான் பழகினே ..... ஆனால், உலகம் ..... ?

"வனஜா, இந்த உலகத்திலேயே உன்னை முழுமையாகத் தெரிஞ்சுக்கிட்டவன் நான் ஒருத்தன்தான். அதனால்தான் உன்னை ஏற்றுக்கொள்ளத் துடிச்சேன். ஆனால் ..... அது போகட்டும், உன்னை எற்றுக்கொண்டவர் களாவது உன்னைச் சரியாகப் புரிந்துகொண்டார்களா? இல்லையே ..... நல்ல வீணையை நலம் கெடப் புழுதியிலே எறிஞ்சுட்டாங்களே, அம்மா, எப்படிப் பார்த்தாலும் உன் வாழ்க்கை பாழானதுக்கு நான்தானம்மா பொறுப்பு., என்னை மன்னிச்சுடு ...... என்னாலே உனக்கு ஏகப்பட்ட பழி.... என்னையும் உன்னையும் சேர்த்து இப்படித் தப்பா பேசறாங்களே அம்மா, இது நியாயமா? இது தர்மமா? இது உலகத்துக்கு அடுக்குமா?

அரை மணி நேரமாக, கொஞ்சம் கொஞ்சமாக விட்டுவிட்டு இப்படிப் புலம்பிக்கொண்டிருந்தான் சுந்தரம். இதைக்கேட்டு, அவனது தூய்மையான உள்ளத்தைக்கண்டு, ஜெயராமனின் கண்கள் கலங்கின.

" மிஸ்டர் ஸ்ரீதர், வனஜா என்கிற அந்தப் பெண் வந்து ஏதாவது ஆறுதல் சொன்னால்தான், இவர் உடலில் கொஞ்சம் முன்னேற்றம் தெரியும் என்று தோன்றுகிறது. அந்தப்பெண்ணை அழைத்து வாருங்களேன் " என்றார் டாக்டர்.

ஸ்ரீதர், ஜெயராமனைப் பார்த்தான். பிறகு, அவனைத் தனியாக அழைத்துச்சென்று, "மிஸ்டர் ஜெயராமன், இப்போது எல்லாமே உங்கள் கையில்தான் இருக்கிறது. சுந்தரத்தின் உயிரைக் காப்பாற்றுவதும் உங்கள் பொறுப்புத்தான். வனஜா எப்படியும் வந்தாக வேண்டும். அவள் வர, பவானி சொன்னபடி நீங்கள் நோயாளியாக நடித்தாக வேண்டும். ப்ளீஸ் .... ஒப்புக்கொள்ளுங்கள் ..... " என்றான்.

ஜெயராமன் மௌனம் சாதித்தான்.

"யோசிக்க நிறைய நேரமில்லை, மிஸ்டர் ஜெயராமன். வனஜா எப்படியும் வந்தாக வேண்டும். நாளைக்கே பத்திரிகையில் 'வனஜா, படுக்கையில் இருக்கும் நான் உன்னைப் பார்க்கத் துடிக்கிறேன், வா! என்று உங்கள் பெயரில் ஓர் அறிவிப்பு வெளியாகவேண்டும் ....." என்றான் ஸ்ரீதர்.

சிறிது நேர யோசனைக்குப்பிறகு, "ஓகே! நானே அறிவிப்பு விடுகிறேன். ஆனால், நீங்கள் சொன்னதுபோல் இல்லை. 'அன்புள்ள வனஜா, நம் அருமை நண்பர் சுந்தரம் படுத்த படுக்கையாக இருக்கிறார்.உன்னை நினைத்துப் புலம்புகிறார். உடனே வா, ஜெயராமன்' என்று உண்மைக்கு விளம்பரம் கொடுக்கப் போகிறேன்" என்றான்.

"அப்படிக் கொடுத்தால் வருவாளா?" என்று கேட்டான் ஸ்ரீதர்.

"நிச்சயம் வருவாள். எனக்கு நம்பிக்கை இருக்கிறது," என்றான் ஜெயராமன்.

**வெ**கு நாட்களுக்குப் பிறகு வனஜாவின் பெற்றோர் இருக்கும் அந்த வீடு, வனஜாவைக் காணும் வாய்ப்பைப் பெற்றது. காலை பதினோரு மணி சுமாருக்கு, செல்லம்மாளும் வனஜாவும் அந்த வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

வனஜாவைக் கண்டதும் அவளுடைய தம்பி பாலு, அவளை இறுகத் தழுவிக்கொண்டான். குப்புசாமியும் அவர் மனைவியும் சுந்தரத்தைக் காண ஆஸ்பத்தரிக்குச் சென்றிருந்தனர்.

"அக்கா, உன்னைத்தான் எல்லோரும் தேடிக்கொண்டிருக்கிறார்கள். இன்று காலை வந்த விளம்பரத்தைப் பார்த்துவிட்டுத்தானே நீ வந்திருக்கிறாய்?" என்று கேட்டான் பாலு.

"விளம்பரமா? என்னடா?" என்று புரியாமல் கேட்டாள் வனஜா.

பாலு, பேப்பரை எடுத்துக் காட்டினான்.அதைப் படித்த வனஜா, "அக்கா, நான் உடனே ஆஸ்பத்தரிக்குப் போயாக வேண்டும்" என்றாள்.

"ஆஸ்பத்தரிக்கா? என்ன விஷயம்?" என்று கேட்டு, அந்த பேப்பரை வாங்கிப் பார்த்தாள் செல்லம்மாள். அதிலிருந்த செய்தியைப் படித்துவிட்டு, பத்திரிகையைத் தூர எறிந்தாள். "என்ன வனஜா, உனக்குப் பயித்தியமா பிடித்திருக்கிறது…" என்று கேட்டாள் அவள். குரல் கொஞ்சம் தடித்திருந்தது.

"என்னக்கா சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள் வனஜா.

"இல்லை, இந்தச் செய்தியை உண்மை என்று நம்பிப் புறப்படப் போகிறாயா?" என்று கேட்டாள் செல்லம்மாள்.

"உங்கள் தம்பி பொய்யான அறிக்கை விடுவாரா?"

"ஐயோ வனஜா, இப்படி ஒரு ஏமாளிப்பெண்ணாக இருக்கிறாயே, உனக்கு வழியிலே எவ்வளவு சொல்லி அழைத்து வந்தேன்! எல்லாவற்றையும் மறந்துவிட்டுப் புறப்படுகிறாயே! நான் என்னம்மா செய்வேன்? அடி பயித்தியக்காரப் பெண்ணே, எல்லோருமாகச் சேர்ந்து உன்னைச் சோதிக்க நாடகமாடுகிறார்களடி ..... " என்றாள் செல்லம்மாள்.

"என்னது, நாடகமா?"

"ஆமாம்! சுந்தரத்துக்கு ஏதாவது ஒன்று என்றால், நீ பதறிப் போய்விடுகிறாயா என்று கவனித்து, உன் மனநிலையைச் சோதிக்கத் திட்டம்போட்டு வேலை செய்கிறார்கள். நீ இப்போது அசடு மாதிரி ஓடினால் 'கணவனை விட்டு ஓடியவள், சுந்தரத்துக்கு வியாதி என்றதும் ஓடோடி வந்துவிட்டாள் ....." என்று பழி சொல்வார்கள். அவர்கள் வலையில் விழாமல் நீ சோதனையில் வெற்றி பெறவேண்டும் .... " என்றாள்.

"அக்கா, நீங்கள் சொல்வதுபோல் இல்லாமல், சுந்தரத்துக்கு உண்மையிலேயே ஏதாவது ஆபத்து ...."

"இருக்காது ..... உன் வாழ்க்கைக்குத்தான் இப்போது ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. நீ இப்போது இங்கு வந்திருப்பது தெரிந்தால்கூட, சுந்தரத்தைப் பார்க்கத்தான் வந்திருப்பதாக ஆகும். உடனே இந்த வீட்டை விட்டு வெளியேறி, எனக்குத் தெரிந்த சிநேகதி ஒருத்தி வீட்டிற்குப் போய்விடுவோம் .... வா .... வா ... " என்று அவசரப்பட்டாள்.

வனஜா தயங்கினாள். செல்லம்மாள் அவளைக் கட்டாயப்படுத்தி அழைத்துச் சென்றாள்.

வீட்டிற்கு வந்த வனஜா திடீரென்று புறப்பட்டுப் போகிறாளே என்று தம்பி பாலு திகைத்தான்.

ஆஸ்பத்திரியில் .....சுந்தரத்தின் உயிர், 'வனஜா, வனஜா' என்று மரணவேகத்தில் துடித்துக்கொண்டிருக்கும்போது, அந்தக் குரல் காதில் விழாத இடத்தை நோக்கி, வனஜாவை அழைத்துச் சென்றுகொண்டிருந்தாள் செல்லம்மாள்.

# 40

துன்ப நினைவுகளும் சோர்வும் பயமுமெல்லாம்
அன்பில் அழியுமடீ கிளியே .....

\- பாரதியார்

**வ**னஜாவின் முகபாவம் விநாடிக்கு விநாடி மாறிக்கொண்டே இருந்தது. அது விரக்தியின் எல்லையை அடைவதைக்கண்டு, செல்லம்மாளுக்கே சற்றுப் பயமாக இருந்தது.

"ஏண்டி வனஜா, ஏன் இப்படி பிரமை பிடித்தாற்போல் இருக்கிறாய்? என்று அவளை மீண்டும் மீண்டும் கேட்டாள்.

வனஜா பதில் சொல்லவில்லை. ம்....ம்... என்று ஏதோ செல்லம்மாளுக்கு மரியாதை கொடுப்பதுபோல் முனகினாள்.

'சுந்தரத்தின் பெயரால் வனஜாவைச் சோதிக்க நாடகம் நடக்கிறது' என்று செல்லம்மாள் தீர்மானமாக முடிவுகட்டி, தன் தூரத்து உறவினர் ஒருவர் வீட்டுக்கு வனஜாவைக் கட்டாயப்படுத்தி அழைத்து வந்தாள்.

அங்கு வந்த நிமிஷத்திலிருந்து, வனஜா பிரமை பிடித்தவள் போல் நின்றுகொண்டிருந்ததைக் கண்டதும், அவளைத் தான் அழைத்துவந்ததே தவறோ என்ற கவலை செல்லம்மாளைப் பீடிக்க ஆரம்பித்தது.

"வனஜா, இப்படியே பேசாமல் இருந்தால் என்ன அர்த்தம்? நான் உனக்குக் கெடுதல் செய்துவிட்டேன் என்றோ, உனக்கு இஷ்டமில்லாத காரியத்தைச் செய்துவிட்டேன் என்றோ நீ வருத்தப்படுகிறாயா?" என்று வேதனையுடன் கேட்டாள் செல்லம்மாள்.

இதற்கும் வனஜா தெளிவாக எந்த பதிலும் சொல்லவில்லை.

செல்லம்மாளுக்கு ஆத்திரம் அதிகரித்தது.

"நீ இப்படி மௌனம் சாதிக்கிறதைப் பார்த்தால், உன் மனசு சுந்தரத்துக்கிட்டேயே அடிச்சுக்கிட்டிருக்கிற மாதிரியும், உன் விருப்பப்படி போகாவிடாமல் , உன்னைக் காப்பாத்தறதா நினைச்சு நான் அழைத்துக்கொண்டு வந்தது தப்பு என்கிற மாதிரியும் இல்லே தோன்றுகிறது ..... அப்படியா! அப்படியென்றால் சொல்லிவிடு ....நீ உன் வழியே போ, நான் என் வழியே போகிறேன் ....." என்று பொங்கினாள்.

இதைக் கேட்டுக் 'கலகல'வென்று பயித்தியம் போல் சிரித்தாள் வனஜா.

"ஏன் சிரிக்கிறே, வனஜா?" என்று புரியாமல் கேட்டாள் செல்லம்மாள்.

"அக்கா, உலகம் எப்படிப்பட்டது பார்த்தீர்களா?"

" என்னம்மா சொல்றே?"

"என் மனசை நல்லாத் தெரிந்துகொண்டவர்கள் நீங்க ஒருத்தர்தான். என் வேதன, சஞ்சலம் - எல்லாம் உங்களுக்கு நன்றாகத் தெரியும் .... இல்லையா?"

"ஆமாம்"

"அப்படி என்னை நன்றாகத் தெரிஞ்ச நீங்களே, நான் ஏதோ ஒரு யோசனையில் பிரமை பிடித்தவள் போல் இருக்கிறபோது, நீங்கள் கேட்ட சில சாதாரண கேள்விகளுக்குச் சரியான பதில் சொல்லாமல் இருப்பதைப் பார்த்து, "நீ சுந்தரத்தையே நினைத்துக்கொண்டிருக்கிறாயா' என்று எவ்வளவு சுலபமாகக் கேட்டுவிட்டீர்கள் ...... நீங்களே நாலு வார்த்தை தாங்காமல் இந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டால், இந்த உலகம் ஒரு வார்த்தயைக்கூடத் தாங்குமா?" என்று கேட்டாள் வனஜா.

செல்லம்மாள் வருத்தப்பட்டாள் : "என்னை மன்னித்துவிடம்மா ...... உன் மௌனம் என்னை அப்படிப் பேசத் தூண்டிவிட்டது. ஏதோ ஆத்திரத்தில் ....... ஆமாம், ஆத்திரத்தில் ....... "

"எனக்குப் புரிகிறதக்கா, ஆனால், நான் கேட்கிறது வேறு விஷயம். என் தூய்மை உங்களுடைய சிறு ஆத்திரத்துக்குக் கூடத் தாங்கவில்லை, பாருங்கள். அதைத்தான் சொல்கிறேன். என்னைப் புரிந்துகொண்ட உங்களுடைய ஆத்திரத்துக்கு முன்னாலேயே என் உண்மை பலம் இழந்து போய்விட்டதென்றால், என்னைப் புரிந்துகொள்ளாமல் இருக்கிற இந்த உலகத்தில் நான் வாழ முடியுமா? உண்மையை பேசிக்கொண்டு உலவ முடியுமா?"

செல்லம்மாள் விக்கித்து நின்றாள்.

"அக்கா, நான் உங்களைக் குற்றம் சொல்லவில்லை. என்னுடைய நிலைமையைத்தான் நினைக்கிறேன். நீங்கள் சொன்னது இருக்கட்டும். இன்றைக்கு உங்கள் தம்பி, நான் தூய்மையானவள்,உண்மையுள்ளவள் என்று நம்பி, ஒரு வேளை என்னை ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், இந்த மனநிலை அவருக்கு என்றும் நிலைத்து நிற்கும் என்று என்ன நிச்சயம்?

"உங்களுக்கு வந்த ஆத்திரம் அவருக்கும் வரலாம்.குடும்ப வாழ்க்கையில் அப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள் நிறைய இருக்கின்றன. அப்படி அவருக்கு என்மேல் அவ்வப்போது ஆத்திரமோ, கோபமோ வரும்போது, நீங்கள் பதட்டத்துடன் கேட்டது மாதிரி அவரும் ஒருவார்த்தை கேட்கமாட்டார் என்று என்ன நிச்சயம்? ...... பேச்சை சற்று நிறுத்தினாள் வனஜா.

திறந்த வாய் மூடாமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தாள் செல்லம்மாள்

"அக்கா, நினைக்க நினைக்கக் கடந்த இரண்டுநாளும் நான் செய்ததெல்லாம் ரொம்பப் பயித்தியக்காரத்தனமாக இருக்கிறது.என் அப்பாவும் அம்மாவும் வருத்தப்படுகிறார்கள் என்பதற்காக நான் ஓடினதும், குன்றில் ஏறி பவானியுடன் சர்ச்சை செய்த்தும், அவளை ஏமாற்றியதும், அப்புறம் இப்போது, அவர் சோதனை செய்கிறார் என்று எண்ணி

மறைந்திருக்கிறதும் ...... எல்லாமே அசட்டுத்தனமாக இருக்கிறது. இப்படியெல்லாம் நான் ஏன் செய்யவேண்டும்? இப்படிச் செய்து நான் எதை சாதிக்கப் போகிறேன்? ....," என்று கேட்டு நிறுத்தினாள்.

"வேறே எதையம்மா ஒரு பெண் சாதிக்கவேண்டும்? கட்டின கணவனோடு வாழ்வதே ஒரு பெண்ணுக்குப் பெரிய சாதனைதானே! குடும்ப வாழ்க்கை அமைதியாக நடக்கிறதைவிடப் பெரிய சாதனை ஒரு பெண்ணுக்கு இல்லையென்று நான் நினைக்கிறேன்" என்றாள் செல்லம்மாள்.

வனஜா மீண்டும் விரக்திச் சிரிப்புச் சிரித்தாள்.

"அக்கா, நான் கணவனின் போக்குப்படி இருந்து, குடும்ப வாழ்க்கையை அமைதியாக நடத்தும் ஒரு பெண்ணாகவா இருக்கிறேன்? இல்லையே! அப்படிப்பட்டவளாக நான் இருந்தால், உங்கள் தம்பி சொல்கிறபடி நடந்திருப்பேனே ...! உண்மையில் நான் சத்தியத்தைத்தான் கல்யாணம் செய்துகொண்டு விட்டேன். அதைக் காப்பாற்றுவதோடு, நிலை நாட்டுவதற்கும் நான் பட்ட சிரமத்தில் கால் பங்குகூட கணவனோடு வாழ்வதற்கு நான் படவில்லை. என்னை நான் நன்றாக யோசித்துப் பார்த்துக்கொள்ளும்போதுதான் இது எனக்குப் புரிகிறது. நான் உலக வாழ்க்கைக்கு ஏற்றவள் அல்லவோ என்று நினைக்கிறேன். என் வாழ்க்கை காட்டுமரத்திற்கு ஒப்பானதோ என்றுகூடத் தோன்றுகிறது.என்னிடம் இல்வாழ்க்கை என்கிற பழம் உருவாகாதோ என்று தோன்றுகிறது. அப்படியிருக்க நான் என் கணவன் என்றும், பந்தம் என்றும், பாசம் என்றும் ஏன் பாடுபடவேண்டும்? எல்லாம் பயித்தியக்காரத்தனம் .....!"

வனஜா பேசப் பேசச் செல்லம்மாள் நடுங்கினாள்.

“வனஜா பேசாம வாயை மூடிண்டு இருக்கப்போறியா, இல்லையா, உன் மனசுக்குள்ளே ஏதோ சனிஸ்வரன்தான் புகுந்துண்டிருக்கான். சித்த நேரமாவது வாயை மூடிக் கொண்டுஇரு ..... என்னமோ அர்த்தமில்லாம பேசறியே! இப்போ உனக்கு என்னடீ ஆயிடுத்து? உன்னைத் தங்கத் தட்டிலே வைத்து எந்தறதுக்குக் காத்திண்டிருக்கான் ஜெயராமன். உன்னைத் தேடி ஊரெல்லாம் ஓடி அலைஞ்சுண்டிருக்கான். இந்த நிலையில் அவன் உன்னை விட்டுவிடுவானாடீ ..... " என்று படபடத்தாள்.

வனஜாவின் மனப்போக்கு அப்போதும் மாறவில்லை.

"அக்கா, உங்க தம்பி அப்படித் தவிக்கிறார்ன்னா, அவருக்கு மனைவிபேரிலே பாசம் இருக்கு, தன் மனைவியைத் தன்னோட வைத்துக்கொள்ளணும் என்கிற ஆர்வம் இருக்கு. ஒருவேளை அவள் தப்பு பண்ணியிருந்தாலும், அவளை மன்னித்துவிடலாம் என்கிற பெருந்தன்மையும் இருக்கு. அதனால் அவர் என்னைத் தேடுகிறார். ஆனால் நான் .....? எனக்கு இதிலே எதுவுமே இல்லாமல் போய்விட்டதே! அவரைத் துறந்து தனியாக வாழமுடியும் என்கிற தைரியத்தில்தானே தனிமையைத் தேடி ஓடிக்கொண்டே இருக்கிறேன். இரண்டு கையும் ஒன்றாகச் சேர்ந்தால்தானே இணையும்? இரண்டும் வெவேறு திசையிலே போய்க்கொண்டிருக்கிறதே?"

"அசடு .... அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. உங்களுக்கு இடையே தடையா அந்தச் சுந்தரத்தின் சிநேகிதம்தான் இருக்கு. அதை ஒரு வழியா ஒழிச்சிட்டா ...... நீங்க சௌக்கியமா இருப்பீர்கள் ......" என்று ஏதோ தீர்ப்புச் சொல்வதுபோல் பேசினாள் செல்லம்மாள்.

"நீங்கள் சொல்றது சரியில்லே, அக்கா ..... நன்றாக யோசிக்கும்போது, சுந்தரத்தின் நட்புக்கூட எனக்கு ஒரு பெரிய விஷயமா இல்லே, அந்த நட்பிலே இருந்த தூய்மையையும் உண்மையையும் மற்றவர்கள் உணரவில்லையே என்கிற வேகமும், அதை மற்றவர்களிடம் உணர்த்தவேண்டும் என்ற துடிப்பும்தான் என்னை ஆட்டுவித்திருக்கேயொழிய, சுந்தரத்தின் நட்புக்காக என் மனசு ஒன்றும் உருகவில்லை. அவர் நட்பு பெரிதாக இருந்தால், அவரையும் பொருட்படுத்தாமல் நான் வெளியேறியிருப்பேனா? நினைக்க நினைக்க என் மனம் மிகவும் வரண்டுவிட்ட மாதிரி இருக்கு. என் மனசிலே இருந்த சத்தியம் என்கிற நெருப்பு, மற்ற பந்த பாசங்களையெல்லாம் சுட்டுப்பொசுக்கிவிட்டது. இப்ப என் மனசிலே ஈரப்பசையே இல்லையோ என்றுகூடத் தோன்றுகிறது. கடவுளுக்குத் தங்களை அர்ப்பணிக்கிற சந்நியாஸினிகள் மாதிரி, சத்தியத்திற்கு என்னையே அர்ப்பணித்துக்கொண்டு, துறவி மனப்பான்மை பூண்டுவிட்டேன் ..." என்றாள்.

இதைக்கேட்டு செல்லம்மாள் 'ஓ'வென்று கதறிவிட்டாள். அவள் மறுத்துப் பேசப் பேச, வனஜாவின் பேச்சு வலுவடைந்து கொண்டே போவதைக்கண்டு, அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

"தெய்வமே, சத்தியத்தை மனசிலே வளர்க்கணும்னு ஆரம்பித்த இந்தப் பெண்ணை, சத்தியதிற்கே பலி கொடுக்கப்போறியா? அவளைக் காப்பாத்து, தாயே!" என்று குமுறினாள்.

அந்தச் சமயம் ........

"அக்கா ..... அக்கா ......" என்று பரிதவிப்புடன் அழைத்துக்கொண்டு அங்கே ஓடிவந்தான் அவள் தம்பி பாலு.

"என்னடா, பாலு ....." என்று கேட்டுக்கொண்டே அவனை நெருங்கினாள் வனஜா.

"நானும் ஸ்ரீதர் மாமாவும்தான் உன்னைத் தேடிக் கண்டுபிடித்துவிட்டோம் ......" என்றான். அவனுக்குப் பின்னால் ஸ்ரீதர் உள்ளே நுழைந்தான்.

ஸ்ரீதர் செல்லம்மாளைப் பார்த்துப் பேசினான் :

"வனஜாவும் நீங்களும் எங்கள் பேரில் தப்பபிப்பிராயம் ஏற்பட்டு, ஏதோ நாங்கள் சுந்தரத்தின் பெயரை வைத்து நாடகம் ஆடுவதாக நினைத்துப் புறப்பட்டு வந்துவிட்டீர்கள்...... நாங்கள் எல்லோரும் உங்களைத் தேட ஆரம்பித்தோம். நீங்கள் கூட இருந்ததனால் உங்கள் உறவுக்காரர்கள் வீடாகத் தேட ஆரம்பித்தோம். கடைசியில் கண்டுபிடித்து விட்டோம்..... " என்று செல்லம்மாளைப் பார்த்துக் கூறிவிட்டு, வனஜாவின் பக்கம் திரும்பி, "அம்மா, சுந்தரத்தின் விஷயம் போலி நாடகமல்ல, உண்மையிலேயே சுந்தரம் படுத்த படுக்கையாக இருக்கிறார். நீங்கள் கட்டாயம் வரவேண்டும், வந்துதான் ஆகவேண்டும் ....." என்றான்.

வனஜா பதில் சொல்லும்முன் செல்லம்மாள் குறுக்கிட்டு, "நீங்கள் அழைக்கிறது உண்மை என்றாலும் சரி, நடிப்பு என்றாலும் சரி, வனஜா இப்போது உங்களுடன் புறப்பட்டு வரமாட்டாள். அவளுடைய கணவன் வந்து அவளை எங்கே வேண்டுமானாலும் அழைத்துப்போகட்டும். அவனை வரச் சொல்லுங்கள்" என்றாள்.

"அக்கா ...... " என்று ஏதோ பேச வாயெடுத்த வனஜாவை அடக்கி, " அக்காவாவது, ஒண்ணாவது ..... ? பேசாமல் இரு ....... நான் ஒருத்தி ........ உனக்குப் பெரியவளாகப் பேசிக்கொண்டிருக்கும்போது, நீ ஏன் குறுக்கிடுகிறாய்?" என்றாள்.

"நீங்கள் சொல்வதும் நியாயந்தான், ஜெயராமனை அழைத்து வருகிறேன் ...." என்று கூறிப் புறப்பட்டான் ஸ்ரீதர்.

அங்கேயே தங்கிவிட்ட பாலு, ஆஸ்பத்திரியில் நடந்தவற்றையெல்லாம் விவரித்தான்.

"அக்கா ..... சுந்தரம் மாமா, உன் பேரைச் சொல்லியே புலம்பிக்கொண்டிருக்கிறார். அவர் உன்னைக் கல்யாணம் செய்துக்கணும்னு ஆசைப்பட்டாராமே, அதையெல்லாம் சொல்கிறார். 'வனஜா, நான் நினைத்தபடி உன்னைக் கல்யாணம் செய்துகொண்டிருந்தால் ....... உன்னை எவ்வளவு சந்தோஷமா வைத்திருப்பேன், இப்போது நீ இவ்வளவு துன்பப்படறியே ...." அப்படீன்னு புலம்பறார் அக்கா ...." என்று சொல்லிக்கொண்டே போனான். அதைக் கேட்டதும் செல்லம்மாள் திடுக்கிட்டாள்.

"என்னடீ வனஜா, இது புதுமையா இருக்கு. சுந்தரம் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கனும்னு ஆசைப்பட்டானா?" என்று கேட்டாள்.

"எனக்கு அது தெரியாது, அக்கா ....... ஒருவேளை அவர் அப்படி ஆசைப்பட்டிருக்கலாம் ......." என்றாள் வனஜா.

"என்னடீ, அதை அவ்வளவு சாதாரணமாகச் சொல்லறே?" என்று துடித்தாள் செல்லம்மாள்.

"அதிலே தப்பு என்ன அக்கா இருக்கு? அவர் மனசிலே நினைச்சதைச் சொல்றார். அந்த உண்மையைக்கண்டு நாம் ஏன் பயப்படணும்?" என்று கேட்டாள் வனஜா.

"என்னடீ உண்மை? இத்தனை நாளும் பிரிஞ்சிருந்தவங்க கூடப்போற இந்த நேரத்திலே, அவன் இப்படி உளறிவச்சிருக்கானே ...... என்ன ஆகுமோ?" என்று பதைபதைத்தாள் செல்லம்மாள்.

வனஜா புன்னகைத்தாள்.

"இதுதான் அக்கா, வாழ்க்கையிலே உண்மை படற பாடு. உண்மையை துணிச்சலோட சந்திக்கவோ, அதை அப்படியே ஏற்றுக்கொள்ளவோ நம்மால் முடியாது. எல்லாம் நமக்குச் சாதகமா இருக்கணும் என்றே விரும்புகிறோம். இப்போ சுந்தரம் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பியிருக்கார் என்பதும், அவர் மனசிலே அந்த ஏக்கம் இருக்கு என்பதும் அவர் பிதற்றியதிலிருந்து தெரிகிறது ....... இதில் என் கணவர் ஒரு விஷயத்தை முக்கியமாகக்

கவனிக்க வேண்டும். நான் இன்னொரு ஆடவனை நினைத்து ஏங்கவில்லை, இன்னொரு ஆடவன் என்னை நினத்து ஏங்குகிறார் .... இதுதான் பிரச்சனை .....'

"ஐயோ, இப்படியெல்லாம் குழப்பம் ஏற்பட ஏனடி வழி செய்தாய்?"

"என்னையா கேட்கிறீர்கள், அக்கா? இந்தக் கேள்விக்கு இந்தச் சமூகம்தான் பதில் சொல்லவேண்டும். வயது வந்த ஆணும் பெண்ணும் சேர்ந்து படிக்கவும், வேலை செய்யவும் நேர்ந்த பிறகு, இப்படிப்பட்ட சலனங்கள் ஏற்படுவது இயற்கை. இதில் எதிர் நீச்சல் போட்டு வெற்றிவாகை சூடுபவர் வெகு சிலர்தான். கூடப் பழகும் ஆணைப் பார்த்து, 'இவன் நமக்கு ஏற்றவன்' என்ற எண்ணத்தோடு சற்றே மனம் விட்டுப் பழகுவதும், உடன் வேலை செய்யும் பெண்ணைக்கண்டு,' இவள் நமக்குத் தகுந்தவள்' என்று நெருக்கத்தில் பழக நினைப்பதும் இன்றைய உலகில் சர்வ சாதாரணமான நிகழ்ச்சிகளாகிவிட்டன. இதையெல்லாம் காதல் என்று சொல்லிவிடக்கூடாது, அக்கா .... ஒரு வித சலனம் ..... இந்தச் சலனத்திற்குப் பல பேர் உள்ளாகிறார்கள். சில பலிக்கின்றன. பல பலிப்பதில்லை. சலனப்பட்டவர்கள் எல்லோரும் களங்கப்பட்டவர்கள் என்று சொல்லிவிடமுடியுமா? ...... அக்கா .... மாறி வருகிற சூழ்நிலையில், பெண்கள் ஆண்களுக்கு இணையாக இருக்கவேண்டும் என்று எண்ணுகிற சமூகம், இந்தச் சிறு விஷயங்களைப் பெரிதுபடுத்தக்கூடாது என்பது என் எண்ணம். உண்மையில் எனக்குச் சுந்தரத்தின் பேரில் எந்தவிதச் சலனமும் ஏற்படவில்லை.அப்படி ஏற்பட்டிருந்தால் தயங்காமல் அவரைக் கல்யாணம் செய்துகொண்டிருப்பேன். ஆனால் ....... உம் ..... என்ன செய்வது? உண்மை சொல்ல வேண்டும் என்று நான் மட்டும் ஆசைப்பட்டால் போதுமா? ....." என்று கூறி நிறுத்தினாள் வனஜா.

அச்சமயம் ......... "அக்கா" என்று வீறிட்டாள் பவானி.

அவளைத் திரும்பிப் பார்த்த வனஜா, திடுக்கிட்டாள். துணிச்சலும் தன்னம்பிக்கையும் மிகுந்த பவானி, கண்கலங்க சோகமே உருவாக நின்றாள்.

"அக்கா, உங்கள் மனசு ஏன் இப்படிக் கல்லாய்ப்போயிற்று? படுக்கையில் கிடக்கிறவர், உங்கள் வாழ்க்கையின் பிரச்சனைக்குரியவர் மட்டுமல்ல, என் வாழ்க்கையையும் தன் கைக்குள் அடக்கி வைத்திருப்பவர் ..... எனக்காக, நான் வடிக்கும் கண்ணீருக்காக வந்து அவரைப் பாருங்கள். அவரை வந்து பார்ப்பதால், எந்த சோதனை ஏற்பட்டாலும் அதை சத்திய சோதனையாக ஏற்றுக்கொள்ளும் பக்குவம் உங்களுக்கு உண்டு. அதை எனக்குக் காட்டும் கருணை என்றும் நினைத்துப் புறப்படுங்கள், அக்கா ...... புறப்படுங்கள் " என்று கதறினாள் பவானி.

"வனஜா, பவானியையே வைத்த கண் வாங்காமல் பார்த்தாள். பிறகு, "அழாதே பவானி, உனக்காக நான் வருகிறேன். ஒரு பெண்ணின் மனம் எனக்குப் புரிகிறது" என்று கூறிப் புறப்பட்டாள்.

"வனஜா ....." என்று மறுப்புக் குரல் கொடுத்தாள் செல்லம்மாள்.

"என்னை மன்னித்துவிடுங்கள். நான் போய்த்தான் ஆக வேண்டும் ..... அக்கா .... நான் இப்போது ஒரு சத்திய சோதனைக்குப் போகிறேன்" என்று கூறிப் புறப்பட்டாள் வனஜா.

ஆஸ்பத்திரி வாசலில் செல்லம்மாள் உட்பட அனைவரும் இறங்கி, சுந்தரம் படுத்திருந்த அறைக்கு விரைந்தார்கள்.

அங்கே ...... படுக்கையில் சுந்தரத்தைக் காணவில்லை.

"சுந்தரம் எங்கே?" என்று பதற்றத்துடன் கேட்டான் ஜெயராமன்.

"ஸாரி, மிஸ்டர் ஜெயராமன். மனசுக்குக் கஷ்டமான ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டியிருக்கிறது....." என்று கூறி, ஒருகணம் தயங்கினாள் ஒரு நர்ஸ்.

# 41

பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா!
பெண்மை வெல்கென்று கூத்திடு வோமடா!

- பாரதியார்

"சுந்தரத்துக்கு என்ன? எங்கே இருக்கிறார் அவர்?"

ஒவ்வொருவரிடமிருந்தும் பதற்றத்துடன் பீறிட்டுக்கொண்டு வந்தது இந்தக் கேள்வி.

" வருந்தத்தக்க சம்பவம் ஒன்று நிகழ்ந்துவிட்டது" என்று, அந்த நிகழ்ச்சியை தெரிவித்தாள் நர்ஸ்.

"எல்லோரும் வனஜாவைத் தேடி அவளிருந்த வீட்டுக்கு ஓடியிருந்த சமயம், சுந்தரம் மட்டும் தனியாகப் படுக்கையில் தவித்திருக்கிறான்.அவனை கவனித்துக்கொண்டிருந்த நர்ஸ் கூட, அவன் தூங்குகிறான் என்ற எண்ணத்தில், வேறொரு காரியமாக அறையைவிட்டு வெளியே சென்றிருந்தாள். அந்தச் சமயம், 'வனஜா ..... வனஜா ....' என்று புலம்பிக்கொண்டு, ஜன்னி வேகத்தில் திடுக்கென எழுந்து வாசற்புறமாக நடந்துவிட்டான் சுந்தரம். அவன் வாசலைக் கடந்துகொண்டிருந்தபோதுதான், டாக்டரும், நர்ஸும் கவனித்திருக்கிறார்கள். அவர்கள் ஓடிச்சென்று, அவனைத் திருப்பி அழைத்து வருவதற்குள், கால்கள் தள்ளாடி, வாயிற்புற காம்பவுண்டில் தடாலென்று விழுந்துவிட்டான் சுந்தரம். அது, கருங்கற்கள் பதிக்கப்பட்ட சுவர். எனவே, பலமான அடிபட்டு, விநாடிப் பொழுதிற்குள் ரத்தப்பெருக்கில் சாய்ந்து கிடந்தான் சுந்தரம்.

உடனடி சிகிச்சைக்காக அவன் தற்போது ஆபரேஷன் தியேட்டருக்குக் கொண்டுபோகப்பட்டிருந்தான். விஷயமறிந்து எல்லோரும் ஆபரேஷன் தியேட்டரை நோக்கி ஓடினர்.

பதினைந்து நிமிஷங்கள் ஆயிற்று. ஆபரேஷன் தியேட்டர் வாசலில் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு பரிதவித்துக்கொண்டிருந்தார்கள் அனைவரும்.

தியேட்டரிலிருந்து வெளியே வந்தார் டாக்டர். அனைவரும் ஆவலுடன் அவர் முகத்தைப் பார்த்தார்கள். அவர் முகத்தில் நம்பிக்கையூட்டும் களை தெரியவில்லை.

"என்ன டாக்டர், எப்படியிருக்கிறது? அவருக்கு ஆபத்து ஒன்றுமில்லையே ...."

அதைச் சொல்லக்கூடியவன் ஆண்டவன் ஒருவன்தான்" என்றார் டாக்டர், சோர்வுடன்.

"டாக்டர், என்ன சொல்கிறீர்கள்?" என்று திடுக்கிட்டாள் பவானி.

" நீங்கள் எல்லோரும் விவரம் தெரிந்தவர்கள். சோதனைமிக்க நேரங்களில் நாம் காட்டும் நிதானம்தான், பேஷண்டுக்குக்கூட ரொம்ப பலமாக இருக்கும்.ஒருவரும் பதட்டப்பட வேண்டாம். ரொம்பவும் இரத்தம் போய்விட்டது. புது இரத்தம் செலுத்தினால் அபாயமில்லை. 'பிளட் பாங்கு'க்கு போன் செய்திருக்கிறோம். உங்களில் யாராவது இரத்தம் தர முன்வந்தாலும் பரிசோதித்து உடனே இரத்தம் செலுத்தலாம்" என்றார்.

"ஒருவறென்ன டாக்டர், நாங்கள் எல்லோரும் தயார் ...." என்றாள் சுதா.

அவசர அவசரமாக எல்லோருடைய இரத்தமும் பரிசோதிக்கப்பட்டது.

வனஜாவின் இரத்தம் ஒன்றுதான் சுந்தரத்தின் உடம்புக்குப் பொருந்துவதாக இருந்தது. டாக்டர் தயக்கத்துடன், "சுந்தரத்திற்குத் தேவையான இரத்தம் முழுவதையும் இந்த அம்மாள் உடம்பிலிருந்து எடுக்க முடியாது என்று நினைக்கிறேன். இருப்பினும் இரத்த பாங்கிலிருந்து தகவல் வரும்வரை, கொஞ்சம் கொடுக்கலாம்..... " என்றார்.

"டாக்டர், அவருக்கு எவ்வளவு இரத்தம் தேவையோ, அவ்வளவையும் என் உடம்பிலிருந்து எடுத்துக் கொள்ளுங்கள் ....." என்றாள் வனஜா.

"வேண்டாம் டாக்டர், அவளால் அதைத் தாங்க முடியாது. அவளே இரண்டு மூன்று நாட்களாகச் சோர்ந்து போயிருக்கிறாள். அவளிடமிருந்து இரத்தமே எடுக்க வேண்டாம்" என்று குறுக்கிட்டாள் பவானி.

டாக்டர் சிரித்துக்கொண்டு, "எவ்வளவு இரத்தம் எடுத்தால் அவரால் தாங்க முடியுமோ, அவ்வளவுதான் எடுப்போம் ....." என்றார்.

"நான் எதையும் தாங்கும் சக்தி படைத்தவளாக இப்போது இருக்கிறேன், டாக்டர்" என்றாள் வனஜா உறுதியான குரலில். இந்த வார்த்தை, சுற்றி இருந்த எல்லோருடைய இதயத்தையும் சுட்டது.

இரத்தம் எடுக்கப்பட்டது. களைப்பின்றி நிறைய இரத்ததானம் செய்த வனஜாவைக் கண்டு, டாக்டர் சற்றுப் பிரமிப்படைந்தார்.

"இந்த அளவு தானம் கொடுக்கத்தக்க சக்தி படைத்த ஒரு பெண்ணைச் சமீபத்தில் நான் பார்த்ததே இல்லை. இட் ஈஸ் சமதிங் ஒண்டர்புல் ...." என்று அதிசயப்பட்டார்.

அது மற்றவர்களுக்கெல்லாம் அதிசயமாக இருந்தது.வனஜாவின் உடம்பு அப்படியொன்றும் சக்தி படைத்ததல்ல என்பதை அறிந்த தந்தை குப்புசாமிகூடத் திகைத்தார்.

இரத்தத்தை அமுதமாக ஊட்டும் தாய்க்குலத்தின் கருணையா? அல்லது வனஜா என்று அபூர்வப்பெண்ணின் மனத்திலிருந்த கனிவெல்லாம் சக்தியாக மாறிவிட்டதா?

செல்லம்மாள் மட்டும் வாய் ஓயாமல், " எனக்குப் பயமாக இருக்கிறது. அவள் உடம்பிலிருந்து இரத்தத்தை எடுக்காதீர்கள். ஏதாவது விபரீதமாக ஆகிவிடப்போகிறது" என்று புலம்பிக்கொண்டிருந்தாள்.

"இரத்தம் கொடுத்தால் யாருக்கும் அபாயம் வராதம்மா .... எங்களுக்குத் தெரியும்" என்று கூறி, அவளைச் சமாதானப்படுத்த முயன்றால் நர்ஸ்.

"நர்ஸ் ..... உங்களுக்கு வேறு எது வேண்டுமானாலும் தெரியலாம். எங்கள் வனஜாவை மட்டும் தெரியாது" என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டாள் செல்லம்மாள்.

ஏதோ ஓர் உணர்வில் - ஒரு வேகத்தில் வனஜா இரத்தத்தைக் கொடுத்துவிட்டாளே தவிர, அதன் பிறகு அவள் மிகவும் வாட்டமுற்றுக் காணப்பட்டாள்.

சிறிது நேரத்தில் சுந்தரம் கண் விழித்தான். பக்கத்துப் படுக்கையில் படுத்திருக்கும் வனஜாவைப் பார்த்தான்.

அந்தப் பார்வையில் .......

ஏதோ தெய்வத்தைக் காணும் பக்திப் பரவசம்தான் இருந்தது.

வனஜா கம்பீரமாகப் புன்னகைத்தாள். அதுவும் கணநேரப் புன்னகைதான். மறுகணம் அது மறைந்துவிட்டது. உணர்ச்சிகளை உறைய வைக்கும் பேரமைதியில் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தாள் வனஜா. அதைக் கண்ட ஒவ்வொருவர் நெஞ்சிலும் காரணமற்ற பயம் குடிகொண்டது.

ஆறு மணிநேரம் கடந்தது.

ஸ்பெஷல் அறை ஒன்றில் வனஜா ஒய்வெடுத்துக்கொண்டிருந்தாள். இரத்தம் கொடுத்த களைப்பு மட்டுமல்ல; வாழ்வில் அதுவரை ஓடிவந்த நிகழ்ச்சிகள் பலவற்றை எண்ணிப்பார்த்ததால் ஏற்பட்ட களைப்பு வேறு சேர்ந்திருந்தது.

திடீரென்று அவளுடைய கால்களில் தண்ணீர்ச் சொட்டுக்கள் விழுந்தன. திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்த்தாள் வனஜா. அவள் காலடியிலே உணர்ச்சிப் பிழம்பாய் நின்றிருந்தாள் சுதா. அவள் சிந்திய கண்ணீர்தான் வனஜாவின் பாதங்களை நனைத்தது.

"என்ன சுதா இது?" என்று திகைத்தாள் வனஜா.

சுதாவின் கண்ணீர் கட்டுக்கடங்காமல் பீறிட்டது.

"மன்னி, உங்களைப் பார்க்கும்போது எனக்குப் பயமாக இருக்கிறது ..." என்றாள்.

"ஏம்மா?"

" நீங்கள் படுத்திருக்கிறதைப் பார்த்தால், 'போலிகளாக, பாவிகளாக வாழும் உங்களையெல்லாம் பார்கவோ, உங்களோடு வாழவோ எனக்குப் பிடிக்கவில்லை' என்று நீங்கள் சொல்கிற மாதிரி இருக்கு" என்று தேம்பினாள்.

சுதாவை அருகில் அழைத்தாள் வனஜா. ஆதுரத்துடன் அவள் தலையை வருடிக்கொண்டே, "அசட்டுப் பெண்ணே,உங்களில் யாரும் பாவி அல்ல. இந்த உலகத்தில் பல விஷயங்களை, பல உண்மைகளை எனக்குப் புரிய வைத்தவர்கள் நீங்கள்.எல்லோரும் எனக்கு வழிகாட்டினீர்கள் .... " என்றாள்.

"இல்லை, மன்னி ....... மற்றவர்கள் வேண்டுமானால் அப்படியிருக்கலாம். ஆனால், நான்? நான் பாவம் செய்தவள் மன்னி! மகா பாவி, உங்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்களுக்கெல்லாம் நான்தான் காரணம் ..... " என்று கூறினாள், விம்மிக்கொண்டே.

"பயித்தியக்காரப் பெண்ணே ..... ஏன் இப்படிப் பேசுகிறாய் ....." என்று கூறி, அவளை ஆதுரத்துடன் அணைத்துக்கொண்டு, "சுதா, நீ அன்புக்கு இலக்கணமாகத் திகழும் உருவம். அம்மா, ஸ்ரீதரிடம் நீ வைத்திருக்கும் அன்பு இருக்கிறதே, அது மகத்தானது. தன்னை மறந்து, தன்னை மீறிய, தன்னையே இழக்கத் தயாரான அன்பு.

உன்னைப்போன்று அன்புக்குத் தன்னை அர்பணித்துக்கொண்டவர்கள் வெகு குறைவு.உன்னை அடையப்போகும் ஸ்ரீதர் பாக்யசாலி. அதனால் எதையாவதுபோட்டு மனத்தைக் குழப்பிக்கொள்ளாதே..... நீ செய்த தவறு, உன் அன்பைப் பாதுகாக்கவேண்டும் என்பதற்காகச் செய்ததுதானே! உலகத்திலுள்ள மற்ற விஷயங்களையெல்லாம் தூக்கி ஏறிய ஆரம்பித்ததும், அதற்காகத்தானே! அன்பைப் பாதுக்காக்க நீ எதையும் செய்யத் துணிந்தாய். விளக்கு எறியும்போது நெருப்பு ஒளிதருகிறது; அதுவே கூரையில் விழுந்தால் ..... எவ்வளவு ஆபத்து ... இப்போது ஒன்றும் ஆகிவிடவில்லை. எல்லாம் உன்னை அறியாமல் செய்த தவறுகள். உன் வாழ்க்கை நன்றாக அமையவேண்டுமே என்ற எண்ணத்தில் செய்யப்பட தவறுகள். மன்னிக்கப்பட வேண்டியவை ....." என்றாள்.

"நான் சுயநலக்காரி என்றுதானே சொல்கிறீர்கள், மன்னி ...... " என்றாள் சுதா.

"யார்தான் சுயநலமில்லாமல் இருக்கிறார்கள்? என்னைக் கேட்டால் சுயநலம் அவசியம் என்றுகூடச் சொல்வேன்,"

"மன்னி, என் தவறுகளையெல்லாம் உணருகிறேன் ...... என்னை மன்னித்து விடுங்கள் ......" என்று மீண்டும் வருந்தினாள் சுதா.

வனஜாவின் கரங்கள் அவளை ஆதுரத்துடன் அணைத்தன. அந்த அணைப்பில் தன் தவறுகள் யாவும் நசுக்கப்படுவது போல் உணர்ந்தாள் சுதா.

அந்தச் சமயம் அறைக்குள் நுழைந்த செல்லம்மாள், "ஏண்டி சுதா, அவளைக் கொஞ்சநேரம் நிம்மதியாகப் படுக்கவிடாமல் என்னடி பேச்சு?" என்றாள்.

"அவளைத் தடுக்காதீர்கள், அக்கா, அவள் பேசட்டும். நான் இப்போது பேசிக்கொண்டிருக்கிற ஒவ்வொரு விநாடியும் எனக்கு ரொம்ப முக்கியமானதா இருக்கு. அப்புறம் எனக்கு நிறைய ஒய்வு கிடைக்கும் ....." என்றாள் வனஜா.

'இந்தப் பெண் என்ன சொல்கிறாள்?' என்று புரியாமல் திகைப்புடன் அவளைப் பார்த்தாள் செல்லம்மாள். ஆனால், மறுகணமே தன் திகைப்பை சமாளித்துக்கொண்டு, "சரி, இரண்டு பேருக்கும்தான் சொல்கிறேன். நம்ம வீட்டிலே போய்ப் பேசலாம். டாக்டர், வனஜாவை அழைத்துக்கொண்டு போய்விடலாம் என்று சொன்னார்" என்றாள்.

"சுந்தரம்?" என்று கேட்டாள் சுதா, அந்தக் கேள்வியே வனஜாவின் கண்களிலும் நின்றது.

" அவரைப் பற்றி இனிமேல் பயமில்லையாம். ஒருவாரம் வைத்திருந்து வீட்டுக்கு அனுப்புவார்களாம். நாம் முதலில் நம் வீட்டுக்குப் போகலாம் " என்றாள் செல்லம்மாள்.

அந்தச் சமயந்தான் மற்றவர்களும் ஒவொருவராக அந்த அறைக்குள் நுழைந்தனர்.

ஜெயராமன் வனஜாவின் அருகே வந்தான். அவனைக் கண்டதும், எழுந்து ஒதுங்கிக்கொண்டாள் சுதா.

வனஜாவின் முகத்தருகே வந்துநின்ற ஜெயராமனின் பார்வை, அவளுடைய முகத்தை அள்ளி விழுங்கியது. வனஜாவும் அதே கனிவுடன் அவனை நோக்கினாள். அந்த ஒரு விநாடி ஏற்பட்ட பார்வைச் சந்திப்பில் ஏதேதோ ஜன்ம உறவுகள் புதுப்பிக்கப்பட்டுவிட்டது போலவும், புரிந்துவிட்டது போலவும் தோன்றியது. அவளுடைய பார்வை 'நான் உங்களுடயவளே' என்று சொல்வதுபோல் இருந்தது. அவனுடைய பார்வை, 'வனஜா, உனக்காகக் காத்திருக்கிறேன், கண்ணே! தூய்மையானஉன்னை என் இதய மாளிகைக்குள் அழைத்துச் சென்றுவிடுகிறேன' என்று கூறுவதுபோல் இருந்தது.

உணர்ச்சி கடலாய் இருவரும் கொந்தளித்தார்கள். பார்வை பல்லாயிரம் பேசியது.

திடீரென்று அவள் கண்ணிலே ஒரு மிரட்சி. இதயவீணையில் ஏதோ அபசுரம் தட்டிய மாதிரி, அவள் கலங்கித் தடுமாறினாள். அதைப் பிறர் புரிந்துகொள்ளாதவண்ணம் கண்களை மூடிக்கொண்டாள்.

அந்தத் திடீர் மாறுதலைப் புரிந்துகொள்ள முடியாமல் திண்டாடினான் ஜெயராமன்.

மெதுவாக அவளருகே குனிந்து, 'வனஜா' என்று உணர்ச்சிமேலிட அழைத்தான். காலமெல்லாம் அந்த அழப்புக்காகவே காத்திருந்த வனஜாவுக்கு, அந்தக் குரல் கிளர்ச்சியை ஏற்படுத்தியது. மீண்டும் கண் திறந்தாள்.

"வனஜா, நான் அழைக்கிறது உனக்குப் புரிகிறதா?"

"ம்ம் ......."

"வனஜா ....."

"ம்ம் ......."

"டாக்ஸ்சி கொண்டு வருகிறேன். நம் வீட்டிற்குப் போகலாம் ...."

அவள் கண்களில் மீண்டும் மிரட்சி. அவன் ஆதுரத்துடன் தன் கரங்களை அவளுடைய தோளில் வைத்து எழுப்பினான் : ம் ......ம் ....... எழுந்திரு, வனஜா."

பதில் கூற அவள் உதடுகள் அசையவில்லை. ஆனால், அவனுடைய கரங்களைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக்கொண்டாள். மறுவிநாடி அந்தக் கரங்களை அவளுடைய வெப்பமான கண்ணீர் நனைத்தது.

அவன் கண்களும் கலங்கின.

"புறப்படு, வனஜா ....."

மீண்டும் அவள் கண்களில் மிரட்சி.

சுற்றி இருப்பவர்களைப் பார்க்கிறாள்.

சுந்தரத்தின் தாயார் அவள் கண்களில் படுகிறாள்.

"அம்மா, தெய்வம் மாதிரி வந்து என் பையனைக் காப்பாற்றினாய். நீ எல்லாப் பெருமைகளும் பெற்றுப் பெருவாழ்வு வாழணும், அம்மா .... உன் கணவனோடு புறப்படு ...."

வனஜா புன்னகைக்கிறாள்.

"புறப்படு அம்மா ...."

"புறப்படு அக்கா ....."

"புறப்படு வனஜா .... "

"புறப்படு ...."

சுற்றியிருந்த ஒவ்வொருவரும் இதையே கூறினர். அவள் மனம் சிலிர்க்கிறது. ஆனால், திடீரென்று அந்த மனத்தின் மூலையில் எப்போதும் ஒலித்துக்கொண்டிருக்கும் ஒரு குரல் மிரட்டுகிறது.

ஒருகணம் யோசித்தாள்.

"என்ன யோசனை? புறப்படு ....." செல்லம்மாள் ஏதோ ஒரு பரவசத்துடன் பரபரக்கிறாள்.

"அக்கா, நான் உங்க வீட்டுக்கு முதன் முதலில் வந்து கால்மிதிதத‌வேளை சரியில்லையோ என்று நினைக்கிறேன். அதனால் இப்போது நான் என்னுடைய பிறந்த வீட்டுக்குப் போய்விட்டு, நாளை நல்ல வேளை பார்த்து வருகிறேன்" என்றாள்.

செல்லம்மாள் யோசித்தாள். சம்மதிப்பதை தவிர வேறு வழியில்லை என்று தோன்றுகிறது.

அவளைப் பெற்றோருடன் அழைத்துச் செல்ல டாக்ஸ்சி வந்து நிற்கிறது.

பெற்றோரும் தம்பி பாலுவும் போய் வண்டியில் ஏறிக்கொண்டனர்.

அவள் ஒவ்வொருவரிடமும் வணங்கி விடைபெறுகிறாள். சுதாவை ஆறுதல் கூறுவதுபோல் அணைக்கிறாள். செல்லம்மாளின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரிக்கிறாள். குனிந்து எழும்போது அவள் கண்கள் குளமாகின்றன.

'ஏன் இவள் இப்படி என்னை நமஸ்கரிக்கிறாள்' என்று செல்லம்மாளுக்குப் புரியவில்லை. சுந்தரத்தின் தாயை வணங்குகிறாள். பிறகு, "சுந்தரத்தைக் கொஞ்சநாள் நீங்கள் பார்த்துக்கொள்ளுங்கள் , அப்புறம் பவானி பார்த்துக் கொள்வாள் " என்று கூறிச் சிரிக்கிறாள்.

பவானியிடம் விடைபெறும்போது அவள் கன்னத்தில் நட்பின் அடையாளமாக முத்தமிடுகிறாள். அதேபோல் சுந்தரத்தைப் போய்ப் பார்த்துவிட்டு ஒரு புன்னகையுடன், "உடம்பைப் பார்த்துக்கொள்ளுங்கள். சீக்கிரம் படுக்கையிலிருந்து எழுந்துவிடவேண்டும். பவானி ரொம்பநாளாகக் காத்திருக்கிறாள்" என்கிறாள்.

ஸ்ரீதரிடம் வரும்போது பக்தி ததும்புகிறது. "சின்னக் குழந்தை நிறைய பணத்தை வைத்துக்கொண்டு எப்படிச் செலவழிப்பது என்று தெரியாமல் தவிப்பதுபோல், சுதா, நிறைய அன்பை வைத்துக்கொண்டு எப்படிச் செலவழித்தால் பலன்கிட்டும் என்று தெரியாமல் சில தவறுகளைச் செய்துவிட்டாள். அவை அறியாமையில் செய்த தவறுகள். சிறுபிள்ளைத்தனமானது. அவள் மனத்தில் இருக்கிற அன்பு மிகப்பெரியது. நீங்கள் அவளை ஒரு குறையுமில்லாமல் வைத்துக்கொள்ள வேண்டும்"என்கிறாள். கடைசியாக, ஜெயராமனிடம் வருகிறாள். அவள் கைகளும், கால்களும்

நடுங்குகின்றன. அவன் பாதங்களில் விழுந்து வணங்குகிறாள். ஒருகணத்தில் அவன் பாதங்களில் கண்ணீர் வெள்ளம் புரள்கிறது. அவளை இருகரங்களால் அள்ளித் தூக்குகிறான் ஜெயராமன்.

"வனஜா, நாளைக்கு வந்துவிடுவாயல்லவா?"

"நாளை நிச்சயம் உங்கள் மனைவி உங்களிடம் வருவாள்."

"காத்துக்கொண்டிருப்பேன்."

கண்ணீர்க் கடல்கள் சங்கமித்துப் பிரிந்தன.

- - - - - - - - -

**ம**று நாள்.

ஜெயராமனின் வீடு மங்களகரமாக அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. குத்துவிளக்கு ஏற்றப்பட்டு பிரகாசிக்கிறது. அங்கு வருவதாக இருக்கிற அந்த இல்லத்தரசிக்காக, நாத்தனார் சுதா மல்லிகைபூ தொடுத்து வைத்துக் காத்திருக்கிறாள். செல்லம்மாள் விருந்து சமைத்து வைத்து காத்திருந்தாள். கணவன் ஜெயராமன் மலர்ந்த தன் இதய மலரோடு காத்திருக்கிறான்.

ஒன்பது மணியாயிற்று. பத்து மணியாயிற்று. வனஜா வரவில்லை. பத்தரை மணி.

தபால்காரர் வந்தார்.

அவர், முத்துப் போன்ற எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட வனஜாவின் கடிதத்தைக் கொண்டுவந்தார். பரபரப்புடன் அதைப் பிரித்தான் ஜெயராமன்.

"என் இதய தெய்வத்திற்கு,

வனஜா அநேக கோடி நமஸ்காரம். உங்கள் மனைவிக்காகக் காத்திருப்பீர்கள். இதோ, இந்தக் கடித உருவில் உங்கள் மனைவி உங்களிடம் வந்திருக்கிறாள்.

அன்பரே, நீங்கள் வனஜா என்ற ஒரு பெண்ணுக்குத்தான் மாலையிட்டீர்கள். ஆனால் அவளோ, ஜெயராமன் என்ற கணவருக்கும், உண்மை என்ற தத்துவத்திற்கும் மாலையிட்டுவிட்டாள். என்னை மணந்த நீங்கள், என்னை வாழவைக்க முயன்றீர்கள். என்னைப் பற்றிக்கொண்டுவிட்ட உண்மையோ, என்னையே பலி கேட்கிறது. இரண்டுக்கும் இடையே நான் சிக்கித் தவிக்கிறேன்.

ஒரு பெண்ணுக்கு கணவனைவிட உயர்வாக ஒன்றும் இருக்கமுடியாது. கணவனுக்குச் சமமாகவும் இன்னொன்று இருக்கக்கூடாது. தன் பெருமைகளையும், தன் இலட்சியங்களையும் கணவன் என்ற ஒளிக்கு எண்ணையாகவும், திரியாகவும் மாற்றிவிட்டு, தனக்குத் தானே ஒளிக்குள் அடக்கிக்கொள்பவள்தான் பெண். அந்த முறையில் நான் தோற்றவள். கணவனுக்கு இணையாகவும், சோதனை நேரத்தில் என் கணவனைவிட ஒருபடி உயர்வாகவும் உண்மையை மதித்துவிட்டேன். அந்த விநாடியே நான் ஒரு சரியான மனைவியாக இருக்கமுடியாமல் போய்விட்டேன்.

நான் இதுவரை காத்துவந்தது சத்தியத்தைதானேயொழிய, பதி பக்தியை அல்ல, அந்த முறையில் நான் உங்களுக்குத் துரோகம் செய்தவள் ஆகிவிட்டேன். இனி மீண்டும் வாழ நேர்ந்தாலும், அந்தத் துரோகத்தைச் செய்தே தீர வேண்டியவளாக நான் மாற வேண்டியிருக்கும்.

உலக வாழ்க்கை ரொம்பவும் சிக்கலானது. அதில் அன்பு மட்டுமல்ல, துன்பம் இருக்கிறது, தொல்லை இருக்கிறது, பழி இருக்கிறது, சந்தேகம் இருக்கிறது. அதில் உண்மை என்ற வண்டியை ஓட்டுபவனுக்கு, மற்ற விஷயங்களோடு ஒத்துப்போக முடியாது.

இது நான் அறிந்துகொண்ட கசப்பான உண்மை. மீண்டும் மீண்டும் உங்கள் வாழ்வில் குறுக்கிட்டு, 'உண்மை சொல்ல வேண்டும்' என்ற என் சங்கல்பத்தால் என்னை இழந்து, அன்பில் திளைக்க வேண்டிய இல்வாழ்க்கையில் சலனங்களை ஏற்படுத்தி உங்களுக்குத் தொல்லை தர விரும்பவில்லை.

உங்களுக்காக, உங்கள் காலடியில் தன் இலட்சியங்களைப் போட்டுவிட்டு, உங்களுடன் ஐக்கியமாகிவிட வேண்டியவளே, உங்கள் மனைவியாகும் தகுதி படைத்தவள். அதுவே பாரதப்பெண்கள் காத்துநிற்கும் நெறி. ஒரு பாரதப் பெண்ணுக்கு ஆசை, லட்சியம், தெய்வம் - எல்லாமே கணவன்தான்.

கணவனுக்காக, அவன் விரும்பிய தவறான ஓர் ஆசையையும் நிறைவேற்றி, பத்தினித் தன்மையை நிலை நாட்டினாள் நளாயினி. நானோ? நான் ஏற்றுக்கொண்ட ஒரு தத்துவத்திற்காக, கணவனைவிட்டுப் பிரிந்த ஓர் அபூர்வப் பிறவி. என்னைத் துறவி என்றும் சொல்லலாம்.

என் போக்கை மாற்றி அமைத்துக்கொண்டு, உங்களுக்குரிய மனைவியாக நடக்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கில்லை.

எனவே, உங்களைவிட்டுப் பிரிகிறேன். உங்களை விட்டுப் பிரிவதன் மூலமாவது, உங்களுக்கு நன்மை செய்ய முடியுமா என்ற ஆர்வம்தான் இதற்குக் காரணம். அப்படி உங்களுக்கு நன்மை செய்யவேண்டும் என்று நினைக்கிற இந்த நேரத்தில், நான் உங்கள் மனைவியாக இருக்கிறேன். உங்களுக்காக என்னால் கையாள முடியாத என் மனைவி ஸ்தானத்தை நான் கைவிடுவதன் மூலம், ஒரு மனைவியின் கடமையை நிறைவேற்றியிருக்கிறேன்.

தியாகங்கள் மூலம்தான் தத்துவங்கள் நிலை பெறுவதுண்டு. உண்மை என்ற தத்துவத்திற்காக, நான் என் இல்லற வாழ்க்கையையே தியாகம் செய்கிறேன்.

இல்லற வாழ்க்கையில் மீண்டும் ஈடுபட்டு ஒரு மனைவி என்ற நெறியையும் காப்பாற்றமுடியாமல், பேதலித்து நான் வாழும் இரட்டை வாழ்வு, உங்களுக்கும் நன்மை தராது; நான் ஏற்றுக்கொண்டிருக்கும் 'உண்மை' விரதத்துக்கும் பெருமை தராது.

என் வாழ்க்கையின் முடிவை நான் தேர்ந்தெடுத்துக்கொண்டதைபோல், உங்கள் எதிர்கால வாழ்க்கையை உங்களுக்கு ஏற்ற வழியில் நீங்கள் அமைத்துக்கொள்ளுங்கள்.

உயிர்காப்பான் நண்பன், நான் சந்தர்ப்பச் சூழ்நிலையால் அந்தப் பணியைச் சுந்தரத்திற்கு நிறைவேற்ற முடிந்தது. அந்த உத்தம நண்பருக்காக என் கடமையைச் செய்துவிட்டேன். தோழனின் உயிரைக் காத்த நான், என இதய தெய்வமான தங்களுடைய சஞ்சல வாழ்க்கையைப் போக்கி, உங்களுக்கு நிரந்தரமான அமைதி வாழ்க்கையைத் தர என்னிடம் வைத்திருப்பது வாழ்க்கையில் என் கணவருக்கு மட்டுமே உரியது. அதனால், நான் என்னையே இழக்க முடிவு செய்துவிட்டேன். அதைவிட என்னால் உங்களுக்குக் கொடுக்கக் கூடிய காணிக்கை வேறெதுவும் இல்லை.

உங்கள் மனைவி,

வனஜா"

கடிதத்தைப் படித்து முடித்தான் ஜெயராமன்.

அவன் கண்ணீர் விடவில்லை. கலங்கவில்லை. அந்தக் கடிதத்தை, ஏற்றப்பட்டிருந்த குத்துவிளக்கின் முன்னால் வைத்தான்.

"அவள் என்னிடம் வருவதாகச் சொன்ன வாக்குப்படி வந்துவிட்டாள். எந்த உருவில் வர வேண்டும் என்பதை முடிவு செய்யவேண்டியவள் அவள் அல்லவா? கடித உருவில் வர முடிவு செய்துவிட்டாள், வந்துவிட்டாள்.

அதே போல் நான் அவளுக்குக் கொடுத்த வாக்குப்படி காத்திருக்கிறேன். அவள் எந்த உருவில் வரவேண்டும் என்று நினைத்தானோ, அந்த உருவில் அவள் வரும்வரை காத்திருக்கிறேன்."

- - -- -- - - - - -

நாட்கள் நகர்கின்றன, அவன் காத்திருக்கிறான்.
மாதங்கள் ஓடுகின்றன, அவன் காத்திருக்கிறான்.
வருடங்கள் ஓடுகின்றன, அவன் காத்திருக்கிறான்.
ஜன்மங்கள் மாறுகின்றன, அவன் காத்திருக்கிறான்.